# சங்க இலக்கியம்

## இரண்டாம் பகுதி



உ.சா.அ. நல்லிறையனார்
1444. புறநானூறு - 393.

பதிமுதற் பழகாப் பழங்கண் வாழ்க்கைக்
குறுநெடுந் துணையொடு கூமை வீதலிற்
குடிமுறை பாடி யொய்யென வருந்தி
அடல்நசை மறந்தவெங் குழிசி மலர்க்குந்
5 கடனறி யாளர் பிறநாட் டின்மையின்
வள்ளன் மையினெம் வரைவோர் யாரென
உள்ளிய வுள்ளமொ டுலைநசை துணையா
...கவக மெல்லா மொருபாற் பட்டென
மலர்தா ரண்ணல்நின் நல்லிசை யுள்ளி
10 ஈர்ங்கை மறந்தவெ னிரும்பே ரொக்கல்
கூர்ந்த எவ்வம்விடக் கொழுநிணங் கிழிப்பக்
கோடைப் பருத்தி வீடுநிறை பெய்த
மூடைப் பண்ட மிடைநிறைந் தன்ன
வெண்ணிண மூரி யருள நாளுற
15 ஈன்ற வரவி னுவுருக் கடுக்குமென்
தொன்றுபடு சிதாஅர் துவர நீக்கிப்
போதுவிரி பகன்றைப் புதுமல ரன்ன
அகன்றுமடி கலிங்க முடீஇச் செல்வமுங்
கேடின்று நல்குமதி பெரும மாசில்
20 மதிபுரை மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
ஆடுமக ளல்கு லொப்ப வாடிக்
கோடை யாயினுங் கோடி...
காவிரி புரக்கும் நன்னாட்டுப் பொருந
வாய்வாள் வளவன் வாழ்கெனப்

25 பீடுகெழு நோன்றாள் பாடுகம் பலவே.

திணை - பாடாண்டிணை ; துறை - கடைநிலை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது.

## உ௬௬. நல்லுருத்திரனார்

## 1445. கலித்தொகை - 101. முல்லை : 1

தளிபெறு தண்புலத்துத் தலைப்பெயற்கு அரும்பீன்று
முளிமுதற் பொதுளிய முட்புறப் பிடவமும்
களிபட்டான் நிலையேபோல் தடவுபு துடுப்பீன்று
ஒளிபுடன் நிரைத்த ஒளிகிழிதழ்க் கோடலும்
5 மணிபுரை யுருவின காயாவும் பிறவும்
அணிகொள மலைந்த கண்ணியர் தொகுபுடன்
மாறெதிர் கொண்டதம் மைந்துடன் நிறுமார்

சீறரு முன்பினோன் கணிச்சிபோற் கோடு சீஇ
ஏறுதொழூஉப் புகுத்தன ரியைபுட னெருங்கு ;
10

அவ்வழி, முழக்கென இடியென முன்சமத் தார்ப்ப
வழக்குமாறு கொண்டு வருபுவரு பீண்டி
நறையொடு துகளெழ நல்லவர் அணிநிற்பத்
துறையும் ஆலமுந் தொல்வலி மராஅமும்
முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ;

15 மேற்பாட் டுலண்டின் நிறனெக்கும் புன்குருக்கண்
நோக்கஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக்குத்திக்
கோட்டிடைக் கொண்டு குலைப்பதன் தோற்றம்காண்
அஞ்சி ரசையியல் கூந்தற்கை நீட்டியான்
நெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவண்தன்

வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்;

21 சுடர்விரிந் தன்ன சுரிநெற்றிக் காரி
விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடிக்
குடர்சொரியக் குத்திக் குலைப்பதன்
பிடரணி யந்திப் பசுங்கட் கடவுள்

தோற்றங்காண்

இடரிய ஏற்றெருமை நெஞ்சிடந் திட்டுக்
குடர்கூளிக் கார்த்துவான் போன்ம்;

27 செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளைக்
கதனஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாடி

நுதிநுனைக் கோட்டாற் குலைப்பதன்
தோற்றங்காண்
ஆரிரு ளென்னுன் அருங்கங்குல் வந்துதன்
தாளிற் கடந்தட்டுத் தந்தையைக் கொன்றானைத்
தோளிற் றிருகுவான் போன்ம்;

எனவாங்கு,
34 அணிமாலைக் கேள்வற் றரூஉமார் ஆயர்
மணிமாலை யூதுங் குழல்;
36 கடாஅக் களிற்றினுங் கண்ணஞ்சா ஏற்றை
விடாஅதுநீ கொள்குவை யாயிற் படாஅகை
ஈன்றன ஆயமகள் தோள்;
39 பகலிடக் கண்ணியன் பைதற் குழலன்
சுவல்மிசைக் கோலசைத்த கையன் அயலது
கொல்லேறு சாட இருந்தார்க்கெம் பல்லிருங்
கூந்த லணைகொடுப்பேம் யாம்;
43 கோளாள ரென்னொப்பா ரில்லென நம்மானுள்
தாளாண்மை கூறும் பொதுவன்
நமக்கொருநாள்
கேளாள னாகாமை யில்லை அவற்கண்டு
வேளாண்மை செய்தன கண்;

47

ஆங்க, ஏறும் வருந்தின ஆயரும் புண்கூர்ந்தார்
நாறிருங் கூந்தற் பொதுமகளி ரெல்லாரும்
முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோடு
எல்லாம் புணர்குறிக் கொண்டு.

"ஆயர் வேட்டுவ ராடூஉத் திணைப்பெய, ராவயின் வரூஉங் கிழவரு முளரே" என்னும் சூத்திரத்தில் 'திணைநிலைப் பெயராகிய கிழவருங் கிழத்தியரும் உளர்' என்னும் விதியாற்கொண்ட அத்தலைவிக்கு அவள் தோழி ஆயர் ஏறுதழுவுகின்றமை காட்டி அவள் அதுகண்டு வருந்தாமல் ஆண்டுப்பெற்ற நன்னிமித்தங் கூறித் தெளிவித்து, அதனை அவ்விதியாற்கொண்ட தலைவற்குங் கூறி, மீட்டும் அத்தலைவிக்குத் தஞ் சுற்றத்தார் கூறியிருக்குங் கூற் றினையுங்கூறி, தலைவனும் இன்னும் ஒருஞான்று ஏறுதழுவி நம்மை வரைந்து கொள்வனென்று ஆற்றுவித்தது.



## 1446. கலித்தொகை - 102. முல்லை : 2

கண்ணக னிருவிசும்பிற் கதழ்பெயல்
கலந்தேற்ற
தண்ணறும பிடவமுந தவழுமகாடித தளவமுமா

வண்ணவண் தோன்றியும் வயங்கிணர்க்
கொன்றையும்
அன்னவை பிறவும் பன்மலர் துதையத்
5 தழையுங் கோதையும் இழையு மென்றிவை
தைஇனர் மகிழ்ந்து திளைஇ விளையாடும்
மடமொழி யாயத் தவருள் இவள்யார்
உடம்போடு
என்னுயிர் புக்கவ ளின்று ;

9

.

ஓஒ இவள், பொருபுகல் நல்லேறு கொள்பவ ரல்லால்
திருமாமெய் தீண்டல ரென்று கருமமா
எல்லாருங் கேட்ப அறைந்தறைந் தெப்பொழுதுஞ்
சொல்லால் தரப்பட் டவள் ;
13 சொல்லுக,பாணியே மென்று ரறைகென்றார்
பாரித்தார்
மாணிழை யாறுகச் சாறு ;
15 சாற்றுள்,
பெடையன்னார்கண்பூத்துநோக்கும்வாயெல்லாம்
மிடைபெறி னேராத் தகைத்து ;
17 தகைவகை மிசைமிசைப் பாய்மா ரார்த்துடன்
எதிரெதிர் சென்றார் பலர் ;
19 கொலைமலி சிலைசெறி செயிரயர் சினஞ்சிறந்து

உருத்தெழுந் தோடின்று மேல் ;

21 எழுந்தது துகள்

ஏற்றனர் மார்பு

கவிழ்ந்தன மருப்புக்

கலங்கினர் பலர் ;

25 அவருள், மலர்மலி புகலெழ அலர்மலி மணிபுரை திமிர்தோள்

எருத்தோ டிமிலிடைத் தோன்றினன்

தோன்றி[பிணை இ

வருத்தினான் மன்றவவ் வேறு ;



28 ஏறெவ்வங் காணா எழுந்தார் எவன்கொலோ

ஏறுடை ந்லலர்ா பகை ;

30

மடவரே நல்லாயர் மக்கள் நெருநை

அடலேற் றெருத்திறுத்தார்க் கண்டுமற் றின்றும்

உடலேறு கோட்சாற்று வார் ;

33 ஆங்கினி,

தண்ணுமைப் பாணி தளரா தெழூஉக
பண்ணமை யின்சீர்க் குரவையுள் தெண்கண்ணித்
திண்தோட் டிறலொளி மாயப்போர் மாமேனி
அந்துவ ராடைப் பொதுவனோ டாய்ந்த
முறுவலாள் மென்தோள்பா ராட்டிச் சிறுகுடி
மன்றம் பரந்த துரை.

ஆயன் தலைவனாய் ஏறுதழுவினமை சுற்றத்தார்

கண்டுநின்று கூறியது.

**1447. கலித்தொகை - 103. முல்லை : 3**

மெல்லிணர்க் கொன்றையும் மென்மலர்க்
புல்லிலை வெட்சியும் பிடவுந் தளவுங்

காயாவும்

5

குலலையுங குருநதுங கோடலும பாஙகருங
கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலைந்தனர்

பல்லான் பொதுவர் கதழ்விடை கோட்காண்மார்
முல்லை முகையு முருந்தும் நிரைத்தன்ன
பல்லர் பெருமழைக் கண்ணர் மடஞ்சேர்ந்த
சொல்லர் சுடருங் கனங்குழைக் காதினர்
நல்லவர் கொண்டார் மிடை ;

10 அவர்மிடைகொள,
மணிவரை மருங்கின் அருவி போல
அணிவரம் பறுத்த வெண்காற் காரியும்

மீன்பூத் தவிர்வரும்
வான்பொறி பரந்த

அந்திவான் விசும்புபோல்
புள்ளி வெள்ளையும்
15 கொலைவன் சூடிய குழவித் திங்கள்போல்


வளையுபு மலிந்த கோட்டணி சேயும்
பொருமுரண் முன்பிற் புகலேறு பலபெய்து
அரிமாவும் பரிமாவுங் களிறுங் கராமும்

பெருமலை விடரகத் தொருங்குடன் குழீஇப்
20 படுமழை யாடும் வரையகம் போலுங்
கொடிநறை சூழ்ந்த தொழூஉ ;

22 தொழுவினுள், புரிபு புரிபு புக்க
தெரிபு தெரிபு குத்தின ஏறு ;

பொதுவரைத்

24 ஏற்றின், அரிபரி பறுப்பன சுற்றி
எரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைக்கண்
உருவ மாலை போலக்
குருதிக் கோட்டொடு குடர்வலந்தன ;

28 கோட்டொடு சுற்றிக் குடர்வலந்த ஏற்றின்முன்
ஆடிநின் றக்குடர் வாங்குவான் பீடுகாண்
செந்நூற் கழியொருவன் கைப்பற்ற அந்நூலை
முந்நூலாக் கொள்வானும் போன்ம் ;

32 இகுளை யிஃதொன்று கண்டை இஃதொத்தன்
கோட்டினத் தாயர் மகனன்றே
மீட்டொரான்
போர்புக லேற்றுப் பிணரெருத்திற் றத்துபு
தார்போல் தழீஇ யவன் ;

36 இகுளை யிஃதொன்று கண்டை இஃதொத்தன்
கோவினத் தாயர் மகனன்றே ஓவான்

மறையேற்றின் மேலிருந் தாடித் துறையம்பி
ஊர்வான்போல் தோன்று மவன் ;

40 தொழீஇஇ, காற்றுப்போல் வந்த

கதழ்விடைக்காரியை
ஊற்றுக் களத்தே யடங்கக்கொண்
டட்டதன்
மேற்றோன்றி நின்ற பொதுவன்
தகைகண்டை
ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பின்
இடந்திட்டுச்
சீற்றமோ டாருயிர் கொண்டஞான்
றின்னன்கொல்
கூற்றென உட்கிற்றென் னெஞ்சு ;



46 இருளை யிஃதொன்று கண்டை
இஃதொத்தன்
புல்லினத் தாயர் மகனன்றே புள்ளி
வெறுத்த வயவெள்ளேற் றம்புடைத்
திங்கள்
மறுப்போற் பொருந்தி யவன் ;
50 ஓவா வேகமோ டுருத்துத்தன்
மேற்சென்ற
சேஎச் செவிமுதற் கொண்டு
பெயர்த்தொற்றுங்

காயாம்பூங் கண்ணிப் பொதுவன்
தகைகண்டை
மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை
வாய்பகுத் திட்டுப் புடைத்தஞான்
றின்னன்கொல்
மாயோனென் றுட்கிற்றென் னெஞ்சு ;
56 ஆங்கு, இரும்புலித் தொழுதியும்
பெருங்களிற் றினமும்.
மாறுமா றுழக்கியாங் குழக்கிப்
பொதுவரும்
ஏறுகொண் டொருங்குதொழூஉ விட்ட
னர் விட்டாங்கே
மயிலெருத் துறழணி மணிநிலத்துப்
பிறழப்
பயிலிதழ் மலருண்கண்
மாதர் மகளிரு மைந்தரு மைந்துற்றுத்

தாதெரு மன்றத் தயர்வர் தழூஉ ;
63 கொல்லேற்றுக் கோடஞ்சு வானை
மறுமையும்
புல்லாளே ஆய மகள் ;
65 அஞ்சார் கொலையேறு கொள்பவ
ரல்லதை
நெஞ்சிலார் தோய்தற் கரிய

உயிர் துறந்து.
ஙைவாரா ஆயமகள் தோள் ;
68 வளியா அறியா உயிர்காவல் கொண்டு
நளிவாய் மருப்பஞ்சும் நெஞ்சினர்
தோய்தற்கு.
எளியவோ ஆயமகள் தோள் ;
71 விலைவேண்டா ரெம்மினத் தாயர் மகளிர்
கொலையேற்றுக் கோட்டிடைத்
தாம்வீழ்வார் மார்பின்
முலையிடைப் போலப் புகின் ;
52



74 ஆங்கு,
குரவை தழீஇயா மரபுளி பாடித்
தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுதும்
மாசில்வான் முந்நீர்ப் பரந்த தொன்னிலம்
ஆளுங் கிழமையொடு புணர்ந்த
எங்கோ வாழியரிம் மலர்தலை யுலகே.
ஆயர் ஏறுதழுவி நின்றமையைத் தோழி
தலைவிக்குத் தனித்
தனியே காட்டிப் பின்னர் அவர் ஏறுதழுவிவிட்டுக்
குரவை யாடு

கின்றமையுங் கூறி ' ஆண்டு யாமுஞ்சென்று கின்னை
ஏறுதழுவிக்
கோடற்கு நிற்கின்ற தலைவன் கேட்டு
ஏறுதழுவிக்கொள்ளுமாறு
நமக்குச் சுற்றத்தார் கூறிக் கிடக்கின்ற முறைமையைப்
பாட்டிலே தோன்றப் பாடிக் குரவையாடி வழுதி
வாழ்கவென்று தெய்வம்
பராவுதும் ; நீயும் அங்ஙனம் பாடுதற்குப்
போதுவாயாக ', எனக்
கூறியது.

**1448.** கலித்தொகை - **104.** முல்லை : **4**

மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா
டிடம்படப்
புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த
கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த்
தென்னவன்
5 தொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய
நல்லினத் தாய ரொருங்குதொக் கெல்லாரும்
வானுற வோங்கிய வயங்கொளிர் பனைக்கொடிப்
பானிற வண்ணன்போற் பழிதீர்ந்த
வெள்ளையும்
பொருமுரண் மேம்பட்ட பொலம்புனை
புகழ்நேமித்

10 திருமறு மார்பன்போல் திறல்சான்ற காரியும்
மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதல்
மூக்கண்ணான் உருவேபோல் முரண்மிகு குராலும்
மாகடல் கலக்குற மாகொன்ற மடங்காப்போர்
வேல்வல்லான் நிறனேபோல் வெருவந்த சேயும், ஆங்கப்
15 பொருவரும் பண்பி னவ்வையும் பிறவும்
[கப்
உருவப்பல் கொண்மூக் குழீஇயவை
புரிபு புரிபு புகுத்தனர் தொழூஉ ;

போலப்

நல்லுருத்திரனார் (819

18 அவ்வழி, முள்ளெயிற் றேஎ ரிவளைப்
வெள்ளேற் றெருத்தடங்கு வான் ;

பெறுமிதோர்

20 ஒள்ளிழை, வாரூறு கூந்தற் றுயில்பெறும் வைமருப்பிற்
காரி கதனஞ்சான் கொள்பவன் ஈரரி
வெரூஉப்பிணை மானோக்கி னல்லாட் பெறாஉமிக்
குரூஉக்கட் கொலையேறு கொள்வான் வரிக்குழை
வேயுறழ் மென்றோட் டுயில்பெறும் வெந்துப்பிற்
25 சேஎய் சினனஞ்சான் சார்பவன் என்றாங்கு
அறைவனர் நல்லாரை யாயர் முறையினால்
நாண்மீன்வாய் சூழ்ந்த மதிபோல் மிடைமிசைப்
பேணி நிறுத்தா ரணி ;
29 அவ்வழிப், பறையெழூஉந் திசைப்பப் பல்லவ
குறையா மைந்தர் கோளொ திரெடுத்த

ரார்ப்பக்

நறைவலஞ் செயவிடா இறுத்தன ஏறு ;
32 அவ்வேற்றின்,
மேனிலை மிகலிகலின் மிடைகழி பிழிபு
மேற்சென்று
வேனுதி புரைவிறற் றிறனுதி மருப்பின்
மாறஞ்சான்
பானிற வெள்ளை யெருத்தத்துப் பாய்ந்தானை
நோனாது குத்தும் இளங்காரித் தோற்றங்காண்
பான்மதி சேர்ந்த அரவினைக் கோள்விடுக்கும்
நீனிற வண்ணனும் போன்ம் ;

39. இரிபெழு பதிர்பதிர் பிகந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர்சோரக் குத்தித்தன்
கோடழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
வாடா வெகுளி யெழிலேறு கண்டை
யிஃதொன்று
வெருவரு தூம மெடுப்ப வெகுண்டு
திரிதருங் கொல்களிறும் போன்ம் ;
45 தாளெழு துணிபிணி விசைதவிர் பின்றித்
தலைச்சென்று
தோள்வலி துணிபிணி தூரந்திறந்
தெய்திமெய்சாய்ந்து
கோள்வழுக்கித்தன்முன்னர்வீழ்ந்தான்மேற்செல்லாது
மீளும் புகரேற்றுத் தோற்றங்காண் மண்டமருள்



வாளகப் பட்டானை யொவ்வா
மீளி மறவனும் போன்ம் ;

னெனப்பெயரும்

51 ஆங்க, செறுத்தறுத் துழக்கி யேற்றெதிர்
நிற்பப்
மறுத்து மறுத்து மைந்தர் சாரத்
தடிகுறை யிறுபிறுபு தாயின கிடப்ப
55

இடியுற ழிசையி னியமெழுந் தார்ப்பப்
பாடேற்றுக் கொள்பவர் பாய்ந்துமே லூர்பவர்
கோடிடை நுழைபவர் கோட்சாற்று
பவரொடு
புரிபுமேற் சென்ற நூற்றுவர் மடங்க
வரிபுனை வல்வி லைவ ரட்ட
பொருகளம் போலுந் தொழூஉ ;

60 தொழுவினுள், கொண்ட ஏறெல்லாம்புலம்புகத்
தண்டாச்சீர்
வாங்கெழில் நல்லாரு மைந்தரு மல்லலூர்
ஆங்கண் அயர்வர் தழூஉ ;
63 பாடுகம் வம்மின் பொதுவன் கொலையேற்றுக்
கோடு குறிசெய்த மார்பு ;
65 நெற்றிச் சிவலை நிறையழித்தான் நீண்மார்பிற்
செற்றார்கண் சாயயான் சாரா தமைகல்லேன்
பெற்றத்தார் கவ்வை யெடுப்ப அதுபெரிது
உற்றீயா ளாயர் மகள் ;
69 தொழீஇஇ, ஒருக்குநாம் ஆடுங் குரவையுள்
நம்மை
அருக்கினன் போல்நோக்கி அல்லல்நோய்
செய்தல்
குரூஉக்கட் கொலையேறு கொண்டேன்யா

னென்னுங்
தருக்கன்ரூ ஆயர் மகன் ;

73 சேரிழாய், கோளரி தாக நிறுத்த
கொலேயேற்றுக்
காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே
ஆர்வுற் றெமர்கொடை நேர்ந்தார் அலரெடுத்த
ஊராரை யுச்சி மிதித்து ;



77 ஆங்கு,
தொல்கதிர்த் திகிரியாற் பரவுதும் ஒல்கா
உருமுறழ் முரசிற் றென்னவற்கு
ஒருமொழி கொள்கவிவ் வுலகுட னெனவே.

"நாடக வழக்கினும்" என்னும் சூத்திரத்து, "பாடலு ளமையாத" என்றதனல் ஏறுதழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக் காட்டிக் கூறி, இக்குரவையுள் அவனைப் பாடுகம் வாவென்ருட்கு, அவன் உடம்பாட்டினுள், தான் அலரச்சம் நீங்கினமையும் அவன் தன்னை வருத்தினமையுங் கூறிப் பாடி, பின்னர்த் தோழி நமர் அவற்கு நின்னைக் கொடைநேர்ந்தாரெனக் கூறியது.

அரைசுபடக் கடந்தட் டாற்றிற் றந்த
முரைசுகெழு முதுகுடி முரண்மிகு செல்வற்குச்
சீர்மிகு சிறப்பினோன் தொல்குடிக் குரித்தெனப்
பார்வளர் முத்தமொடு படுகடல் பயந்த
5 ஆர்கலி யுவகைய ரொருங்குடன் கூடித்
தீதின்று பொலிகெனத் தெய்வக் கடியயர்மார்
வீவில் குடிப்பின் இருங்குடி யாயரும்
தாவி லுள்ளமொடு துவன்றி யாய்புடன்
வள்ளுருள் நேமியான் வாய்வைத்த வளைபோலத்
10 தெள்ளிதின் விளங்குஞ் சுரிநெற்றிக் காரியும்
ஒருகுழை யவன்மார்பி லொண்டார்போ லொளிமிகப்
பொருவறப் பொருந்திய செம்மறு வெள்ளையும்
பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற் றணிபோல
இரும்பிணர் ரெருத்தின் எந்திமிற் குராலும்
15 அணங்குடை வச்சிரத்தோ னாயிரங் கண்ணேய்க்குங்
கணங்கொள் பல்பொறிக் கடுஞ்சினப் புகரும்
வேல்வலா னுடைத்தாழ்ந்த விளங்குவெண் துகிலேய்ப்ப
வாலிது கிளர்ந்த வெண்காற் சேயுங்
கால முன்பிற் பிறவுஞ் சால
20 மடங்கலுங் கணிச்சியுங் காலனுங் கூற்றுந்

822 சங்க இலக்கியம்

தொடர்ந்துசெல் அமையத்துத்
துவன்றுயிர் உண்இய

உடங்குகொட் பனபோற் புகுத்தனர் தொழூஉ
;

23 அவ்வழி

காரெதிர் கலியொலி கடியிடி யுருமின் இயங்கறங்க
ஊர்பெழு கிளர்புளர் புயல்மங்குலின் நறைபொங்க
நேரிதழ் நிரைநிரைநெறிவெறிக்கோதையர் அணிநிற்பச்
சீர்கெழுசிலைநிலைச் செயிரிகல்மிகுதியிற்
சினப்பொதுவர்

ஆர்பெழு துதைபுதை துகள்விசும் புறவெய்த
ஆர்புடன் பாய்ந்தா ரகத்து;

30 மருப்பிற் கொண்டு மார்புறத் தழீஇயும்
எருத்திடை யடங்கியும் இமிலிறப் புல்லியும்
தோளிடைப் புகுதந்தும் துதைந்துபா
டேற்றும்

நிரைபுமேற் சென்றுரை நீண்மருப் புறச்சாடிக்
கொளவிடங் கொளவிடா திறுத்தன வேறு;

35 கொள்வாரைக் கொள்வாரைக்
கோட்டுவாய்ச்சாக்குத்
கொள்வார்ப் பெறுஅக் குரூஉச்செகில்
காணிகா [திக்
செயிரிற் குறைநாளாற் பின்சென்று சாடி
உயிருண்ணுங் கூற்றமும் போன்ம்;

39 பாடேற் றவரைப் படக்குத்திச் செங்காரிக்
கோடெழுந் தாடுங் கணமணி காணிகா

நகைசா லவிழ்பதம் நோக்கி நறவின்
முகைசூழுந் தும்பியும் போன்ம்;

43 இடைப்பாய்ந் தெருத்தத்துக் கொண்டானோ
டெய்தி
மிடைப்பாயும் வெள்ளேறு கண்டைகா

வாள்பொரு வானத் தரவின்வாய்க்
கோட்பட்டுப்
போதரும் பான்மதியும் போன்ம்;

47 ஆங்க, ஏறும் பொதுவரு மாறுற்று மாறா
இருபெரு வேந்தரும் இகலிக்கண் ணுற்ற
பொருகளம் போலுந் தொழூஉ;



50 வெல்புக
ழுயர்நிலைத்தொல்லியற் றுறைபுதை துளங்கிமில்
நல்லேறு கொண்ட பொதுவன் முகனோக்கிப்
பாடில ஆய்மகள் கண;

53 நறுநுதா லென்கொலைங் கூந்த லுளரச்

சிறுமுல்லை நாறிய தற்குக் குறுமறுகி
ஒல்லா துடன்றெமர் செய்தா ரவன்கொண்ட
கொல்லேறு போலுங் கதம் ;

57 நெட்டிருங் கூந்தலாய் கண்டை யிஃதோர்
சொல் ;

58

கோட்டினத் தாயர் மகனொடுயாம் பட்டதற்கு
எங்க ணமரோ பொறுப்பர் பொறாதார்
தங்கண் பொடிவ தெவன் ;

61 ஒண்ணுதால்,
இன்ன உவகை பிறிதியா து யாயென்னைக்
கண்ணுடைக் கோலள் அலைத்ததற் கென்னை
மலரணி கண்ணிப் பொதுவனோ டெண்ணி
அலர்செய்து விட்டதிவ் வூர் ;

66 ஒன்றிப் புகரினத் தாயமகற் கொள்ளிழாய்
இன்றெவ னென்னை யெமர்கொடுப்ப
தன்றவன்
மிக்குத்தன் மேற்சென்ற செங்காரிக்
கோட்டிடைப்
புக்கக்காற் புக்கதென் னெஞ்சு ;
என,

71 பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய

ஆடுகொள் நேமியாற் பரவுதும் நாடுகொண்டு
இன்னிசை முரசிற் பொருப்பன் மன்னி
அமைவர லருவி யார்க்கும்
இமையத் தும்பரும் விளங்குக வெனவே.

ஏறுதழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக் காட்டிக் கூறி, அவள் ஏறுதழுவிய தலைவனை விருப்பொடு நோக்கியவாற்றைத் தன்னுள்ளே கூறி, முன்னர்க் களவின்கண் தமர் கோபித்ததனை



யும் அயலார் பொருதிருந்த தன்மையினையும் தலைவிக்குக் கூற, அவளும் அவர் அலர் கூறியது நன்றென்று கூறி, 'அன்றே என் னெஞ்சு கலந்துவிட்டது; இனி அவர் கொடுப்பதாகக் கூறிய நாளிற் செய்வதென்னென மகிழ்ந்து கூற', அதுகேட்ட தோழி யாம் அங்ஙனங் கூடி இனிதிருக்குமாறு காக்கின்ற பாண்டியன் நீடுவாழுமாறு தெய்வத்தைப் பரவுகம் வாவெனக் கூறியது.

## 1450. கலித்தொகை - 106. முல்லை : 6

கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்
இமிழிசை மண்டை யுறியொடு தூக்கி
ஒழுகிய கொன்றைத் தீங்குழல் முறற்சியர்
வழூஉச்சொற் கோவலர் தத்த மினநிரை 5
பொழுதொடு தோன்றிய கார்நனை வியன்புலத்தார்;
அவ்வழி,

நீறெடுப்பவை நிலஞ்சாடுபவை
மாறேற்றுச் சிலைப்பவை மண்டிப்பாய் பவையாய்த்
துளங்கிமில் நல்லேற் றினம்பல களம்புகு
மள்ளர் வனப்பொத் தன ;
11 தாக்குபு தம்முட் பெயர்த்தொற்றி யெவ்வாயும்
வைவாய் மருப்பினன் மாறுஅ குத்தலின்
மெய்வார் குருதிய ஏறெல்லாம் பெய்காலைக்
கொண்டல் நிரையொத் தன ;
15 அவ்வேற்றை,
பிரிவுகொண் டிடைப்போக்கி யினத்தோடு புனத்தேற்றி
இருதிறனா நீக்கும் பொதுவர்
உருகெழு மாநில மியற்றுவான்
விரிதிரை நீக்குவான் வியன்குறிப் பொத்தனர் ;
20 அவரைக், கழூல வுழக்கி யெதிர்சென்று சாடி
அழல்வாய் மருப்பினாற் குத்தி யுழலை
மரத்தைப்போல் தொட்டன ஏறு ;



23 தொட்டதம், புண்வார் குருதியாற் கைபிசைந்து

மெய்திமிரித்

தங்கார் பொதுவர் கடலுட் பரதவர்

அம்பியூர்ந் தாங்கூர்ந்தா ரேறு ;

26 ஏறுதம், கோலஞ்செய்மருப்பிளுற்றேண்டியவரிக்குடர்
ஞாலங்கொண் டெழூஉம் பருந்தின் வாய்வழீஇ
ஆலுங் கடம்பும் அணிமார் விலங்கிட்ட
மாலைபோல் தூங்குஞ் சினை ;

30 ஆங்கு,
தம்புல ஏறு பரத்தர வுய்த்ததம்
அன்புறு காதலர் கைபிணைந் தாய்ச்சியர்
இன்புற் றயர்வர் தழூஉ ;

34 முயங்கிப் பொதிவேம் முயங்கிப் பொதிவேம்
முலைவேதி னொற்றி முயங்கிப் பொதிவேம்
கொலையேறு சாடிய புண்ணையெங் கேளே ;

37 பல்லூழ் தயிர்கடையத் தாஅய புள்ளிமேற்
கொல்லேறு கொண்டான் குருதி மயக்குறப்
புல்லலெங் தோளிற் கணியோவெங் கேளே ;

40 ஆங்கு, போரேற் றருந்தலை யஞ்சலும்
ஆய்ச்சியர்

காரிகைத் தோள்கா ழுறுதலும் இவ்விரண்டும்
ஓராங்குச் சேற லிலவோவெங் கேளே ;

43 கொல்லேறு கொண்டா னிவள்கேள்வ
னென்றாரார்
சொல்லுஞ்சொற் கேளா அளைமாறி யாம்வருஞ்
செல்வமெங் கேள்வன் தருமோவெங் கேளே ;

49 ஆங்க,
அருந்தலை யேற்றொடு காதலர்ப் பேணிச்
சுரும்பிமிர் கானம்நாம் பாடினம் பரவுதும்
ஏற்றவர் புலங்கெடத் திறைகொண்டு
மாற்றாரைக் கடக்கவெம் மறங்கெழு கோவே.

தத்தம் இனம் தத்தம்புலத்துப் பிரிப்பான்புக்கவர்
ஏறுகொண்ட வாறு கண்டு ஆய்ச்சியர் தங் காதல்
மிகுதியால் தங் காதலரைக்



கைபிணைந்து குரவையாடித் தென்னன் வாழ்கெனக்
கானம் பாடியது.

**1451.** கலித்தொகை - **107.** முல்லை : **7**

எல்லா இஃதொன்று கூறு குறும்பிவர்
புல்லினத் தார்க்குங் குடஞ்சுட் டவர்க்குமெங்
கொல்லேறு கோடல் குறையெனக் கோவினத்தார்
பல்லேறு பெய்தார் தொழூஉ ;

5 தொழுவத்து,
சில்லைச், செவிமறைக் கொண்டவன்
சென்னிக்குவிமுல்லைக்
கோட்டங்காழ் கோட்டி னெடுத்துக்கொண்
டாட்டிய
ஏழை யிரும்புகர் பொங்கவப் பூவந்தென்
கூழையுள் வீழ்ந்தன் றுமன் ;

10 அதனைக், கெடுத்தது பெற்றார்போற்
கொண்டியான் முடித்தது
கேட்டனள் என்பவோ யாய் ;

12 கேட்டால் எவன்செய்ய வேண்டுமோ மற்றிகா
அவன்கண்ணி யன்றோ அது ;

14 பெய்போ தறியாத்தன் கூழையுள் ஏதிலான்
கைபுனை கண்ணி முடித்தாளென்று
யாய்கேட்பிற்
செய்வதி லாகுமோ மற்று ;

17 எல்லாத் தவறும் அறும் ;

18 ஓஓ அஃதறு மாறு ;

19

ஆயர் மகனாயின் ஆயமகள் நீயாயின்
நின்வெய்ய னாயின் அவன்வெய்யை நீயாயின்

அன்னோ தக்கதோ இல்லமன் நின்னெஞ்சம்
அன்னநெஞ் சாகப் பெறின் ;

அன்னையோ,
24 ஆயர் மகளையும் காதலை கைம்மிக
ஞாயையு மஞ்சுதி யாயின் அரிதரோ
நீயுற்ற நோய்க்கு மருந்து ;



27 மருந்தின் றுயா னுற்ற துயராயின் எல்லா

வருந்துவே னல்லனோ யான் ;
29 வருந்ாதி,

மண்ணிமா சற்றநின் கூழையுள் ஏறவன்
கண்ணிதந் திட்ட தெனக்கேட்டுத்
திண்ணிதாத்
தெய்வமால் காட்டிற் றிவட்கென நின்னையப்
பொய்யில் பொதுவற் கடைசூழ்ந்தார்
தந்தையோடு
ஐயன்மா ரெல்லா மொருங்கு.

தலைவி தோழிக்கு அறத்தொடுநிற்பத் தமர்
வரைவுடன்பட்டமை அவட்கு அவள் சொல்லியது.

1452. கலித்தொகை - 108. முல்லை : 8

இகல்வேந்தன் சேனை யிறுத்தவாய் போல
அகலல்குல் தோள் கண்ணென மூவழிப் பெருகி
நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகிக்
கவலையாற் காமனும் படைவிடு வனப்பினோடு
5 அகலாங்கண் அளைமாறி யலமந்து பெயருங்கால்
நகைவல்லேன் யானென்றென்
னுயிரோடுபடைதொட்ட
இகலாட்டி நின்னை யெவன்பிழைத்தே
னெல்லாயான் ;
அஃதவல மன்று மன ;
9 ஆய ரெமரானல் ஆய்த்தியேம் யாமிகக்
காயாம்பூங் கண்ணிக் கருந்துவ ராடையை
மேயும் நிரைமுன்னர்க் கோலூன்றி
நின்றாயோர்
ஆயனை யல்லை பிறவோ அமரருள்
ஞாயிற்றுப் புத்தேள் மகன் ;
14 அதனால் வாய்வாளேன் ;
முல்லை முகையு முருந்தும் நிரைத்தன்ன
பல்லும் பணைத்தோளும்
பேரமருண்கண்ணும்
நல்லேன்யா னென்று நலத்தகை நம்பிய
சொல்லாட்டி நின்னொடு சொல்லாற்று
கிற்பார்யார் ;

19 சொல்லாதி ;
நின்னைத் தகைத்தனென் ; அல்லல்காண் மன் ;

21 மண்டாத கூறி மழகுழக் காகின்றே
கண்ட பொழுதே கடவரைப் போலநீ
பண்டம் வினைய படிற்றால் தொடீஇயநிற்
கொண்ட தெவனெல்லா யான் ;

கொண்டது,
26 அளைமாறிப் பெயர்தருவா யறிதியோ அஞ்ஞான்று
தளவமலர் ததைந்ததோர் கானச்சிற் றாற்றயல்
இளமாங்காய் போழ்ந்தன்ன கண்ணினாலென்னெஞ்சங்
களமாக்கொண் டாண்டாயோர் கள்வியை யல்லையோ;

நின்னெஞ்சம்,களமாக்கொண் டியாமாள லெமக்கெவ னெளிதா
31 புனத்துளான் என்னைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ[கும்;
இனத்துளான் எந்தைக்குக் கலத்தொடு செல்வதோ
தினைக்காலுள் யாய்விட்ட கன்றுமேய்க் கிற்பதோ ;

அனைத்தாக,
35 வெண்ணெய்த் தெழிகேட்கும் அண்மையாற் சேய்த்தன்றி
அண்ணணித் தூராயின் நன்பகற் போழ்தாயிற்
கண்ணோக் கொழிக்குங் கவின்பெறு பெண்ணீர்மை
மயிலெருத்து வண்ணத்து மாயோய்மற் றின்ன
வெயிலொ டெவன்விரைந்து சேறி யுழக்காண்
பிடிதுஞ்சு வன்ன அறைமேல நுங்கின்
தடிகண் புரையுங் குறுஞ்சுனை யாடிப்
பனிப்பூந் தளவொடு முல்லை பறித்துத்

தனிக்காயாந் தண்பொழி லெம்மொடு வைகிப்
பனிப்படச் செல்வாய்நும் மூர்க்கு ;
இனிச்செல்வேம்யாம்,
46 மாமருண் டன்ன மழைக்கட்சிற் றுய்த்தியர்
நீமருட்டுஞ் சொற்கண் மருள்வார்க்
குரையவை
ஆமுனியா ஏறுபோல் வைகற் பதின்மரைக்



காமுற்றுச் செல்வாயோர் கட்குத்திக்
நீயெவன் செய்தி பிறர்க்கு ;

கள்வனே

யாமெவன் செய்தும் நினக்கு ;
52 கொலையுண்கட் கூரெயிற்றுக் கொய்தளிர்
மேனி
இனைவனப்பின் மாயோய் நின்னிற் சிறந்தார்
நிலவுலகத் தின்மை தெளிநீ வருதி
மலையொடு மார்பமைந்த செல்வ னடியைத்
தலையினால் தொட்டுற்றேன் சூள் ;
57 ஆங்குணரார் நேர்ப அதுபொய்ப்பாய்
நீயாயின்

தேங்கொள் பொருப்பன் சிறுகுடி யெம்மாயர்
வேந்தூட் டரவத்து நின்பெண்டிர் காணாமைக்

காஞ்சித்தா துக்கன்ன தாதெரு மன்றத்துத்
தூங்குங் குரவையுள் நின்பெண்டிர் கேளாமை
ஆம்பற் குழலாற் பயிர்பயி ரெம்படப்பைக்
காஞ்சிக்கீழ்ச் செய்தேங் குறி.

" அடியோர் பாங்கினும் வினைவல பாங்கினும்,
கடிவரை யில புறத் தென்மனார் புலவர் " என்பதனாற்
பிறர் ஏவிய தொழிலைச் செய்தல்வல்ல அகப்புறத்
தலைவனும் தலைவியும் முன்னொருகாற் கூடிப் பின்னர்
அவனெதிர்ப்பட்டுழி அவன்வயிற் பரத்தைமையால் ஊடிக்
குறிநேர்ந்தது.

**1453.** கலித்தொகை - **109.** முல்லை : **9**

காராரப் பெய்த கடிகொள் வியன்புலத்துப்
பேராது சென்று பெரும்பதவப் புல்மாந்தி
நீரார் நிழல குடஞ்சுட் டினத்துள்ளும்
போராரா ஏற்றின் பொருநா கிளம்பாண்டில்
5 தேரூரச் செம்மாந் ததுபோல் மதைஇனள்
பேருருஞ் சிற்றூருங் கௌவை யெடுப்ப
வள்போல் மோரோடு வந்தாள் தகைகண்டை
யாரோடுஞ்
சொல்லியா ளன்றே வனப்பு ;

9 பண்ணித் தமர்தந் தொருபுறந் தைஇய
கண்ணி யெடுக்கல்லாக் கோடேந் தகலல்குல்
புண்ணில்லார் புண்ணாக நோக்கும் முழுமெய்யுங்
கண்ணளோ ஆயர் மகள் ;

13 இவள்தான், திருத்தாச் சுமட்டினள்

ஏனைத்தோள்வீசி
வரிக்கூழ வட்டி தழீஇ அரிக்குழை
ஆடற் றகையள் கழுத்தினும் வாலிது
நுண்ணிதாத் தோன்றும் நுசுப்பு ;

17 இடைதெரியா ஏஎ ரிருவருந் தத்தம்
உடைவனப் பெல்லாம் இவட்கீத்தார்

கொல்லோ
படையிடுவான் மற்கண்டீர் காமன்
மடையடும் பாலொடு கோட்டம் புகின் ;

21 இவள்தான்,வருந்தநோய் செய்திறப்பி னல்லால்

மருந்தல்லள்
யார்க்கும் அணங்காதல் சான்றனென்

றார்ப்பெண்டிர்
மாங்காய் நறுங்காடி கூட்டுவேம் யாங்கும்
எழுநின் கிளையொடு போகென்று தத்தங்
கொழுநரைப் போகாமற் காத்து முழுநாளும்

வாயி லடைப்ப வரும்.

வினைவல பாங்கிற்றலைவியைக்கண்ட வினைவல பாங்கிற்றலைவன்
"காமஞ்சாலா விளமையோள்வயி, னேமஞ்சாலா விடும்பை யெய்தி"
கூறியது.

## 1454. கலித்தோகை - 110.

முல்லை : 10

கடிகொ ளிருங்காப்பிற் புல்லினத் தாயர்
குடிதொறு நல்லாரை வேண்டுதி யெல்லா
விடுதேள் மருந்தோநின் வேட்கை தொடுதரத்
துன்னித்தந் தாங்கே நகைகுறித் தெம்மைத்
5 திளைத்தற் கெளியமாக் கண்டை
யலைக்கெளியாள்
வெண்ணெய்க்கு மன்ன
ளெனக்கொண்டாயொண் ணுதால்
ஆங்குநீ கூறி னனைத்தாக நீங்குக ;



8 அச்சத்தான் மாறி யசைவினற் போத்தந்து
நிச்சந் தடுமாறு மெல்லிய லாய்மகள்
மத்தம் பிணித்த கயிறுபோல் நின்னலஞ்
சுற்றிச் சுழலுமென் னெஞ்சு ;

12 விடிந்த பொழுதினும் இல்வயிற் போகாது
கொடுக்தொழுவி னுட்பட்ட கன்றிற்குச் சூழுங்
கடுஞ்சூலா நாகுபோல் நிற்கண்டு நாளும்
நடுங்க லுற்றதென் னெஞ்சு ;

16 எவ்வ மிகுதர எந்திறத் தெஞ்ஞான்றும்
நெய்கடை பாலிற் பயன்யாது மின்றாகிக்
கைதோயல் மாத்திரை யல்லது செய்தி

அறியா தளித்தென் னுயிர் ;

20 அன்னையோ,
மன்றத்துக்கண்டாங்கேசான்றார்மகளிரை
யின்றி யமையேனென் றின்னவுஞ்
சொல்லுவாய்
நின்றாய்நீ சென்றீ யெமர்காண்பர் நாளையுங்
கன்றொடு சேறும் புலத்து.

வினைவலபாங்கினல் வெண்ணெய் நொடைக்குச் சென்ற தலைவியைக் கண்டு வினைவல பாங்கிற் றலைவன் மெய்தீண்டித் தனது ஆற்றாமையை அறிவித்துழி, அவள் ஈண்டுப் பிறரறிவர், நாளைக் கன்றோடு சேறுமென இடங்கூறியது.

**1455.** கலித்தொகை - **111.** முல்லை : **11**

தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாந்
தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த
பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப்
முல்லையுந் தாய பாட்டங்காற் றோழிநம்

யாங்கரும்

5 புல்லினத் தாயர் மகளிரோ டெல்லாம்

ஒருங்கு விளையாட அவ்வழி வந்த
குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்மற் றென்னை
முற்றிழை யேஎர் மடநல்லாய் நீயாடுஞ்
சிற்றில் புனைகோ சிறிதென்றான் எல்லாநீ



10

பெற்றேம்யா மென்று பிறர்செய்த இல்லிருப்பாய்
கற்ற திலைமன்ற காணென்றேன் முற்றிழாய்
தாதுசூழ் கூந்தற் றகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினக்கென்றான் எல்லாநீ
ஏதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப்
15 பேதையை மன்ற பெரிதென்றேன் மாதராய்
ஐய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேல்
தொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர்
செய்புறம் நோக்கி யிருத்துமோ நீபெரிது
மையலை மாதோ விடுகென்றேன் தையலாய்
20 சொல்லிய வாறெல்லா மாறுமா று யான்பெயர்ப்ப

அல்லாந்தான் போலப் பெயர்ந்தான் அவனைநீ
ஆயர் மகளி ரியல்புரைத் தெந்தையும்
யாயும் அறிய வுரைத்தியின் யானுற்ற
நோயுங் களைகுவை மன்.

தலைவி ஆயத்திடைத் தலைவனைக் கண்டவாறும் அவனைக்கூறி

யனவும்கூறி, தோழியைத் தலைவனை வரைவுகடாவி யாய்க்கு அறத்

தொடு நிற்க வேண்டுமென்றது.

**1456.** கலித்தொகை - **112.** முல்லை : **12**

யாரிவ னென்னை விலக்குவான் நீருளர்
பூந்தா மரைப்போது தந்த விரவுத்தார்க்
கல்லாப் பொதுவனை நீமாறு நின்னொடு
சொல்லலோம் பென்றா ரெமர் ;

5

எல்லா, கடாஅய கண்ணாற் கலைஇயநோய் செய்யும்
நடாஅக் கரும்பமன்ற தோளாரைக் காணின்
விடாஅலோம் பென்றா ரெமர் ;

8 கடாஅயார், நல்லாரைக் காணின் விலக்கி
நயந்தவர்
பல்லிதழுண்கண்ணும் தோளும் புகழ்பாட
நல்லது கற்பித்தார் மன்ற நுமர்பெரிதும்
வல்ல ரெமர்கட் செயல் ;

நல்லுருத்திரனார்

833

12 ஓஒ, வழங்காப் பொழுதுநீ கன்றுமேய்ப்
பாய்போல் வழங்க லறிவா ருரையாரேல் எம்மை
இகழ்ந்தாரே யன்றோ எமர் ;

ஒக்கும், அறிவல்யா னெல்லா விடு ;

16 விடேன்யான், என்னீ குறித்த திருங்கூந்தால்
நின்னையென் முன்னின்று
சொல்லலோம் பென்றமை யன்றி யவனீ
புல்லலோம் பென்ற துடையரோ மெல்ல 20
முயங்குநின் முள்ளெயி றுண்கும் எவன்கொலோ
மாயப் பொதுவன் உரைத்த உரையெல்லாம் வாயாவ
தாயின் தலைப்பட்டாம் பொய்யாயிற் சாயலின்
மார்பிற் கமழ்தார் குழைத்தநின் ஆயித
ழுண்கண் பசப்பத் தடமென்தோள் சாயினு மேன
ருடைத்து.

வினைவல பாங்கிற் றலைவியை ஆற்றிடைக் கண்டு வினைவல பாங்கிற் றலைவன் விலக்கி நகையாடி இருவருஞ் சிலமொழி கூறிய வழி அவள் கூட்டத்திற்கு உடம்பட்டது. இது கைக்கிளை.

## 1457. கலித்தொகை - 113. முல்லை : 13

நலமிக நந்திய நயவரு தடமென்தோள்
அலமர லமருண்க ணந்நல்லாய் நீயுறீஇ
உலமர லுயவுநோய்க் குய்யுமா றுரைத்துச்செல் ;

4 பேரேமுற் றார்போல முன்னின்று விலக்குவாய்
யாரெல்லா நின்னை யறிந்ததூஉ மில்வழி ; 6
தளரியா லென்னறிதல் வேண்டிற் பகையஞ்சாப்

புல்லினத் தாயர் மகனேன் மற்றியான் ;
8 ஒக்குமன்,
புல்லினத் தாயனை நீ யாயிற் குடஞ்சுட்டு
நல்லினத் தாய ரெமர் ;
53



11 எல்லா,
நின்னொடு சொல்லி னேதமோ இல்லைமன் ;
ஏதமன் றெல்லை வருவான் விடு ;
14 விடேன்,
உடம்பட்டு நீப்பார் கிளவி மடம்பட்டு
மெல்லிய வாத லறியினு மெல்லியால் [கொண்டு
நின்மொழிகொண் டியானோ விடுவேன்மற் றென்மொழி
என்னெஞ்ச மேவல் செயின் ;
19 நெஞ்சேவல் செய்யா தெனநின்றாய்க் கெஞ்
சிய
காதல்கொள் காமங் கலக்குற ஏதிலார்
பொய்ம்மொழி தேறுவ தென் ;
22 தெளிந்தேன் தெரியிழா யான் ;
23 பல்கால்யாங் கான்யாற் றவிர்மணற்
றண்பொழில்
அல்க லகலறை யாயமொ டாடி
முல்லை குருந்தொடு முச்சிவேய்ந் தெல்லை
இரவுற்ற தின்னுங் கழிப்பி அரவுற்று

உருமி னதிருங் குரல்போற் பொருமுரண்
நல்லேறு நாகுடன் நின்றன
பல்லா னினநிரை நாமுடன் செலற்கே.
வினைவல பாங்கிற்றலைவியை ஆற்றிடைக்கண்டு அவளை வினை
வல பாங்கிற்றலைவன் விலக்கி அவனோடு சிறிது கூறியவழி அவள்
கூடலுறுகின்றாள் கூறியது. இது கைக்கிளை.

**1458.** கலித்தொகை - **114.** முல்லை : **14**

வாரி நெறிப்பட் டிரும்புறந் தாஅழ்ந்த
ஓரிப் புதல்வன் அழுதன னென்பவோ
புதுவ மலர்தைஇ யெமரென் பெயரால்
வதுவை யயர்வாரைக் கண்டு மதியறியா
ஏழையை யென்றகல நக்குவந் தீயாய்நீ
தோழி யவனுழைச் சென்று;
7 சென்றியா னறிவேன் கூறுக மற்றினி;

நல்லுருத்திரனூர்



8 சொல்லறியாப் பேதை மடவைமற் றெல்லா
நினக்கொரூஉ மற்றென் றகலகலும் நீடின்று
நினக்கு வருவதாக் காண்பா யனைத்தாகச்

சொல்லிய சொல்லும் வியங்கொளக் கூறு ;

12 தருமணற் ருழப்பெய் தில்பூவ லூட்டி
எருமைப் பெடையோ டெமரீங் கயரும்
பெருமண மெல்லாந் தனித்தே யொழிய
வரிமணல் முன்றுறைச் சிற்றில் புனைந்த
திருநுத லாயத்தார் தம்முட் புணர்ந்த
ஒருமணந் தானறியு மாயின் எனைத்துந்
தெருமரல் கைவிட் டிருக்கோ அலர்ந்த
விரிநீ ருடுக்கை யுலகம் பெறினும்
அருநெறி யாயர் மகளிர்க்கு
இருமணங் கூடுத லில்லியல் பன்றே.

" ஆங்கதன் புறத்துப் புரைபட வந்த மறுத்தலொடு தொகைஇ என்பது, அவன் வரைவு வேண்டின இடத்து அவ்வரைவு புறத்த தாகிய வழித் தலைவி தன்னுயர்வு உண்டாகத் தோன்றிய மறுத்த லோடே முற்கூறியவற்றைத் தொகுத்து " என்று பொருள்கூறி, " அதன்புறமெனவே அதற்கு அயலாகிய கொன்னுமலர் வரை வாயிற்று " என்றும் ; உயர்வு, குடிப்பிறப்புங் கற்பும் ; அதற்கேற்பப் பிறர் வரைவுமறுத்துத் தலைவன் வரையுமாறு நீகூறெனத் தோழிக் குக் கூறியது.

**1459.** கலித்தொகை - **115.** முல்லை : **15**

தோழிநாம், காணுமை யுண்ட கடுங்கள்ளை மெய்கூர
நாணுது சென்று நடுங்க வுரைத்தாங்குக்

கரந்தஉங் கையொடு கோட்பட்டாம்
கண்டாய்நம்
புல்லினத் தாயர் மகன்சூடி வந்ததோர்

5 முல்லை யொருகாழுங் கண்ணியு மெல்லியால்
கூந்தலுட் பெய்து முடித்தேன்மன்
தோழியாய்
வெண்ணெ யுரைஇ விரித்த கதுப்போடே



அன்னையு மத்தனு மில்லரா யாய்நாண
அன்னைமுன் வீழ்ந்தன்றப் பூ;
10 அதனை, வினவலுஞ் செய்யாள் சினவலுஞ்
செய்யாள்
நெருப்புக்கை தொட்டவர் போல
விதிர்த்திட்டு
நீங்கிப் புறங்கடைப் போயினாள் யானுமென்
சாந்துளர் கூழை முடியா நிலந்தாழ்ந்த
பூங்கரை நீலந் தழீஇத் தளர்பொல்கிப்
பாங்கருங் கானத் தொளித்தேன்
அதற்கெல்லா
ஈங்கெவன் அஞ்சு வது;
17 அஞ்சல், அவன் கண்ணி நீபுனைந்தா யாயின்
நமரும் அவன்க ணடைசூழ்ந்தார் நின்னை

யகனகண

வரைப்பின் மணற்ருழப் பெய்து திரைப்பில்
வதுவையு மீங்கே யயர்ப அதுவேயாம்
அல்கலுஞ் சூழ்ந்த வினை.
தலைவி களவு வெளிப்பட்டதென்று அஞ்சித்
தோழிக்குச்
சொல்ல, நமர் நின்னை அவற்கே கொடுக்கச்
சூழ்ந்தாரெனச் சொல்லி
அச்சம் நீக்கியது.

**1460.** கலித்தொகை - **116.** முல்லை :
**16**

பாங்கரும் பாட்டங்காற் கன்றொடு
செல்வேமெந்
தாம்பின் ஒருதலை பற்றினை யீங்கெம்மை
முன்னைநின் றாங்கே விலக்கிய எல்லாநீ
என்னையே முற்றாய் விடு;
5 விடேஎன், தொடீஇய செல்வார்த்
துமித்தெதிர்மண்டுங்
கடுவய நாகுபோல் நோக்கித் தொடுவாயின்
நீங்கிச் சினவுவாய் மற்று;
8 நீநீங்கு, கன்றுசேர்ந் தார்கட் கதவீற்றுச்
சென்றாங்கு
வன்கண்ணள் ஆய்வர லோம்பு;

10 யாய்வருக வொன்றோ பிறர்வருக மற்றுநின்
கோவரினு மிங்கே வருக தளரேன்யான்
நீயருளி நல்கப் பெறின் ;

13 நின்னையான் சொல்லினவும் பேணாய் நினை இக்
கனைபெய லேற்றிற் றலைசாய்த் தெனையதூஉம்
மாறெதிர் கூறி மயக்குப் படுகுவாய்
கலத்தொடியாஞ் செல்வுழி நாடிப் புலத்தும்
வருவையால் நாணிலி நீ.

வினைவல பாங்கிற் றலைவியை ஆற்றிடைக் கண்டு விலக்கிய தலைவனோடு அவள் சில மொழிகூறிக் குறியிடங் கூறியது.

**1461.** கலித்தொகை - **117.** முல்லை : **17**

மாண வுருக்கிய நன்பொன் மணியுறீஇப்
பேணித் துடைத்தன்ன மேனியாய் கோங்கின்
முகிரா இளமுகை யொப்ப எதிரிய
தொய்யில் பொறித்த வனமுலையாய் மற்றுநின்
கைய தெவன்மற் றுரை ;

6 கையதை, சேரிக் கிழவன் மகளேன்யான்
மற்றிஃதோர்

மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்ததோர்
போழிற் புனைந்த வரிப்புட்டில் புட்டிலு
ளென்னுள
காண்டக்கா யெற்காட்டிக் காண் ;
10 காணினி, தோட்டார் கதுப்பினென் தோழி
யவரொடு
காட்டுச்சார்க் கொய்த சிறுமுல்லை மற்றிவை
முல்லை யிவையாயின் முற்றிய கூழையாய்

எல்லிற்றுப் போழ்தாயின் ஈதோளிக்
கண்டேனால்
செல்லென்று நின்னை விடுவேன்யான்
மற்றெனக்கு
மெல்லிய தோரா வறிவு.
ஆற்றிடைத் தலைவன் தலைவியைக் கையதுவினுய்ச்
சேர்ந்தது.

உஎ௦. நல்லூர்ச் சிறுமேதாவியார்

1462. நற்றிணை - 282. குறிஞ்சி

தோடமை செறிப்பின் இலங்குவளை ஞெகிழக்

கோடேந் தல்கு லவ்வரி வாட
நன்னுதற் பாய படர்மலி யருநோய்
காதலன் தந்தமை யறியா துணர்த்த
5 அணங்குறு கழங்கின் முதுவாய் வேலன்
கிளவியிற் றணியின் நன்றுமன் சாரல்

அகில்சுடு கானவன் உவல்சுடு கமழ்புகை
ஆடுமழை மங்குலின் மறைக்கும்
நாடுகெழு வெற்பனொ டமைந்தநந் தொடர்பே.

சிறைப்புறமாகத் தோழி செறிப்பறிவுறீஇ
வரைவுகடாயது.

## உஎக. நல்லெழுநியார்

## 1463. பரிபாடல் - 13.

மணிவரை யூர்ந்த மங்குல் ஞாயிற்று
அணிவனப் பமைந்த பூந்துகில் புனைமுடி
இறுவரை யிழிதரும் பொன்மணி யருவியின்
நிறனொடு மாறுந்தார்ப் புள்ளுப்பொறி புனைகொடி
5 விண்ணளி கொண்ட வியன்மதி யணிகொளத்
தண்ணளி கொண்ட அணங்குடை நேமிமால்
பருவம் வாய்த்தலி னிருவிசும் பணிந்த
இருவேறு மண்டிலத் திலக்கம் போல
நேமியும் வளையும் ஏந்திய கையாற்
10 கருவி மின்னவி ரிலங்கும் பொலம்பூண்
அருவி யுருவி னாரமொ டணிந்தநின்
திருவரை யகலந் தொழுவோர்க்கு
உரிதமர் துறக்கமு முரிமைநன் குடைத்து
சுவைமை யிசைமை தோற்றம் நாற்றமூறு
15 அவையும் நீயே யடுபோ ரண்ணல்

நல்லேழுநியார் 839

அவையவை கொள்ளுங் கருவியும் நீயே
முந்தியாங் கூறிய ஐந்த னுள்ளும்
ஒன்றனிற் போற்றிய விசும்பும் நீயே
இரண்டி னுணரும் வளியும் நீயே
20 மூன்றி னுணருந் தீயும் நீயே
நான்கி னுணரும் நீரும் நீயே
ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே
அதனால், நின்மருங் கின்று மூவே ழுலகமும்
மூலமும் அறனு முதன்மையின் இகந்த
25 காலமும் விசும்புங் காற்றொடு கனலும்
தன்னுரு வுறழும் பாற்கடல் நாப்பண்
மின்னவிர் சுடர்மணி யாயிரம் விரித்த
கவைநா வருந்தலைக் காண்பின் சேக்கைத்
துளவஞ் சூடிய அறிதுயி லோனும்
30 மறமிகு மலியொலி மாறடு தானையால்
திறனிகந்து வரூஉ மவருயி ரகற்றும்
விறல்மிகு வலியொலி பொலிபகழ் புழுதியின்
நிறனுழும் வளைவாய் நாஞ்சி லோனும்
நானிலந் துளக்கற முழுமுதல் நாற்றிய
35 பொலம்புனை யிதழணி மணிமடற் பேரணி
இலங்கொளி மருப்பிற் களிறு மாகி
மூவுரு வாகிய தலைபிரி யொருவனை
படர்சிறைப் பன்னிறப் பாப்புப் பகையைக்

கொடியெனக் கொண்ட கோடாச் செல்வனை
40 ஏவலின் முதுமொழி கூறுஞ்
சேவலோங் குயர்கொடிச் செல்வநற் புகழவை
கார்மலர்ப் பூவை கடலை யிருள்மணி
அவையைந் துறழு மணிகிளர் மேனியை
வலம்புரி வாய்மொழி யதிர்புவான் முழக்குச்செ
45 அவைநான்கு முறழும் அருள்செறல் வயின்மொழி
முடிந்தது முடிவது முகிழ்ப்பது மவைமூன்றுங்
கடந்தவை யமைந்த கழலின் நிழலவை

இருமை வினையுமில ஏத்துமவை

45700





ஒருமை வினைமேவு முள்ளத்தினை
50 அடையிறந் தவிழ்ந்த வள்ளிதழ்த் தாமரை
அடியுங் கையுங் கண்ணும் வாயும்
தொடியும் உந்தியுந் தோளணி வலயமும்
தாளுந் தோளும் எருத்தொடு பெரியை
மார்பும் அல்குலும் மனத்தொடு பரியை
55 கேள்வியும் அறிவும் அறத்தொடு நுண்ணியை
வேள்வியும் மறனும் விருப்பொடு வெய்யை
அறாஅ மைந்திற் செறாஅச் செங்கட்

செருமிகு திகிரிச் செல்வ வெல்போர்
எரிநகை யிடையிடு பிழைத்த நறுந்தார்ப்
60 புரிமலர்த் துழாஅய் மேவல் மார்பினோய்
அன்னையென நினைஇ நின்னடி தொழுதனெம்
பன்மா ணடுக்க இறைஞ்சினெம்
வாழ்த்தினெம்
முன்னு முன்னும்யாஞ் செய்தவப் பயத்தால்
இன்னு மின்னுமெங் காம மிதுவே.
கடவுள் வாழ்த்து. பண் நோதிறம்.

## உஎஉ. நல்வழுதியார்

### 1464. பரிபாடல் - 12.

வளிபொரு மின்னொடு வானிருள் பரப்பி
விளிவின்று கிளையொடு மேன்மலை முற்றித்
தளிபொழி சாரற் றதர்மலர் தாஅய்
ஒளிதிக ழுத்தி யுருகெழு நாகம்
5 அகரு வழைஞெமை யார மிணையத்
தகரமும் ஞாழலுந் தாரமுந் தாங்கி
நளிகடல் முன்னி யதுபோலுந் தீநீர்
வளிவரல் வையை வரவு;
வந்து மதுரை மதில்பொரூஉம்
வான்மலர் தாஅய்
10 அந்தண் புனல்வையை யாறெனக் கேட்டு
மின்னவி ரொளியிழை வேயு மோரும்

பொன்னடர்ப் பூம்புனை திருத்துவோரும்
அகில்கெழு சாந்த மாற்றி யாற்றப்
புகைகெழு சாந்தம் பூசு வோரும்
15 கார்கொள் கூந்தற் கதுப்பமைப் போரும்
வேர்பிணி பன்மலர் வேயு மோரும்
புட்டகம் பொருந்துவ புனைகு வோரும்
கட்டிய கயிலணி காழ்கொள் வோரும்
வாச நறுநெய் யாடி வான்துகள்
20 மாசறக் கண்ணடி வயக்கி வண்ணமுந்
தேசு மொளியுந் திகழ நோக்கி
வாச மணத்துவர் வாய்க்கொள் வோரும்
இடுபுணர் வளையொடு தொடுதோள் வளையர்
கட்டுவடக் கழலினர் மட்டு மாலையர்
25 ஓசனை கமழும் வாச மேனியர்
மடமா மிசையோர்

பிடிமே லன்னப் பெரும்படை யனையோர்
கடுமா கடவுவோருங் களிறுமேல் கொள்வோரும்

வடிமணி நெடுந்தேர் மாமுள் பாய்க்குநரும்
30 விரைபு விரைபு மிகைமிகை யீண்டி
ஆடல் தலைத்தலை சிறப்பக் கூடல்
உரைதர வந்தன்று வையைநீர் வையைக்

கரைதர வந்தன்று காண்பவ ரீட்டம்
நிவந்தது நீத்தங் கரைமேலா நீத்தங்
35 கவர்ந்தது போலுங் காண்பவர் காதல்
முன்றுறை நிறையணி நின்றவர் மொழிமொழி
ஒன்றல பலபல வுடனெழுந் தன்றவை
எல்லாந் தெரியக் கேட்குநர் யாரவை
இல்லா கேள்வி கேட்டன சிலசில
40 ஒத்த குழலி ஞெலியெழ முழவிமிழ்
மத்தரி தடாரி தண்ணுமை மகுளி
ஒத்தளந் து சீர்தூக்கி யொருவர் பிற்படார்
நித்தந் திகழும் நேரிறை முன்கையால்
அத்தக வரிவையர் அளத்தல் காண்மின்



45 நாணுள்கொல் தோழி நயனில் பரத்தையிற்
றோணல முண்டு துறந்தா னெனவொருத்தி
யாணர் மலிபுனல் நீத்தத் திரும்பிடி
சேண வெரிநிற் சிறந்தானோ டேறினாள்

50

நாணுக் குறைவிலள் நங்கைமற் றென்மரும்
கோட்டியுட் கொம்பர் குவிமுலை நோக்குவோன்

ஓட்டை மனவ னூரமிலி யென்மரும்
சொறிந்தனூஉஞ் சொற்றதூஉம் பற்றாள் சிறந்திரிந்தாள்
நெஞ்சத்தை நீத்தாள் நெறிசெல்வான்
பின்னிறை
அஞ்சிக்
55 பூணாரம்

கழியாமோ அன்புற்ற லென்மரும்
நோக்கிப் புணர்முலைபார்த் தானவன்
நாண வவனையிந் நாரிகை யென்மரும்
அமிர்தன நோக்கத் தணங்கொருத்தி
பார்ப்பக்
கமழ்கோதை கோலாப் புடைத்துத்தன்
மார்பில்
இழையினைக் கையாத் திறுகிறுக்கி வாங்கிப்
60

பிழையினை யென்னப் பிழையொன் றுங் காணேன்
தொழுது பிழைகேட்குந் தூயவனைக் காண்மின்
பார்த்தா ளொருத்தி நினையெனப்
பார்த்தவனைப்
பொய்ச்சூளா ளென்ப தறியேன்யா னென்றிரந்து
மெய்ச்சூ ளுறுவானை மெல்லியல் பொய்ச்சூளென் று

65 ஓல்லுவ சொல்லா துரைவழுவச் சொல்ல
உறைத்துஞ் செறுத்து முணர்த்து வானைப்
புல்லா ஆடிப் புலந்து நின்றவள்
பூவெழில்
வேலெழி

வண்ணநீர் பூரித்த வட்டெறிய
லுண்கண் எறிநோக்கம் பட்டபுண்

70 பாய்குருதி சோரப் பகையின் றுளஞ்சோர
நில்லாது நீங்கி நிலஞ்சோர அல்லாந்து
மல்லா ரகலம் வடுவஞ்சி மம்மர்கூர்ந்து
எல்லாத் துனியு மிறப்பத்தன் காதலன்
நல்லே ரெழிலாகஞ் சேர்வித்த
லெஞ்ஞான்றும்
75 வல்லதால் வையைப் புனல் ;

எனவாங்கு,
மல்லிகை மௌவல் மணங்கமழ் சண்பகம்



அல்லி கழுநீ ரரவிந்த மாம்பல்
குல்லை வகுளங் குருக்கத்தி பாதிரி
80 நல்லிணர் நாகம் நறவஞ் சுரபுன்னை

எல்லாங் கமழு மிருசார் கரைகவிழத்
தேறித் தெளிந்து செறியிருள் மால்மாலைப் 85
பாறைப் பரப்பிற் பரந்த சிறைநின்று

துறக்கத் தெழிலைத்தன் நீர்நிழற் காட்டும்
காரடு காலைக் கவிழ்செங் குருதித்தே
போரடு தானையான் யாறு;

சுடுநீர் வினைக்குழையின் ஞாலச் சிவந்த
கடிமலர்ப் பிண்டிதன் காதிற் செரீஇ

விடுமலர்ப் பூங்கொடி போல நுடங்கி
90 அடிமே லடிமே லொதுங்கித் தொடிமுன்கைக்

காரிகை யாகத்தன் கண்ணி திருத்தினள்
நேரிறை முன்கை நல்லவள்கேள் காண்மின்
துகில்சேர் மலர்போல் மணிநீர் நிறைந்தன்று
புனலென மூதூர் மலிந்தன் றவருரை
95 உரையி னுயர்ந்தன்று கவின்;
போரேற் றன்று நவின்று தகர
மார்பழி சாந்தின் மணலளறு பட்டன்று
துகில்பொசி புனலிற் கரைகா ரேற்றன்று
விசும்புகடி விட்டன்று விழவுப்புன லாங்க 100
இன்பமுங் கவினும் அழுங்கல் மூதூர்

நன்பல நன்பல நன்பல வையை
நின்புகழ் கொள்ளாதிம் மலர்தலை யுலகே.

கார்ப்பருவத்து வையைநீர் விழவணியிற் பல்வேறு வகைப்பட்ட இன்பங்கூறி, இவ்வகைப்பட்ட இன்பத்தையுடைய நின்னையும் நினைத்திலரோன வையையை நோக்கித் தலைமகன் கேட்பத் தோழி இயற்பழித்தது.

நன்னாகனார் இசை. பண்ணுப் பாலையாழ்.

## உஎந. நல்விளக்கனார்

### 1465. நற்றிணை - 85. குறிஞ்சி

ஆய்மலர் மழைக்கண் தெண்பனி யுறைப்பவும்
வேய்மருள் பணைத்தோள் விறலிழை நெகிழவும்
அம்பல் மூதூ ரரவ மாயினுங்
குறிவரி யிரும்புலி யஞ்சிக் குறுநடைக்
5 கன்றுடை வேழம் நின்றுகாத் தல்கும்
ஆரிருள் கடுகிய அஞ்சுவரு சிறுநெறி
வாரற்க தில்ல தோழி சாரற்
கானவ னெய்த முளவுமான் கொழுங்குறை
தேங்கமழ் கதுப்பிற் கொடிச்சி கிழங்கொடு
10 காந்தளஞ் சிறுகுடிப் பகுக்கும்
ஓங்குமலை நாடன்நின் நசையி னானே.

தலைவன்வரவுணர்ந்த தோழி தலைவிக்குரைத்தது.

## உஎசு. நல்வெள்ளியார்

### 1466. அகநானூறு - 32. குறிஞ்சி

நெருந லெல்லை யேனற் றோன்றித்
திருமணி யொளிர்வரும் பூணன் வந்து
புரவலன் போலுந் தோற்றம் உறழ்கொள
இரவல் மாக்களிற் பணிமொழி பயிற்றிச்
5 சிறுதினைப் படுகிளி கடீஇயர் பன்மாண்
குளிர்கொள் தட்டை மதனில புடையாச்
சூரர மகளிரின் நின்ற நீமற்று
யாரை யோவெம் மணங்கியோ யுண்கெனச்
சிறுபுறங் கவையின னாக அதற்கொண்டு
10 இருபெயல் மண்ணின் ஞெகிழ்பஞ ருற்றவென்
உள்ளவ னறித லஞ்சி யுள்ளில்
கடிய கூறிக் கைபிணி விடாஅ
வெரூஉமான் பிணையின் ஒரீஇ நின்ற

என்னுரத் தகைமையிற் பெயர்த்துப்பிறி தென்வயிற்
15 சொல்ல வல்லிற்று மிலனே யல்லாந்து
இனந்தீர் களிற்றிற் பெயர்ந்தோன் இன்றுந்
தோலாவா றில்லை தோழிநாஞ் சென்மோ
சாயிறைப் பணைத்தோட் கிழமை தனக்கே
மாசின் றுதலும் அறியான் ஏசற்று
20 என்குறைப் புறநிலை முயலும்
அண்க ணாளனை நகுகம் யாமே.

பின்னின்ற தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது. தோழிக்குத் தலைமகள் சொற்றதூஉமாம்.

## 1467. குறுந்தொகை - 365. குறிஞ்சி

கோடீ ரிலங்குவளை நெகிழ நாளும்
பாடில கலிழ்ந்து பனியா னாவே
துன்னரு நெடுவரைத் ததும்பி யருவி
தண்ணென் முழவின் இமிழிசை காட்டும்
5 மருங்கிற் கொண்ட பலவிற்
பெருங்கல் நாடநீ நயந்தோள் கண்ணே.

யான்வரையுந் துணையும் ஆற்றவல்லளோ என வினவிய கிழவற்குத் தோழி சொல்லியது.

## 1468. நற்றிணை - 7. பாலை

சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்கப்
பெருவரை யடுக்கத் தருவி யார்ப்பக்
கல்லலைத் திழிதருங் கடுவரற் கான்யாற்றுக்
கழைமாய் நீத்தங் காடலை யார்ப்பத்
5 தழங்குகுர லேறொடு முழங்கி வானம்
இன்னே பெய்ய மின்னுமால் தோழி
வெண்ணெ லருந்திய வரிநுதல் யானை
தண்ணறுஞ் சிலம்பிற் றுஞ்சுஞ்
சிறியிலைச் சந்தின வாடுபெருங் காட்டே.

பட்டபின்றை வரையாது கிழவோன் நெட்டிடைக் கழிந்து பொருள்வயிற்பிரிய, ஆற்றாளாய தலைவிக்குத் தோழிசொல்லியது.



## 1469. நற்றிணை - 47. குறிஞ்சி

பெருங்களி றுழுவை யட்டென இரும்பிடி
உயங்குபிணி வருத்தமொ டியங்கல் செல்லாது
நெய்தற் பாசடை புரையு மஞ்செவிப்

பைதலங் குழவி தழீஇ யொய்யென
5 அரும்புண் ணுறுநரின் வருந்தி வைகுங்
கானக நாடற் கிதுவென யானது

கூறின் எவனோ தோழி வேறுணர்ந்து
அணங்கறி கழங்கிற் கோட்டங் காட்டி
வெறியென வுணர்ந்த வுள்ளமொடு மறியறுத்து
10 அன்னை யயரு முருகுநின்
பொன்னேர் பசலைக் குதவா மாறே.

சிறைப்புறமாகத் தோழி
தலைமகளுக்குரைப்பாளாய்ச் சொல்
லியது.

## உஎரு. நல்வேட்டனார்

### 1470. குறுந்தொகை - 341. நெய்தல்

பல்வீ படரிய பசுநனைக் குரவம்
பொரிப்பூம் புன்கொடு பொழிலணிக்
சினையினி தாகிய காலையும் காதலர்

கொளாஅச்

பேணா ராயினும் பெரியோர் நெஞ்சத்துக்
5 கண்ணிய வாண்மை கடவ தன்றெனு
வலியா நெஞ்சம் வலிப்ப
வாழ்வேன் தோழியென் வன்க ணானே.

பருவ வரவின்கண் வேறுபடும் எனக் கவன்ற
தோழிக்குக்

கிழத்தி யுரைத்தது.

## 1471. நற்றிணை - 53. குறிஞ்சி

யானஃ தஞ்சினென் கரப்பவுந் தானஃது
அறிந்தனள் கொல்லோ அருளினள் கொல்லோ
எவன்கொல் தோழி யன்னை கண்ணியது



வானுற நிவந்த பெருமலைக் கவாஅன்
5 ஆர்கலி வானந் தலைஇ நடுநாட்
கனைபெயல் பொழிந்தெனக் கானக் கல்யாற்று
முளியிலை கழித்தன முகிழிணை ரொடுவரு
விருந்திற் றீநீர் மருந்து மாகும்
தண்ணென வுண்டு கண்ணி னோக்கி
10 முனியா தாடப் பெறினிவள்
பனியுந் தீர்குவள் செல்கென் றோளே.

வரைவு நீட்டிப்பத் தோழி சிறைப்புறமாகச் சொல்லியது.

## 1472. நற்றிணை - 210. மருதம்

அரிகால் மாறிய அங்க ணகல்வயல்
மறுகா லுழுத ஈரச் செறுவின்
வித்தொடு சென்ற வட்டி பற்பல
மீனொடு பெயரும் யாண ரூர
5 நெடிய மொழிதலுங் கடிய வூர்தலுஞ்
செல்வ மன்றுதன் செய்வினைப் பயனே

சான்றோர் செல்வ மென்பது சேர்ந்தோர்
புன்க ணஞ்சும் பண்பின்
மென்கட் செல்வஞ் செல்வமென் பதுவே.

தோழி தலைமகனை நெருங்கிச் சொல்லுவாளாய்

வாயினேர்ந்தது.

## 1473. நற்றிணை - 292. குறிஞ்சி

நெடுங்க ணாரத் தலங்குசினை வலந்த
பசுங்கே ழிலைய நறுங்கொடித் தமாலந்
தீந்தேன் கொள்பவர் வாங்குபு பரியும்
யாணர் வைப்பிற் கான மென்னாய்
5 களிறுபொரக் கரைந்த கயவாய்க் குண்டுகரை
ஒளிறுவான் பளிங்கொடு செம்பொன் மின்னுங்
கருங்கற் கான்யாற் றருஞ்சுழி வழங்குங்
கராஅம் பேணா யிரவரின்
வாழே னைய மைகூர் பனியே.

இரவுக்குறி மறுத்தது.



## 1474. நற்றிணை - 349. நெய்தல்

கடுந்தே ரேறியும் காலிற் சென்றும்
கொடுங்கழி மருங்கி னடும்புமலர் கொய்தும்
கைதை தூக்கியும் நெய்தல் குற்றும்
புணர்ந்தாம் போல உணர்ந்த நெஞ்சமொடு

5 வைகலு மினைய மாகவுஞ் செய்தார்ப்
பசும்பூண் வேந்த ரழிந்த பாசறை
ஒளிறுவே லழுவத்துக் களிறுபடப் பொருத
பெரும்புண் ணுறுநர்க்குப் பேஎய் போலப்
பின்னிலை முனியா நம்வயின்
10 என்னென நினையுங்கொல் பரதவர் மகளே.

தலைமகன் தோழி கேட்பத் தன்னுள்ளே சொல்லியது.

உஎகூ. நற்சேந்தனார் 1475. நற்றிணை - 128.

குறிஞ்சி

பகலெரி சுடரின் மேனி சாயவும்
பாம்பூர் மதியின் நுதலொளி கரப்பவும்
எனக்குநீ யுரையா யாயினை நினக்கியான்
உயிர்பகுத் தன்ன மாண்பினே னாகலின்
5 அதுகண் டிசினால் யானே யென்றுநனி
அழுத லான்றிசி னாயிழை யொலிகுரல்
ஏனல் காவலி னிடையுற் றொருவன்
கண்ணியன் கழலன் தாரன் தண்ணெனச்
சிறுபுறங் கவையின னாக அதற்கொண்டு
10 அஃதே நினைந்த நெஞ்சமொடு
இஃதா கின்றியா னுற்ற நோயே.

குறைநேர்ந்த தோழி தலைவி குறைநயப்பக்

கூறியது.

தோழிக்குத் தலைவி அறத்தொடு நின்றதூஉமாம்.

## உஎஎ. நற்றங்கொற்றனார்

### 1476. நற்றிணை - 136. குறிஞ்சி

திருந்துகோ லெல்வளை வேண்டியா னழவும்

அரும்பிணி யுறுநர்க்கு வேட்டது கொடாஅது
மருந்தாய்ந்து கொடுத்த அறவோன் போல
என்னை வாழிய பலவே பன்னிய
5 மலைகெழு நாடனொடு நம்மிடைச் சிறிய
தலைப்பிரி வுண்மை யறிவான் போல
நீப்ப நீங்காது வரின்வரை யமைந்து
தோட்பழி மறைக்கு முதவிப்
போக்கில் பொலங்தொடி செறீஇ யோனே.

சிறைப்புறமாகத் தலைவி தோழிக்குரைத்தது.

## உஎஅ. நற்றமனார்

### 1477. நற்றிணை - 133. குறிஞ்சி

தோளே தொடிகொட் பானா கண்ணே
வாளீர் வடியின் வடிவிழந் தனவே
நுதலும் பசலை பாயின்று திதலைச்

சில்பொறி யணிந்த பல்கா ழல்குல்
5 மணியே ரைம்பால் மாயோட் கென்று
வெவ்வாய்ப் பெண்டிர் கெளவை தூற்ற
நாமுறு துயரஞ் செய்யல ரென்னுங்
காமுறு தோழி காதலங் கிளவி
இரும்புசெய் கொல்லன் வெவ்வுலைத் தெளித்த
10 தோய்மடற் சின்னீர் போல
நோய்மலி நெஞ்சிற் கேமமாஞ் சிறிதே.

வரைவிடைவைத்துப் பிரிவாற்றளாய தலைவி வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.

54

## உஎகூ. நன்பலூர்ச் சிறுமேதாவியார்

### 1478. அகநானூறு - 94. முல்லை

தேம்படு சிமயப் பாங்கர்ப் பம்பிய
குவையிலை முசுண்டை வெண்பூக் குழைய
வானெனப் பூத்த பானாட் கங்குல்
மறித்துரூஉத் தொகுத்த பறிப்புற இடையன்
5 தண்கமழ் முல்லை தோன்றியொடு விரைஇ
வண்டுபடத் தொடுத்த நீர்வார் கண்ணியன்
ஐதுபடு கொள்ளி அங்கை காயக்
குறுநரி உளம்புங் கூரிருள் நெடுவிளி
சிறுகட் பன்றிப் பெருநிரை கடிய
10 முதைப்புனங் காவலர் நினைத்திருந் தூதுங்
கருங்கோட் டோசையொ டொருங்குவந் திசைக்கும்
வன்புலக் காட்டுநாட் டதுவே அன்புகலந்து
ஆர்வஞ் சிறந்த சாயல்
இரும்பல் கூந்தற் றிருந்திழை யூரே.

வினைமுற்றிமீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது. தலைமகன் பாகற்குச் சொற்றதூஉமாம்.

## 1479. அகநானூறு - 394. முல்லை

களவும் புளித்தன விளவும் பழுநின
சிறுதலைப் துருவின் பழுப்புறு விளைதயிர்
இதைப்புன வரகின் அவைப்புமா ணரிசியொடு
கார்வாய்த் தொழிந்த ஈர்வாய்ப் பற்றத்து
5 ஈயல்பெய் தட்ட இன்புளி வெஞ்சோறு
சேதான் வெண்ணெய் வெம்புறத் துருக
இளைய ரருந்தப் பின்றை நீயும்
இடுமுள் வேலி முடக்காற் பந்தர்ப்
புதுக்கலத் தன்ன செவ்வாய்ச் சிற்றிற்

10 புனையிருங் கதுப்பினின் மனையோ ளயரப்
பாலுடை யடிசில் தொடீஇய ஒருநாள்



மாவண் தோன்றல் வந்தனை சென்மோ
காடுறை யிடையன் யாடுதலைப் பெயர்க்கும்
மடிவிடு வீளை வெரீஇக் குறுமுயல்
15 மன்ற இரும்புதல் லொளிக்கும்
புன்புல வைப்பினெஞ் சிறுநல் லூரே.

இரவுக்குறித் தலைமகளை இடத்துய்த்துவந்து தோழி தலைமகனை வரைவுகடாயது.

## உ௮௦. நன்னாகனார்

### 1480. புறநானூறு - 176.

ஓரை யாயத் தொண்டொடி மகளிர்
கேழ லுழுத இருஞ்சே றகளைப்பின்
யாமை யீன்ற புலவுநா றுமுட்டையைத்
தேனா றாம்பற் கிழங்கொடு பெறாஉம்
5 இழுமென வொலிக்கும் புனலம் புதவிற்
பெருமா விலங்கைத் தலைவன் சீறியாழ்
இல்லோர் சொன்மலை நல்லியக் கோடனை
உடையை வாழியெற் புணர்ந்த பாலே
பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர் 10 ஒரு
ருண்மையின் இகந்தோர் போலக்

காணாது கழிந்த வைகல் காணா
வழிநாட் கிரங்குமென் னெஞ்சமவன்
கழிமென் சாயல் காண்டொறும் நினைந்தே

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
ஓய்மான் நல்லியக்கோடனைப் பாடியது.

## 1481. புறநானூறு - 376.

விசும்பு நீத்த மிறந்த ஞாயிற்றுப்
பசுங்கதிர் மழுகிய சிவந்துவாங் கந்தி
சிறுநனி பிறந்த பின்றைச் செறிபிணிச் சிதாஅர்
வள்பின்என் தடாரி தழீஇப்



5

பாண ராரு மளவை யான்தன்
யாணர் நன்மனைக் கூட்டுமுதல் நின்றனென்
இமைத்தோர் விழித்த மாத்திரை ஞெரேரெனக்
குணக்கெழு திங்கள் கனையிரு ளகற்றப்
பண்டறி வாரா உருவோ டென்னரைத்
10 தொன்றுபடு துளையொடு பருவிழை போகி
நைந்துகரை பறைந்தவென் உடையும் நோக்கி

விருந்தினன் அளிய னிவனெனப் பெருந்தகை
நின்ற முரற்கை நீக்கி நன்றும்
அரவுவெகுண் டன்ன தேறலொடு சூடுதருபு
15 நிரயத் தன்னவென் வறன்களைந் தன்றே
இரவி னானே ஈத்தோ னெந்தை
அன்றை ஞான்றினொ டின்றி னூங்கும்
இரப்பச் சிந்தியேன் நிரப்படு புணையின்
உளத்தி னளக்கு மிளிர்ந்த தகையேன்
20 நிறைக்குளப் புதவின் மகிழ்ந்தன னாகி
ஒருநாள், இரவலர் வரையா வள்ளியோர்
கடைத்தலை
ஞாங்கர் நெடுமொழி பயிற்றித்
தோன்றல் செல்லாதென் சிறுகிணைக் குரலே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
ஓய்மான் நல்லியாதனைப் பாடியது.

## 1482. புறநானூறு - 379.

யானே பெறுகவன் தாணிழல் வாழ்க்கை
அவனே பெறுகவென் நாவிசை நுவறல்
நெல்லரி தொழுவர் கூர்வாள் மழுங்கிற்
பின்னை மறத்தோ டரியக் கல்செத்து
5 அள்ளல் யாமைக் கூன்புறத் துரிஞ்சும்
நெல்லமல் புரவின் இலங்கை கிழவோன்
வில்லி யாதன் கிணையேம் பெரும
குறுந்தா ளேற்றைக் கொழுங்கண் அவ்விளர்

ஈறுகெய் யுருக்கி நாட்சோ றீயா



10 வல்லன் எந்தை பசிதீர்த் தல்லெனக்
கொன்வரல் வாழ்க்கைநின் கிணைவன் கூறக்
கேட்டதற் கொண்டும் வேட்கை தண்டாது
விண்டோய் தலைய குன்றம் பின்பட
... ...ர வந்தனென் யானே
15 தாயில் தூவாக் குழவி போல, ஆங்கத்
திருவுடைத் திருமனை யைதுதோன்று கமழ்புகை
வருமழை மங்குலின் மறுகுடன் மறைக்குங்
குறும்படு குண்டகழ் நீண்மதி லூரே.

திணை - பாடாண்டிணை; துறை - பரிசிற்றுறை.
ஓய்மான் வில்லியாதனைப் பாடியது.

**1483. புறநானூறு - 381.**

உளனு மூஹு முனையின் இனிதெனப்
பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்
அளவுபு கலந்து மெல்லிது பருகி
விருந்துறுத் தாற்றி யிருந்தனெ மாகச்
5 சென்மோ பெருமவெம் விழவுடை நாட்டென
யாந்தன் அறியுந மாகத் தான்பெரிது
அன்புடை மையின் எம்பிரி வஞ்சித்
துணரியது கொளாஅ வாகிப் பழமூழ்த்துப்
பயம்பகர் வறியா மயங்கரில் முதுபாழ்ப் 10
பெயல்பெய் தன்ன செல்வத் தாங்கண்
ஈயா மன்னர் புறங்கடைத் தோன்றிச்
சிதாஅர் வள்பிற் சிதர்ப்புறத் தடாரி
ஊன்சுகிர் வலந்த தெண்கணொற்றி
விரல்விசை தவிர்க்கு மரலையில் பாணியின்
15 இலம்பா டகற்றல் யாவது புலம்பொடு
தெருமர லுயக்கமுந் தீர்குவோம் அதனால்
இருநிலங் கூலம் பாறக் கோடை
வருமழை முழக்கிசைக் கோடிய பின்றைச்
சேயை யாயினும் இவணை யாயினும்
20 இதற்கொண் டறிநை வாழியோ கிணைவ



சிறுநனி, ஒருவழிப் படர்கென் றோனே
ஒலிவெள் ளருவி வேங்கட நாடன்

உறுவருஞ் சிறுவரு மூழ்மா றுய்க்கும்
அறத்துறை யம்பியின் மான மறப்பின்று

25 இருங்கோ ஸீராப் பூட்கைக்
கரும்ப ஞூரன் காதல் மகனே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
கரும்பனூர் கிழானைப் பாடியது.

**1484.** புறநானூறு - **384.**

மென்பாலான் உடனணைஇ
வஞ்சிக்கோட் டுறங்குநாரை
அறைக்கரும்பின் பூவருந்தும்
வன்பாலாற் கருங்கால்வரகி
5 ... ... ...
னங்கட் குறுமுயல் வெருவ அயல
கருங்கோட் டிருப்பைப் பூவுறைக் குந்து
விழவின் றாயினும் உழவர் மண்டை
இருங்கெடிற்று மிசையொடு பூங்கள் வைகுந்து
10 ... ...கிணையேம் பெரும
நெல்லென்னு பொன்னென்னு
கனற்றக் கொண்ட நறவென்னு
... ...மனையென்னு அவைபலவும்
யான்தண்டவுந் தான்தண்டான்

15 நிணம்பெருத்த கொழுஞ்சோற்றிடை
மண்நாணப் புகழ்வேட்டு
நீர்நாண நெய்வழங்கிப்
-- புரந்தோ னெந்தை யாமலநதொலை...
அன்னோனை யுடையே மென்ப...வறட்கு
20 யாண்டு நிற்க வெள்ளி மாண்ட
உண்ட நன்கலம் பெய்து நடக்கவுந்
தின்ற நண்பல் ஊன்தோண்டவும்



வந்த வைக லல்லது
சென்ற வெல்லைச் செலவறி யேனே.

திணை - பாடாண்டிணை; துறை - கடைநிலை.
கரும்பனூர் கிழானைப் பாடியது.

உ அக. நன்னாகையார்

1485. குறுந்தொகை - 30. பாலை

கேட்டிசின் வாழி தோழி யல்கற்
பொய்வ லாளன் மெய்யுற மரீஇ

வாய்த்தகைப் பொய்க்கனா மருட்ட ஏற்றெழுந்து
அமளி தைவந் தனனே குவளை
5 வண்டுபடு மலரிற் சாஅய்த்
தமியென் மன்ற அளியென் யானே.

அவர் நின்னை வரைந்துகோடல் காரணத்தாற்
பிரியவும் நீஆற்றி
யிராது ஆற்றாயாகின்றது என்னென வினவிய
தோழிக்குத் தலைமகள்
யான் ஆற்றியுள்ளேனாகவும் கனவுவந்து என்னை
இங்ஙன் நலிந்த
தெனக் கூறியது.

1486. குறுந்தொகை - 118. நெய்தல்

புள்ளு மாவும் புலம்பொடு வதிய
நள்ளென வந்த நாரில் மாலை
பலர்புகு வாயி லடைப்பக் கடவுநர்
வருவீ ருளீரோ வெனவும்
5 வாரார் தோழிநங் காத லோரே.

வரைவு நீட்டித்தவழித் தலைமகள் பொழுது கண்டு
சொல்லியது.
தோழிக்குச்

1487. குறுந்தொகை - 172. நெய்தல்

தாஅவ லஞ்சிறை நொப்பறை வாவல்
பழுமரம் படரும் பையுள் மாலை

எமிய மாக ஈங்குத் துறந்தோர்
தமிய ராக இனியர் கொல்லோ
5 ஏழூர்ப் பொதுவினைக் கோரூர் யாத்த
உலைவாங்கு மிதிதோல் போலத்
தலைவரம் பறியாது வருந்துமென் னெஞ்சே.

வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள்
கூறியது.

1488. குறுந்தொகை - 180. பாலை

பழூஉப்பல் லன்ன பருவுகிர்ப் பாவடி
இருங்களிற் றினநிரை யேந்தல் வரின்மாய்ந்து
அறைமடி கரும்பின் கண்ணிடை யன்ன
பைத லொருகழை நீடிய சுரனிறந்து
5 எய்தினர் கொல்லோ பொருளே அல்குல்
அவ்வரி வாடத் துறந்தோர்
வன்ப ராகத்தாஞ் சென்ற நாட்டே.

பிரிவிடை வேறுபட்டாளைத் தோழி வற்புறுத்தியது.

1489. குறுந்தொகை - 192. பாலை

ஈங்கே வருவர் இனைய லவரென
அழாஅற்கோ இனியே நோய்நொந் துறைவி
மின்னின் தூவி யிருங்குயில் பொன்னின்
உரைதிகழ் கட்டளை கடுப்ப மாச்சினை
5 நறுந்தாது கொழுதும் பொழுதும்
வறுங்குரற் கூந்தல் தைவரு வேனே.

பிரிவிடை வற்புறுத்த வன்புறை எதிரழிந்து கிழத்தி உரைத்தது.

1490. குறுந்தொகை - 197. நெய்தல்

யாதுசெய் வாங்கொல் தோழி நோதக
நீரெதிர் கருவிய காரெதிர் கிளைமழை
ஊதையங் குளிரொடு பேதுற்று மயங்கிய



கூதி ருருவிற் கூற்றம்
5 காதலர்ப் பிரிந்த எற்குறித்து வருமே.

பருவ வரவின்கண் வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

1491. குறுந்தொகை - 287. முல்லை

அம்ம வாழி தோழி காதலர்
இன்னே கண்டுந் துறக்குவர் கொல்லோ
முந்நாற் றிங்கள் நிறைபொ றுத் தசைஇ
ஒதுங்கல் செல்லாப் பசும்புளி வேட்கைக்
5 கடுஞ்சூல் மகளிர் போல நீர்கொண்டு
விசும்பிவர் கல்லாது தாங்குபு புணரிச்
செழும்பல் குன்றம் நோக்கிப்
பெருங்கலி வானம் ஏர்தரும் பொழுதே.

பிரிவிடை வேறுபட்ட கிழத்தி நம்மைத் துறந்து வாராரென் றுகவன்றாட்குப் பருவங்காட்டித் தோழி வருவர் எனச் சொல்லியது.

**1492.** குறுந்தொகை - **325.** நெய்தல்

சேறுஞ் சேறும் என்றலிற் பண்டைத்தம்
மாயச் செலவாச் செத்து மருங்கற்று
மன்னிக் கழிகென் றேனே அன்னோ
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
5 கருங்கால் வெண்குருகு மேயும்
பெருங்குள மாயிற்றென் னிடைமுலை நிறைந்தே.

பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி மெலிந்து உரைத்தது.

## உ அ உ. நாகம்போத்தன்

**1493.** குறுந்தொகை - **282.** பாலை

செவ்விகொள் வரகின் செஞ்சுவற் கலித்த

கவ்வை நாற்றின் காரிருளோரிலே



நவ்வி நாண்மறி கவ்விக் கடன்கழிக்கும்
காரெதிர் தண்புனங் காணிற் கைவளை
5 நீர்திகழ் சிலம்பி ஞோராங்கு விரிந்த
வெண்கூ தாளத் தந்தூம்பு புதுமலர்
ஆர்கழல் புகுவ போலச்
சோர்குவ வல்ல என்பர்கொல் நமரே.

வினைவயிற் பிரிந்தவிடத்துத் தோழி கிழத்திக்கு உரைத்தது.

உ௪௩. நாமலார் மகன் இளங்கண்ணன்

1494. குறுந்தொகை - 250. பாலை

பரலவற் படுநீர் மாந்தித் துணையோடு
இரலை நன்மான் நெறிமுத லுகளும்
மாலை வாரா வளவைக் காலியற்
கடுமாக் கடவுமதி பாக நெடுநீர்ப்
5 பொருகயல் முரணிய வுண்கண்
தெரிதீங் கிளவி தெருமர லுயவே.

தலைமகன் பாகற்கு உரைத்தது.

உ௪௪. நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார்

1495. நற்றிணை - 382. நெய்தல்

கானல் மாலைக் கழிநீர் மல்க

நீனிற நெய்தல் நிரையிதழ் பொருந்த
ஆனு தலைக்குங் கடலே மீனருந்திப்
புள்ளினங் குடம்பை யுடன்சேர் புள்ளார்
5 துறந்தோர் தேஎத் திருந்துநனி வருந்தி
ஆருயி ரழிவ தாயினும் நேரிழை

கரத்தல் வேண்டுமால் மற்றே பரப்புநீர்த்
நெடும்பல்லியத்தனார் 859

தண்ணந் துறைவன் நாண
நண்ணார் தூற்றும் பழிதான் உண்டே.

ஒருவழித்தணந்தகாலத்துப் பொழுதுபட
ஆற்றாளாகின்ற
தலைமகளைத் தோழி ஆற்றுவிக்கல்லா ளாயினாட்குத்
தலைமகள் சொல்
லியது.

## உ௯ரு. நெடுங்கழுத்துப் பரணர்

### 1496. புறநானூறு - 291.

சிறுஅஅர் துடியர் பாடுவல் மகாஅஅர்
தூவெள் ளறுவை மாயோற் குறுகி
இரும்புட் பூச லோம்புமின் யானும்
விளரிக் கொட்பின் வெண்ணரி கடிகுவென்

என்போற் பெருவிதுப் புறுக வேந்தே
கொன்னுஞ் சாதல் வெய்யோற்குத் தன்தலை

மணிமருள் மாலை சூட்டி யவன்தலை
ஒருகாழ் மாலை தான்மலைந் தனனே.

திணை - கரந்தை ; துறை - வேத்தியல்.

உ அசுஎ. நெடும்பல்லியத்தனார்

## 1497. புறநானூறு - 64.

நல்யாழ் ஆகுளி பதலையொடு சுருக்கிச்
செல்லா மோதில் சில்வளை விறலி
களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
விசும்பா டெருவை பசுந்தடி தடுப்பப்
5 பகைப்புல மரீஇய தகைப்பெருஞ் சிறப்பிற்
குடுமிக் கோமாற் கண்டு
நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே.

திணை - பாடாண்டிணை ; துறை -
விறலியாற்றுப்படை.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்
பெருவழுதியைப் பாடியது.

## ௨௮௭. நெடும்பல்லியத்தை

### 1498. குறுந்தொகை - 178. மருதம்

அயிரை பரந்த அந்தண் பழனத்து
ஏந்தெழில் மலர தூம்புடைத் திரள்கால்
ஆம்பல் குறுநர் நீர்வேட் டாங்கிவள்
இடைமுலைக் கிடந்தும் நடுங்க லானீர்
5 தொழுதுகாண் பிறையிற் றோன்றி யாம்நுமக்கு
அரிய மாகிய காலைப்
பெரிய நோன்றனிர் நோகோ யானே.

கடிநகர் புக்க தோழி தலைமகன் புணர்ச்சி விதும்பல் கண்டு முன்னர்க் களவுக் காலத்து ஒழுகலாற்றினை நினைந்து அழிந்து கூறியது.

### 1499. குறுந்தொகை - 203. மருதம்

மலையிடை யிட்ட நாட்டரு மல்லர்
மரந்தலை தோன்றா ஊரரு மல்லர்
கண்ணிற் காண நண்ணுவழி யிருந்தும்
கடவுள் நண்ணிய பாலோர் போல
5 ஒரீஇன னொழுகு மென்னைக்குப்
பரியலென் மன்யான் பண்டொரு காலே.

வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

## ௨௮௮. நெடுவெண்ணிலவினார்

### 1500. குறுந்தொகை - 47. குறிஞ்சி

கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை
எல்லி வருநர் களவிற்கு

நல்லே யல்லே நெடுவெண் ணிலவே.

இரா வந்து ஒழுகுங்காலை முன்னிலேப் புறமொழியாக நிலா விற்கு உரைப்பாளாகத் தோழி உரைத்தது.

## உ௲அகூ. நெட்டிமையார்

### 1501. புறநானூறு - 9.

ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
5 எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென
அறத்தா றுநுவலும் பூட்கை மறத்திற்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு

நிழற்றும்

எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த

10 முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே.

திணே - பாடாண்டிணே ; துறை - இயன்மொழி, பூவை நிலேயு மாம்.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்
பெருவழுதியைப் பாடியது.

## 1502. புறநானூறு - 12.

பாணர் தாமரை மலையவும் புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்
அறனோ மற்றிது விறல்மாண் குடுமி
இன்னா வாகப் பிறர்மண்கொண்டு
5 இனிய செய்திநின் ஆர்வலர் முகத்தே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்
பெருவழுதியைப் பாடியது.

## 1503. புறநானூறு - 15.

கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில்



புள்ளினம் இமிழும் புகழ்சால் விளைவயல்
5 வெள்ளுளைக் கலிமான் கவிகுளம் புகளத்
தேர்வழங் கினைநின் தெவ்வர் தேஎத்துத்
துளங்கியலாற் பணையெருத்தின்
பாவடியாற் செறனோக்கின்

ஒளிறுமருப்பிற் களிறவர
10 காப்புடைய கயம்படியினை
அன்ன சீற்றத் தனையை யாகலின்
விளங்குபொன் னெறிந்த நலங்கிளர்
பலகையொடு
நிழல்படு நெடுவே லேந்தி யொன்னார்
ஒண்படைக் கடுந்தார் முன்புதலைக் கொண்மார்
15 நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய
வசைபட வாழ்ந்தோர் பலர்கொல் புரையில்
நற்பனுவல் நால்வேதத்து
அருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண்
20 வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூப நட்ட வியன்களம் பலகொல்
யாபல கொல்லோ பெரும வாருற்று
விசிபிணிக் கொண்ட மண்கனை முழவிற்
பாடினி பாடும் வஞ்சிக்கு
25 நாடல் சான்ற மைந்தினோய் நினக்கே.

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.
பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்
பெருவழுதியைப் பாடியது.

## உகூ௦. நெய்தற் கார்க்கியார்

### 1504. குறுந்தொகை - 55. நெய்தல்

மாக்கழி மணிப்பூக் கூம்பத் தூத்திரைப்
பொங்குபிதிர்த் துவலையொடு மங்குல் தைஇக்
கையற வந்த தைவர லூதையொடு

நெய்தற்சாய்த்துய்த்த ஆவூர்கிழார்

863

இன்னு வுறையுட் டாகும்
5 சின்னாட் டம்மவிச் சிறுநல் லூரே.

வரைவொடு புகுதானேல் இவள் இறந்துபடுமெனத் தோழி தலைமகன் சிறைப்புறத்தானுகச் சொல்லியது.

1505. குறுந்தொகை - 212. நெய்தல்

கொண்க னூர்ந்த கொடிஞ்சி நெடுந்தேர்
தெண்கட லடைகரைத் தெளிர்மணி
யொலிப்பக்
காண வந்து நாணப் பெயரும்
அளிதோ தானே காமம்
5 விளிவது மன்ற நோகோ யானே.

குறைநேர்ந்த தோழி குறைநயப்பக் கூறியது.

உ௬௬. நெய்தற்சாய்த்துய்த்த
ஆவூர்கிழார்

1506. அகநானூறு - 112. குறிஞ்சி

கூன லெண்கின் குறுநடைத் தொழுதி
சிதலை செய்த செந்நிலைப் புற்றின்
மண்புனை நெடுங்கோ டுடைய வாங்கி
இரைநசைஇப் பரிக்கும் அரைநாட் கங்குல்
5 ஈன்றணி வயவுப்பிணப் பசித்தென மறப்புலி
ஒளிதேர்ந்து மருப்பிற் களிறட்டுக் குழூஉம்
பனியிருஞ் சோலை யெமிய மென்னாய்
தீங்குசெய் தனையே ஈங்குவந் தோயே
நாளிடைப் படினென் தோழி வாழாள்
10 தோளிடை முயக்கம் நீயும் வெய்யை
கழியக் காதல ராயினுஞ் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்
வரையி னெவனோ வான்தோய் வெற்ப

கணக்கலை யிகுக்குங் கறியிவர் சிலம்பின்
15 மணப்பருங் காமம் புணர்ந்தமை யறியார்
தொன்றியல் மரபின் மன்ற லயரப்



பெண்கோ ளொழுக்கங் கண்கொள நோக்கி
நொதுமல் விருந்தினம் போலவிவள்
புதுநா ணொடுக்கமுங் காண்குவம் யாமே.

இரவுக்குறி வந்த தலைமகனை யெதிர்ப்பட்டு

சொல்லி வரைவுகடாயது.

நின்று தோழி

## உகூஉ. நெய்தற்றத்தனார்

### 1507. அகநானூறு - 243. பாலை

அவரை யாய்மல ருதிரத் துவரின
வாங்குதுளைத் துகிரின் ஈங்கை பூப்ப
இறங்குபோ தவிழ்ந்த ஈர்ம்புதற் பகன்றைக்
கறங்குநுண் துவலையி னாருமை யணியப்
5 பெயனீர் புதுவரல் தவிரச் சினைநேர்பு
பீள்விரிந் திறைஞ்சிய பிறங்குகதிர்க் கழனி
நெல்லொலி பாசவல் துழைஇக் கல்லெனக்
கடிதுவந் திறுத்த கண்ணில் வாடை
நெடிதுவந் தனையென நில்லா தேங்கிப்
10 பலபுலந் துறையுந் துணையில் வாழ்க்கை
நம்வலத் தன்மை கூறி யவர்நிலை
அறியுந மாயின் நன்றுமன் தில்ல
பனிவார் கண்ணே மாகி யினியது
நமக்கே யெவ்வ மாகின்று
15 அணைத்தால் தோழிநந் தொல்வினைப் பயனே.

தலைமகன் பிரிவின்கண் வற்புறுத்துந் தோழிக்குத்
தலைமகள் ஆற்றேனென்பதுபடச் சொல்லியது.

### 1508. நற்றிணை - 49. நெய்தல்

படுதிரை கொழீஇய பானிற எக்கர்த்
தொடியோர் மடிந்தெனத் துறைபுலம் பின்றே
முடிவலை முகந்த முடங்கிறாப் பரவைப்
படுபுள் ளோப்பலிற் பகல்மாய்ந் தன்றே

## நேர்ச்சி நியமங்கிழார்

865

5 கோட்டுமீ னெறிந்த உவகையர் வேட்டமடிந்து
எமரும் அல்கினர் ஏமாரந் தனமெனச்
சென்றுநாம் அறியின் எவனோ தோழி
மன்றப் புன்னை மாச்சினை நறுவீ
முன்றிற் றாழையொடு கமழுந்
10 தெண்கடற் சேர்ப்பன்வாழ் சிறுநல் லூர்க்கே.

தோழி தலைமகளை இரவுக்குறி நயப்பித்தது.
சிறைப்புறமாகத் தோழி ஆற்றாமை வியந்ததூஉமாம்.

## 1509. நற்றிணை - 130. நெய்தல்

வடுவின்று நிறைந்த மான்தேர்த் தெண்கண்
மடிவாய்த் தண்ணுமை நடுவண் ஆர்ப்பக்
கோலி னெறிந்து காலைத் தோன்றிய

செந்நீர்ப் பொதுவினைச் செம்மல் மூதூர்த்
5 தமதுசெய் வாழ்க்கையின் இனிய துண்டோ
எனவிருப் புடைய ராயினும் நினைவிலர்
நேர்ந்த நெஞ்சும் நெகிழ்ந்த தோளும்
வாடிய வரியும் நோக்கி நீடாது
எவன்செய் தனளிப் பேரஞ ருறுவியென்று
10 ஒருநாள் கூறின் றுமிலரே விரிநீர்
வையக வரையள விறந்த
எவ்வ நோய்பிறி துயவுத்துணை யின்றே.

பிரிவிடைமெலிந்த தலைவி வன்புறை எதிரழிந்து சொல்லியது.

## உ௬௫. நொச்சி நியமங்கிழார்

### 1510. அகநானூறு - 52. குறிஞ்சி

வலந்த வள்ளி மரனோங்கு சாரற்
கிளர்ந்த வேங்கைச் சேணெடும் பொங்கர்ப்
பொன்னேர் புதுமலர் வேண்டிய குறமகள் இன்னா
இசைய பூசல் பயிற்றலின்
55

5 ஏக லடுக்கத் திருளனைச் சிலம்பின்
ஆகொள் வயப்புலி யாகுமஃ தெனத் தம்
மலைகெழு சீறூர் புலம்பக் கல்லெனச் 10
சிலையுடை யிடத்தர் போதரு நாடன்
நெஞ்சமர் வியன்மார் புடைத்தென அன்னைக்கு
அறிவிப் பேங்கொல் அறிவியேங் கொல்லென
இருபாற் பட்ட சூழ்ச்சி யொருபாற்
சேர்ந்தன்று வாழி தோழி யாக்கை
இன்னுயிர் கழிவ தாயினும் நின்மகள்
ஆய்மல ருண்கட் பசலை
15 காம நோயெனச் செப்பா தீமே.

தலைமகள் வேறுபட்டமை யறிந்த செவிலித்தாய்க்குத் அறத்தொடு நிற்குமெனத் தலைமகள் சொல்லியது.

தோழி

## 1511. நற்றிணை - 17. குறிஞ்சி

நாள்மழை தலைஇய நன்னெடுங் குன்றத்து
மால்கடற் றிரையின் இழிதரு மருவி
அகலிருங் கானத் தல்கணி நோக்கித்
தாங்கவுந் தகைவரை நில்லா நீர்சுழல்பு
5 ஏந்தெழில் மழைக்கண் கலுழ்தலின் அன்னை
எவன்செய் தனையோநின் இலங்கெயி றுண்கென
மெல்லிய இனிய கூறலின் வல்விரைந்து
உயிரினுஞ் சிறந்த நாணு நனிமறந்து
உரைத்தலுய்ந் தனனே தோழி சாரற்
10 காந்த ளூதிய மணிநிறத் தும்பி
தீந்தொடை நரம்பின் இமிரும்
வான்தோய் வெற்பன் மார்பணங் கெனவே.

முன்னிலைப்புறமொழியாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## 1512. நற்றிணை - 208. பாலை

விறல்சாய் விளங்கிழை நெகிழ விம்மி
அறல்போல் தெண்மணி யிடைமுலை நனைப்ப



விளிவில கலுழுங் கண்ணொடு பெரிதழிந்து
எவனினைபு வாடுதி சுடர்நுதற் குறுமகள்
5 செல்வா ரல்லர்நங் காதலர் செலினும்
நோன்மா ரல்லர் நோயே மற்றவர்
கொன்னு நம்புங் குரையர் தாமே
சிறந்த அன்பினர் சாயலு முரியர்
பிரிந்த நம்மினு மிரங்கி யரும்பொருள்

10 முடியா தாயினும் வருவர் அதன்றலை
இன்றுணைப் பிரிந்தோர் நாடித்
தருவது போலுமிப் பெருமழைக் குரலே.

செலவுற்றாற்றாத குறிப்பறிந்து ஆற்றாளாய தலைமகளுரைப்பத் தோழி சொல்லியது.

**1513.** நற்றிணை - **209.** குறிஞ்சி

மலையிடம் படுத்துக் கோட்டிய கொல்லைத்
தளிபதம் பெற்ற கானுழு குறவர்
சிலவித் தகல விட்டெனப் பலவிளைந்து
இறங்குகுரல் பிறங்கிய ஏன லுள்ளாள்
5 மழலையங் குறுமகள் மிழலையந் தீங்குரல்
கிளியுந் தாமறி பவ்வே யெனக்கே
படுங்காற் பையுள் தீரும் படாஅது
தவிருங் காலை யாயினென்
உயிரோ டெல்லா முடன்வாங் கும்மே.

குறைமறுக்கப்பட்டுப் பின்னின்ற தலைமகன் ஆற்றானாய் நெஞ்சிற்குச் சொல்லுவானாய்ச் சொல்லியது: தோழி கேட்டுக் குறை முடிப்பது பயன்.

**1514.** புறநானூறு - **293.**

நிறப்படைக் கொல்கா யானை மேலோன்

குறும்பர்க் கெறியும் ஏவற் றண்ணுமை
நாணுடை மாக்கட் கிரங்கு மாயின்
எம்மினும் பேரெழி லிழந்து வினையெனப் 868



5 பிறர்மனை புகுவள் கொல்லோ
அளியள் தானே பூவிலைப் பெண்டே.

திணை - காஞ்சி ; துறை - பூக்கோட்காஞ்சி.

## உகூச. நோய்பாடியார்

**1515.** அகநானூறு - **67.** பாலை

யானெவன் செய்கோ தோழி பொறிவரி
வானம் வாழ்த்தி பாடவும் அருளாது
உறைதுறந் தெழிலி நீங்கலிற் பறைபுடன்
மரம்புல் லென்ற முரம்புயர் நனந்தலை
5 அரம்போழ் நுதிய வாளி யம்பின்
நிரம்பா நோக்கின் நிரையங் கொண்மார்
நெல்லி நீளிடை யெல்லி மண்டி
நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடு மெழுதி யதர்தொறும்
10 பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்
வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்
மொழிபெயர் தேஎந் தருமார் மன்னர்
கழிப்பிணிக் கறைத்தோல் நிரைகண் டன்ன

உவவிடு பதுக்கை யாளுகு பறந்தலே
15 உருவில் பேஎ யூராத் தேரொடு
நிலம்படு மின்மினி போலப் பலவுடன்
இலங்குபர லிமைக்கு மென்பநந்
நலந்துறந் துறைநர் சென்ற ஆறே.
பொருள்வயிற் பிரிந்தவழி வற்புறுத்துந் தோழிக்குத்
தலைமகள் சொல்லியது.

உகரு. பக்குடுக்கை நன்கணியார்

1516. புறநானூறு - 194.

ஓரில் நெய்தல் கறங்க ஓரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்



புணர்ந்தோர் பூவணி யணியப் பிரிந்தோர்
பைத லுண்கண் பனிவார் புறைப்பப்
5 படைத்தோன் மன்ற அப் பண்பி லாளன்
இன்னு தம்ம இவ் வுலகம்
இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே.
திணை - பொதுவியல்; துறை - பெருங்காஞ்சி.

உகசு. படுமரத்து மோசிகீரனுர்

1517. குறுந்தொகை - 33. மருதம்

அன்னு யிவனோர் இளமா ணக்கன்
தன்னூர் மன்றத்து என்னன் கொல்லோ
இரந்தூண் நிரம்பா மேனியொடு

விருந்தி னூரும் பெருஞ்செம் மலனே.

வாயிலாகப் புக்க பாணன் கேட்பத் தோழியை நோக்கித் தலைமகள் வாயில் நேர்வாள் கூறியது.

1518. குறுந்தொகை - 75. மருதம்

நீகண் டனையோ கண்டார்க்கேட் டனையோ
ஒன்று தெளிய நசையினம் மொழிமோ
வெண்கோட்டு யானை சோனை படியும்
பொன்மலி பாடினி பெறீஇயர்
5 யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே.

தலைமகன் வரவுணர்த்திய பாணற்குத் தலைமகள் கூறியது.

1519. குறுந்தொகை - 383. பாலை

நீயுடம் படுதலின் யான்தர வந்து
குறிநின் றனனே குன்ற நாடன்
இன்றை யளவை சென்றைக் கென்றி
கையுங் காலு மோய்வன வொடுங்கத்



5 தீயுறு தளிரின் நடுங்கி
யாவது மிலையான் செயற்குரி யதுவே.

உடன்போக்கு நேர்வித்துவந்த தோழிக்கு நாணல் வருந்துந் தலைமகளை நாணுடைமை கெடச் சொல்லியது.

## உகள. படுமரத்து மோசிக்கொற்றனார்

### 1520. குறுந்தொகை - 376. நெய்தல்

மன்னுயி ரறியாத் துன்னரும் பொதியிற்
சூருடை யடுக்கத் தாரங் கடுப்ப
வேணி லானே தண்ணியள் பனியே
வாங்குகதிர் தொகுப்பக் கூம்பி யையென
5 அலங்குவெயிற் பொதிந்த தாமரை
உள்ளகத் தன்ன சிறுவெம் மையளே.

பொருள் வலிக்கும் நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செல வழுங்கியது.

## உகஅ. பதடிவைகலார

### 1521. குறுந்தொகை - 323. முல்லை

எல்லா மெவனோ பதடி வைகல்
பாணர் படுமலை பண்ணிய எழாலின்
வானத் தெழுஞ்சுவர் நல்லிசை வீழப்
பெய்த புலத்துப் பூத்த முல்லைப்
5 பசுமுகைத் தாது நாறு நறுநுதல்
அரிவை தோளணைத் துஞ்சிக்
கழிந்த நாளிவண் வாழும் நாளே.

வினைமுற்றினன் பாகற்கு உரைத்தது.

## உகக. பதுமனார்

**1522.** குறுந்தொகை - **6.** நெய்தல்

நள்ளென் றன்றே யாமஞ் சொல்லவிந்து
இனிதடங் கினரே மாக்கள் முனிவின்று



நனந்தலை யுலகமுந் துஞ்சும்
ஓஒர் யான்மன்ற துஞ்சா தேனே.

வரைவிடை வைத்துப் பிரிந்தவழி ஆற்றளாகிய தலைமகள் தோழியை நெருங்கிச் சொல்லியது.

## ௩௦௦. பரணர்

**1523.** அகநானூறு - **6.** மருதம்

அரிபெய் சிலம்பின் ஆம்பலந் தொடலை
அரம்போ ழவ்வளைப் பொலிந்த முன்கை
இழையணி பணைத்தோள் ஐயை தந்தை
மழைவளந் தரூஉ மாவண் தித்தன்
5 பிண்ட நெல்லின் உறந்தை யாங்கண்
கழைநிலை பெறாஅக் காவிரி நீத்தங்
குழைமா ணொள்ளிழை நீவெய் யோளொடு
வேழ வெண்புணை தழீஇப் பூழியர்
கயநாடு யானையின் முகனமர்ந் தாஅங்கு 10

எங்தெழி லாகத்துப் பூந்தார் குழைய
நெருந லாடினை புனலே இன்றுவந்து
ஆக வனமுலை அருப்பிய சுணங்கின்
மாசில் கற்பின் புதல்வன் தாயென
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றியெம் 15
முதுமை யெள்ளலஃ தமைகுந் தில்ல
சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்து
அந்தூம்பு வள்ளை ஆய்கொடி மயக்கி
வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்
முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும் 20
பல்வேல் மத்தி கழாஅ ரன்னவெம்
இளமை சென்று தவத்தொல் லஃதே
இனியெவன் செய்வது பொய்ம்மொழி
யெமக்கே.

பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகற்குக் கிழத்தி
கூறியது.



## 1524. அகநானூறு - 62. குறிஞ்சி

அயத்துவளர் பைஞ்சாய் முருந்தி னன்ன
நகைப்பொலிந் திலங்கு மெயிறுகெழு

துவாவாய

ஆகத் தரும்பிய முலையள் பணைத்தோள்
மாத்தாட் குவளை மலர்பிணைத் தன்ன
5 மாயிதழ் மழைக்கண் மாஅ யோளொடு
பேயும் அறியா மறையமை புணர்ச்சி
பூசற் றுடியிற் புணர்புபிரிந் திசைப்பக்
கரந்த கரப்பொடு நாஞ்செலற் கருமையிற்
கடும்புனல் மலிந்த காவிரிப் பேரியாற்று
10 நெடுஞ்சுழி நீத்த மண்ணுநள் போல
நடுங்களுர் தீர முயங்கி நெருநல்
ஆகம் அடைதந் தோளே வென்வேற்
களிறுகெழு தானைப் பொறையன் கொல்லி
ஒளிறுநீ ரடுக்கத்து வியலகம் பொற்பக்
15 கடவு ளெழுதிய பாவையின்
மடவது மாண்ட மாஅ யோளே.

அல்ல குறிப்பட்டுழித் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

**1525.** அகநானூறு - **76.** மருதம்

மண்கனை முழவொடு மகிழ்மிகத் தூங்கத்
தண்டுறை யூரனெஞ் சேரி வந்தென
இன்கடுங் கள்ளின் அஃதை களிற்றொடு
நன்கல னீயும் நாண்மகி ழிருக்கை
5 அவைபுகு பொருநர் பறையின் ஆனாது
கழறுப என்பவவன் பெண்டிர் அந்திற்
கச்சினன் கழலினன் தேந்தார் மார்பினன்
வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியற்

சுரியலம் பொருநனைக் காண்டி ரோவென
10 ஆதி மந்தி பேதுற் றினையச்
சிறைபறைந் துரைஇச் செங்குணக் கொழுகும்



அந்தண் காவிரி போலக்
கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே.

தலைமகனை நயப்பித்துக்கொண்டாளென்று கழறக் கேட்ட பரத்தை தலைமகட்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது.

## 1526. அகநானூறு - 116. மருதம்

எரியகைந் தன்ன தாமரை இடையிடை
அரிந்துகால் குவித்த செந்நெல் வினைஞர்
கட்கொண்டு மறுகுஞ் சாகா டளற்றுறின்
ஆய்கரும் படுக்கும் பாய்புன லூர
5 பெரிய நாணிலை மன்ற பொரியெனப்
புன்கவி ழகன்றுறைப் பொலிய வொண்ணுதல்
நறுமலர்க் காண்வருங் குறும்பல் கூந்தல்
மாழை நோக்கிற் காழியல் வனமுலை
எஃகுடை யெழினலத் தொருத்தியொடு நெருநை
10 வைகுபுனல் அயர்ந்தனை யென்ப அதுவே
பொய்புறம் பொதிந்தியாங் கரப்பவுங் கையிகந்து
அலரா கின்றால் தானே மலர்தார்

மையணி யானை மறப்போர்ச் செழியன்
பொய்யா விழவிற் கூடற் பறந்தலை
15 உடனியைந் தெழுந்த இருபெரு வேந்தர்
கடல்மருள் பெரும்படை கலங்கத் தாக்கி
இரங்கிசை முரச மொழியப் பரந்தவர்
ஓடுபுறங் கண்ட ஞான்றை
ஆடுகொள் வியன்களத் தார்ப்பினும் பெரிதே.

தோழி தலைமகனை வாயின் மறுத்தது.

**1527.** அகநானூறு - **122.** குறிஞ்சி

இரும்பிழி மகாஅரிவ் வழுங்கல் மூதூர்
விழவின் றாயினுந் துஞ்சா தாகும்
மல்ல லாவணம் மறுகுடன் மடியின்



வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்
5 பிணிகோ ளருஞ்சிறை அன்னை துஞ்சின்
துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்
இலங்குவே லிளையர் துஞ்சின் வையெயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்
அரவவாய் ஞமலி மகிழாது மடியிற்
10 பகலுரு வுறழ நிலவுக்கான் றுவிசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்றுவிரி யும்மே
திங்கள் கல்சேர்பு கனையிருள் மடியின்
இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை

கழுதுவழங்கு யாமத் தழிதகக் குழறும்
15 வளைக்கட் சேவல் வாளாது மடியின்
மனைச்செறி கோழி மாண்குர லியம்பும்
எல்லா மடிந்த காலை யொருநாள்
நில்லா நெஞ்சத் தவர்வா ரலரே, அதனால்
அரிபெய் புட்டி லார்ப்பப் பரிசிறந்து
20 ஆதி போகிய பாய்பரி நன்மா
நொச்சி வேலித் தித்தன் உறந்தைக்
கன்முதிர் புறங்காட் டன்ன
பன்முட் டின்றால் தோழிநங் களவே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொற்றது. தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

## 1528. அகநானூறு - 125. பாலை

அரம்போ ழவ்வளை தோள்நிலை நெகிழ
நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி
இரங்கா முன்ன அரும்புமுதி ரீங்கை
ஆலி யன்ன வால்வீ தாஅய்
5 வைவா லோதி மையண லேய்ப்பத்
தாதுறு குவளைப் போதுபிணி யவிழப்
படாஅப் பைங்கட் பாவடிக் கயவாய்க்

பரணர் 

கடாஅ மாறிய யானை போலப்

10
பெய்துவறி தாகிய பொங்குசெலற் கொண்மூ
மைதோய் விசும்பின் மாதிரத் துழிதரப்
பனியடூஉ நின்ற பானாட் கங்குல்
தனியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய அலைத்தி முரணில் காலைக்
கைதொழு மரபிற் கடவுள் சான்ற
15 செய்வினை மருங்கிற் சென்றோர் வல்வரின்
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வெருவரு தானையொடு வேண்டுபுலத் திறுத்த
பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை யாடுபெற

20 ஒன்பது குடையும் நன்பக லொழித்த
பீடில் மன்னர் போல
ஓடுவை மன்னால் வாடைநீ யெமக்கே.

தலைமகன் வினைமுற்றி மீண்டமை யுணர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

## 1529. அகநானூறு - 135. பாலை

திதலை மாமை தளிர்வனப் பழுங்கப்
புதலிவர் பீரின் எதிர்மலர் கடுப்பப்

பசலை பாய்ந்த நுதலே னாகி
எழுதெழில் மழைக்கண் கலுழ நோய்கூர்ந்து
5 ஆதி மந்தியின் அறிவுபிறி தாகிப்
பேதுற் றிசினே காதலந் தோழி
காய்கதிர் திருகலிற் கனைந்துகால் கடுகி
ஆடுதளி ரிருப்பைக் கூடுகுவி வான்பூக்
கோடுகடை கழங்கின் அறைமிசைத் தாஅம்
10 காடிறந் தனரே காதலர் அடுபோர்
வீயா விழுப்புகழ் விண்தோய் வியன்குடை
ஈரெழு வேளிர் இயைந்தொருங் கெறிந்த



கழுவுள் காமூர் போலக்
கலங்கின்று மாதவர்த் தெளிந்தவென்
னெஞ்சே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொற்றது.

### 1530. அகநானூறு - 142. குறிஞ்சி

இலமல ரன்ன அஞ்செந் நாவிற்
புலமீக் கூறும் புரையோ ரேத்தப்
பலர்மேந் தோன்றிய கவிகை வள்ளல்
நிறையருந் தானை வெல்போர் மாந்தரம்
5 பொறையன் கடுங்கோப் பாடிச் சென்ற
குறையோர் கொள்கலம் போல நன்றும்

உவவினி வாழிய நெஞ்சே காதலி
முறையின் வழாஅ தாற்றிப் பெற்ற
கறையடி யானை நன்னன் பாழி
10 ஊட்டரு மரபின் அஞ்சுவரு பேஎய்க்

கூட்டெதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி
புள்ளிற் கேம மாகிய பெரும்பெயர்
வெள்ளத் தானை அதிகற் கொன்றுவந்து
ஒள்வா ளமலை யாடிய ஞாட்பிற்
15 பலரறி வுறுத லஞ்சிப் பைப்பய
நீர்த்திரள் கடுக்கு மாசில் வெள்ளிச்
சூர்ப்புறு கோல்வளை செறித்த முன்கைக்
குறையறல் லன்ன இரும்பல் கூந்தல்
இடனில் சிறுபுறத் திழையொடு துயல்வரக்
20 கடல்மீன் துஞ்சு நள்ளென் யாமத்து
உருவுகிளர் ஏர்வினைப் பொலிந்த பாவை
இயல்கற் றன்ன வொதுக்கினள் வந்து
பெயலலைக் கலங்கிய மலைப்பூங் கோதை
இயலெறி பொன்னிற் கொங்குசோர்
புறைப்பத்

25 தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்
வடிப்புறு நரம்பிற் றீவிய மொழிந்தே.

இரவுக்குறிவந்து நீங்குந் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

**1531.** அகநானூறு - **148.** குறிஞ்சி

பனைத்திர ளன்ன பரேரெறுழ்த் தடக்கைக்
கொலைச்சினந் தவிரா மதனுடை முன்பின்
வண்டுபடு கடாஅத் துயர்மருப்பு யானை
தண்கமழ் சிலம்பின் மரம்படத் தொலைச்சி
5 உறுபுலி யுரறக் குத்தி விறல்கடிந்து
சிறுதினைப் பெரும்புனம் வவ்வும் நாட

கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்
நெடுந்தேர் மிஞிலியொடு பொருதுகளம்
காணிய செல்லாக் கூகை நாணிக்

பட்டெனக்

10 கடும்பகல் வழங்கா தாஅங் கிடும்பை

பெரிதா லம்ம இவட்கே அதனால்
மாலை வருதல் வேண்டுஞ் சோலை
முளைமேய் பெருங்களிறு வழங்கும்
மலைமுத லடுக்கத்த சிறுகலா றே.

பகல் வருவானை இரவு வருகென்றது.

## 1532. அகநானூறு - 152. குறிஞ்சி

நெஞ்சுநடுங் கரும்படர் தீர வந்து
குன்றுழை நண்ணிய சீறூ ராங்கண்
செலீஇய பெயர்வோள் வணர்சுரி யைம்பால்
நுண்கோ லகவுநர்ப் புரந்த பேரிசைச்
5 சினங்கெழு தானைத் தித்தன் வெளியன்
இரங்குநீர்ப் பரப்பிற் கானலம் பெருந்துறைத்
தனந்தரு நன்கலஞ் சிதையத் தாக்குஞ்
சிறுவெள் ளிறவின் குப்பை யன்ன
உறுபகை தரூஉம் மொய்ம்மூசு பிண்டன்

10 முன்னூரா னுடையக் கடந்த வென்வேல்
இசைநல் ஈகைக் களிறுவீசு வண்மகிழ்ப்
பாரத்துத் தலைவ னார நன்னன்
ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பிற்
களிமயிற் கலாவத் தன்ன தோளே
15 வல்வி லிளையர் பெருமகன் நள்ளி
சோலை யடுக்கத்துச் சுரும்புண விரிந்த
கடவுட் காந்த ளுள்ளும் பலவுடன்
இறும்பூது கஞலிய ஆய்மலர் நாறி
வல்லினும் வல்லா ராயினுஞ் சென்றோர்க்குச்
20 சாலவிழ் நெடுங்குழி நிறைய வீசு
மாஅல் யானை ஆஅய் கானத்துத்
தலையாற்று நிலைஇய சேயுயர் பிறங்கல்
வேயமைக் கண்ணிடை புரைஇச்
சேய வாயினும் நடுங்குதுயர் தருமே.

இரவுக்குறி வந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

## 1533. அகநானூறு - 162. குறிஞ்சி

கொளக்குறை படாஅக் கோடுவளர் குட்டத்து
அளப்பரி தாகிய குவையிருந் தோன்றல
கடல்கண் டன்ன மாக விசும்பின்
அழற்கொடி யன்ன மின்னுவசிபு நுடங்க
5 கடிதிடி உருமொடு கதழுறை சிதறி
விளிவிடன் அறியா வானுமிழ் நடுநாள்

அருங்கடிக் காவல ரிகழ்பதம் நோக்கிப்
பனிமயங் கசைவளி யலைப்பத் தந்தை
நெடுநக ரொருசிறை நின்றனெ னாக
10 அறலென அவிர்வருங் கூந்தல் மலரென
வாண்முகத் தலமரு மாயிதழ் மழைக்கண்
முகைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்
நகைமாண் டிலங்கு நலங்கெழு துவர்வாய்க்



கோலமை விழுத்தொடி விளங்க வீசிக்
15 காலுறு தளிரின் நடுங்கி யானாது
நோயசா வீட முயங்கினள் வாய்மொழி
நல்லிசை தரூஉம் இரவலர்க் குள்ளிய
நசைபிழைப் பறியாக் கழல்தொடி அதிகன்
கோளற வறியாப் பயங்கெழு பலவின்
20 வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய
வில்கெழு தானைப் பசும்பூட் பாண்டியன்
களிறணி வெல்கொடி கடுப்பக் காண்வர

ஒளிறுவன இழிதரு முயர்ந்துதோன் றருவி
நேர்கொள் நெடுவரைக் கவாஅற்
25 சூரர மகளிரிற் பெறற்கரி யோளே.

இரவுக்குறிக்கண் தலைமகளைக்கண்ணுற்று நீங்கிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

வயிரத் தன்ன வையேந்து மருப்பின்
வெதிர்வே ரன்ன பரூஉமயிர்ப் பன்றி
பறைக்க ணன்ன நிறைச்சுனை பருகி
நீலத் தன்ன அகலிலைச் சேம்பின்
5 பிண்ட மன்ன கொழுங்கிழங்கு மாந்திப்
பிடிமடிந் தன்ன கல்மிசை யூழிழிபு
யாறுசேர்ந் தன்ன ஊறுநீர்ப் படாஅர்ப்
பைம்புதல் நளிசினைக் குருகிருந் தன்ன
வண்பிணி யவிழ்ந்த வெண்கூ தாளத்து 10
அலங்குகுலை யலரி தீண்டித் தாதுகப்
பொன்னுரை கட்டளை கடுப்பக் காண்வரக்
கிளையமல் சிறுதினை விளைகுரல் மேய்ந்து
கண்ணினிது படுக்கும் நன்மலை நாடனொடு
உணர்ந்தனை புணர்ந்த நீயும் நின்தோட் 15
பணைக்கவின் அழியாது துணைப்புணர்ந் தென்றுந்
தவலி லுலகத் துறைஇயரோ தோழி

எல்லையு மிரவு மென்னுது கல்லெனக்
கொண்டல் வான்மழை பொழிந்த வைகறைத்
தண்பனி யற்சிரந் தமியோர்க் கரிதெனக்
20 கனவினும் பிரிவறி யலனே அதன்றலை
முற்றுன் கண்ட ஞான்றினும்
பிற்பெரி தளிக்குந்தன் பண்பி னனே.

தோழி வரைவுமலிந்து சொல்லியது.

## 1535. அகநானூறு - 181. பாலை

துன்னருங் கானமுந் துணித லாற்றுய்
பின்னின்று பெயரச் சூழ்ந்தனை யாயின்
என்னிலை யுரைமோ நெஞ்சே ஒன்னார்
ஓம்பரண் கடந்த வீங்குபெருந் தானை
5 அடுபோர் மிஞிலி செருவேல் கடைஇ
முருகுறழ் முன்பொடு பொருதுகளஞ் சிவப்ப
ஆஅய் எயினன் வீழ்ந்தென ஞாயிற்று
ஒண்கதி ருருப்பம் புதைய வோராங்கு
வம்பப் புள்ளின் கம்பலைப் பெருந்தோடு
10 விசும்பிடை தூர வாடி மொசிந்துடன்
பூவிரி யகன்றுறைக் கனைவிசைக் கடுநீர்க்
காவிரிப் பேரியாற் றயிர்கொண் டீண்டி

எக்க ரிட்ட குப்பை வெண்மணல்
வைப்பின் யாணர் வளங்கெழு வேந்தர்
15 ஞாலம் நாறு நலங்கெழு நல்லிசை
நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்
ஆல முற்றங் கவின்பெறத் தைஇய
பொய்கை சூழ்ந்த பொழில்மனை மகளிர்
கைசெய் பாவைத் துறைக்க ணிறுக்கும்
20 மகர நெற்றி வான்தோய் புரிசைச்
சிகரந் தோன்றாச் சேணுயர் நல்லிற்
புகாஅர் நன்னாட் டதுவே பகாஅர்
பண்டம் நாறும் வண்டட ரைம்பாற்
பணைத்தகைத் தடைஇய காண்பின் மென்தோள்


25 அணங்குசா லரிவை யிருந்த
மணங்கமழ் மறுகின் மணற்பெருங் குன்றே.

இடைச் சுரத்து ஒழியக்கருதிய நெஞ்சிற்குச் சொல்லியது.

## 1536. அகநானூறு - 186. மருதம்

வானம் வேண்டா வறனில் வாழ்க்கை
நோன்ஞாண் வினைஞர் கோளறிந் தீர்க்கும்
மீன்முதி ரிலஞ்சிக் கலித்த தாமரை
நீர்மிசை நிவந்த நெடுந்தா ளகலிலை

5 இருங்கயந் துளங்கக் காலுறு தோறும்
பெருங்களிற்றுச் செவியின் அலைக்கு மூரனொடு
எழுந்த கௌவையோ பெரிதே நட்பே
கொழுங்கோல் வேழத்துப் புணைதுணை யாகப்
புனலாடு கேண்மை யனைத்தே அவனே
10 ஒண்டொடி மகளிர் பண்டையாழ் பாட
ஈர்ந்தண் முழவின் எறிகுணில் விதிர்ப்பத்
தண்ணறுஞ் சாந்தங் கமழுந் தோள்மணந்து
இன்னும் பிறள்வயி னானே மனையோள்
எம்மொடு புலக்கு மென்ப வென்வேல்
15 மாரி யம்பின் மழைத்தோற் பழையன்
காவிரி வைப்பிற் போஒ ரன்னவென்
செறிவளை யுடைத்தலோ விலனே உரிதினின்
யாந்தன் பகையே மல்லேம் சேர்ந்தோர்
திருநுதல் பசப்ப நீங்குங்
20 கொழுநனுஞ் சாலுந்தன் னுடனுறை பகையே.

தலைமகட்குப் பாங்காயினர் கேட்ப இல்லிடைப் பரத்தை சொல்லி நெருங்கியது.

## 1537. அகநானூறு - 196. மருதம்

நெடுங்கொடி நுடங்கு நறவுமலி பாக்கத்து
நாட்டுறைப் பட்ட மோட்டிரு வராஅற்
றுடிக்கட் கொழுங்குறை நொடுத்துண் டாடி

56

வேட்டமறந்து துஞ்சுங் கொழுநர்க்குப்
5 ஆம்ப லகலிலை யமலைவெஞ் சோறு
தீம்புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து
பாடி

விடியல் வைகறை யிடூஉ மூர
தொடுகலங் குறுக வாரல் தந்தை
கண்கவின் அழித்ததன் தப்பற் றெறுவர 10
ஒன்றுமொழிக் கோசர்க் கொன்று முரண்போகிய
கடுந்தேர்த் திதிய னழுந்தைக் கொடுங்குழை
அன்னி மிஞிலியின் இயலும்
நின்னலத் தகுவியை முயங்கிய மார்பே.

பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகற்குக் கிழத்திச் சொல்லியது.

### 1538. அகநானூறு - 198. குறிஞ்சி

கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெனக்
கரந்த காமங் கைந்நிறுக் கல்லாது
நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி
அரைநாள் யாமத்து விழுமழை கரந்து
5 கார்விரை கமழுங் கூந்தற் றூவினை
நுண்ணூ லாகம் பொருந்தினள் வெற்பின்
இளமழை சூழ்ந்த மடமயில் போல
வண்டுவழிப் படரத் தண்மலர் வேய்ந்து

வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூல்
10 அஞ்சிலம் பொடுக்கி அஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்
ஆன்ற கற்பிற் சான்ற பெரியள்
அம்மா வரிவையோ வல்லள் தெனுஅது
ஆஅய் நன்னாட் டணங்குடைச் சிலம்பிற்
15 கவிரம் பெயரிய உருகெழு கவாஅன்
ஏர்மலர் நிறைசுனை யுறையுஞ்
சூர்மகள் மாதோ வென்னுமென் னெஞ்சே.

புணர்ந்து நீங்கிய தலைமகளது போக்கு நோக்கிய தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.



## 1539. அகநானூறு - 208. குறிஞ்சி

யாம இரவின் நெடுங்கடை நின்று
தேமுதிர் சிமையக் குன்றம் பாடும்
நுண்கோ லகவுநர் வேண்டின் வெண்கோட்டு
அண்ணல் யானை ஈயும் வண்மகிழ்
5 வெளியன் வேண்மான் ஆஅ யெயினன்
அளியியல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை

இழையணி யானை இயல்தேர் மிஞிலியொடு
நண்பக லுற்ற செருவிற் புண்கூர்ந்து
ஒள்வாள் மயங்கமர் வீழ்ந்தெனப் புள்ளொருங்கு
10 அங்கண் விசும்பின் விளங்கு ஞாயிற்று
ஒண்கதிர் தெறுமைச் சிறகரிற் கோலி
நிழல்செய் துழறல் காணேன் யானெனப்
படுகளங் காண்டல் செல்லான் சினஞ்சிறந்து
உருவினை நன்னன் அருளான் கரப்பப்
15 பெருவிதுப் புற்ற பல்வேண் மகளிர்
குரூஉப்பூம் பைந்தா ரருக்கிய பூசல்
வசைவிடக் கடக்கும் வயங்குபெருந் தானை
அகுதை களைதந் தாங்கு மிகுபெயல்
உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல
20 நாணுவரை நில்லாக் காமம் நண்ணி
நல்கினள் வாழியர் வந்தே ஓரி
பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லிக்
கார்மலர் கடுப்ப நாறும்
ஏர்நுண் ஓதி மாஅ யோளே.

புணர்ந்து நீங்குந் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

## 1540. அகநானூறு - 212. குறிஞ்சி

தாவில் நன்பொன் தைஇய பாவை
விண்தவ ழிளவெயிற் கொண்டுநின் றன்ன
மிகுகவி னெய்திய தொகுகுர லைம்பாற்
கிளையரில் நாணற் கிழங்குமணற் கீன்ற

5 முளையோ ரன்ன முள்வெயிற்றுத் துவர்வாய்
நயவன் தைவருஞ் செவ்வழி நல்யாழ்
இசையோர்த் தன்ன இன்றீங் கிளவி
அணங்குசா லரிவையை நசைஇப் பெருங்களிற்று
இனம்படி நீரிற் கலங்கிய பொழுதிற்
10 பெறலருங் குரைய ளென்னாய் வைகலும்
இன்னா அருஞ்சுரம் நீந்தி நீயே
என்னை யின்னற் படுத்தனை மின்னுவசிபு
உரவுக்கார் கடுப்ப மறலி மைந்துற்று
விரவுமொழித் தகடூர் வேண்டுவழிக் கொளீஇப்
15 படைநிலா விலங்குங் கடல்மருள் தானை
மட்டவிழ் தெரியல் மறப்போர்க் குட்டுவன்

பொருமுரண் பெறாஅது விலங்குசினஞ்
செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி

சிறந்து

ஓங்குதிரைப் பௌவம் நீங்க வோட்டிய
20 நீர்மாண் எஃகம் நிறத்துச்சென் றழுந்தக்
கூர்மத னழியரோ நெஞ்சே யானாது
எளிய ளல்லோட் கருதி
விளியா எவ்வந் தலைத்தந் தோயே.

அல்லகுறிப்பட்டு நீங்குந் தலைமகன் தன்னெஞ்சினை நெருங்கிச் சொல்லியது.

**1541.** அகநானூறு - **222.** குறிஞ்சி

வானுற நிவந்த நீனிறப் பெருமலைக்
கான நாடன் உறீஇய நோய்க்கென்
மேனி யாய்நலந் தொலைதலின் மொழிவென்
முழவுமுகம் புலராக் கலிகொ ளாங்கண்
5

கழாஅர்ப் பெருந்துறை விழவி னாடும்
ஈட்டெழிற் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்
ஆட்ட னத்தி நலனயந் துரைஇத்
தாழிருங் கதுப்பிற் காவிரி வவ்வலின்
மாதிரந் துழைஇ மதிமருண் டலந்த
10 ஆதி மந்தி காதலற் காட்டிப்



படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்
மருதி யன்ன மாண்புகழ் பெறீஇயர்
சென்மோ வாழி தோழி பன்னாள்

உரவுரு மேஞெடு மயங்கி
15 இரவுப்பெயல் பொழிந்த ஈர்ந்த ஞறே.

தலைமகன் சிறைப்புறத்தானுகத் தோழி தலைமகட்குச் சொல்லியது.

**1542. அகநானூறு - 226.**

மருதம்

உணர்குவெ னல்லென் உரையல்நின் மாயம்
நாணிலை மன்ற யாண ரூர
அகலு ளாங்கண் அம்பகை மடிவைக்
குறுந்தொடி மகளிர் குரூஉப்புனல் முனையிற்
5 பழனப் பைஞ்சாய் கொழுதிக் கழனிக்
கரந்தையஞ் செறுவின் வெண்குரு கோப்பும்
வல்வி லெறுழ்த்தோட் பரதவர் கோமான்
பல்வேல் மத்தி கழாஅர் முன்றுறை
நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய
10 விடியல் வந்த பெருநீர்க் காவிரித்
தொடியணி முன்கை நீவெய் யோளொடு
முன்ஞ ளாடிய கவ்வை யிந்நாள்
வலிமிகு முன்பிற் பாணஞெடு மலிதார்த்
தித்தன் வெளியன் உறந்தை நாளவைப்
15 பாடின் தெண்கிணைப் பாடுகேட் டஞ்சிப்
போரடு தானைக் கட்டி
பொராஅ தோடிய ஆர்ப்பினும் பெரிதே.

தலைமகற்குத் தோழி வாயின்மறுத்தது.

## 1543. அகநானூறு - 236. மருதம்

மணிமருள் மலர முள்ளி யமன்ற
துணிநீ ரிலஞ்சிக் கொண்ட பெருமீன்
அரிநிறக் கொழுங்குறை வெளவினர் மாந்தி
வெண்ணெ லரிநர் பெயர்நிலைப் பின்றை



5 இடைநிலம் நெரிதரு நெடுங்கதிர்ப் பல்சூட்டுப்
பனிபடு சாய்ப்புறம் பரிப்பக் கழனிக்
கருங்கோட்டு மாஅத் தலங்குசினைப் புதுப்பூ
மயங்குமழைத் துவலையிற் றூஅ மூரன்
காமம் பெருமை யறியேன் நன்றும்
10 உய்ந்தனென் வாழி தோழி யல்கல்
அணிகிளர் சாந்தின் அம்பட் டிமைப்பக்
கொடுங்குழை மகளிரின் ஒடுங்கிய விருக்கை
அறியா மையின் அழிந்த நெஞ்சின்
ஏற்றிய லெழில்நடைப் பொலிந்த மொய்ம்பின்
15 தோட்டிருஞ் சுரியல் மணந்த பித்தை
ஆட்ட னத்தியைக் காணீ ரோவென
நாட்டி னாட்டின் ஊரி னூரிற்
கடல்கொண் டன்றெனப் புனலொளித்

தன்றெனக்
கலுழ்ந்த கண்ணள் காதலற் கெடுத்த
20 ஆதி மந்தி போல
வேதஞ் சொல்லிப் பேதுபெரி துறலே.

ஆற்றாமைவாயிலாகப் புக்க தலைமகனீக்கத்துக்கண் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

## 1544. அகநானூறு - 246. மருதம்

பிணர்மோட்டு நந்தின் பேழ்வா யேற்றை
கதிர்மூக் காரல் களவ னாக
நெடுநீர்ப் பொய்கைத் துணையொடு புணரும்
மலிநீ ரகல்வயல் யாண ரூர
5 போதார் கூந்தல் நீவெய் யோளொடு
தாதார் காஞ்சித் தண்பொழி லகல்யாறு
ஆடினை யென்ப நெருநை அலரே
காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க் கரிகால்
ஆர்கலி நறவின் வெண்ணி வாயிற்
10 சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின் இமிழிசை
முரசம் பொருகளத் தொழியப்

. பரணர் 887

பதினொரு வேளிரொடு வேந்தர் சாய
மொய்வலி யறுத்த ஞான்றைத்

தொய்யா அழுந்து ரார்ப்பினும் பெரிதே.

தோழி தலைமகற்கு வாயின்மறுத்தது.

**1545.** அகநானூறு - **258.** குறிஞ்சி

நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்
தொன்முதிர் வேளி ரோம்பினர் வைத்த
பொன்னினும் அருமைநற் கறிந்தும் அன்னோட்
டுன்னல மாதோ வெனினுமஃ தொல்லாய்
5

தண்மழை தவழுந் தாழ்நீர் நனந்தலைக்
கடுங்காற் றெடுக்கும் நெடும்பெருங் குன்றத்து
மாய இருளளி மாய்கற் போல
மாய்கதில் வாழிய நெஞ்சே நாளும்
மெல்லியற் குறுமகள் நல்லகம் நசைஇ
10 அரவிரை தேரும் அஞ்சுவரு சிறுநெறி
இரவி னெய்தியும் பெறாஅய் அருள்வரப்
புல்லென் கண்ணை புலம்புகொண் டுலகத்து
உள்ளோர்க் கெல்லாம் பெருநகை யாகக்
காமங் கைம்மிக வுறுதர
15 ஆனா அரும்படர் தலைத்தந் தோயே.

அல்லகுறிப்பட்டுப் பதிப்பெயர்ந்த தலைமகன்
தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

**1546.** அகநானூறு - **262.** குறிஞ்சி

முதைபடு பசுங்காட் டரிற்பவர் மயக்கிப்
பகடுபல பூண்ட உழவுறு செஞ்செய்

இடுமுறை நிரம்பிய வரகுவினைக் கலித்துப்
பாசிலை யமன்ற பயிரூழ் புக்கென

5 வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளாது
ஊர்முது கோசர் நவைத்த சிறுமையிற்
கலத்தும் உண்ணாள் வாலிதும் உடாஅள்



சினத்திற் கொண்ட படிவ மாருள்
மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்
10 செருவியல் நன்மான் திதியற் குரைத்தவர்
இன்னுயிர் செகுப்பக் கண்டுசின மாறிய
வன்னி மிஞிலி போல மெய்ம்மலிந்து
ஆனு வுவகையே மாயினெம் பூமலிந்து
அருவி யார்க்கும் அயந்திகழ் சிலம்பின்
15 நுண்பல் துவலை புதல்மிசை நனைக்கும்
வண்டுபடு நறவின் வண்மகிழ்ப் பேகன்
கொண்டல் மாமலை நாறி
அந்தீங் கிளவி வந்த மாறே.

இரவுக்குறிக்கண் தலைமகளைப் புணர்ந்து நீங்குந்

தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

## 1547. அகநானூறு - 266. மருதம்

கோடுற நிவந்த நீடிரும் பரப்பின்
அந்திப் பராஅய புதுப்புனல் நெருநை
மைந்துமலி களிற்றிற் றலைப்புணை தழீஇ
நரந்தம் நாறுங் குவையிருங் கூந்தல்
5 இளந்துணை மகளிரொடு ஈரணிக் கலைஇ
நீர்பெயர்ந் தாடிய ஏந்தெழின் மழைக்கண்
நோக்குதொறும் நோக்குதொறுந் தவிர்விலை யாகிக்
காமங் கைம்மிகச் சிறத்தலின் நாணிழந்து
ஆடினை யென்ப மகிழ்ந அதுவே
10 யாழிசை மறுகின் நீடூர் கிழவோன்
வாய்வா ளெவ்வி யேவல் மேவார்
நெடுமிடல் சாய்த்த பசும்பூட் பொருந்தலர்
— அரிமண வாயி லுறத்தூ ராங்கண்
கள்ளுடைப் பெருஞ்சோற் றெல்லிமி ழன்ன
15 கவ்வை யாகின்றாற் பெரிதே யினியஃது
அவல மன்றுமன் எமக்கே யயல
கழனி யுழவர் கலிசிறந் தெடுத்த



கறங்கிசை வெரீஇப் பறந்த தோகை

அணங்குடை வரைப்பகம் பொலியவந்
20 திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேஎயொ டுற்ற சூளே.

திருக்குந்

பரத்தையிற் பிரிந்துவந்து கூடிய தலைமகற்குத்
தலைமகள் சொல்லியது.

**1548.** அகநானூறு - **276.** மருதம்

நீளிரும் பொய்கை யிரைவேட் டெழுந்த
வாளை வெண்போத் துணீஇய நாரைதன்
அடியறி வுறுத லஞ்சிப் பையபயக்
கடியிலம் புகூஉங் கள்வன் போலச்
5 சாஅ யொதுங்குந் துறைகே ழூரனொடு
ஆவ தாக இனிநா ணுண்டோ
வருகதில் அம்மவெஞ் சேரி சேர
அரிவே யுண்கணவன் பெண்டிர் காணத்
தாருந் தானையும் பற்றி ஆரியர்
10 பிடியயின்று தரூஉம் பெருங்களிறு போலத்
தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்

மார்புகடி கொள்ளே ஞயின் ஆர்வுற்று
இரங்தோர்க் கீயா திட்டியோன் பொருள்போற்
பரந்து வெளிப்படா தாகி
15 வருந்துக தில்லயா யோம்பிய நலனே.

தலைமகட்குப் பாங்காயினர் கேட்பப் பரத்தை சொல்லியது.

## 1549. அகநானூறு - 322. குறிஞ்சி

வயங்குவெயில் ஞெமியப் பாஅய் மின்னுவசிபு
மயங்குதுளி பொழிந்த பானாட் கங்குல் 5
ஆராக் காமம் அடூஉநின் றலைப்ப

இருவரை வீழ்நரின் நடுங்கித் தெருவரப்
பாம்பெறி கோலிற் றமியை வைகித்
தேம்புதி கொல்லோ நெஞ்சே யுருமிசைக் 890

களிறுகண் கூடிய வாள்மயங்கு ஞாட்பின்
ஒளிறுவேற் றானைக் கடுந்தேர்த் திதியன்
வருபுன லிழிதரு மரம்பயி லிரும்பிற்
10 பிறையுறழ் மருப்பிற் கடுங்கட் பன்றிக்

குறையார் கொடுவரி குழூஉமுஞ் சாரல்
அறையுறு தீந்தேன் குறவ ரறுப்ப

முயலுநர் முற்றா ஏற்றரு நெடுஞ்சிமைப்
புகலரும் பொதியில் போலப்
15 பெறலருங் குரையளெம் அணங்கி யோளே.

அல்லகுறிப்பட்டுப் போகின்ற தலைமகன்
தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

1550. அகநானூறு - 326. மருதம்

ஊரல் லவ்வா யுருத்த தித்திப்
பேரமர் மழைக்கட் பெருந்தோட் சிறுநுதல் நல்லள்
அம்ம குறுமகள் செல்வர்
கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
5 நெடுங்கொடி நுடங்கு மட்ட வாயில்

இருங்கதிர்க் கழனிப் பெருங்கவி னன்ன
நலம்பா ராட்டி நடையெழிற் பொலிந்து
விழவிற் செலீஇயர் வேண்டும் வென்வேல் இழையணி
யானைச் சோழர் மறவன் 10 கழையளந் தறியாக்

காவிரிப் படப்பைப் புனல்மலி புதவிற் போஓர்
கிழவோன் பழையன் ஓக்கிய வேல்போற்
பிழையல கண் அவள் நோக்கியோர் திறத்தே.

_ தோழி தலைமகனை வாயின்மறுத்தது.

1551. அகநானூறு - 356. மருதம்

மேற்றுறைக் கொளீஇய கழாலிற் கீழ்த்துறை
உகுவா ரருந்தப் பகுவா யாமை
கம்புள் இயவ னாக விசிபிணித்

பரணர் 891

தெண்கட் கிணையிற் பிறழு மூரன்
5 இடைநெடுந் தெருவிற் கதுமெனக் கண்டென்
பொற்றொடி முன்கை பற்றின னாக
அன்னா யென்றனென் அவன்கைவிட் டனனே
தொன்னசை சாலாமை நன்னன் பறம்பிற்
சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
10 கற்போல் நாவினே னாகி மற்றது
செப்பலென் மன்னால் யாய்க்கே நற்றோக்
கடும்பகட்டு யானைச் சோழர் மருகன்
நெடுங்கதிர் நெல்லின் வல்லங் கிழவோன்
நல்லடி யுள்ளா னாகவும் ஒல்லார்
15 கதவ முயறலு முயல்ப அதாஅன் று
ஒலிபல் கூந்தல் நம்வயி னருளாது
கொன்றன னாயினுங் கொலைபழு தன்றே

அருவி யாம்பல் கவித்த முன்றுறை
நன்ன ஞஅய்பிரம் பன்ன
20 மின்னீ ரோதி யென்னைநின் குறிப்பே.

பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளைக்குறைநயப்பக் கூறியது.

## 1552. அகநானூறு - 367. பாலை

இலங்குசுடர் மண்டிலம் புலந்தலைப் பெயர்ந்து
பல்கதிர் மழுகிய கல்சே ரமையத்து
அலந்தலை மூதே றுண்குரல் விளிப்ப
மனைவளர் நொச்சி மாசேர்பு வதிய
5 முனையுழை யிருந்த அங்குடிச் சீறூர்க்
கருங்கால் வேங்கைச் செஞ்சுவல் வரகின்
மிகுபதம் நிறைந்த தொகுகூட் டொருசிறைக்
குவியடி வெருகின் பைங்க ணேற்றை
ஊனசைப் பிணவின் உயங்குபசி களைஇயர்
10 தளிர்புரை கொடிற்றிற் செறிமயி ரெருத்திற்
கதிர்த்த சென்னிக் கவிர்ப்பூ வன்ன
நெற்றிச் சேவல் அற்றம் பார்க்கும்

புல்லென் மாலையும் இனிதுமன் றம்ம
நல்லக வனமுலை யடையப் புல்லுதொறு
15 உயிர்குழைப் பன்ன சாயற்
செயிர்தீ ரின்றுணைப் புணர்ந்திசி னோர்க்கே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வற்புறக்கும் தோழிக்குச் சொல்லியது.

## 1553. அகநானூறு - 372. குறிஞ்சி

அருந்தெறல் மரபிற் கடவுள் காப்பப்
பெருந்தேன் தூங்கு நாடுகாண் நனந்தலை
அணங்குடை வரைப்பிற் பாழி யாங்கண்
வேண்முழு மாக்கள் வியனகர்க் கரந்த
5 அருங்கல வெறுக்கையின் அரியோள் பண்புநினைந்து
வருந்தின மாதோ வெனினுமஃ தொல்லாய்
இரும்பணைத் தொடுத்த பலரா டூசல்
ஊர்ந்திழி கயிற்றிற் செலவர வருந்தி
நெடுநெறிக் குதிரைக் கூர்வே லஞ்சி
10 கடுமுனை யலைத்த கொடுவி லாடவர்
ஆடுகொள் பூசலிற் பாடுசிறந் தெறியும்
பெருந்துடி வள்பின் வீங்குபு நெகிழா
மேய்மணி யிழந்த பாம்பின் நீநனி
தேம்பினை வாழியெ னெஞ்சே வேந்தர்
15 கோண்டணி யெயிலிற் காப்புச்சிறந்து
ஈண்டருங் குரையள்நம் அணங்கி யோளே.

அல்லகுறிப்பட்டுப் போகாநின்ற தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

செல்லல் மகிழ்நநிற் செய்கட
னுடையென்மன்
கல்லா யானை கடிபுனல் கற்றென
மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை
ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறைக்

பரணர் 893

5 கலிகொள் சுற்றமொடு கரிகால் காணத்
தண்பதங் கொண்டு தவிர்ந்த இன்னிசை
ஒண்பொறிப் புனைகழல் சேவடிப் புரளக்
கருங்கச்சு யாத்த காண்பி னவ்வயிற்று
இரும்பொலம் பாண்டில் மணியொடு
தெளிர்ப்பப் 10 புனல்நயந் தாடு மத்தி அணிநயந்து
காவிரி கொண்டொளித் தாங்கு மன்னோ
நும்வயிற் புலத்தல் செல்லேம் எம்வயிற்
பசந்தன் று காண்டிசின் நுதலே அசும்பின்
அந்தூம்பு வள்ளை யழற்கொடி மயக்கி 15
வண்தோட்டு நெல்லின் வாங்குபீள் விரியத்
துய்த்தலை முடங்கிறாத் தெறிக்கும்
குரங்குளைப் புரவிக் குட்டுவன்

பொற்புடைக்.

மரந்தை யன்னவென் னலந்தந்து சென்மே.

காதற்பரத்தை புலந்து சொல்லியது.

## 1555. அகநானூறு - 386. மருதம்

பொய்கை நீர்நாய்ப் புலவுநா றிரும்போத்து
வாளை நாளிரை தேரு மூர
நாணினென் பெரும யானே பாணன்
மல்லடு மார்பின் வலியுற வருந்தி
5 எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்

நிறைத்திரள் முழவுத்தோள் கையகத் தொழிந்த
திறன்வேறு கிடக்கை நோக்கி நற்போர்க் ,

கணையன் நாணி யாங்கு மறையினள்
மெல்ல வந்து நல்ல கூறி
10 மையீ ரோதி மடவோய் யானும்நின்
சேரி யேனே அயலி லாட்டியேன்
நுங்கை யாகுவென் நினக்கெனத் தன்கைத்
தொடுமணி மெல்விரல் தண்ணெனத் தைவர
நுதலுங் கூந்தலும் நீவிப்
15 பகல்வந்து பெயர்ந்த வாணுதற் கண்டே.

தோழி வாயின்மறுத்தது ; தலைமகள்
தகுதிசொல்லியதூஉமாம்.

## 1556. அகநானூறு - 396. மருதம்

தொடுத்தேன் மகிழ்ந செல்லல் கொடித்தேர்ப்
பொலம்பூண் நன்னன் புன்னாடு கடிந்தென
யாழிசை மறுகிற் பாழி யாங்கண்
அஞ்ச லென்ற ஆஅ யெயினன்
5 இகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கித்
தன்னுயிர் கொடுத்தனன் சொல்லிய தமையாது
தெறலருங் கடவுள் முன்னர்த் தேற்றி
மெல்லிறை முன்கை பற்றிய சொல்லிறந்து
ஆர்வ நெஞ்சந் தலைத்தலை சிறப்பநின்
10 மார்புதரு கல்லாய் பிறனா யினையே
இனியான் விடுக்குவெ னல்லென் மந்தி
பனிவார் கண்ணள் பலபுலந் துறையக்
அடுந்திற லத்தி யாடணி நசைஇ
நெடுநீர்க் காவிரி கொண்டொளித் தாங்குநின் 15
மனையோள் வவ்வலும் அஞ்சுவல் சினைஇ
ஆரிய ரலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்
வஞ்சி யன்னவென் நலந்தந்து சென்மே.

காதற்பரத்தை தலைமகற்குச் சொல்லியது.

## 1557. குறுந்தொகை - 19. மருதம்

எவ்வி யிழந்த வறுமையர் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்று
இனைமதி வாழியர் நெஞ்சே மனைமரத்து
எல்லுறு மௌவல் நாறும்
5 பல்லிருங் கூந்தல் யாரளோ நமக்கே.

உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் சொல்லியது.



## 1558. குறுந்தொகை - 24. முல்லை

கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர்
என்னை யின்றியுங் கழிவது கொல்லோ
ஆற்றய லெழுந்த வெண்கோட் டதவத்து
எழுகுளிறு மிதித்த வொருபழம் போலக்
5 குழையக் கொடியோர் நாவே
காதல ரகலக் கல்லென் றவ்வே.

பருவங்கண்டு ஆற்றாளாகிய கிழத்தி யுரைத்தது.

## 1559. குறுந்தொகை - 36. குறிஞ்சி

துறுகல் லயலது மாணை மாக்கொடி
துஞ்சுகளி றிவருங் குன்ற நாடன்
நெஞ்சுகள னாக நீயலென் யானென

நற்றோள் மணந்த ஞான்றை மற்றவன்
5 தாவா வஞ்சின முரைத்தது
நோயோ தோழி நின்வயி னானே.

வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றாளெனக் கவன்று வேறுபட்ட தோழியைத் தலைமகள் ஆற்றுவித்தது.

## 1560. குறுந்தொகை - 60. குறிஞ்சி

குறுந்தாட் கூதளி யாடிய நெடுவரைப்
பெருந்தேன் கண்ட இருங்க[ா]ன் முடவன்
உட்கைச் சிறுகுடை கோலிக் கீழிருந்து
சுட்டுபு நக்கி யாங்குக் காதலர்
5 நல்கார் நயவா ராயினும்
பல்காற் காண்டலும் உள்ளத்துக் கினிதே.

பிரிவிடை ஆற்றாமையால் தலைமகள் தோழிக்கு உரைத்தது.

## 1561. குறுந்தொகை - 73. குறிஞ்சி

மகிழ்நன் மார்பே வெய்யை யால்நீ
அழியல் வாழி தோழி நன்னன்



நறுமா கொன்று நாட்டிற் போக்கிய
ஒன்றுமொழிக் கோசர் போல
5 வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே.

பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்ந்து அதுவும் மறுத்தமை படத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

## 1562. குறுந்தொகை - 89. மருதம்

பாவடி யுரல பகுவாய் வள்ளை
ஏதில் மாக்கள் நுவறலும் நுவல்ப
அழிவ தெவன்கொலிப் பேதை யூர்க்கே
பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்
5 கருங்கட் டெய்வங் குடவரை யெழுதிய
நல்லியற் பாவை யன்னஇம்
மெல்லியற் குறுமகள் பாடினள் குறினே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தன்னுள்ளே சொல்லு வாளாய்ச் சொல்லியது. தலைமகற்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லி வாயின் மறுத்ததூஉமாம்.

## 1563. குறுந்தொகை - 120. குறிஞ்சி

இல்லோன் இன்பங் காமுற் றாஅங்கு
அரிதுவேட் டனையால் நெஞ்சே காதலி

நல்ல ளாகுத லறிந்தாங்கு
அரிய ளாகுதல் அறியா தோயே.

அல்லகுறிப்பட்டு மீளுந் தலைமகன்

தன் நெஞ்சிற்குச் சொல்

லியது. இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த

தலைமகன் பிரிந்தவழிக்

கலங்கியதூஉமாம்.

**1564.** குறுந்தொகை - **128.** நெய்தல்
குணகடற் றிரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் தொண்டி
முன்றுறை
அயிரை யாரிரைக் கணவந் தாஅங்குச்
பரணர் 897

சேயள் அரியோட் படர்தி
5 நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே.
அல்லகுறிப்பட்டு மீளுந் தலைமகன் தன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லியது. 'உணர்ப்புவயின் வாரா ஊடற்கண்' தலைமகன் கூறியதூஉமாம்.

**1565.** குறுந்தொகை - **165.** குறிஞ்சி
மகிழ்ந்ததன் றலையும் நறவுண் டாங்கு
விழைந்ததன் றலையும் நீவெய் துற்றனை
இருங்கரை நின்ற உப்பொய் சகடம்
பெரும்பெயல் தலைய வீஇந் தாங்கிவள்
5 இரும்பல் கூந்த லியலணி கண்டே.
பின்னின்ற தலைமகன் மறுக்கப்பட்டுப் பெயர்த்தும் கூடலுறும் நெஞ்சிற்குச் சொல்லியது.

**1566.** குறுந்தொகை - **199.** குறிஞ்சி
பெறுவ தியையா தாயினும் உறுவதொன்று

உண்டுமன் வாழிய நெஞ்சே ,திண்டேர்க்
கைவள் ளோரி கானந் தீண்டி
எறிவளி கமழும் நெறிபடு கூந்தல்
5 மையீ ரோதி மாஅ யோள்வயின்
இன்றை யன்ன நட்பின் இந்நோய்
இறுமுறை யெனவொன் றின்றி

மறுமை யுலகத்து மன்னுதல் பெறினே.

தோழி செறிப்பறிவுறுப்ப நெஞ்சிற்குக் கிழவன் உரைத்தது.

**1567. குறுந்தொகை - 258. மருதம்**

வாரலெஞ் சேரி தாரல்நின் தாரே
அலரா கின்றாற் பெரும காவிரிப்
பலராடு பெருந்துறை மருதொடு பிணித்த
ஏந்துகோட்டு யானைச் சேந்தன் தந்தை





5 அரியலம் புகவி னங்கோட்டு வேட்டை
நிரைய வொள்வா ளிளையர் பெருமகன்
அமிசி யார்க்கா டன்னவிவள்

பழிதீர் மாணலந் தொலைவன கண்டே.

தோழி தலைமகற்கு வாயின் மறுத்தது; வாயில் நேர்ந்ததூஉமாம்.

## 1568. குறுந்தொகை - 292. குறிஞ்சி

மண்ணிய சென்ற ஒண்ணுத லரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
ஒன்பதிற் றொன்பது களிற்றோ டவள்நிறை
பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்
5 பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரையத்துச் செலீஇயரோ அன்னை

ஒருநாள், நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக வூரிற் றுஞ்சலோ விலளே.

தோழி இரவுக்குறிக்கண் சிறைப்புறமாகக் காப்புமிகுதி சொல்லியது.

## 1569. குறுந்தொகை - 298. குறிஞ்சி

சேரி சேர மெல்ல வந்துவந்து
அரிது வாய்விட் டினிய கூறி
வைகல் தோறும் நிலம்பெயர்ந் துறையுமவன்
பைதல் நோக்கம் நினையாய் தோழி
5 இன்கடுங் கள்ளின் அகுதை தந்தை
வெண்கடைச் சிறுகோல் அகவல் மகளிர்
மடப்பிடிப் பரிசில் மானப்

பிறிதொன்று குறித்ததவன் நெடும்புற நிலையே.

கிழத்திக்குத் தோழி குறைமறுமற் கூறியது.

**1570.** குறுந்தொகை - **328.** நெய்தல்

சிறுவீ ஞாழல் வேரளைப் பள்ளி
அலவன் சிறுமனை சிதையப் புணரி



குணில்வாய் முரசின் இரங்குந் துறைவன்
நல்கிய நாள்தவச் சிலவே அலரே
5 வில்கெழு தானை விச்சியர் பெருமகன்
வேந்தரொடு பொருத ஞான்றைப் பாணர்

புலிநோர் குறழ்நிலை கண்ட
கலிகெழு குறும்பூ ரார்ப்பினும் பெரிதே.

வரைவிடை வேறுபடுங் கிழத்தியை அவர் வரையும் நாள் அணித்து எனவும் அலரஞ்சல் எனவுங் கூறியது.

**1571.** குறுந்தொகை - **393.** மருதம்

மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்
முயங்கிய நாள்தவச் சிலவே அலரே
கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
பசும்பூட் பாண்டியன் வினைவ லதிகன்
5 களிறொடு பட்ட ஞான்றை
ஒளிறுவாட் கொங்க ரார்ப்பினும் பெரிதே.

தலைமகன் சிறைப்புறமாகத் தோழி அலர்
மலிவுரைத்து வரைவு கடாயது.

1572. குறுந்தொகை - 399. மருதம்

ஊருண் கேணி யுண்டுறைத் தொக்க
பாசி யற்றே பசலை காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்த லானே.

வரைவு நீட்டித்தவிடத்துத் தலைமகள் தோழிக்குச்
சொல்லி யது.

1573. நற்றிணை - 6. குறிஞ்சி

நீர்வள ராம்பற் றூம்புடைத் திரள்கால்
நாருரித் தன்ன மதனில் மாமைக்
குவளை யன்ன ஏந்தெழில் மழைக்கண்

திதலை யல்குற் பெருந்தோட் குறுமகட்கு
5 எய்தச் சென்று செப்புநர்ப் பெறினே
இவர்யா ரென்குவ னல்லன் முனாஅது
அத்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி

எறிமட மாற்கு வல்சி யாகும்
வல்வில் லோரி கானம் நாறி
10 இரும்பல் லொலிவரும் கூந்தல்
பெரும்பே துறுவள்யாம் வந்தன மெனவே.

இரவுக்குறிப்பாற்பட்டு ஆற்றுமைய தலைவன் தோழிகேட்பத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

## 1574. நற்றிணை - 100. மருதம்

உள்ளுதொறும் நகுவேன் தோழி வள்ளுகிர்
மாரிக் கொக்கின் கூரல கன்ன
குண்டுநீ ராம்பற் றண்டுறை யூரன்
தேங்கம ழைம்பால் பற்றி யென்வயின்
5 வான்கோ லெல்வளை வெளவிய பூசல்
சினவிய முகத்துச் சினவாது சென்றுநின்

மனையோட் குரைப்ப லென்றவின் மூனையூர்ப்
பல்லா நெடுநிரை வில்லி னொய்யுந்
தேர்வண் மலையன் முந்தைப் பேரிசைப்
10 புலம்புரி வயிரியர் நலம்புரி முழவின்
மண்ணார் கண்ணின் அதிரும்
நன்ன ராளன் நடுங்கஞர் நிலையே.

பரத்தை தலைவிக்குப் பாங்காயினர்கேட்ப விறலிக் குடம்படச் சொல்லியது.

**1575.** நற்றிணை - **201.** குறிஞ்சி மலையுறை

குறவன் காதல் மடமகள்
பெறலருங் குரையள் அருங்கடிக் காப்பினள்
சொல்லெதிர் கொள்ளாள் இளைய ளனையோள் உள்ளல்
கூடா தென்றோய் மற்றுஞ்

பரணர்



5 செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லித்
தெய்வங் காக்குந் தீதுதீர் நெடுங்கோட்டு
அவ்வெள் ளருவிக் குடவரை யகத்துக்
கால்பொரு திடிப்பினுங் கதழுறை கடுகினும்
உருமுடன் றெறியினும் ஊறுபல தோன்றினும்
10 பெருநிலங் கிளரினுந் திருநல வுருவின்
மாயா வியற்கைப் பாவையிற்
போத லொல்லாளென் னெஞ்சத் தானே.

கழறிய பாங்கற்குத் தலைமகன் சொல்லியது.

## 1576. நற்றிணை - 247. குறிஞ்சி

தொன்றுபடு துப்பொடு முரண்மிகச் சினைஇக்
கொன்ற யானைச் செங்கோடு கழாஅ
அழிதுளி பொழிந்த இன்குர லெழிலி
எஃகுறு பஞ்சிற் றாகி வைகறைக்
5 கோடுயர் நெடுவரை யாடும் நாடநீ
நல்கா யாயினும் நயனில செய்யினும்
நின்வழிப் படூஉமென் தோழி நன்னுதல்
இருந்திறை கூடிய பசலைக்கு
மருந்துபிறி தின்மைநற் கறிந்தனை சென்மே.

நீட்டியாமை வரை யெனத் தோழி சொல்லியது.

## 1577. நற்றிணை - 260. மருதம்

கழுநீர் மேய்ந்த கருந்தா ளெருமை
பழனத் தாமரைப் பனிமலர் முணைஇத்
தண்டுசேர் மள்ளரின் இயலி யயலது
குன்றுசேர் வெண்மணற் றுஞ்சு மூர
5 வெய்யை போல முயங்குதி முனையெழத்
தெவ்வர்த் தேய்த்த செவ்வேல் வயவன்
மலிபுனல் வாயி லிருப்பை யன்னவென்
ஒலிபல் கூந்தல் நலம்பெறப் புனைந்த



முகையவிழ் கோதை வாட்டிய
10 பகைவன் மன்யான் மறந்தமை கலனே.

ஊடல் மறுத்த தலைமகள் சொல்லியது.

## 1578. நற்றிணை - 265. குறிஞ்சி

இருங்கழை மேய்ந்த அறுகோட்டு முற்றல்
அள்ள லாடிய புள்ளி வரிக்கலை
வீளை யம்பின் வில்லோர் பெருமகன்
பூந்தோள் யாப்பின் மிஞிலி காக்கும்
5 பாரத் தன்ன வார மார்பிற்
சிறுகோற் சென்னியர் சேற றன்ன
மாரி வண்மகி ழோரி கொல்லிக்
கலிமயிற் கலாவத் தன்னவிவள்
ஒலிமென் கூந்தல் நம்வயி னானே.

பின்னின்ற தலைமகன் நெஞ்சிற்குரைத்தது.

## 1579. நற்றிணை - 270. நெய்தல்

தடந்தாட் டாழைக் குடம்பை நோனாத்
தண்டலை கமழும் வண்டுபடு நாற்றத்து
இருள்புரை கூந்தற் பொங்குதுக ளாடி
உருள்பொறி போல எம்முனை வருதல்
5 அணித்தகை யல்லது பிணித்தல் தேற்றாப்
பெருந்தோட் செல்வத் திவளினும் எல்லா
எற்பெரி தளித்தனை நீயே பொற்புடை
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வேந்த ரோட்டிய ஏந்துவேல் நன்னன்
10 கூந்தல் முரற்சியிற் கொடிதே

மறப்பல் மாதோநின் விறற்றகை மையே.

தோழி வாயினேர்கின்றாள் தலைமகனை நெருங்கிச் சொல்லி வாயிலெதிர்கொண்டது : உடனிலைக் கிளவி வகையால்.

பரணர் 

**1580. நற்றிணை - 280. மருதம்**

கொக்கினுக் கொழிந்த தீம்பழங் கொக்கின் கூம்புநிலை
யன்ன முகைய ஆம்பற்
றூங்குநீர்க் குட்டத்துத் துடுமென வீழுந் தண்டுறை
யூரன் தண்டாப் பரத்தமை
5 புலவா யென்றி தோழி புலவேன்
பழன யாமைப் பாசறைப் புறத்துக்
கழனி காவலர் சுரிநந் துடைக்குந்
தொன்றுமுதிர் வேளிர் குன்றூ ரன்னவென்
நன்மனை நனிவிருந் தயருங்
10 கைதூ வின்மையின் எய்தா மாறே.

வாயில் வேண்டிச் சென்ற தோழிக்குத் தலைமகள் மறுத்து மொழிந்தது ; தலைமகனை ஏற்றுக்கொண்டு வழிபட்டாளைப் புகழ்ந்து புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

**1581. நற்றிணை - 300. மருதம்**

சுடர்த்தொடிக் கோமகள் சினக்தென
அதனெதிர்
மடத்தகை யாயங் கைதொழு தாஅங்கு
உறுகா லொற்ற வொல்கி யாம்பல்
5

தாமரைக் கிறைஞ்சுந் தண்டுறை யூரன்
சிறுவளை விலையெனப் பெருந்தேர் பண்ணியெம்
மூன்கடை நிறீஇச் சென்றிசி னோனே
நீயும், தேரொடு வந்து பேர்தல் செல்லாது
நெய்வார்ந் தன்ன துய்யடங்கு நரம்பின்
இரும்பா ணொக்கற் றலைவன் பெரும்புண் 10
ஏளர் தழும்ப னூணூ ராங்கண்
பிச்சைசூழ் பெருங்களிறு போலவெம்
அட்டி லோலை தொட்டனை நின்மே.
வாயின் மறுத்தது. வரைவுகடாயதூஉமாம் ; மாற்றோர்
கொது மலாளர் வரைவின் மேலிட்டு.



1582. நற்றிணை - 310. மருதம்
விளக்கி னன்ன சுடர்விடு தாமரைக்
களிற்றுச்செவி யன்ன பாசடை தயங்க
உண்டுறை மகளி ரிரியக் குண்டுநீர்

வாளே பிறழு மூரற்கு நாளே
5 மகட்கொடை யெதிர்ந்த மறங்கெழு

பெண்டே
தொலைந்த நாவின் உலைந்த குறுமொழி
உடன்பட் டோராத் தாயரொ டொழிபுடன்
சொல்லலை கொல்லோ நீயே வல்லைக்
களிறுபெறு வல்சிப் பாணன் கையதை
10 வள்ளுயிர்த் தண்ணுமை போல
உள்யாது மில்லதோர் பொய்படு சொல்லே.

வாயிலாகப்புக்க விறலியைத் தோழி சொல்லியது;
விறலியை எதிர்ப்பட்ட பரத்தை சொல்லியதூஉமாம்.

**1583.** நற்றிணை **350.** மருதம்

வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇப்
பழனப் பல்புள் இரியக் கழனி
வாங்குசினை மருதத் தூங்குதுணை ருதிரும்
தேர்வண் விராஅ னிருப்பை யன்னவென்
5 தோள்கவின் தொலையினுந் தொலைக சார
விடேஎன் விடுக்குவெ ளுயிற் கடைஇக்
கவவுக்கை தாங்கு மதுகையங் குவவுமுலை
சாடிய சாந்தினை வாடிய கோதையை
ஆசில் கலங்கழீஇ யற்று
10 வாரல் வாழிய கவைஇநின் றோளே.

தலைமகள் ஊடல் மறுத்தாள் சொல்லியது.

**1584.** நற்றிணை - **356.** குறிஞ்சி

நிலந்தாழ் மருங்கிற் றென்கடல் மேய்ந்த
விலங்குமென் றூவிச் செங்கா லன்னம்



பொன்படு நெடுங்கோட் டிமையத் துச்சி
வானர மகளிர்க்கு மேவ லாகும்
5 வளராப் பார்ப்பிற் கல்கிரை யொய்யும்
அசைவில் நோன்பறை போலச் செலவர
வருந்திணை வாழியென் னுள்ள மொருநாட்
காதலி யுழைய ளாகக்
குணக்குத் தோன்று வெள்ளியின் எமக்குமார் வருமே.

வரைவு மறுக்கப்பட்டு ஆற்றானாகிய தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

**1585—1594.** பதிற்றுப்பத்து - ஐந்தாம் பத்து.

**41—50** 1585. புணர்புரி நரம்பின் தீந்தொடை பழுனிய
வணரமை நல்யாழ் இளையர் பொறுப்பப்
பண்ணமை முழவும் பதலையும் பிறவும்
கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கிக்
5 காவிற் றகைத்த துறைகூடு கலப்பையர்

கைவ லிளையர் கடவுட் பழிச்ச
மறப்புலிக் குழூஉக்குரல் செத்து வயக்களிறு
வரைசேர் பெழுந்த சுடர்வீ வேங்கைப்
பூவுடைப்
10 மாயிருஞ்

பெருஞ்சினை வாங்கிப் பிளந்துதன்
சென்னி யணிபெற மிலைச்சிச்
சேஎ ரூற்ற செல்படை மறவர்
தண்டுடை வலத்தர் போரெதிர்ந் தாங்கு
வழையமல் வியன்காடு சிலம்பப் பிளிறும்
மழைபெயல் மாறிய கழைதிரங் கத்தம்
15 ஒன்றிரண் டலபல கழிந்து திண்தேர்
வசையில் நெடுந்தகை காண்குவந் திசினே
தாவ லுய்யுமோ மற்றே தாவாது
வஞ்சின முடித்த ஒன்றுமொழி மறவர்
முரசுடைப் பெருஞ்சமத் தரசுபடக் கடந்து
20 வெவ்வ ரோச்சம் பெருகத் தெவ்வர்
மிளகெறி யுலக்கையின் இருந்தலை யிடித்து
வைகார்ப் பெழுந்த மைபடு பரப்பின்



எடுத்தே றேய கடிப்புடை வியன்கண்
வலம்படு சீர்த்தி யொருங்குட னியைந்து
25 காலுளைக் கடும்பிசி ருடைய வாலுளைக்
கடும்பரிப் புரவி யூர்ந்தநின்
படுந்திரைப் பனிக்கட லுழந்த தாளே.

துறை - காட்சிவாழ்த்து. வண்ணம் - ஒழுகுவண்ணம்.
தூக்கு - செந்தூக்கு. பெயர் - சுடர்வீவேங்கை.

1586. இரும்பனம் புடைய லீகை வான்கழல்
மீன்தேர் கொட்பிற் பனிக்கய மூழ்கிச்
சிரல்பெயர்ந் தன்ன நெடுவெள் ளூசி
நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்
5 அம்புசே ருடம்பினர்ச் சேர்ந்தோ ரல்லது
தும்பை சூடாது மலைந்த மாட்சி
அன்னோர் பெரும நன்னுதல் கணவ
அண்ணல் யானை யடுபோர்க் குட்டுவ
மைந்துடை நல்லமர்க் கடந்து வலந்தரீஇ
10 இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டிச்
சாந்துபுறத் தெறிந்த தசும்புதுளங் கிருக்கைத்
தீஞ்சே றுவிளைந்த மணிநிற மட்டம்
ஓம்பா ஈகையின் வண்மகிழ் சுரந்து
கோடியர் பெருங்கிளை வாழ ஆடியல்
15 உளையவிர் கலிமாப் பொழிந்தவை யெண்ணின்
மன்பதை மருள அரசுபடக் கடந்து
முந்துவினை யெதிர்வரப் பெறுதல் காணியர்
ஒளிறுநிலை யுயர்மருப் பேந்திய களிறூர்ந்து
மான மைந்தரொடு மன்ன ரேத்தநின்
20

தேரொடு சுற்ற மூலகுடன் மூய
மாயிருந் தெண்கடல் மலிதிரைப் பௌவத்து

வெண்டலைக் குரூஉப்பிசி ருடையத்
தண்பல வரூஉம் புணரியிற் பலவே.

42

துறை - செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - தசும்புதுளங்கிருக்கை.



1587. கவரி முச்சிக் கார்விரி கூந்தல்
ஊசல் மேவற் சேயிழை மகளிர்
உரல்போற் பெருங்கா லிலகுவாள் மருப்பிற்
பொருங்கை மதமாப் புகுதரின் அவற்றுள்
5 விருந்தின் வீழ்பிடி யெண்ணுமுறை பெறாஅக்
கடவுள் நிலைய கல்லோங்கு நெடுவரை
வடதிசை யெல்லை யிமய மாகத்
தென்னங் குமரியொ டாயிடை யரசர்
10 முரசுடைப் பெருஞ்சமந் ததைய ஆர்ப்பெழச்
சொல்பல நாட்டைத் தொல்கவி னழித்த

போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ
இரும்பணை திரங்கப் பெரும்பெய லொளிப்பக்
குன்றுவறங் கூரச் சுடர்சினந் திகழ
அருவி யற்ற பெருவறற் காலையும்
15 அருஞ்செலற் பேராற் றிருங்கரை யுடைத்துக்
கடியேர் பூட்டுநர் கடுக்கை மலைய
வரைவி லதிர்சிலை முழங்கிப் பெயல்சிறந்து
ஆர்கலி வானந் தளிசொரிந் தாஅங்கு
உறுவ ரார ஓம்பா துண்டு
20 நகைவ ரார நன்கலஞ் சிதறி
ஆடுசிறை யறுத்த நரம்புசே ரின்குரற்
பாடு விறலியர் பல்பிடி பெறுக
துய்வீ வாகை நுண்கொடி யுழிஞை
வென்றி மேவ லுருகெழு சிறப்பிற்
25 கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக
மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்குக்
கண்டி நுண்கோல் கொண்டுகளம்
வாழ்த்தும்
அகவலன் பெறுக மாவே யென்றும்
இகல்வினை மேவலை யாகலிற் பகைவருந்
30 தாங்கா து புகழ்ந்த தூங்குகொளை முழவின்
தொலையாக் கற்பநின் னிலைகண் டிகுமே
நிணஞ்சுடு புகையொடு கனல்சினந் தவிராது
நிரம்பகல் பறியா ஏறு வேணி

நிறைந்து நெடிதிராத் தசும்பின் வயிரியர் 35
உண்டெனத் தவாஅக் கள்ளின்
வண்கை வேந்தேநின் கலிமகி ழானே.
43

துறை - இயன்மொழிவாழ்த்து. வண்ணமுந் தூக்கும் அது. பெயர் - எருவேணி.

1588. நிலம்புடைப் பன்ன ஆர்ப்பொடு
விசும்புதுடையூ வான்தோய் வெல்கொடி
தேர்மிசை நுடங்கப்
பெரிய வாயினும் அமர்கடந்து பெற்ற
அரிய வென்னாது ஓம்பாது வீசிக்
5 கலஞ்செலச் சுரத்த லல்லது கனினுங்
களைகென அறியாக் கசடில் நெஞ்சத்து
ஆடுநடை யண்ணனிற் பாடுமகள் காணியர்
காணி லியரோநிற் புகழ்ந்த யாக்கை
முழுவலி துஞ்சு நோய்தபு நோன்றொடை

10 நுண்கொடி யுழிஞை வெல்போ ரறுகை
சேண னாயினுங் கேளென மொழிந்து
புலம்பெயர்ந் தொளித்த களையாப் பூசற்கு
அரண்கள் தாவுறீஇ யணங்குநிகழ்ந் தன்ன
மோகூர் மன்னன் முரசங் கொண்டு
15 நெடுமொழி பணித்தவன் வேம்புமுதல் தடிந்து
முரசுசெய முரச்சிக் களிறுபல பூட்டி
ஒழுகை யுய்த்த கொழுவில் பைந்துணி
வைத்தலை மறந்த துய்த்தலைக் கூகை
கவலை கவற்றுங் குராலம் பறந்தலை
20 முரசுடைத் தாயத் தரசுபல வோட்டித்
துளங்குநீர் வியலகம் ஆண்டினிது கழிந்த
மன்னர் மறைத்த தாழி
வன்னி மன்றத்து விளங்கிய காடே.

44

துறை - செந்துறைப்பாடாண் பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - நோய்தபுநோன்றொடை.

1589. பொலம்பூந் தும்பைப் பொறிகிளர் தூணிப்
புற்றடங் கரவின் ஒடுங்கிய அம்பின்
ஓசிவுடை வில்லி ஞெசியா நெஞ்சிற்
களிறெறிந்து முரிந்த கதுவா யெஃகின்
5 விழுமியோர் துவன்றிய அகன்க ணாட்பின்
எழுமுடி மார்பி னெய்திய சேரல்
குண்டுக ணகழிய மதில்பல கடந்து
பண்டும் பண்டுந்தாம் உள்ளழித் துண்ட
நாடுகெழு தாயத்து நனந்தலை யருப்பத்துக்
10 கதவங் காக்குங் கணையெழு வன்ன
நிலம்பெறு திணிதோ ளுயர வோச்சிப்
பிணம்பிறங் கழுவத்துத் துணங்கை யாடிச்
சோறுவே றென்னா ஊன்றுவை யடிசில்

ஓடாப் பீட ருள்வழி யிறுத்து
15 முள்ளிடு பறியா ஏணித் தெவ்வர்
சிலைவிசை யடக்கிய மூரி வெண்தோல்
அனைய பண்பிற் றானை மன்னர்
இனியா ருளரோநின் முன்னு மில்லை
மழைகொளக் குறையாது புனல்புக
நிறையாது
20

விலங்குவளி கடவுந் துளங்கிருங் கமஞ்சூல்
வயங்குமணி யிமைப்பின் வேலிடுபு
முழங்குதிரைப் பனிக்கடல் மறுத்திசி
னோரே. 45

இது வு ம து. பெயர் - ஊன் றவையடிசில்,

1590. இழையர் குழையர் நறுந்தண் மாலையர்
சுடர்நிமி ரவிர்தொடி செறித்த முன்கைத்
திறல்விடு திருமணி யிலங்கு மார்பின்

வண்டுபடு கூந்தல் முடிபுனை மகளிர்
5 தொடைபடு பேரியாழ் பாலை பண்ணிப்

பணியா மரபின் உழிஞை பாட
இனிதுபுறந் தந்தவர்க் கின்மகிழ் சுரத்தலிற்

சுரம்பல கடவுங் கரைவாய்ப் பருதி
ஊர்பாட் டெண்ணில் பைந்தலை துமியப்



10 பல்செருக் கடந்த கொல்களிற் றியானைக்
கோடுநரல் பௌவங் கலங்க வேலிட்டு
உடைதிரைப் பரப்பிற் படுகட லோட்டிய

வெல்புகழ்க் குட்டுவற் கண்டோர்
செல்குவ மென்னார் பாடுபு பெயர்ந்தே.

46 இதுவு மது. பெயர் - கரைவாய்ப்பருதி.

1591. ஆட்டா னேனே குட்டுவன் அடுதொறும்
பெற்றா னேரே பரிசிலர் களிறே
5

வரைமிசை யிழிதரும் அருவியின் மாடத்து
வளிமுனை யவிர்வருங் கொடி நுடங்கு தெருவிற்
சொரிசுரை கவரும் நெய்வழி புராலிற்

பாண்டில் விளக்குப் பரூஉச்சுட ரழல
நன்னுதல் விறலியர் ஆடுந்
தொன்னகர் வரைப்பினவ னுரையா னவே.

47

இதுவு மது. பெயர் - நன்னுதல்விறலியர்.

1592. பைம்பொற் றாமரை பாணர்ச் சூட்டி
ஒண்ணுதல் விறலியர்க் காரம் பூட்டிக்
கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக்
கடலொ டுழந்த பனித்துறைப் பரதவ
5 ஆண்டுநீர்ப் பெற்ற தாரம் ஈண்டிவர்
கொள்ளாப் பாடற் கெளிதினின் ஈயுங்

கல்லா வாய்மைய னிவனெனத் தத்தங்
கைவ லிளையர் நேர்கை நிரைப்ப
வணங்கிய சாயல் வணங்கா வாண்மை
10

முனைசுடு கனையெரி யெரித்தலிற் பெரிதும்
இதழ்கவி னழிந்த மாலையொடு சாந்துபுலர்
பல்பொறி மார்பநின் பெயர்வா ழியரோ
நின்மலைப் பிறந்து நின்கடல் மண்டு
15

மலிபுனல் நிகழ்தருந் தீநீர் விழவிற்
பொழில்வதி வேனிற் பேரெழில் வாழ்க்கை
மேவரு சுற்றமோ டுண்டினிது நுகரும் பரணர்

911

தீம்புன லாய மாடுங்
காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே.
48

துறை - இயன்மொழி வாழ்த்து. வண்ணமும்
தூக்கும் அது. பெயர் - பேரெழில் வாழ்க்கை.

1593. யாமுஞ் சேறுகம் நீயிரும் வம்மின்
துயலுங் கோதைத் துளங்கியல் விறலியர்
கொளைவல் வாழ்க்கைநுங் கிளேயினி
துணீஇயர். களிறுபரந் தியலக் கடுமா
தாங்க
5 ஒளிறுகொடி நுடங்கத் தேர்திரிந்து
கொட்ப
எஃகுதுரந் தெழுதருங் கைகவர் கடுந்தார்
வெல்போர் வேந்தரும் வேளிரு மொன்றுமொழிந்து
மொய்வளஞ் செருக்கி மொசிந்துவரு மோகூர்
வலம்படு குழூஉநிலை யதிர மண்டி
10 நெய்த்தோர் தொட்ட செங்கை மறவர்
நிறம்படு குருதி நிலம்படர்ந் தோடி
மழைநாட் புனலின் அவற்பரந் தொழுகப்
படுபிணம் பிறங்கப் பாழ்பல செய்து
படுகண் முரசம் நடுவட் சிலைப்ப
15 வளனற நிகழ்ந்து வாழுநர் பலர்படக்
கருஞ்சினை விறல்வேம் பறுத்த
பெருஞ்சினக் குட்டுவற் கண்டனம்
வரற்கே. 49

துறை - விறலியாற்றுப்படை. வண்ணமும்
தூக்கும் அது.

பெயர் - செங்கைமறவர்.

1594. மாமலை முழக்கின் மான்கணம் பனிப்பக்

கான்மயங்கு கதழுறை யாலியொடு சிதறிக்
கரும்பமல் கழனிய நாடுவளம் பொழிய
வளங்கெழு சிறப்பி னுலகம் புரைஇச்

5

செங்குணக் கொழுகுங் கலுழி மலிர்நிறைக்
காவிரி யன்றியும் பூவிரி புனலொரு
மூன்றுடன் கூடிய கூட லனையை



கொல்களிற்று, உரவுத்திரை பிறழ அவ்வில்
பிசிரப்
புரைதொல் வரைப்பின் எஃகுமீ னவிர்வர
10 விரவுப்பணை முழங்கொலி வெரீஇய
வேந்தர்க்கு
அரண மாகிய வெருவரு புனற்றார்
கல்மிசை யவ்வுங் கடலவும் பிறவும்
அருப்ப மமைஇய அமர்கடந் துருத்த
வாள்மலி மருங்கின் நாடகப் படுத்து
15 நல்லிசை நனந்தலை யிரிய வொன்னார்

உருப்பற நிரப்பினை யாதலிற் சாந்துபுலர்பு
வண்ணம் நீவி வகைவனப் புற்ற

வரிஞிமி றிமிரு மார்புபிணி மகளிர்
விரிமென் கூந்தல் மெல்லணை வதிந்து
20

கொல்பிணி திருகிய மார்புகவர் முயக்கத்துப்
பொழுதுகொள் மரபின் மென்பிணி யவிழ
எவன்பல கழியுமோ பெரும பன்னாள்
பகைவெம் மையிற் பாசறை மரீஇப்
பாடரி தியைந்த சிறுதுயி லியலாது
25 கோடுமுழங் கிமிழிசை யெடுப்பும்
பீடுகெழு செல்வ மரீஇய கண்ணே.

50

துறை - வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகு வண்ணமும் சொற்சீர் வண்ணமும். தூக்கு - செந்தூக்கு. பெயர்வெருவருபுனற்றார்.

**1594-a.** பதிகம்

வடவ ருட்கும் வான்றோய் வெல்கொடிக்
குடவர் கோமான் நெடுஞ்சேர லாதற்குச்
சோழன் மணக்கிள்ளி யீன்ற மகன்

கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டிக்
5 கானவில் கானங் கணையிற் போகி
ஆரிய வண்ணலை வீட்டிப் பேரிசை
இன்ப லருவிக் கங்கை மண்ணி
இனந்தெரி பல்லான் கன்றொடு கொண்டு
மாறா வல்வில் இடும்பிற் புறத்திறுத்து

பரணர் 913

10 உறுபுலி யன்ன வயவர் வீழச்
சிறுகுரல் நெய்தல் வியலூர் நூறி
அக்கரை நண்ணிக் கொடுகூ ரெறிந்து
பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின்
முரரை முழுமுதல் துமியப் பண்ணி
15 வாலிழை கழித்த நறும்பல் பெண்டிர்

பல்லிருங் கூந்தல் முரற்சியாற்
குஞ்சர வொழுகை பூட்டி வெந்திறல்

ஆராச் செருவிற் சோழர்குடிக் குரியோர்
ஒன்பதின்மர் வீழ வாயிற்புறத் திறுத்து

20 நிலைச் செருவி னாற்றலை யறுத்துக்
கெடலருந் தானையொடு
கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவனைக்
கரணம் அமைந்த காசறு செய்யுட்

பரணர் பாடினர் பத்துப்பாட்டு.

அவைதாம் : சுடர்வீ வேங்கை, தசும்புதுளங்கிருக்கை, ஏறா வேணி, நோய்தபுநோன்றொடை, ஊன்றுவையடிசில், கரைவாய்ப் பருதி, நன்னுதல் விறலியர், பேரெழில்வாழ்க்கை, செங்கைமறவர், வெருவருபுனற்றார். இவை பாட்டின்பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில் : உம்பற்காட்டுவாரியையும் தன்மகன் குட்டுவன் சேரலையுங் கொடுத்தான் அக்கோ. கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன் ஐம்பத்தையாண்டு வீற்றிருந்தான்.

## 1595. புறநானூறு - 4.

வாள், வலந்தர மறுப்பட்டன -
செவ்வானத்து வனப்புப்போன்றன
தாள், களங்கொளக் கழல்பறைந்தன
கொல்லேற்றின் மருப்புப்போன்றன
5 தோல், துவைத்தம்பிற் றுளைதோன்றுவ
நிலைக்கொராஅ இலக்கம்போன்றன
மாவே, எறிபதத்தான் இடங்காட்டக்
கறுழ்பொருத செவ்வாயான்

58

எருத்துவவ்விய புலிபோன்றன
10 களிறு, கதவெறியாச் சிவந்துராஅய்
நுதிமழுங்கிய வெண்கோட்டான்
உயிருண்ணுங் கூற்றுப்போன்றன
நீயே, அலங்குளைப் பரீஇயிவுளிப்
பொலந்தேர்மிசைப் பொலிவுதோன்றி
15 மாக்கடல் நிவந்தெழுதருஞ்
செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ
அனையை யாகன் மாறே
தாயில் தூவாக் குழவி போல
ஓவா தகூஉம்நின் உடற்றியோர் நாடே.

திணை - வஞ்சி ; துறை - கொற்றவள்ளை.

சோழன் உருவப்பஃறேரிளஞ்சேட் சென்னியைப் பாடியது.

**1596.** புறநானூறு - **63.**

எனைப்பல் யானையும் அம்பொடு துளங்கி
விளைக்கும் வினையின் றிப் படையொழிந் தனவே
விறற்புகழ் மாண்ட புரவி யெல்லாம்
மறத்தகை மைந்தரொ டாண்டுப்பட் டனவே
5 தேர்தர வந்த சான்றோ ரெல்லாந்
தோல்கண் மறைப்ப ஒருங்குமாய்ந் தனரே
விசித்துவினை மாண்ட மயிர்க்கண் முரசம்
பொறுக்குந ரின்மையின் இருந்துவிளிந் தனவே
சாந்தமை மார்பில் நெடுவேல் பாய்ந்தென
10 வேந்தரும் பொருதுகளத் தொழிந்தனர் இனியே
என்னா வதுகொல் தானே கழனி
ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
பாசவல் முக்கித் தண்புனற் பாயும்
யாண ரறாஅ வைப்பிற்
15 காமர் கிடக்கையவ ரகன்றலை நாடே. திணை -
தும்பை ; துறை - தொகைநிலை.

## பரணர் 915

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃ றடக்கைப் பெருவிறற் கிள்ளியும் போர்ப்புறத்துப் பொருது வீழ்ந் தாரை அக்களத்திற் பாடியது.

## 1597. புறநானூறு - 141.

பாணன் சூடிய பசும்பொற் றாமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
ஊரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
5 யாரீ ரோவென வினவ லானாக்
காரெ ணுக்கற் கடும்பசி யிரவல
வென்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியேம் மன்னே இனியே
இன்னே மாயினேம் மன்னே என்றும்
10 உடாஅ போரா வாகுத லறிந்தும்
படாஅ மஞ்ஞைக் கீத்த எங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன்
எத்துணை யாயினும் ஈத்தல் நன்றென
மறுமை நோக்கின்றோ அன்றே
15 பிறர், வறுமை நோக்கின்றவன் கைவண்
மையே.

திணை - பாடாண்டிணை ; துறை - பாணாற்றுப்படை, புலவ ராற்றுப் படையுமாம். வையாவிக்கோப் பெரும்பேகனைப் பாடியது.

## 1598. புறநானூறு - 142.

அறுகுளத் துகுத்தும் அகல்வயற் பொழிந்தும்
உறுமிடத் துதவா துவர்நிலம் ஊட்டியும்
வரையா மரபின் மாரி போலக்

கடாஅ யானைக் கழற்காற் பேகன்
5 கொடைமடம் படுத லல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே.

திணை.- பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
வையாவிக்கோப் பெரும்பேகனைப் பாடியது.



## 1599. புறநானூறு - 144.

அருளா யாகலோ கொடிதே இருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக
நீனறு நெய்தலிற் பொலிந்த வுண்கண்
5 கலுழ்ந்துவா ரரிப்பனி பூணகம் நனைப்ப
இனைத லானா ளாக இளையோய்
கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென
யாந்தற் றொழுதனம் வினவக் காந்தள்
முகைபுரை விரலிற் கண்ணீர் துடையா
10 யாமவன் கிளைஞரே மல்லேம் கேளினி
எம்போ லொருத்தி நலனயந் தென்றும்
வரூஉ மென்ப வயங்குபுகழ்ப் பேகன்
ஒல்லென வொலிக்குந் தேரொடு
முல்லை வேலி நல்லூ ரானே.

திணை - பெருந்திணை ; துறை - குறுங்கலி,

தாபதநிலையுமாம்.

வையாவிக்கோப் பெரும்பேகனைக் கண்ணகி காரணமாகப் பாடியது.

## 1600. புறநானூறு - 145.

மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக
பசித்தும் வாரேம் பாரமும் இலமே
5 களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி
அறஞ்செய் தீமோ அருள்வெய் யோயென
இஃதியா மிரந்த பரிசிலஃது இருளின்
இனமணி நெடுந்தே ரேறி
10 இன்னா துறைவி யரும்படர் களைமே.

திணை - பெருந்திணை ; துறை - குறுங்கலி,
தாபதநிலையுமாம்.

வையாவிக்கோப் பெரும்பேகனைக் கண்ணகி காரணமாகப் பாடியது.



## 1601. புறநானூறு - 336.

வேட்ட வேந்தனும் வெஞ்சினத் தினனே

கடவன கழிப்பிவள் தந்தையுஞ் செய்யான்
ஒளிறுமுகத் தேந்திய வீங்குதொடி மருப்பிற்
களிறுங் கடிமரஞ் சேரா சேர்ந்த
5 ஒளிறுவேல் மறவரும் வாய்மூழ்த் தனரே
இயவரும் அறியாப் பல்லியங் கறங்க
அன்னோ, பெரும்பே தூற்றன்றிவ் வருங்கடி மூதூர்
அறனிலள் மன்ற தானே விறல்மலை
வேங்கை வெற்பின் விரிந்த கோங்கின்
10 முகைவனப் பேந்திய முற்றா இளமுலைத்
தகைவளர்த் தெடுத்த நகையொடு
பகைவளர்த் திருந்தவிப் பண்பில் தாயே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

## 1602. புறநானூறு - 341.

வேந்து குறையுறவுங் கொடாஅன்
ஏந்துகோட்டு

அம்பூந் தொடலை யணித்தழை யல்குற்
செம்பொறிச் சிலம்பி னிளையோள் தந்தை
எழுவிட் டமைத்த திண்ணிலைக் கதவின்
5 அரைமண் ணிஞ்சி நாட்கொடி நுடங்கும்
... ... ...
புலிக்கணத் தன்ன கடுங்கட் சுற்றமொடு
மாற்ற மாறான் மறலிய சினத்தன்
பூக்கோ ளென ஏஎய்க் கயம்புக் கனனே 10
விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்

சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
மணம்புகு வைகல் ஆகுத லொன்றோ
ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பின்
நீளிலை யெஃக மறுத்த வுடம்பொடு

15 வாரா வுலகம் புகுத லொன்றெனப்
படைதொட் டனனே குருசில் ஆயிடைக்



களிறுபொரக் கலங்கிய தண்கயம் போலப்
பெருங்கவின் இழப்பது கொல்லோ
மென்புனல் வைப்பினித் தண்பணை யூரே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

## 1603. புறநானூறு - 343.

மீனொடுத்து நெற்குவைஇ
மிசையம்பியின் மனைமறுக்குந்து
மனைக்குவைஇய கறிமூடையாற்

கலிச் சும்மைய கரைகலக்குறுந்து
5 கலந்தந்த பொற்பரிசங்

கழித்தோணியாற் கரைசேர்க்குந்து
மலைத்தாரமுங் கடற்றாரமுந்
தலைப்பெய்து வருநர்க்கீயும்
புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்
10 முழங்குகடல் முழவின் முசிறி யன்ன
நலஞ்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்
புரைய ரல்லோர் வரையல ளிவளெனத்
தந்தையுங் கொடாஅ னாயின் வந்தோர்
வாய்ப்பட இறுத்த வெணி யாயிடை
15 வருந்தின்று கொல்லோ தானே பருந்துயிர்த்து
இடைமதிற் சேக்கும் புரிசைப்
படைமயங் காரிடை நெடுந லூரே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

## 1604. புறநானூறு - 348.

வெண்ணெல் லரிஞர் தண்ணுமை வெரீஇக்
கண்மடற் கொண்ட தீந்தேன் இரியக்
கள்ளரிக்குங் குயஞ் சிறுசின்
மீன்சீவும் பாண்சேரி
5 வாய்மொழித் தழும்பன் ஊணூ ரன்ன
குவளை யுண்க ணிவளைத் தாயே

ஈனு ளாயின ளாயின் ஆனுது
நிழல்தொறும் நெடுந்தேர் நிற்ப வயின்தொறும்
செந்நுதல் யானை பிணிப்ப
10 வருந்தல மன்னெம் பெருந்துறை மரனே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

## 1605. புறநானூறு - 352.

தேஎங்கொண்ட வெண்மண்டையான்
வீ... ... ...கறக்குந்து
அவல்வகுத்த பசுங்குடையாற்
புதல்முல்லைப் பூப்பறிக்குந்து
5 ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
குன்றேறிப் புனற்பாயிற்
புறவாயர்ற புன்லவள... ...
... ...நொடைநறவின்
மாவண் தித்தன் வெண்ணெல் வேலி
10 உறந்தை யன்ன உரைசால் நன்கலங்

கொடுப்பவுங் கொளாஅ னெ... ...
... ...ர்தந்த நாகிள வேங்கையிற்
கதிர்த்தொளி திகழும் நுண்பல் சுணங்கின்
மாக்கண் மலர்ந்த முலையள் தன்னையுஞ்
15 சிறுகோ லுளையும் புரவிெ... ...
... ... ...யமரே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

1606. புறநானூறு - 354.

அரைசு தலைவரினு மடங்க லானா

நிரைகா ழெஃகம் நீரின் மூழ்கப்
புரையோர் சேர்ந்தெனத் தந்தையும் பெயர்க்கும்
வயல்மர் கழனி வாயிற் பொய்கைக்
5 கயலார் நாரை யுகைத்த வாளை
புனலாடு மகளிர் வளமனை யொய்யும்



ஊர்கவின் இழப்பவும் வருவது கொல்லோ
சுணங்கணிந் தெழிலிய அணந்தேந் திளமுலை
வீங்கிறைப் பணைத்தோள் மடந்தை
10 மான்பிணை யன்ன மகிழ்மட நோக்கே.

திணை . காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

1607. புறநானூறு - 369.

இருப்புமுகஞ் செறித்த ஏந்தெழில் மருப்பிற்
கருங்கை யானை கொண்மூ வாக
நீள்மொழி மறவர் எறிவன ருயர்த்த
வாள்மின் னாக வயங்குகடிப் பமைந்த
5 குருதிப் பலிய முரசு முழக்காக
அரசராப் பனிக்கும் அணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநாண் உகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
10 ஈரச் செறுவயின் தேரே ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்
செருப்படை மிளிர்த்த திருத்துறு பைஞ்சாற்
பிடித்தெறி வெள்வேல் கணையமொடு வித்தி
விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
15 பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்பு
கணநரி யோடு கழுதுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள
தேய்வை வெண்காழ் புரையும் விசிபிணி
20 வேய்வை காணா விருந்திற் போர்வை
அரிக்குரற் றடாரி யுருப்ப வொற்றிப்
பாடி வந்திசின் பெரும பாடான்று
எழிலி தோயும் இமிழிசை யருவிப்
பொன்னுடை நெடுங்கோட் டிமையத் தன்ன
25 ஓடை நுதல ஒல்குத லறியாத்

துடியடிக் குழவிய பிடியிடை மிடைந்த
வேழ முகவை நல்குமஃதி
தாழா ஈகைத் தகைவெய் யோயே.

திணை - வாகை; துறை - மறக்களவழி, ஏர்க்கள உருவகமுமாம்.

சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவனைப் பாடியது.

## ௩௦௧. பராயனார்

### 1608. நற்றிணை - 155. நெய்தல்

ஒள்ளிழை மகளிரொ டோரையும் ஆடாய்
வள்ளிதழ் நெய்தற் றொடலையும் புனையாய்
விரிபூங் கான லொருசிறை நின்றோய்
யாரை யோநிற் றொழுதனெம் வினவுதும்
5 கண்டோர் தண்டா நலத்தை தெண்டிரைப்
பெருங்கடற் பரப்பின் அமர்ந்துறை அணங்கோ
இருங்கழி மருங்கு நிலைபெற் றனையோ
சொல்லினி மடந்தை யென்றனென் அதனெதிர்
முள்ளெயிற் றுமுறுவல் திறந்தன
10 பல்லிதழ் உண்கணும் பரந்தவாற் பனியே.

இரண்டாங்கூட்டத்துத் தலைவியை எதிர்ப்பட்டுத் தலைவன் சொல்லியது ; உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைவன் சொற்றதூஉமாம்.

## ௩௦௨. பரூஉமோவாய்ப் பதுமனார்

### **1609.** குறுந்தொகை - **101.** குறிஞ்சி

விரிதிரைப் பெருங்கடல் வளைஇய வுலகமும்
அரிதுபெறு சிறப்பிற் புத்தேள் நாடும்
இரண்டுந் தூக்கிற் சீர்சா லாவே
பூப்போ லுண்கட் பொன்போல் மேனி



5 மாண்வரி யல்குற் குறுமகள்
தோள்மாறு படூஉம் வைகலோ டெமக்கே.

தலைமகட்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது ; வலித்த நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியதூஉமாம்.

## ௩௦௩. பறநாட்டுப் பெருங்கொற்றனார்

### **1610.** அகநானூறு - **323.** பாலை

இம்மென் பேரலர் இவ்வூர் நம்வயின்
செய்வோ ரேச்சொல் வாடக் காதலர்
வருவ ரென்பது வாய்வ தாக

ஐய செய்ய மதனில சிறியநின்
5 அடிநில னூறுதல் அஞ்சிப் பையத்
தடவர லொதுக்கந் தகைகொள இயலிக்
காணிய வம்மோ கற்புமேம் படுவி
பலவுப்பல தடைஇய வேய்பயி லடுக்கத்து
யானைச் செல்லினங் கடுப்ப வானத்து
10 வயங்குகதிர் மழுங்கப் பாஅய்ப் பாம்பின்
பைபட இடிக்குங் கடுங்குர லேற்றொடு
ஆலி யழிதுளி தலைஇக்
கால்வீழ்த் தன்றுநின் கதுப்புறழ் புயலே.

பிரிவின்கண் வேறுபட்டதலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

நஉச. பனம்பாரனார்

**1611.** குறுந்தோகை - **52.** குறிஞ்சி

ஆர்களிறு மிதித்த நீர்திகழ் சிலம்பிற்
சூர்நசைந் தனையையாய் நடுங்கல் கண்டே
நரந்தம் நாறுங் குவையிருங் கூந்தல்

பாண்டரங்கண்ணனார்

923:

நிரந்திலங்கு வெண்பல் மடந்தை
5 பரிந்தனெ னல்லெனோ இறையிறை யானே.

வரைவுமலிவு கேட்ட தலைமகட்குத் தோழி
முன்னாளில் தான் அறத்தொடு நின்றமை காரணத்தான்
இது விளைந்த தென்பதுபடக் கூறியது.

நடு. பாண்டரங்கண்ணனார்

## 1612. புறநானூறு - 16

வினைமாட்சிய விரைபுரவியொடு
மழையுருவின தோல்பரப்பி
முனைமுருங்கத் தலைச்சென்றவர்
விளைவயல் கவர்பூட்டி
5 மனைமரம் விறகாகக்
கடிதுறைநீர்க் களிறுபடீஇ
எல்லுப்பட விட்ட சுடுதீ விளக்கம்
செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்றப்
புலங்கெட இறுக்கும் வரம்பில் தானைத்
10 துணைவேண்டாச் செருவென்றிப்
புலவுவாட் புலர்சாந்தின்
முருகற் சீற்றத் துருகெழு குருசில்
மயங்குவள்ளை மலராம்பற்
பனிப்பகன்றைக் கனிப்பாகற்
15 கரும்பல்லது காடறியாப்
பெருந்தண்பணை பாழாக
ஏம நன்னா டொள்ளெரி யூட்டினை
நாம நல்லமர் செய்ய
ஓராங்கு மலைந்தன பெருமநின் களிறே.

திணை - வஞ்சி ; துறை - மழபுலவஞ்சி.

சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப் பாடியது.

## ௧௦௩. பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்

### 1613. புறநானூறு - 183.

உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளுஞ்
சிறப்பின் பாலால் தாயுமனந் திரியும்
5 ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும் 10

வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனும் அவன்கட் படுமே.

திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

௩௦௭. பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார்

**1614.** அகநானூறு - **373.** பாலை

முனைகவர்ந்து கொண்டெனக் கலங்கிப் பிேரழுந்து
மனைபாழ் பட்ட மரைசேர் மன்றத்துப்
பணைத்தாள் யானை பரூஉப்புறம் உரிஞ்சிச்
செதுகாழ் சாய்ந்த முதுகாற் பொதியில்
5 அருஞ்சுரம் நீந்திய வருத்தமொடு கையற்றுப்
பெரும்புன் மாலை புலம்புவந் துறுதர
மீளி யுள்ளஞ் செலவுவலி யுறுப்பத்
தாழ்கை பூட்டிய தனிநிலை யிருக்கையொடு
தன்னிலை யுள்ளும் நந்நிலை யுணராள்
10 இரும்பல் கூந்தற் சேயிழை மடந்தை
கனையிருள் நடுநா ளணையொடு பொருந்தி
வெய்துற்றுப் புலக்கு நெஞ்சமொ டைதுயிரா
ஆயிதழ் மழைக்கண் மல்க நோய்கூர்ந்து



பெருந்தோள் நனைக்குங் கலுழ்ந்துவா ரரிப்பனி
15 மெல்விர லுகிரிற் றெறியினள் வென்வேல்

அண்ணல் யானை யடுபோர் வேந்தர்
ஒருங்ககப் படுத்த முரவுவாய் ஞாயில்
ஓரெயில் மன்னன் போலத்
துயில்துறந் தனள்கொல் அளியள் தானே.

பிரிந்துபோகாநின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற் குச் சொல்லியது.

## 1615. குறுந்தொகை - 156. குறிஞ்சி

பார்ப்பன மகனே பார்ப்பன மகனே
செம்பூ முருக்கின் நன்னார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்துப்

படிவ வுண்டிப் பார்ப்பன மகனே
5 எழுதாக் கற்பின் நின்சொ லுள்ளும்
பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்
மருந்து முண்டோ மயலோ இதுவே.

கழறிய பாங்கற்குக் கிழவன் அழிந்து கூறியது.

நஉஅ. பாண்டியன்
தலையாலங்கானத்துச்
செருவென்ற நெடுஞ்செழியன்

## 1616. புறநானூறு - 72.

நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்
இளைய னிவனென உளையக் கூறிப்
படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தாள் நெடுநல்

யானையுந் தேரு மாவும்
5 படையமை மறவரும் உடையம் யாமென்று
உறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச் சிறுசொற்
சொல்லிய சினங்கெழு வேந்தரை அருஞ்சமஞ்
சிதையத் தாக்கி முரசமொடு



10

ஒருங்ககப் படேஎ னாயிற் பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியனெம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலேன் ஆகுக
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
15 உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா இன்மையா னுறவே.

திணை - காஞ்சி ; துறை - வஞ்சினக்காஞ்சி-

## ௩0௯. பாண்டியன் பன்னாடுதந்தான்

1617. குறுந்தோகை - 270. முல்லை
தாழிருள் துமிய மின்னித் தண்ணென

வீழுறை யினிய சிதறி யூழிற்
கடிப்பிகு முரசின் முழங்கி யிடித்திடித்துப்
பெய்கினி வாழியோ பெருவான் யாமே
5 செய்வினை முடித்த செம்ம லுள்ளமொடு
இவளின் மேவின மாகிக் குவளைக்
குறுந்தாள் நாண்மலர் நாறும்
நறுமென் கூந்தல் மெல்லணை யேமே.

வினைமுற்றிப் புகுந்த தலைமகன் கிழத்தியோடு உடனிருந்து கூறியது.

## ௩௧௦. பாண்டியன் மாறன்வழுதி

### 1618. நற்றிணை - 97. முல்லை

அழுந்துபடு விழுப்புண் வழும்புவாய் புலரா
எவ்வ நெஞ்சத் தெஃகெறிந் தாங்குப்
பிரிவில புலம்பி நுவலுங் குயிலினும்



தேறுநீர் கெழீஇய யாறுநனி கொடிதே
5 அதனினுங் கொடியள் தானே மதனின்
துய்த்தலை யிதழ பைங்குருக் கத்தியொடு
பித்திகை விரவுமலர் கொள்ளீ ரோவென
வண்டுசூழ் வட்டியள் திரிதருந்

தண்டலை யுழவர் தனிமட மகளே.

பருவங்கண் டாற்றாளாய தலைவி தோழிக்கு உரைத்தது.

1619. நற்றிணை - 301. குறிஞ்சி

நீள்மலைக் கலித்த பெருங்கோற் குறிஞ்சி
நாள்மலர் புரையு மேனிப் பெருஞ்சுனை
மலர்பிணைத் தன்ன மாயிதழ் மழைக்கண்
மயிலோ ரன்ன சாயற் செந்தார்க்
5 கிளியோ ரன்ன கிளவிப் பணைத்தோட்
பாவை யன்ன வனப்பினள் இவளெனக்
காமர் நெஞ்சமொடு பலபா ராட்டி
யாய்மறப் பறியா மடந்தை
தேமறப் பறியாக் கமழ்கூந் தலளே.

சேட்படுத்துப் பிரிவின்கண் அன்பினியற்கையில் தகுவகை யதோ ராற்றாமையினென்று தோழி தன்னுள்ளே சொல்லியது.

௩௧௧. பாரதம்பாடிய பெருந்தேவனார்

1620. அகநானூறு - கடவுள்வாழ்த்து - க.
1621. ஐங்குறுநூறு - கடவுள்வாழ்த்து - உ.
1622. குறுந்தொகை - கடவுள்வாழ்த்து - ச.
1623. நற்றிணை - கடவுள்வாழ்த்து - ரு.
1624. புறநானூறு - கடவுள்வாழ்த்து - அ.

## ௩௯௨. பாரி மகளிர்

### 1625. புறநானூறு - 112.

அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவின்
எந்தையு முடையேமெங் குன்றும் பிறர்கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெங்
5 குன்றுங் கொண்டார்யாம் எந்தையு மிலமே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.

## ௩௯௩. பார்காப்பான்

### 1626. குறுந்தொகை - 254. பாலை இலையி

லஞ்சினை யினவண் டார்ப்ப
முலையேர் மென்முகை யவிழ்ந்த கோங்கின்
தலையலர் வந்தன வாரா தோழி
துயிலின் கங்குற் றுயில்வு மறந்தனர்
5 பயிலிருங் கதுப்பிற் பாய லும் உள்ளார்
செய்பொருள் தரல்நசைஇச் சென்றோர்
எய்தின ராலென வரூஉந் துதே. பருவங்கண்டு

வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

## ௩௯௪. பாலைக்கௌதமனார்

21—30 1627. சொற்பெயர் நாட்டங் கேள்வி
நெஞ்சமென் றா
ஐந்துடன் போற்றி யவைதுணை யாக
எவ்வஞ் சூழா து விளங்கிய கொள்கைக்
காலை யன்ன சீர்சால் வாய்மொழி
5 உருகெழு மரபிற் கடவுட் பேணியர்
கொண்ட தீயின் சுடரெழு தோறும்.

பாலைக்கௌதமனார்

929

விரும்புமெய் பரந்த பெரும்பெய ராவுதி
வருநர் வரையார் வார வேண்டி
விருந்துகண் மாறா தூணீஇய பாசவர்
10 ஊனத் தழித்த வர்ணிணக் கொழுங்குறை
குய்யிடு தோறு மானா தார்ப்பக்
கடலொலி கொண்டு செழுநகர் வரைப்பின்
நடுவ ணெழுந்த அடுநெய் யாவுதி
இரண்டுடன் கமழும் நாற்றமொடு வானத்து
15 நிலைபெறு கடவுளும் விழைதகப் பேணி
ஆர்வளம் பழுனிய ஐயந்தீர் சிறப்பின்
மாரியங் கள்ளின் போர்வல் யானைப்
போர்ப்புறு முரசங் கறங்க ஆர்ப்புச்சிறந்து

நன்கலந் தரூஉம் மண்படு மார்ப
20 முல்லைக் கண்ணிப் பல்லான் கோவலர்
புல்லுடை வியன்புலம் பல்லா பரப்பிக்
கல்லுயர் கடத்திடைக் கதிர்மணி பெறூஉம்
மிதியற் செருப்பிற் பூழியர் கோவே
குவியற் கண்ணி மழவர் மெய்ம்மறை 25
பல்பயந் தழீஇய பயங்கெழு நெடுங்கோட்டு
நீரறல் மருங்கு வழிப்படாப் பாகுடிப்
பார்வற் கொக்கின் பரிவேட் பஞ்சாச்
சீருடைத் தேஎத்த முனைகெட விலங்கிய
நேருயர் நெடுவரை அயிரைப் பொருந 30
யாண்டுபிழைப் பறியாது பயமழை சுரந்து
நோயில் மாந்தர்க் கூழி யாக
மண்ணு வாயில் மணங்கமழ் கொண்டு
கார்மலர் கமழுந் தாழிருங் கூந்தல்
ஒரீஇயின போல இரவும்மலர் நின்று 35
திருமுகத் தலமரும் பெருமதர் மழைக்கண்
அலங்கிய காந்தள் இலங்குநீ ரழுவத்து
59

நீர்த்தரு பூச வினம்பழிக் குநரும்
30 ஒலித்தலை விழவின் மலியும் யாணர்
நாடுகெழு தண்பணை சீறினை யாதலிற்
குடதிசை மாய்ந்து குணமுதற் றோன்றிப்
பாயிரு ளகற்றும் பயங்கெழு பண்பின்
ஞாயிறு கோடா நன்பக லமயத்துக்
35 கவலை வெண்ணரி கூஉமுறை பயிற்றிக்
கழல்கட் கூகைக் குழறுகுரற் பாணிக்
கருங்கட் பேய்மகள் வழங்கும்
பெரும்பா ழாகுமன் அளிய தாமே. 22

துறை - வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகு வண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு - செந்தூக்கும் வஞ்சித் தூக்கும். பெயர் - கயிறுகுறுமுகவை.

1629. அலந்தலை யுன்னத் தங்கவடு பொருந்திச்
சிதடி கரையப் பெருவறங் கூர்ந்து
நிலம்பை தற்ற புலங்கெடு காலையும்
வாங்குபு தகைத்த கலப்பையர் ஆங்கண்
5 மன்றம் போந்து மறுகுசிறை பாடும்
வயிரிய மாக்கள் கடும்பசி நீங்கப்
பொன்செய் புனையிழை யொலிப்பப்
பெரிதுவந்து
நெஞ்சுமலி யுவகையர் உண்டுமலிந் தாடச்
சிறுமகி ழானும் பெருங்கலம் வீசும்
10 போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ

நின்னயந்து வருவேங் கண்டனம் புல்மிக்கு
வழங்குந ரற்றென மருங்குகெடத் தூர்ந்து
பெருங்கவி னழிந்த ஆற்ற வறுபுணர்ந்து
அண்ணல் மரையா அமர்ந்தினி துறையும்
15 விண்ணுயர் வைப்பின காடா யினநின்
மைந்துமலி பெரும்புக ழறியார் மலைந்த
போரெதிர் வேந்தர் தாரழிந் தொராலின்
மருதிமிழ்ந் தோங்கிய நளியிரும் பரப்பின்
மணல்மலி பெருந்துறைத் ததைந்த
காஞ்சியொடு



20

முருகுத்தாழ் பெழிலிய நெருப்புறழ் அடைகரை
நந்து நாரையொடு செவ்வரி யுகளுங்
கழனி வாயிற் பழனப் படப்பை
அழல்மருள் பூவின் தாமரை வளைமகள்
குறாஅது மலர்ந்த ஆம்பல்
25 அறாஅ யாணர வரகன் றலை நாடே.

23

துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகு வண்ணம். தூக்கு - செந்தூக்கு. பெயர் - ததைந்தகாஞ்சி.

1630. நெடுவயின் ஒளிறு மின்னுப்பரந் தாங்குப்
புலியுறை கழித்த புலவுவா யெஃகம்
ஏவ லாடவர் வலனுயர்த் தேந்தி
ஆரரண் கடந்த தாரருந் தகைப்பிற்
5 பீடுகொள் மாலைப் பெரும்படைத் தலைவ
ஓதல் வேட்டல் அவைபிறர்ச் செய்தல்
ஈதலேற்றலென் றாறுபுரிந் தொழுகும்
அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி
ஞாலம் நின்வழி யொழுகப் பாடல்சான்று
10 நாடுடன் விளங்கு நாடா நல்லிசைத்
திருந்திய இயல்மொழித் திருந்திழை
குலையிழி பறியாச் சாபத்து வயவர்

கணவ

15

அம்புகளை வறியாத் தூங்குதுளங் கிருக்கை
இடாஅ ஏணி யியலறைக் குருசில்
நீர்நிலந் தீவளி விசும்போ டைந்தும்
அளந்துகடை யறியினும் அளப்பருங் குரையைநின்
வளம்வீங்கு பெருக்கம் இனிதுகண் டிகுமே
உண்மருந் தின்மரும் வரைகோ ளறியாது
குரைத்தொடி
20 அடைச்சேம்

மழுகிய உலக்கை வயின்றேறு
பெழுந்த ஆடுறு மடாவின்
எஃகுறச் சிவந்த வூனத்து யாவருங்
கண்டுமதி மருளும் வாடாச் சொன்றி
வயங்குகதிர் விரிந்து வானகஞ் சுடர்வர
வறிதுவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி



25 பயங்கெழு பொழுதோ டாகியம் நிற்பக்
கலிழுங் கருவியொடு கையுற வணங்கி
மன்னுயிர் புரைஇய வலனேர் பிரங்குங்
கொண்டற் றண்டளிக் கமஞ்சூல் மாமழை
காரெதிர் பருவ மறப்பினும்
30 பேரா யாணர்த்தால் வாழ்கநின் வளனே.

24

துறை - இயன்மொழி வாழ்த்து. வண்ணம் - ஒழுகுவண்ணம். தூக்கு - செந்தூக்கு. பெயர் - சீர்சால்வெள்ளி.

1631. மாவாடியபுலன் நாஞ்சிலாடா
கடாஅஞ்சென்னிய கடுங்கண்யானை
இனம்பரந்தபுலம் வளம்பரப்பறியா

5

நின்படைஞர், சேர்ந்த மன்றங் கழுதை போகி
நீ, உடன்றோர் மன்னெயில் தோட்டி வையா
கடுங்கா லொற்றலிற் சுடர்சிறந் தருத்துப்
பசும்பிசி ரொள்ளழல் ஆடிய மருங்கின்
ஆண்டலை வழங்குங் கானுணங்கு கடுநெறி
முனையகன் பெரும்பா ழாக மன்னிய
10

உருமுறழ் பிரங்கு முரசிற் பெருமலை
வரையிழி யருவியின் ஒளிறுகொடி நுடங்கக்

கடும்பரிக் கதழ்சிற ககைப்பநீ
நெடுந்தே ரோட்டியபிற ரகன்றலை நாடே.

துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு.
25 வண்ணமும் சொற்சீர் வண்ணமும். தூக்கு -

வண்ணம் - ஒழுகு
செந்தூக்கும் வஞ்சித்
தூக்கும். பெயர் - கானுணங்குகடுநெறி.

1632. தேஎர்பரந்தபுலம் ஏஎர்பரவா

களிறுடியபுலம் நாஞ்சிலாடா
மத்தாறியமனை இன்னியமிமிழா
ஆங்குப், பண்டுநற் கறியுநர் செழுவளம்
5 நோகோ யானே நோதக வருமே

நினைப்பின்

பெயல்மழை புரவின் றுகி வெய்துற்று
வலமின் றம்ம காலையது பண்பெனக்



கண்பனி மலிர்நிறை தாங்கிக் கைபுடையூ
மெலிவுடை நெஞ்சினர் சிறுமை கூரப்
10 பீரிவர் வேலிப் பாழ்பனை நெருஞ்சிக்
காடுறு கடுநெறி யாக மன்னிய
முருகுடன்று கறுத்த கலியழி மூதூர்
உரும்பில் கூற்றத் தன்னநின்
திருந்துதொழில் வயவர் சீறிய நாடே. 26

இதுவு மது. பெயர் - காடுறுகடுநெறி.

1633. சிதைந்தது மன்றநீ சிவந்தனை நோக்கலின்

தொடர்ந்த குவளைத் தூநெறி யடைச்சி
அலர்ந்த ஆம்ப லகமடி வையர்
சுரியலஞ் சென்னிப் பூஞ்செய் கண்ணி
5 அரிய லார்கையர் இனிதுகூ டியவர்
துறைமணி மருத மேறித் தெறுமாறு
எல்வளை மகளிர் தெள்விளி யிசைப்பிற்
பழனக் காவிற் பசுமயி லாலும்
பொய்கை வாயிற் புனல்பொரு புதவின்
10 நெய்தல் மரபின் நிரைகட் செறுவின்
வல்வா யுருளி கதுமென மண்ட
அள்ளற் பட்டுத் துள்ளுபு துரப்ப
நல்லெருது முயலும் அளறுபோகு

விழுமத்துச்
சாகாட் டாளர் கம்பலை யல்லது
15 பூச லறியா நன்னாட்டு
யாண ரறாஅக் காமரு கவினே.

27

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகு வண்ணம். தூக்கு - செந்தூக்கு. பெயர் - தொடர்ந்தகுவளை. 1634. திருவுடைத் தம்ம பெருவிறற் பகைவர்

பைங்கண் யானைப் புணர்நிரை துமிய
உரந்துரந் தெறிந்த கறையடிக் கழற்காற்

கடுமா மறவர் கதழ்தொடை மறப்ப
5 இளையினிது தந்து விளைவுமுட் டுறாது

பாலைக்கௌதமனார்

935

புலம்பா வுறையுள் நீதொழி லாற்றலின்
விடுநிலக் கரம்பை விடரளை நிறையக்
கோடை நீடக் குன்றம் புல்லென
அருவி யற்ற பெருவறற் காலையும்
10 நிவந்துகரை யிழிதரு நனந்தலைப்
பேரியாற்றுச்
சீருடை வியன்புலம் வாய்பரந்து மிகீஇயர்
உவலை சூடி உருத்துவரு மலிர்நிறைச்
செந்நீர்ப் பூச லல்லது
வெம்மை யரிதுநின் அகன்றலை நாடே.

28

துறை - நாடுவாழ்த்து. வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - உருத்துவருமலிர்நிறை.

1635. துவலெற்றி உலக்கை வாழைச் சேர்த்தி
வளைக்கை மகளிர் வள்ளை கொய்யும்
முடந்தை நெல்லின் விளைவயற் பரந்த
தடந்தாள் நாரை யிரிய அயிரைக்
5

கொழுமீ னார்கைய மரந்தொறுங் குழாஅலின்
வெண்கை மகளிர் வெண்குரு கோப்பும்
அழியா விழவின் இழியாத் திவவின்
வயிரிய மாக்கள் பண்ணமைத் தெழீஇ
மன்றம் நண்ணி மறுகுசிறை பாடும்
10 அகன்கண் வைப்பின் நாடுமன் அளிய
விரவுவேறு கூலமொடு குருதி வட்ட
மயிர்புதை மாக்கண் கடிய கழற
அமர்கோள் நேரிகந் தாரெயில் கடக்கும்
பெரும்பல் யானைக் குட்டுவன்
15 வரம்பில் தானை பரவா வூங்கே. 29

துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - வெண்கைமகளிர்.

1636.

இணர்ததை ஞாழற் கரைகெழு பெருந்துறை
மணிக்கலத் தன்ன மாயிதழ் நெய்தற்
பாசடைப் பனிக்கழி துழைஇப் புன்னை

வாலிணர்ப் படுசினைக் குருகிறை கொள்ளும்
5 அல்குறு கான லோங்குமண லடைகரை
தாழடும்பு மலைந்த புணரிவளை ஞரல
விலங்குநீர் முத்தமொடு வார்துகி ரெடுக்குந்
தண்கடற் படப்பை மென்பா லனவும்
காந்தளங் கண்ணிக் கொலைவில் வேட்டுவர்
10 செங்கோட் டாமா னூனொடு காட்ட
மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு
பொன்னுடை நியமத்துப் பிழிநொடை
கொடுக்குங்
குன்றுதலை மணந்த புன்புல வைப்பும்
கால மன்றியும் கரும்பறுத் தொழியாது
15 அரிகா லவித்துப் பலபூ விழவிற்
றேம்பாய் மருத முதல்படக் கொன்று
வெண்டலைச் செம்புனல் பரந்துவாய்
மிகுக்கும்
பலசூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்
சிறைகொள் பூசலிற் புகன்ற வாயம்
20 முழவிமிழ் மூதூர் விழவுக்கா ணூஉப்

பெயருஞ்

செழும்பல் வைப்பிற் பழனப் பாலும்
ஏன லுழவர் வரகுமீ திட்ட

கான்மிகு குளவிய வன்புசே ரிருக்கை
மென்றினை நுவணை முறைமுறை பகுக்கும்
25 புன்புலந் தழீஇய புறவணி வைப்பும்
பல்பூஞ் செம்மற் காடுபய மாறி
அரக்கத் தன்ன நுண்மணற் கோடுகொண்டு
ஒண்ணுதல் மகளிர் கழலொடு மறுகும்
விண்ணுயர்ந் தோங்கிய கடற்றவும் பிறவும்
30 பணைகெழு வேந்தரும் வேளிரு
மொன்றுமொழிந் து
கடலவுங் காட்டவும் அரண்வலியார் நடுங்க
முரண்மிகு கடுங்குரல் விசும்படை பதிரக்
கடுஞ்சினங் கடாஅய் முழங்கு மந்திரத்து
அருந்திறல் மரபிற் கடவுட் பேணியர்
35 உயர்ந்தோ னேந்திய அரும்பெறற் பிண்டங்
கருங்கட் பேய்மகள் கைபுடையூஉ நடுங்க

நெய்த்தோர் தூஉய நிறைமகி ழிரும்பலி
எறும்பு மூசா இறும்பூது மரபிற்
கருங்கட் காக்கையொடு பருந்திருந் தார
40 ஓடாப் பூட்கை யொண்பொறிக் கழற்காற்
பெருஞ்சமந் ததைந்த செருப்புகல் மறவர்
உருமுநில னதிர்க்குங் குரலொடு கொளைபுணர்ந்து
பெருஞ்சோ றுகுத்தற் கெறியும்
கடுஞ்சின வேந்தேநின் தழங்குகுரல் முரசே. 30

துறை - பெருஞ்சோற்று நிலை. வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - புகன்றவாயம்.

## 1636-a. பதிகம்

இமைய வரம்பன் தம்பி அமைவர

உம்பற் காட்டைத் தன்கோ னிறீஇ
அகப்பா வெறிந்து பகற்றீ வேட்டு
மதியுறழ் மரபின் முதியரைத் தழீஇக்
5 கண்ணகன் வைப்பின் மண்வகுத் தீத்துக்
கருங்களிற் றியானைப் புணர்நிரை நீட்டி
இருகடல் நீரு மொருபக லாடி
அயிரை பரைஇ யாற்றல்சால் முன்போடு
ஒடுங்கா நல்லிசை யுயர்ந்த கேள்வி
10 நெடும்பார தாயனார் முந்துறக் காடுபோந்த
பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் .

பாலைக்கௌதமனார் பாடினார் பத்துப்பாட்டு.

அவைதாம் : அடுநெய்யாவுதி, கயிறகு றமுகவை, தறைந்த காஞ்சி, சீர்சால்வெள்ளி, கானுணங்குகடுநெறி, காடுறுகடுநெறி, தொடர்ந்தகுவளை, உருத்துவருமலிர்நிறை, வெண்கைமகளிர், புகன்றவாயம். இவை பாட்டின்பதிகம்.

பாடிப்பெற்றபரிசில் ; 'நீர் வேண்டியதுகொண்மின்' என, 'யானும் என்பார்ப்பனியும் சுவர்க்கம்புகல் வேண்டும்' என, பார்ப்பாரிற் பெரியோரைக் கேட்டு ஒன்பது பெருவேள்விவேட்பிக்கப் பத் 938

சங்க இலக்கியம்

தாம் பெருவேள்வியிற் பார்ப்பானையும் பார்ப்பனியையும் காணாராயினர்.

இமயவரம்பன்றம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவன் இருபத்தையாண்டு வீற்றிருந்தான்.

## 1637. புறநானூறு - 366.

விழுக்கடிப் பறைந்த முழுக்குரல் முரசம்
ஒழுக்குடை மருங்கின் ஒருமொழித் தாக
அரவெறி யுருமின் உரறுபு சிலைப்ப
ஒருதா மாகிய பெருமை யோரும்
5 தம்புகழ் நிறீஇச் சென்றுமாய்ந் தனரே
அதனால், அறவோன் மகனே மறவோர்
செம்மால்
... ...உரைப்பக் கேண்மதி
நின்னூற்றம் பிறரறியாது

பிறர்கூறிய மொழிதெரியா
10 ஞாயிற் றெல்லை ஆள்வினைக் குதவி
இரவி னெல்லை வருவது நாடி
உரை ... ... ...
உழவொழி பெரும்பக டழிதின் றுங்குச்
செங்கண் மகளிரொடு சிறுதுனி யளைஇ
15 அங்கட் டேறல் ஆய்கலத் துகுப்பக்
கெடலருந் திருவ ... ...
மடை வேண்டுநர்க் கிடையருகாது
அவிழ்வேண்டுநர்க் கிடையருளி
விடைவீழ்த்துச் சூடுகிழிப்ப
20 நீர்நிலை] பெருத்த வார்மண லடைகரைக்
காவுதொறும் ... ... ...
மடங்க லுண்மை மாயமோ வன்றே.
திணை - காஞ்சி; துறை - பெருங்காஞ்சி.
தருமபுத்திரனைப் பாடியது.

## ௩கரு. பாலைபாடிய பெருங்கடுங்கோ

**1638.** அகநானூறு - **5.** பாலை
அளிநிலை பொறாஅ தமரிய முகத்தள்
விளிநிலை கொள்ளாள் தமியள் மென்மெல
நலமிகு சேவடி நிலம்வடுக் கொளாஅக்
குறுக வந்துதன் கூரெயிறு தோன்ற

5 வறிதகத் தெழுந்த வாயல் முறுவலள்
கண்ணிய துணரா வளவை யொண்ணுதல்
வினைதலைப் படுதல் செல்லா நினைவுடன்
முளிந்த ஓமை முதையலங் காட்டுப்
பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி
10 மோட்டிரும் பாறை யீட்டுவட் டேய்ப்ப
உதிர்வன படூஉங் கதிர்தெறு கவாஅன்
மாய்த்த போல மழுகுநுனை தோற்றிப்
பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல்
விரல்நுதி சிதைக்கும் நிரைநிலை யதர
15 பரல்முரம் பாகிய பயமில் கானம்
இறப்ப வெண்ணுதி ராயின் அறத்தாறு
அன்றென மொழிந்த தொன்றுபடு கிளவி
அன்ன வாக என்னுநள் போல
முன்னங் காட்டி முகத்தின் உரையா
20 ஓவச் செய்தியின் ஒன்றுநினைந் தொற்றிப்
பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொடு
ஆகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத்
தூநீர் பயந்த துணையமை பிணையல்
மோயின ளுயிர்த்த காலை மாமலர்
25 மணியுரு விழந்த அணியழி தோற்றங்
கண்டே கடிந்தனம் செலவே ஒண்டொடி
உழைய மாகவும் இனைவோள்
பிழையலள் மாதோ பிரிதும்நா மெனினே.

பொருள்வயிற் பிரியக்கருதிய தலைமகன் தன்
னெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.

**1639.** அகநானூறு - **99.** பாலை

வாள்வரி வயமான் கோளுகி ரன்ன
செம்முகை யவிழ்ந்த முள்முதிர் முருக்கின்
சிதரற் செம்மல் தாஅய் மதரெழில்
மாணிழை மகளிர் பூணுடை முலையின்
5 முகைபிணி யவிழ்ந்த கோங்கமொ டகைஇநனை
அதிரல் பரந்த அந்தண் பாதிரி
உதிர்வீ யஞ்சினை தாஅய் எதிர்வீ
மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்
அணங்குடை நகரின் மணந்த பூவின்
10 நன்றே கானம் நயவரும் அம்ம
கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை
அடுகளம் பாய்ந்த தொடிசிதை மருப்பிற்
பிடிமிடை களிற்றிற் றோன்றுங்
குறுநெடுந் துணைய குன்றமு முடைத்தே.

உடன் போகிய தலைமகளைத் தலைமகன் மருட்டிச் சொல்லியது.

**1640.** அகநானூறு - **111.** பாலை

உள்ளாங் குவத்தல் செல்லார் கறுத்தோர்
எள்ளல் நெஞ்சத் தேஎச்சொல் நாணி
வருவர் வாழி தோழி யரசர்
யானை கொண்ட துகிற்கொடி போல

5 அலந்தலே ஞெமையத்து வலந்த சிலம்பி
ஓடைக் குன்றத்துக் கோடையொடு துயல்வர
மழையென மருண்ட மம்மர் பலவுடன்
ஓய்களி றெடுத்த நோயுடை நெடுங்கை
தொகுசொற் கோடியர் தூம்பி னுயிர்க்கும் 10
அத்தக் கேழ லட்ட நற்கோட்
செந்நா யேற்றை கம்மென ஈர்ப்பக்
குருதி யாரு மெருவைச் செஞ்செவி
மண்டம ரழுவத் தெல்லிக் கொண்ட

பாலைபாடிய பெருங்கடுங்கோ

941

புண்தேர் விளக்கிற் றோன்றும்
15 விண்தோய் பிறங்கல் மலையிறந் தோரே.

தலைமகன் பிரிவின்கண் தோழி தலைமகளை யாற்றுவித்தது.

**1641.** அகநானூறு - **155.** பாலை

அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்

பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்
பொருளி னாகும் புனையிழை யென்றநம்
இருளே ரைம்பால் நீவி யோரே
5 நோய்நாம் உழக்குவ மாயினுந் தாந்தம்
செய்வினை முடிக்க தோழி பல்வயிற்
பயநிரை சேர்ந்த பாழ்நாட் டாங்கண்
நெடுவிளிக் கோவலர் கூவற் றோண்டிய
கொடுவாய்ப் பத்தல் வார்ந்துகு சிறுகுழி
10 நீர்காய் வருத்தமொடு சேர்விடம் பெறாது
பெருங்களிறு மிதித்த அடியகத் திரும்புலி
ஒதுங்குவன கழிந்த செதும்ப லீர்வழி
செயிர்தீர் நாவின் வயிரியர் பின்றை
மண்ணார் முழவின் கண்ணகத் தசைத்த
15 விரலூன்று வடுவிற் றோன்றும்
மரல்வாடு மருங்கின் மலையிறந் தோரே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் சொல்லியது.

**1642.** அகநானூறு - **185.** பாலை

எல்வளை ஞெகிழச் சாஅய் ஆயிழை
நல்லெழிற் பணைத்தோள் இருங்கவி னழியப்
பெருங்கை யற்ற நெஞ்சமொடு நத்துறந்து
இரும்பி னின்னுயி ருடையோர் போல
5 வலித்து வல்லினர் காதலர் வாட
ஒலிகழை நிவந்த நெல்லுடை நெடுவெதிர்
கலிகொள் மள்ளர்வில் விசையி னுடையப்
பைதற வெம்பிய கல்பொரு பரப்பின்



வேனி லத்தத் தாங்கண் வானுலந்து
10 அருவி யான்ற வுயர்சிமை மருங்கிற்
பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்
இலையில மலர்ந்த இலவமொடு
நிலையுயர் பிறங்கல் மலையிறந் தோரே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## 1643. அகநானூறு - 223. பாலை

பிரிதல் வல்லியர் இதுநத் துறந்தோர்

மறந்தும் அமைகுவர் கொல்லென் றெண்ணி
ஆழல் வாழி தோழி கேழல்
வளமருப் புறழு முளைநெடும் பெருங்காய்
5 நனைமுதிர் முருக்கின் சினைசேர் பொங்கர்
காய்சினக் கடுவளி யெடுத்தலின் வெங்காட்டு
அழல்பொழி யானையின் ஐயெனத்
திழலி லோமை நீரில் நீளிடை

தோன்றும்

இறந்தன ராயினுங் காதலர் நம்வயின்
10 மறந்துகண் படுதல் யாவது புறந்தாழ்
அம்பணை நெடுந்தோட் டங்கித் தூம்பி
அரியினங் கடுக்குஞ் சுரிவணை ரைம்பால்
நுண்கே ழடங்க வாரிப் பையுள்கெட
நன்முகை யதிரற் போதொடு குவளைத்
15 தண்ணறுங் கமழ்தொடை வேய்ந்தநின்
மண்ணுறு கூந்தல் மரீஇய துயிலே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி
வற்புறுத்தியது.

**1644.** அகநானூறு - **261.** பாலை

கானப் பாதிரிக் கருந்தகட் டொள்வீ
வேனில் அதிரலொடு விரைஇக் காண்வரச்
சில்லைங் கூந்த லழுத்தி மெல்லிணர்த்
தேம்பாய் மராஅம் அடைச்சி வான்கோல் 5
இலங்குவளை தெளிர்ப்ப வீசிச் சிலம்புநகச்

சின்மெல் லொதுக்கமொடு மென்மெல
இயலினின்
அணிமாண் சிறுபுறங் காண்கஞ் சிறுநனி
ஏகென ஏகல் நாணி யொய்யென
மாகொள் நோக்கமொடு மடங்கொளச் சாஅய்
10 நின்றுதலை யிறைஞ்சி யோளே அதுகண்டு
யாமுந் துறுதல் செல்லேம் ஆயிடை
அருஞ்சுரத் தல்கி யேமே இரும்புலி
களிறட்டுக் குழுமு மோசையுங் களிபட்டு

வில்லோர் குறும்பிற் றதும்பும்
15 வல்வாய்க் கடுந்துடிப் பாணியுங் கேட்டே.
புணர்ந்துடன் போயினகாலை இடைச்சுரத்துப்

பட்டதனை
மீண்டுவந்த காலத்துத் தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

**1645.** அகநானூறு - **267.** பாலை

நெஞ்சு நெகிழ்தகுந கூறி யன்புகலந்து
அறாஅ வஞ்சினஞ் செய்தோர் வினைபுரிந்து
திறம்வே றாக லெற்றென் றொற்றி
இனைத லான்றிசின் நீயே சினைபாய்ந்து

5 உதிர்த்த கோடை யுட்குவரு கடத்திடை
வெருக்கடி யன்ன குவிமுகி ழிருப்பை

மருப்புக் கடைந்தன்ன கொள்ளை வான்பூ
மயிர்க்கா லெண்கி னீரினங் கவர
10

மைபட் டன்ன மாமுக முசுவினம்
பைதறு நெடுங்கழை பாய்தலின் ஒய்யென
வெதிர்படு வெண்ணெல் வெவ்வறைத் தாஅய்
உகிர்நெரி யோசையிற் பொங்குவன பொரியும்
ஓங்கல் வெற்பிற் சுரம்பல இறந்தோர்
தாம்பழி யுடைய ரல்லர் நாளும்
15 நயந்தோர்ப் பிணித்தல் தேற்றா வயங்குவினை
வாளே ரெல்வளை நெகிழ்த்த
தோளே தோழி தவறுடை யவ்வே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகளது ஆற்றாமை கண்டு ஆற்றா ளாகிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.



**1646. அகநானூறு - 291. பாலை**

வானம் பெயல்வளங் கரப்பக் கானம்
உலறி யிலையில வாகப் பலவுடன்

ஏறுடை யாயத் தினம்பசி தெறுப்பக்
கயனற வறந்த கோடையொடு நயனறப்
5 பெருவரை நிவந்த மருங்கிற் கொடுவரிப்
புலியொடு பொருது சினஞ்சிறந்து வலியோடு
உரவுக்களி றொதுங்கிய மருங்கிற் பரூஉப்பரல்
சிறுபன் மின்மினி கடுப்ப எவ்வாயும்
நிறைவன இமைக்கும் நிரம்பா நீளிடை
10 எருவை யிருஞ்சிறை யிரீஇய விரியிணர்
தாதுண் தும்பி முரலிசை கடுப்பப்
பரியின துயிர்க்கும் அம்பினர் வெருவர
உவலை சூடிய தலையர் கவலை
ஆர்த்துட னரும்பொருள் வவ்வலின் யாவதும்
15 சாத்திடை வழங்காச் சேட்சிமை யதர
சிறியிலை நெல்லித் தீஞ்சுவைத் திரள்காய்
உதிர்வன தாஅம் அத்தந் தவிர்வின்று
புள்ளி யம்பிணை யுணீஇய வுள்ளி
அறுமருப் பொழித்த தலைய தோல்பொதி
20 மறுமருப் பிளங்கோ டதிரக் கூஉஞ்
சுடர்தெற வருந்திய அருஞ்சுரம் இறந்தாங்கு
உள்ளினை வாழிய நெஞ்சே போதெனப்
புலங்கமழ் நாற்றத் திரும்பல் கூந்தல்
நல்லெழில் மழைக்கணங் காதலி
25 மெல்லிறைப் பணைத்தோள் விளங்குமாண்
கவினே.

பொருள்வயிற் போகாநின்ற தலைமகன் இடைச்சு

ரத்துத் தன் னெஞ்சிற்குச் சொல்லியது.

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

945

### 1647. அகநானூறு - 313. பாலை

இனிப்பிறி துண்டோ அஞ்ச லோம்பென
அணிக்கவின் வளர முயங்கி நெஞ்சம்
பிணித்தோர் சென்ற வாறுநினைந் தல்கலும்
குளித்துப்பொரு கயலிற் கண்பனி மல்க
5 ஐய வாக வெய்ய வுயிரா
இரவும் எல்லையும் படரட வருந்தி
அரவுநுங்கு மதியின் நுதலொளி கரப்பத்
தம்மல தில்லா நம்மிவ ணொழியப்
பொருள்புரிந் தகன்றன ராயினும் அருள்புரிந்து
10 வருவர் வாழி தோழி பெரிய
நிதியஞ் சொரிந்த நீவி போலப்
பாம்பூன் தேம்பும் வறங்கூர் கடத்திடை
நீங்கா வம்பலர் கணையிடத் தொலைந்தோர்
வசிபடு புண்ணின் குருதி மாந்தி
15 ஒற்றுச்செல் மாக்களின் ஒடுங்கிய குரல
வில்வழிப் படூஉங் காக்கைக்
கல்லுயர் பிறங்கல் மலையிறந் தோரே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

## 1648. அகநானூறு - 337. பாலை

சாரல் யாஅத் துயர்சினை குழைத்த
மாரி யீர்ந்தளி ரன்ன மேனிப்
பேரமர் மழைக்கண் புலம்புகொண் டொழிய
ஈங்குப்பிரிந் துறைதல் இனிதன் றாகலின்
5 அவண தாக பொருளென் றுமணர்
கணநிரை யன்ன பல்காற் குறும்பொறைத்
தூதொய் பார்ப்பான் மடிவெள் ளோலைப்
படையுடைக் கையர் வருதொடர் நோக்கி
உண்ணு மருங்கு லின்மையின் கையது
10 பொன்னு குதலும் உண்டெனக் கொன்னே
தடிந்துடன் வீழ்த்த கடுங்கண் மழவர்

60



திறனில் சிதாஅர் வறுமை நோக்கிச்
செங்கோ லம்பினர் கைந்நொடியாப் பெயரக்
கொடிவிடு குருதித் தூங்குடர் கறீஇ
15 வரிமர லியவின் ஒருகரி யேற்றை
வெண்பரல் இமைக்குங் கண்பறி கவலைக்
கள்ளி நீழற் கதறுபு வதிய
மழைகண் மாறிய வெங்காட் டாரிடை
எமியங் கழிதந் தோயே பனியிருட்
20 பெருங்கலி வானந் தலைஇய

இருங்குளிர் வாடையொடு வருந்துவ

ளெனவே.

முன்னொரு காலத்துப் பொருள்வயிற் பிரிந்துவந்த தலைமகன் பின்னும் பொருள்கடைக் கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

**1649.** அகநானூறு - **379.** பாலை

நந்நயர் துறைவி தொன்னல மழியத்
தெருளா மையின் தீதொடு கெழீஇ
5

அருளற நிமிர்ந்த முன்பொடு பொருள்புரிந்து
ஆள்வினைக் கெதிரிய மீளி நெஞ்சே
நினையினை யாயின் எனவ கேண்மதி
விரிதிரை முந்நீர் மண்டிணி கிடக்கைப்
பரிதியஞ் செல்வம் பொதுமை யின்றி
நனவின் இயன்ற தாயினுங் கங்குற்
கனவின் அற்றதன் கழிவே அதனால்
10 விரவுறு பன்மலர் வண்டுசூழ் படைச்சிச்
சுவல்மிசை யசைஇய நிலைதயங் குறுமுடி
ஈண்டுபன் னாற்றம் வேண்டுவயின் உவப்பச்
செய்வுறு விளங்கிழைப் பொலிந்த தோள்சேர்பு
எய்திய கனைதுயி லேற்றொறுந் திருகி
15 மெய்புகு வன்ன கைகவர் முயக்கின்

மிகுதிகண் டன்றோ விலனே நீநின்
பல்பொருள் வேட்கையிற் சொல்வரை நீவிச்
செலவுவலி யுறுத்தனை யாயிற் காலொடு

பாலைபாடிய பெருங்கடுங்கோ

947

கனையெரி நிகழ்ந்த யிலையி லங்காட்டு
20 உழைப்புறத் தன்ன புள்ளி நீழல்
அசைஇய பொழுதிற் பசைஇய வந்திவண்
மறப்பரும் பல்குணம் நிறத்துவந் துறுதர
ஒருதிறம் நினைத்தல் செல்லாய் திரிபுநின்று
உறுபுலி யுழந்த அடுமருப் பொருத்தற்குப்
25 பிடியிடு பூசலின் அடிபடக் குழிந்த
நிரம்பா நீளிடைத் தூங்கி
இரங்குவை யல்லையோ உரங்கெட மெலிந்தே.

முன்னொரு காலத்துப் பொருண் முற்றிவந்த தலைமகன் பின்னும் பொருள்கடைக் கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

## 1650. கலித்தோகை - 2. பாலை : 1

தொடங்கற்கண் தோன்றிய முதியவன் முதலாக
அடங்காதார் மிடல்சாய அமரர்வந் திரத்தலின்
மடங்கல்போற் சினைஇ மாயஞ்செ யவுணரைக்
5

கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலும்
உடன்றக்கால் முகம்போல ஒண்கதிர் தெறுதலிற்

சீறருங் கணிச்சியோன் சினவலின் அவ்வெயில்
ஏறுபெற் றுதிர்வனபோல் வரையிளந் தியங்குநர்
ஆறுகெட விலங்கிய அழலவி ராரிடை
மறப்பருங் காத லிவளீண் டொழிய
இறப்பத் துணிந்தனிர் கேண்மின்மற் றைஇய ;
11 தொலைவாகி யிரந்தோர்க்கொன் றீயாமை

யிழிவென மலையிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு
ளாகுமோ நிலைஇய கற்பினாள் நீநீப்பின் வாழாதாள்
முலையாகம் பிரியாமை பொருளாயி னல்லதை; 15
இல்லென இரந்தோர்க்கொன் றீயாமை யிழிவெனக்
கல்லிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ
தொல்லியல் வழாஅமைத் துணையெனப் புணர்ந்தவள்
புல்லாகம் பிரியாமை பொருளாயி னல்லதை ;

19 இடனின்றி யிரந்தோர்க்கொன் றீயாமை யிழிவெனக்
கடனிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ
வடமீன்போல் தொழுதேத்த வயங்கிய கற்பினாள்
தடமென்தோள் பிரியாமை பொருளாயி னல்லதை ;

எனவிவள்,

24 புன்கண்கொண் டினையவும் பொருள்வயின் அகறல்
அன்பன் றென்றியான் கூற அன்புற்றுக்
காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்
யாழ்வரைத் தங்கி யாங்குத் தாழ்புநின்
தொல்கவின் தொலைத லஞ்சியென்
சொல்வரைத் தங்கினர் காத லோரே.

" ஒன்றாத் தமரினும் " என்னுஞ் சூத்திரத்து " காளது சின்மையு மிளமைய தருமையுந், தாளாண் பக்கமுந் தகுதிய தமைதியு, மின்மைய திழிவு முடைமைய துயர்ச்சியு,மன்பின தகலமு மகற்சிய தருமையு, மொன்றாப் பொருள்வயி னூக்கிய பாலினும் " என்பதனான் இன்மையது இழிவு கூறி இல்வாழ்க்கைநெறி ஆற்றுதற்குப் பொருள்வயிற் பிரிவேனென்ற தலைமகற்குத் தலைமகளது இயல்பு கூறி, இப்பெற்றியாளைப் பிரியாமையே பொருளாவதெனச் சொல்விச் செலவழுங்குவித்தமை தோழி தலைமகட்கு வந்து சொல்லியது.

**1651. கலித்தொகை - 3. பாலை : 2**

அறனின்றி அயல்தூற்றும் அம்பலை நாணியும்
வறனீந்தி நீசெல்லும் நீளிடை நினைப்பவும்
இறைநில்லா வளையோட இதழ்சோர்பு
பனிமல்கப்
பொறைநில்லா நோயோடு புல்லென்ற
நுதலிவள்
விறனல னிழப்பவும் வினைவேட்டாய்
கேளினி ;
6 உடையிவ ளுயிர்வாழாள் நீநீப்பி னெனப்பல
இடைகொண்டியா மிரப்பவு மெமகொள்ளா
யாயினை
கடைஇய ஆற்றிடை நீர்நீத்த வறுஞ்சுனை
அடையொடு வாடிய அணிமலர் தகைப்பன ;

பாலைபாடிய பெருங்கடுங்கோ

949

10 வல்லைநீ துறப்பாயேல் வகைவாடு மிவளென
ஒல்லாங்கியா மிரப்பவு முணர்ந்தீயா யாயினை
செல்லுநீ ளாற்றிடைச் சேர்ந்தெழுந்த
மரம்வாடப்
புல்லுவிட் டிறைஞ்சிய பூங்கொடி தகைப்பன ;

14 பிணிபுநீ விடல்சூழிற் பிறழ்தரு மிவளெனப்
பணிபுவந் திரப்பவும் பலசூழ்வா யாயினை
துணிபுநீ செலக்கண்ட ஆற்றிடை யம்மரத்து
அணிசெல வாடிய அந்தளிர் தகைப்பன ;
எனவாங்கு,
19 யாம்நிற் கூறவு மெமகொள்ளா யாயினை
ஆனு திவள்போ லருள்வந் தவைகாட்டி
மேனின்று மெய்கூறுங் கேளிர்போல் நீசெல்லுங்
கானந் தகைப்ப செலவு.

தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகட்கு அஃது உரைத்து, அவளது ஆற்றாமையின்வகை தலைமகற்கு உணர்த்தவும், பின்னும் பிரிவின்மேற்சென்ற உள்ளத்தனாயினானை, நீர்செல்லுங் கானமே நும்மை இடிக்குங் கேளிர்போல விலக்குமென, அவன் செலவழுங்கும் வகை அவள் கூறியது.

**1652. கலித்தொகை - 4. பாலை : 3**

வலிமுன்பின் வல்லென்ற யாக்கைப்
புலிநோக்கிற்
சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தையர்
அற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்தாங்
கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்
5 துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலிற்
புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை
வெள்வேல் வலத்திர் பொருள்தரல் வேட்கையின்
உள்ளினி ரென்ப தறிந்தன ளென்தோழி ;

9 காழ்விரி கவையாரம் மீவரு மிளமுலை
போழ்திடைப் படாஅமல் முயங்கியு மமையாரென்
தாழ்கதுப் பணிகுவர் காதலர் மற்றவர்
சூழ்வதை யெவன்கொல் அறியே னென்னும் ;



13 முள்ளுறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக்
கள்ளினு மகிழ்செயு மெனவுரைத்து மமையாரென்
ஒள்ளிழை திருத்துவர் காதலர் மற்றவர்
உள்ளுவ தெவன்கொல் அறியே னென்னும் ;

17 நுண்ணெழில் மாமைச் சுணங்கணி யாகந்தங்
கண்ணொடு தொடுத்தென நோக்கியு
மமையாரென்
ஒண்ணுதல் நீவுவர் காதலர் மற்றவர்
எண்ணுவ தெவன்கொல் அறியே
னென்னும் ;

எனவாங்கு,

22

கழிபெரு நல்கலொன் றுடைத்தென என்தோழி
அழிவொடு கலங்கிய எவ்வத்த ளொருநாள்நீர்
பொழுதிடைப் படநீப்பின் வாழ்வாளோ
ஒழிகினிப் பெருமநின் பொருட்பிணிச்
செலவே.

பொருள்வயிற் பிரிவேனென்ற தலைமகற்கு,
தோழி, தலைவி

செலவுக் குறிப்பு அறிந்தவாறும், அவளது
ஆற்றாமையும் உணர்த்தி,

செலவு ஒழிவாயாகவெனக் கூறியது.

**1653.** கலித்தோகை - **5.** பாலை : **4**

பாஅ லஞ்செவிப் பணைத்தாள் மாநிரை
மாஅல் யானையொடு மறவர் மயங்கித்
தூறதர் பட்ட ஆறுமயங் கருஞ்சுரம்
இறந்துநீர் செய்யும் பொருளினும்
**5** சிறந்தன மாத லறிந்தனி ராயின்

யாம்நுமக்குச்

நீளிரு முந்நீர் வளிகலன் வௌவலின்
ஆள்வினைக் கழிந்தோர் போறலல்லதை

கேள்பெருந் தகையோ டெவன்பல மொழிகுவம்
நாளுங் கோண்மீன் தகைத்தலுந் தகைமே ;

10 கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபிற்
புல்லென்ற களம்போலப் புலம்புகொண் டமைவாளோ;
12 ஆள்பவர் கலக்குற அலைபெற்ற நாடுபோற்
பாழ்பட்ட முகத்தோடு பைதல்கொண் டமைவாளோ;

பாலைபாடிய பெருங்கடுங்கோ

951

14 ஓரிரா வைகலுள் தாமரைப் பொய்கையுள்
நீர்நீத்த மலர்போல நீ நீப்பின் வாழ்வாளோ;
எனவாங்கு,
17 பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்டு
எந்நாளோ நெடுந்தகாய் நீ செல்வது
அந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே.

தலைமகன் பொருள்வயிற் பிரிவலெனக் கேட்டதோழி தான் ஆற்றுளாய் நீர் செய்யும் பொருளினும் யாம் உமக்குச் சிறந்தேமென்பது நும் உள்ளத்து உளதெனின் நும்மை நாளும் புள்ளும் விலக்குமெனவும், இவள் பிரிந்திருப்பார் இருக்குமாறு

இருப்பா ளல்லள், பிரிந்த அன்றே இறந்து படுவளெனவுஞ் சொல்லிச் செல வழுங்குவித்தது.

## 1654. கலித்தொகை - 6. பாலை: 5

மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்தம்
உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
5 தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்றால்
என்னீ ரறியாதீர் போல இவைகூறல்
நின்னீர வல்ல நெடுந்தகா யெம்மையும்
அன்பறச் சூழாதே யாற்றிடை நும்மொடு
10 துன்பந் துணையாக நாடின் அதுவல்லது
இன்பமு முண்டோ எமக்கு.

தலைவன் செலவுக்குறிப்பறிந்து நீர் செல்லுங்
கடுஞ்சுரத்துத்
துன்பத்திற்குத் துணையாக எம்மையும் உடன்கொண்டு
சென்மி
னெனத் தலைவி கூறியது.



## 1655. கலித்தொகை - 7. பாலை: 6

வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு
வானீங்கு வைப்பின் வழங்காத்தேர்
நீர்க்கவாஅங்
கானங் கடத்தி ரெனக்கேட்பின் யானென்று
உசாவுகோ ஐய சிறிது ;
5 நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந்
தியாழநின்
கைபுனை வல்வில் ஞாணுளர் தீயே
இவட்கே, செய்வுறு மண்டில மையாப்
பதுபோல்
மையில் வாண்முகம் பசப்பூ ரும்மே ;
9 நீயே, வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் மரீஇய அம்பு தெரிதியே
இவட்கே, சுனைமா ணீலங் காரெதிர்
பவைபோல்
இனைநோக் குண்கண் ணீர்நில் லாவே ;
13 நீயே, புல்பி லுள்ளமொடு பொருள்வயிற்
செலீஇய
வலம்படு திகிரி வாய்நீ வுதியே
இவட்கே, அலங்கிதழ்க் கோடல் வீயுகு
பவைபோல்
இலங்கே ரெல்வளை இறையூ ரும்மே ;
17 எனநின்,
சென்னவை யரவத்து மினையவள் நீப்பின்

தன்னலங் கடைகொளப் படுதலின் மற்றிவள்
இன்னுயிர் தருதலும் ஆற்றுமோ
முன்னிய தேஎத்து முயன்றுசெய் பொருளே.

பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகற்கு 'நீர் பிரிகின்றீரென்று யான்கூறத் தலைவி கேட்பின் அவட்கு அக்காலத்து நிகழ்வன வற்றை நும்மோடு ஆராய்வதுடையேன்; நீர் செய்யும் பொருள் இவளுயிரையுந் தருகிற்குமோ' எனச் செலவழுங்கக் கூறியது.

"உடன்சேறல் செய்கையொ டன்னவை பிறவு, மடம்பட வந்த தோழி கண்ணும்" என்பதனுட் செய்கை கூறுகின்றது.



## 1656. கலித்தொகை - 8. பாலை : 7

நடுவிகந் தொரீஇ நயனில்லான் வினைவாங்கக்
கொடிதோர்த்த மன்னவன் கோல்போல
ஞாயிறு
கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினந் தெறுதலின்
உறலூறு கமழ்கடாஅத் தொல்கிய
எழில்வேழம்
5 வறனுழு நாஞ்சில்போல் மருப்பூன்றி
நிலஞ்சேர

விறல்மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரஞ்
சொல்லா திறப்பத் துணிந்தனிர்க்
கொருபொருள்
சொல்லுவ துடையேன் கேண்மின்மற் றைஇய
;
9 வீழுநர்க் கிறைச்சியாய் விரல்கவர்
பிசைக்குங்கோல்
ஏழுந்தம் பயன்கெட இடைநின்ற நரம்பறூஉம்
யாழினும் நிலையில்லாப் பொருளையும்
நச்சுபவோ ;
12 மரீஇத்தாங்கொண்டாரைக் கொண்டக்காற்
போலாது
பிரியுங்காற் பிறரெள்ளப் பீடின்றிப் புறமாறுந்
திருவினும் நிலையில்லாப் பொருளையும்
நச்சுபவோ ;
15 புரைதவப் பயனோக்கார் தம்மாக்க
முயல்வாரை
வரைவின்றிச் செறும்பொழுதிற் கண்ணோடா துயிர்
வௌவும்
அரைசினும் நிலையில்லாப் பொருளையும்
நச்சுபவோ ;
எனவாங்கு,
19 நச்சல் கூடாது பெரும இச்செலவு
ஒழிதல் வேண்டுவல் சூழிற் பழியின்று

மன்னவன் புறந்தர வருவிருந் தோம்பித்
தன்னகர் விழையக் கூடின்
இன்னுறல் வியன்மார்ப அதுமனும்
பொருளே.

சொல்லாது பிரியலுற்ற தலைவன் குறிப்பறிந்து தோழி பொருளது நிலையாமைகூறி அவளோடு கூடிச் செல்கின்ற இல்வாழ்க்கைச் செலவே பொருளென அவன் செலவழுங்கக் கூறியது.



## 1657. கலித்தோகை - 9. பாலை : 8

எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயல்மாலைக் கொளைநடை யந்தணீர்
5 வெவ்விடைச் செலல்மாலை யொழுக்கத்தீ ரிவ்விடை
என்மக ளொருத்தியும் பிறள்மக னொருவனும்
தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சியர்
அன்னா ரிருவரைக் காணிரோ பெரும
9 காணே மல்லேங் கண்டனங் கடத்திடை
ஆணெழி லண்ணலோ டருஞ்சுர முன்னிய
மாணிழை மடவரல் தாயிர்நீர் போறிர் ;
12 பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதா

மென்செய்யும்
நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே ;

15 சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா
மென்செய்யும்
தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே ;

18 ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா
மென்செய்யும்
சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே ;
எனவாங்கு,

22 இறந்த கற்பினுட் கெவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்
அறந்தலை பிரியா வாறுமற் றதுவே.

உடன்போய தலைவிபின் சென்ற செவிலி
இடைச்சுரத்து முக்கோற் பகவரைக் கண்டு இவ்வகைப்
பட்டாரை ஆண்டுக்காணீரோ வென வினவியாட்கு,
அவரைக்கண்டு அஃதற மெனவே கருதிப்
போந்தேம்;நீரும் அவர்திறத்து எவ்வம்பட வேண்டாவென
எடுத்துக் காட்டி, அவர் தெருட்டியது.

பாலைபாடிய பெருங்கடுங்கோ

955

**1658. கலித்தொகை - 10. பாலை : 9**

வறியவ னிளமைபோல் வாடிய சினையவாய்ச்

சிறியவன் செல்வம்போற் சேர்ந்தார்க்கு
யார்கண்ணு மிகந்துசெய் திசைகெட்டா

நிழலின்றி
னிறுதிபோல்
வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலின்
5

அலவுற்றுக் குடிகூவ ஆறின்றிப் பொருள்வெஃகிக்
கொலையஞ்சா வினைவராற் கோல்கோடி யவனிழல்
உலகுபோ லுலறிய உயர்மர வெஞ்சுரம் ;
8 இடைகொண்டு பொருள்வயி னிறத்திநீ
யெனக்கேட்பின்
உடைபுநெஞ் சுகவாங்கே யொளியோடற்பாள்மன்னோ
படையமை சேக்கையுட் பாயலி னறியாய்நீ
புடைபெயர்வா யாயினும் புலம்புகொண்
டினைபவள் ;
12 முனிவின்றி முயல்பொருட் கிறத்திநீ
யெனக்கேட்பிற்
பனியகண் படலொல்லா படர்கூர்கிற்
பாள்மன்னோ
நனிகொண்ட சாயலாள் நயந்துநீ நகையாகத்

துனிசெய்து நீடினுந் துறப்பஞ்சிக் கலுழ்பவள்
;

16 பொருளொக்கிப் பிரிந்துநீ போகுதி
யெனக்கேட்பின்
மருளொக்க மடிந்தாங்கே மயல்கூர்கிற்
பாள்மன்னோ
இருளொக்க மிடையின்றி ஈரத்தி னியன்றநின்
அருளொக்க மழியினும் அவலங்கொண்
டழிபவள் ;
எனவாங்கு,
21 வினைவெஃகி நீசெலின் விடுமிவ ளுயிரெனப்
புனையிழாய் நின்னிலை யான்கூறப் பையென
நிலவுவேல் நெடுந்தகை நீளிடைச்
செலவொழிந் தனனாற் செறிகநின் வளையே.
தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி,
இவ்வகைப்பட்ட சுரத்தைப் பொருள்காரணமாகப்
பிரிகின்றீரெனக் கேட்பின் இவ் வகை யாகற்பாலளெனச்
சொல்லிச் செலவழுங்குவித்தமை தலை மகட்குச்
சொல்லியது.



**1659.** கலித்தொகை - **11.** பாலை : **10**
அரிதாய அறனெய்தி யருளியோர்க்

களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங்
காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய்
வலிப்பல்யான்கேளினி;
6 அடிதாங்கு மளவின்றி அழலன்ன
வெம்மையாற்
கடியவே கனங்குழாஅய் காடென்றா ரக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப்பின் னுண் ணுங்களிறெனவுமுரைத்தனரே
;
10 இன்பத்தி னிகந்தொரீஇ இலைதீந்த
உலவையால்
துன்புறூஉந் தகையவே காடென்றா
ரக்காட்டுள்
அன்புகொள் மடப்பெடை அசைஇய
வருத்தத்தை
மென்சிறக ராலாற்றும் புறவெனவு
முரைத்தனரே ;
14 கல்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலால்
துன்னரூஉந் தகையவே காடென்றா
ரக்காட்டுள்
இன்னிழ லின்மையான் வருந்திய
மடப்பிணைக்குத்

தன்னிழலைக் கொடுத்தளிக்கும் கலையெனவு
முரைத்தனரே

என வாங்கு,

19 இனைநல முடைய கானஞ் சென்றோர்
புனைநலம் வாட்டுந ரல்லர் மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழி லுண்கணும் ஆடுமா லிடனே.

தலைவி, மூன்றன்பகுதி தலைவன்கூறிப்
பொருள்வயிற் பிரி

ின்ற காலத்துக் காடு கடியவாயினும் இவ்வகைப்
பட்டனவும் உள

வென்று கூறினர், அவை காண்டலின் வருவரெனத்
தோழிக்குக்

கூறி அதற்கு நிமித்தமுங் கூறி ஆற்றுவித்தது.

மூன்றன்பகுதி கூறுதலாவது அறத்ினுற்
பொருளாக்கி அப்

பொருளாற் காமம் நுகர்வேனென்றலாம். உடைமையது
உயர்ச்சி

கூறிப் பிரிந்தானெனக் கிளவி கூறிற் பொருள்வயிற்
பிரிதலின்றாம்;

அது பொருள்வயிற் பிரிவை விலக்குமென்றலின்.

பாலைபாடிய பெருங்கடுங்கோ

957

## 1660. கலித்தொகை - 12. பாலை : 11

இடுமுள் நெடுவேலி போலக் கொலைவர்
கொடுமரந் தேய்த்தார் பதுக்கை நிரைத்த
கடுகவை யாராற் றறுசுனை முற்றி
உடங்குநீர் வேட்ட உடம்புயங்கு யானை
5 கடுந்தாம் பதிபாங்குக் கைதெறப் பட்டு
வெறிநிரை வேறாகச் சார்ச்சார லோடி
நெறிமயக் குற்ற நிரம்பாநீ டத்தஞ்
சிறுநனி நீதுஞ்சி யேற்பினும் அஞ்சும்
நறுநுதல் நீத்துப் பொருள்வயிற் செல்வோய்
10 உரனுடை யுள்ளத்தை செய்பொருள் முற்றிய
வளமையா னாகும் பொருளிது வென்பாய்
இளமையுங் காமமும் நின்பாணி நில்லா

இடைமுலைக் கோதை குழைய முயங்கும்
முறைநாள் கழித லுறுஅமைக் காண்டை
15 கடைநா ளிதுவென் றறிந்தாரு மில்லை
போற்றாய் பெருமநீ காமம் புகர்பட
வேற்றுமைக் கொண்டு பொருள்வயிற் போகுவாய்
கூற்றமும் மூப்பும் மறந்தாரோ டோராஅங்கு
மாற்றுமைக் கொண்ட வழி.

தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி காட்டது கடுமையுந் தலைவியது மென்மையும் "நாளது சின்மையு மிளமைய தருமையுந் தாளாண் பக்கமுந் தகுதிய தமைதியும் அன்பின தகலமு மகற்சிய தருமையும்" கூறிச் செலவழுங்குவித்தது.

## 1661. கலித்தோகை - 13. பாலை : 12

செருமிகு சினவேந்தன் சிவந்திறுத்த புலம்போல
எரிமேய்ந்த கரிவறல் வாய்புகுவ காணுவாய்ப்
பொரிமலர்ந் தன்ன பொறிய மடமான்
திரிமருப் பேறொடு தேர றற் கோட
5 மரல்சாய மலைவெம்ப மந்தி யுயங்க
உரல்போ லடிய உடம்புயங்கு யானை



ஊறுநீ ரடங்கலின் உண்கயங் காணாது
சேறு சுவைத்துத்தஞ் செல்லுயிர் தாங்கும்
புயல்துளி மாறிய போக்கரு வெஞ்சுரம் ;

10 எல்வளை யெம்மொடு நீவரின் யாழநின்
மெல்லியல் மேவந்த சீறடித் தாமரை
அல்லிசே ராயித ழரக்குத்தோய்ந் தவைபோலக்
கல்லுறின் அவ்வடி கறுக்குந வல்லவோ ;
14 நலம்பெறு சுடர்நுத லெம்மொடு நீவரின்
இலங்குமா ணவிர்தூவி யன்னமென் சேக்கையுள்
துலங்குமான் மேலூர்ந்து துயிலேற்பாய் மற்றுண்டை
விலங்குமான் குரல்கேட்பின் வெருவுவை யல்லையோ ;
18 கிளிபுரை கிளவியா யெம்மொடு நீவரின்

தளிபொழி தளிரன்ன எழின்மேனி தகைவாட
முளியரில் பொத்திய முழங்கழ லிடைபோழ்ந்த
வளியுறின் அவ்வெழில் வாடுவை யல்லையோ ;

எனவாங்கு,

23 அணையவை காதலர் கூறலின் வினைவயிற்
பிரிகுவ ரெனப்பெரி தழியாதி திரிபுநீஇக்
கடுங்குரை யருமைய காடெனி னல்லது
கொடுங்குழாய் துறக்குந ரல்லர்
நடுங்குதல் காண்மார் நகைகுறித் தனரே.

தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றாளாய தலைமகள், யான் நும்மோடு போதுவல் என்றாட்கு, தலைவன் அவளது மென்மையுங் காட்டின் கடுமையுங்கூறி உடம்படானாக, ஆற்றாளாய தலைவியைத் தோழி, அவர் நம்மோடு நகையாடிச் சொன்னார் பிரிவாரல்லரென வற்புறுத்தியது.

**1662. கலித்தோகை - 14. பாலை : 13**

அணைமரு ளின்றுயில் அம்பணைத்
தடமென்தோள்

துணைமல ரெழினீலத் தேந்தெழில்
மலருண்கண்

மணமௌவல் முகையன்ன மாவீழ்வார்நிரைவெண்பல்
மணநாறு நறுநுதல் மாரிவீ ழிருங்கூந்தல்
5 அலர்முலை யாகத் தகன்ற அல்குற்
சிலநிரை வால்வளைச் செய்யா யோவெனப்
பலபல கட்டுரை பண்டையிற் பாராட்டி
இனிய சொல்லி இன்னாங்குப் பெயர்ப்பது
இனியறிந் தேனது துனியா குதலே;

10 பொருளல்லாற் பொருளுமுண் டோவென யாழநின்
மருளிகொள் மடநோக்க மயக்கப்பட் டயர்த்தாயோ;

12 காதலா ரெவன்செய்ப பொருளில்லா தார்க்கென
ஏதிலார் கூறுஞ்சொற் பொருளாக மதித்தாயோ;

14 செம்மையி னிகந்தொரீஇப் பொருள்செய்வார்க் கப்பொருள்
இம்மையும் மறுமையும் பகையாவ தறியாயோ;

16 அதனால்,

எம்மையும் பொருளாக மதித்தீத்தை நம்முள்நாங்
கவவுக்கை விடப்பெறும் பொருட்டிறத்து
அவவுக்கை விடுத லதுமனும் பொருளே.

தலைமகனுற்பிரிவுணர்த்தப்பட்டதோழி,தலைமகற்கு'முன்னையிற் சிறப்ப எம்வயிற் பாராட்டியதெல்லாம் எம்வயிற் பிறந்த வெறுப் பென்பது இப்பொழுதறிந்தேன்; இவ்வகைப்பட்ட போக்கு நினக்கு எவ்வகையான் வந்தது' என, அவன் செலவழுங்கச் சொல்லியது.

1663. கலித்தோகை - 15. பாலை : 14

அரிமா னிடித்தன்ன அஞ்சிலை வல்விற்
புரிசாண் புடையிற் புறங்காண்ட லல்லால்
இணைப்படைத் தானை யரசோ டுறினுங்
கணைத்தொடை நாணுங் கடுந்துடி யார்ப்பின்
5 எருத்து வலிய வெறுழ்நோக் கிரலை
மருப்பிற் றிரிந்து மறிந்துவீழ் தாடி
உருத்த கடுஞ்சினத் தோடா மறவர்



பொருள்கொண்டு புண்செயி னல்லதை
யன்போடு அருள்புற மாறிய ஆரிடை யத்தம்;
10 புரிபுநீ புறமாறிப் போக்கெண்ணிப்
பெருகிய செல்வத்தாற் பெயர்த்தர
செயலையந் தளிரேய்க்கு மெழினல

புதிதீண்டிப்
லொல்வதோ
மங்கலம்
பயலையா லுணப்பட்டுப் பண்டைநீ
ரொழிந்தக்கால்;
14 பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப்
படர்ந்து நீ

மையற்ற படிவத்தான் மறுத்தர லொல்வதோ
தீங்கதிர் மதியேய்க்குந்
பாம்புசேர் மதிபோலப்

திருமுக மம்முகம்
பசப்பூர்ந்து தொலைந்தக்கால் ;

18 பின்னிய தொடர்நீவிப் பிறர்நாட்டுப்
படர்ந்துநீ
மன்னிய புணர்ச்சியான் மறுத்தர
லொல்வதோ
புரியவிழ் நறுநீலம் புரையுண்கண் கலுழ்பானாத்
திரியுமிழ் நெய்யேபோல் தெண்பனி
யுறைக்குங்கால் ;

எனவாங்கு,

23 அனையவை போற்றி நினைஇயன நாடிக்காண்
வளமையோ வைகலுஞ் செயலாகு மற்றிவண்
முளைநிரை முறுவலா ராயத்து ளெடுத்தாய்ந்த
இளமையுந் தருவதோ இறந்த பின்னே.

பிரிவுணர்த்திய தலைமகற்கு, தோழி, தலைமகளது ஆற்றாமையும் இளமைய தருமையுங்கூறி, நீர் பிரிந்து செய்யக் கருதியவை எக்காலத்துஞ் செய்யலாம். பொருளால், கழிந்த இளமைமீட்கலாமோ வெனக் கூறியது.

பாடின்றிப் பசந்தகண் பைதல பனிமல்க
வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர
ஆடெழி லழிவஞ்சா தகன்றவர் திறத்தினி ~
நாடுங்கால்நினைப்பதொன் றுடையேன்மன்ன
துவுந்தான்

பாலைபாடிய பெருங்கடுங்கோ

961

5 தொன்னலந் தொலைபீங்கியாம் துயருழப்பத்
துறந்துள்ளார்
துன்னிநங் காதலர் துறந்தேகும் ஆரிடைக்
கன்மிசை யுருப்பறக் கனைதுளி சிதறென
இன்னிசை யெழிலியை யிரப்பவு மிவைவதோ

;

9

புனையிழா யீங்குநாம் புலம்புறப் பொருள்வெஃகி
முனையென்னார் காதலர் முன்னிய ஆரிடைச்
சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்
கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ ;

13 ஒளியிழா யீங்குநாம் துயர்கூரப் பொருள்வயின்
அளியொரீஇக் காதல ரகன்றேகும் ஆரிடை
முளிமுதல் மூழ்கிய வெம்மைதீர்ந் துறுகென
வளிதருஞ் செல்வனை வாழ்த்தவு லியைவதோ ;

எனவாங்கு,

18 செய்பொருட் சிறப்பெண்ணிச் செல்வார்மாட் டினையன
தெய்வத்துத் திறனோக்கித் தெருமரல் தேமொழி
வறனோடின் வையகத்து வான்தருங் கற்பினாள்
நிறனோடிப் பசப்பூர்த லுண்டென
அறனோடி விலங்கின்றவ ராள்வினைத் திறத்தே.

தலைமகன் பொருள்வயிற்பிரிந்த இடத்து அவன் போகிய காட்டது கடுமை நினைந்து ஆற்றாளாகிய தலைமகள் அவர் பொருட்டாக நாம் இவ்வகைப்பட்ட தெய்வங்களைப் பரவுதல் நங்கற்புக்கு இயைவதோவென, கேட்ட தோழி அவ்வாற்றானே மீண்டனர் நீ கவலவேண்டாவெனக் கூறியது.

1665. கலித்தொகை - 17. பாலை : 16

படைபண்ணிப் புனையவும் பாமாண்ட
பலவணைப்
புடைபெயர்ந் தொடுங்கவும் புறஞ்சேர
வுயிர்ப்பவும்
உடையதை யெவன்கொலென் றாறளந்
தவர்வயின்
நடைசெல்லாய் நனியேங்கி நடுங்கற்காண்
61



5 தொல்லெழில் தொலைபிவள் துயருழப்பத் துறந்
துநீ
வல்வினை வயக்குதல் வலித்திமன் வலிப்பளவை
நீள்கதி ரவிர்மதி நிறைவுபோல் நிலையாது
நாளினும் நெகிழ்போடு நலனுட னிலையுமோ ;

9 ஆற்றலை யடவிவள் அணிவாட அகன்றுநீ
தோற்றஞ்சால் தொகுபொருள்முயறிமன் முயல்வளவை
நாற்றஞ்சால் நளிபொய்கை அடைமுதிர் முகையிற்குக்
கூற்றாழ்போற் குறைபடூஉம் வாழ்நாளும் நிலையுமோ ;

13 வகையெழில் வனப்பெஞ்ச வரைபோக
வலித்துநீ
பகையறு பயவினை முயறிமன் முயல்வளவைத்
தகைவண்டு புதிதுண்ணத் தாதவிழ்
தண்போதின்

முகைவாய்த்த தடம்போலு மிளமையும்
நிலையுமோ ;

எனவாங்கு,

18 பொருந்தியான்தான்வேட்டபொருள்வயின்
நினைந்தசொல்

திருந்திய யாக்கையுள் மருத்துவ னூட்டிய
மருந்துபோல் மருந்தாகி மனனுவப்பப்
பெரும்பெயர் மீளி பெயர்ந்தனன் செலவே.

பகைவர் திறைதந்த நாடு காத்தற்கு (தலைவன்)
பிரிகின்றமை
யுணர்ந்து தலைவி வேறுபட்டமைகண்டு தோழி அவனை
எதிர்ப்பட்டு
அவளது ஆற்றாமையும் இளமையதருமையுங் கூறிச்
செலவழுங்கு
வித்தமை தலைமகட்குக் கூறியது.

**1666.** கலித்தொகை - **18.** பாலை : **17**

அரும்பொருள் வேட்கையின் உள்ளங்

தூரப்பப்

பிரிந்துறை சூழாதி யைய விரும்பிநீ
என்றோ ளெழுதிய தொய்யிலும் யாழ நின்
மைந்துடை மார்பிற் சுணங்கும் நினைத்துக்காண்
5 சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவாது
ஒழிந்தவ ரெல்லாரு முண்ணுதுஞ் செல்லார்
இளமையுங் காமமு மோராங்குப் பெற்றார்
வளமை விழைதக்க துண்டோ உளநாள்

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

963

ஒரோஒகை தம்முள் தழீஇ யொரோஒகை
10 ஒன்றன்கூ றுடை யுடுப்பவரே யாயினும்
ஒன்றினர் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ
சென்ற இளமை தரற்கு.

"ஒன்றாத்தமரினும்" என்னுஞ் சூத்திரத்தில் "நாளது சின்மையு மிளமைய தருமையுந், தாளாண் பக்கமுந் தகுதியதமைதியு மின்மைய திழிவு முடைமைய துயர்ச்சியு, மன்பின தகலமு மகற்சிய தருமையும்" எனக்கூறிய எட்டினையும் தலைவன் கூறக்கேட்ட தோழி, அவற்றை "நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே" என்னும் விதியாற் றலைவற்குக் கூறிச் செலவழுங்குவித்தது.

**1667**. கலித்தோகை - **19**. பாலை : **18**

செவ்விய தீவிய சொல்லி யவற்றொடு

பைய முயங்கிய வஞ்ஞான் றவையெல்லாம்
பொய்யா தல் யான்யாங் கறிகோமற் றைய
அகனகர் கொள்ளா அலர்தலைத் தந்து
பகல்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன்
மகனல்லை மன்ற இனி ;

7 செல்லினிச் சென்றுநீ செய்யும் வினைமுற்றி
அன்பற மாறியா முள்ளத் துறந்தவள்
பண்பு மறிதிரோ வென்று வருவாரை
என்திறம் யாதும் வினவல் வினவிற்
பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்
தவலருஞ் செய்வினை முற்றும லாண்டோர்
அவலம் படுதலு முண்டு.

பிரிவுணர்த்தப்பட்ட தோழி செலவு விலக்கவும் பிரிவின்மேற் சென்ற உள்ளத்தனையினனை நீ பிரியின் இவள் இறந்துபடுமெனச் சொல்லிய வாய்பட்டான் மறுத்தது.

## 1668. கலித்தோகை - 20. பாலை : 19

பல்வளம் பகர்பூட்டும் பயனிலம் பைதறச்
செல்கதிர் ஞாயிறு செயிர்சினஞ் சொரிதலில்



தணிவில்வெங்கோடைக்குத் தண்ணயந்தணிகொள்ளும்
பிணிதெற லுயக்கத்த பெருங்களிற் றினந்தாங்கு
5 மணிதிகழ் விறல்மலை வெம்ப மண்பகத்
துணிகயந் துகள்பட்ட தூங்கழல் வெஞ்சுரம் ;

7 கிளிபுரை கிளவியாய் நின்னடிக் கெளியவோ
தளியுறு பறியாவே காடெனக் கூறுவீர்
வளியினும் வரைநில்லா வாழுநாள் நும்மாகத்து
அளியென உடையேன்யான் அவலங்கொண்
டழிவலோ
11 ஊறுநீ ரமிழ்தேய்க்கு மெயிற்றாய்நீ
யுணல்வேட்பின்
ஆறுநீ ரிலவென அறனோக்கிக் கூறுவீர்
யாறுநீர் கழிந்தன்ன விளமைநுந் நெஞ்சென்னுந்
தேறுநீ ருடையேன்யான் தெருமந்தீங்
கொழிவலோ;
15

மாணெழில் வேய்வென்ற தோளாய்நீ வரிற்றாங்கு
மாணிழ லிலவாண்டை மரமெனக் கூறுவீர்
நீணிழற் றளிர்போல நிறனூழ்த்த லறிவேனுந்
தாணிழல் கைவிட்டியான் தவிர்தலைச் சூழ்வலோ
;
எனவாங்கு,
20 அணையரும் வெம்மைய காடெனக் கூறுவீர்
கணைகழி கல்லாத கல்பிறங் காரிடைப்
பணையெருத் தெழிலேற்றின் பின்னர்ப்
பிணையுங் காணிரோ பிரியுமோ அவையே.
பிரிவுணர்த்திய தலைவற்குத் தலைவி எம்மையும்

உடன்கொண்டு சென்மினென்றுட்கு அவன் கானின் கடுமையுந் தலைவி மென்மையுங் கூறுவது கேட்ட தலைவி நாளது சின்மையும் இளமையதருமை யுங் கூறி எம்மையும் உடன்கொண்டு சென்மினென்றது.

## 1669. கலித்தொகை - 21. பாலை : 20

பால்மருள் மருப்பின் உரல்புரை பாவடி ஈர்நறுங் கமழ்கடாஅத் தினம்பிரி யொருத்தல் ஆறுகடி கொள்ளும் வேறுபுலம் படர்ந்து

பாலைபாடிய பெருங்கடுங்கோ

965

பொருள்வயிற் பிரிதல் வேண்டு மென்னும்
5 அருளில் சொல்லும் நீசொல் லினையே
நன்னர் நறுநுதல் நயந்தனை நீவி
நின்னிற் பிரியலென் அஞ்சலோம் பென்னும்
நன்னர் மொழியும் நீமொழிந் தனையே
அவற்றுள், யாவோ வாயின மாஅல் மகனே
10 கிழவ ரின்னோ ரென்னாது பொருள்தான்
பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையும்
அன்ன பொருள்வயிற் பிரிவோய் நின்னின்று
இமைப்புவரை வாழாள் மடவோள்
அமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே.

தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி அவனை நெருங்கிக் களவுகாலத்தொழுக்கம் எடுத்துக் காட்டலாற் றெளிவுபட மொழிந்த

தூஉம் பொருளது நிலையின்மையும் அவளது ஆற்ருமையுங் கூறிச்
செலவுமறுத்தது.

## 1670. கலித்தொகை - 22. பாலை : 21

உண்கடன் வழிமொழிந் திரக்குங்கால் முகனுந்தாம்
கொண்டது கொடுக்குங்கால் முகனும்வே ருகுதல்
பண்டுமிவ் வுலகத் தியற்கை யஃதின்றும்
புதுவ தன்றே புலனுடை மாந்திர்
5 தாயுயிர் பெய்த பாவை போல
நலனுடை யார்மொழிக்கட் டாவார்தாந் தந்நலந்
தாதுதேர் பறவையி னருந்திறல் கொடுக்குங்கால்
ஏதிலார்கூறுவ தெவனோநின் பொருள்வேட்கை ;
9 நறுமுல்லை நேர்முகை யொப்ப நிரைத்த
செறிமுறை பாராட்டி னய்மற்றெம் பல்லின்
பறிமுறை பாராட் டினேயோ ஐய ; 12
நெய்யிடை நீவி மணியொளி விட்டன்ன
ஐவகை பாராட்டி னய்மற்றெங் கூந்தற்
செய்வினை பாராட் டினேயோ ஐய ;



15 குளனணி தாமரைப் பாசரும் பேய்க்கும்
இளமுலை பாராட்டி னய்மற்றெம் மார்பிற்
றளர்முலை பாராட் டினேயோ ஐய ;

எனவாங்கு,

அடர்பொ னவிரேய்க்கும் அவ்வரி வாடச்
சுடர்காய் சுரம்போகு நும்மையா மெங்கண்
படர்கூற நின்றது முண்டோ தொடர்கூரத்
துவ்வாமை வந்தக் கடை.

பிரிவுணர்த்தப்பட்ட தோழி அதற்கு உடம்படாது தலைமகனை

நெருங்கிக் களவுகாலத்தொழுக்கம் எடுத்துக்காட்டி ஆற்றுவித்து

உடம்பட்ட வாய்பாட்டான் மறுத்தது.

**1671.** கலித்தொகை - **23.** பாலை : **22**

இலங்கொளி மருப்பிற் கைம்மா உளம்புநர்
புலங்கடி கவணையிற் பூஞ்சினை யுதிர்க்கும்
விலங்குமலை வெம்பிய போக்கரு வெஞ்சுரந்
தனியே யிறப்ப யாமொழிந் திருத்தல்
5 நகுதக் கன்றிவ் வழுங்க லூர்க்கே ;
இனியான்,
உண்ணலு முண்ணேன் வாழலும் வாழேன் ;
8 தோணல முண்டு துறக்கப் பட்டோர்
வேணீ ருண்ட குடையோ ரன்னர் ;
10 நல்குநர் புரிந்து நலனுணப் பட்டோர்

அல்குநர் போகிய வூரோ ரன்னர் ;
12 கூடினர் புரிந்து குணனுணப் பட்டோர்
சூடின ரிட்ட பூவோ ரன்னர் ;
எனவாங்கு,
15 யானும் நின்னகத் தனையே னறைது
கொலைவெங் கொள்கையொடு நாயகப் படுப்ப

பாலைபாடிய பெருங்கடுங்கோ

967

வலைவர்க் கமர்ந்த மடமான் போல
நின்னுங்கு வரூஉமென் னெஞ்சினை
என்னுங்கு வாரா தோம்பினை கொண்மே.

பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றாளாய தலைவி எம்மையும் உடன்கொண்டு சென்மினென்றாட்கு உடன்படாது அவன் பிரியலுறத் தனது இறந்துபாடு தோன்றக் கூறியது.

**1672.** கலித்தோகை - **24.** பாலை : **23**

நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தாம்
அஞ்சிய தாங்கே யணங்காகு மென்னுஞ்சொல்
இன்றீங் கிளவியாய் வாய்மன்ற நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானும்
5 இதுவொன் றுடைத்தென எண்ணி யதுதேர
மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுட்
பாயல்கொண் டென்தோட் கனவுவார்
ஆய்கோற்

ஞெடிகிரை முன்கையாள் கையாறு
கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ
10 இடுமருப் பியானை இலங்குதேர்க் கோடும்
நெடுமலை வெஞ்சுரம் போகி நடுகின்று

செய்பொருள் முற்று மளவென்றார் ஆயிழாய்
தாமிடை கொண்ட ததுவாயின் தம்மின்றி
யாமுயிர் வாழு மதுகை யிலேமாயின்
15 தொய்யில் துறந்தா ரவரெனத் தம்வயின்
நொய்யார் நுவலும் பழிநிற்பத் தம்மொடு
போயின்று சொல்லென் னுயிர்.

தலைமகன் குறிப்புக் கண்டு பிரிவனென ஐயுற்றுச் செல்கின்ற தலைவி அக்காலத்துத் தலைவன் கனவின் அரற்றினமை கேட்டுப் பொருள்வயிற் பிரிகின்றானெனத் துணிந்துஆற்றாளாய்த்தோழிக்குச் சொல்லியது.

" மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்தே " என்பதனால் அந்தணன் அறங்கருதித் தூதிற்பிரிந்து அவ்வரசர் செய்த பூசனை வாங்கிக்கொண்டு வருதற்குப் பிரிகின்றதென்று கொள்க. " வேற்று நாட் டகல்வயின் விழுமம் " கூறுகின்றது.



1673. கலித்தொகை - 25. பாலை : 24

வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற
முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்
ஐவரென் றுலகேத்து மரசர்க ளகத்தராக்

கைபுனை யரக்கில்லைக் கதழெரி சூழ்ந்தாங்குக்
5 களிதிகழ் கடாஅத்த கடுங்களி றகத்தவா
முளிகழை யுயர்மலை முற்றிய முழங்கழல்
ஒள்ளுரு அரக்கில்லை வளிமக னுடைத்துத்தன்
உள்ளத்துக் கிளைகளோ டுயப்போகு வான்போல
எழுவுறழ் தடக்கையி னினங்காக்கு மெழில்வேழம்
10 அழுவஞ்சூழ் புகையழ லதர்பட மிதித்துத்தங்
குழுவொடு புணர்ந்துபோங் குன்றழல் வெஞ்சுரம்
இறத்திரா லையமற் றிவணிலைமை கேட்டீமின் ;
13 மணக்குங்கால் மலரன்ன தகையவாய்ச் சிறுநீர்
தணக்குங்கா றகழ்பானுக்கண்ணெனவுமுள வன்றோ
சிறப்புச்செய் துழையராப் புகழ்பேத்தி மற்றவர்
புறக்கொடையேபழிதூற் றும்புல்லியார்தொடர்புபோல்;

17 ஈங்குநீ ரளிக்குங்கா விறைசிறந் தொருநாள்நீர்
நீங்குங்கால் நெகிழ்போடும் வளையெனவு முளவன்றே
செல்வத்துட் சேர்ந்தவர் வளனுண்டு மற்றவர்
ஒல்கத்து நல்கிலா உணர்விலார் தொடர்புபோல்
;
21 ஒருநாள்நீ ரளிக்குங்கா லொளிசிறந்
தொருநாள்நீர்
பாராட்டாக் காற்பசக்கும் நுதலெனவு முளவன்றே
பொருந்திய கேண்மையின் மறையுணர்ந் தம்மறை
பிரிந்தக்காற்பிறர்க்குரைக்கும்பீடிலார்தொடர்புபோல்;
எனவாங்கு,
26 யாம்நிற் கூறுவ தெவனுண் டெம்மினும்
நீநற் கறிந்தனை நெடுந்தகை வானந்
பாலைபாடிய பெருங்கடுங்கோ
969
துளிமாறு பொழுதினிவ் வுலகம் போலுநின்
அளிமாறு பொழுதிவ் வாயிழை கவினே.
பிரிவுணர்த்தப்பட்ட தோழி நீ பிரிந்தாற் பீடிலார்
தொடர்பு போல நும்மை அலர்தூற்றுவன இவ்வகைப்பட்டன
சிலவுளவெனத் தலைவி ஆற்றாமை கூறிச்
செலவழுங்குவித்தது.

**1674.** கலித்தொகை - **26.** பாலை : **25**

ஒருகுழை யொருவன்போல் இணர்சேர்ந்த மராஅமும்
பருதியஞ் செல்வன்போல் நனையூழ்த்த செருந்தியும்
மீனேற்றுக்கொடியோன்போல்மிஞிறார்க்குங் காஞ்சியும்
ஏனோன்போல் நிறங்கிளர்பு கஞலிய ஞாழலும்
5 ஆனேற்றுக்கொடியோன்போலெதிரிய இலவமுமாங்குத்
தீதுதீர் சிறப்பின் ஐவர்கள் நிலைபோலப்
போதவிழ் மரத்தொடு பொருகரை கவின்பெற
நோதக வந்தன்றால் இளவேனில் மேதக ;

9

பல்வரி யினவண்டு புதிதுண்ணும் பருவத்துத்
தொல்கவின் தொலைந்தவென் தடமென்தோ ளுள்ளுவார்

ஒல்குபு நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
வெல்புக ழுலகேத்த விருந்துநாட் டுறைபவர் ;

13 திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்றுறை
வசைதீர்ந்த என்னலம்
நசைகொண்டு தந்நீழல்

வாடுவ தருளுவார
சேர்ந்தாரைத் தாங்கித்தம்
இசைபரந் துலகேத்த ஏதிலநாட் டுறைபவர் ;
17 அறல்சாஅய் பொழுதோடெம் அணிநுதல்

வேறுகித்
திறல்சான்ற பெருவனப் பிழப்பதை யருளுவார்
ஊறஞ்சி நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
ஆறின்றிப் பொருள்வெஃகி யகன்றநாட்
டுறைபவர் ;

21 எனநீ,

தெருமரல் வாழி தோழிநங் காதலர்
பொருமுரண் யானையர் போர்மலைந்

தெழுந்தவர் 970 சங்க இலக்கியம்

செருமேம் பட்ட வென்றியர்
வருமென வந்தன்றவர் வாய்மொழித் தூதே.

"மேவிய சிறப்பினேனோர்" என்னுஞ்
சென்ற அரசன் திறைபெற்ற நாடு காத்து

சூத்திரத்தில் பகைமேற்
அதன்கண் தன்னெறி

முறைமை அடிப்படுத்து வருவதற்குப் பிரிவனென்றலின், பிரிவின்கண் தலைவன் இளவேனிற் காலங்குறித்துப் பிரிய, அக்காலவரவின்கண் தலைவி ஆற்ருளாய் அவர் நமக்கு அருளுங் காலையில் அருளார் காணென்ருட்கு, தோழி, அவர் வரவிற்கு இக்காலம் தூதாயன்றே வந்தது? நீ ஆற்றுவாயாகவென வற்புறுத்தியது.

ஈதலிற் குறைகாட்டா தறனறிந் தொழுகிய
தீதிலான் செல்வம்போல் தீங்கரை மரம்நந்தப்
5

பேதுறு மடமொழிப் பிணையெழில் மானோக்கின்
மாதரார் முறுவல்போல்மணமௌவல்முகையூழ்ப்பக்
காதலர்ப் புணர்ந்தவர் கதுப்புப்போற் கழல்குபு
தாதொடுந் தளிரொடுந் தண்ணறல் தகைபெறப்
பேதையோன் வினைவாங்கப் பீடிலா
அரசனாட்டு
எதிலான் படைபோல இறுத்தந்த திளவேனில்
;
9 நிலம்பூத்த மரமிசை நிமிர்பாலுங் குயிலெள்ள
நலம்பூத்த நிறஞ்சாய நம்மையோ மறந்தைக்க
கலம்பூத்த அணியவர் காரிகை மகிழ்செய்யப்
புலம்பூத்துப் புகழ்பானாக் கூடலும்
உள்ளார்கொல் ;
13 கன்மிசை மயிலாலக் கறங்கியூ ரலர்தூற்றத்
தொன்னலம் நனிசாய நம்மையோ மறந்தைக்க
ஒன்னுதார்க் கடந்தடூஉ முரவுநீர் மாகொன்ற
வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும்
விரும்பார்கொல்;
17

மையெழில் மலருண்கண் மருவூட்டி மகிழ்கொள்ளப்
பொய்யினுற் புரிவுண்ட நம்மையோ மறந்தைக்க
தைஇய மகளிர்தம் ஆயமோ டமர்ந்தாடும்
வையைவா ருயரெக்கர் நுகர்ச்சியும் உள்ளார்கொல் ;

பாலைபாடிய பெருங்கடுங்கோ

971.

எனவாங்கு,

22 நோய்மலி நெஞ்சமோ டிணையல் தோழி
நாமில்லாப் புலம்பாயின் நடுக்கஞ்செய் பொழுதாயிற்
காமவேள் விழவாயிற் கலங்குவள் பெரிதென
ஏமுறு கடுந்திண்டேர் கடவி
நாமமர் காதலர் துணைதந்தார் விரைந்தே.

தலைவன் குறித்துப் பிரிந்த இளவேனில் வரவின்கண் எம்மை யோமறக்க, இக்காலத்து இவ்வூரின்கண் தாம் விளையாடும் விளை யாட்டும் மறந்தாரோவெனச்சொல்லி ஆற்ருளாய தலைவிக்கு, தோழி தலைவன் வரவுணர்ந்து கழியுவகையாற் கூறியது.

1676. கலித்தொகை - 28. பாலை : 27

பாடல்சால் சிறப்பிற் சினையவுஞ் சுனையவும்

நாடினர் கொயல்வேண்டாநயந்துதாங் கொடுப்பபோல்
தோடவிழ் கமழ்கண்ணி தையுபு புனைவார்கள்
தோடுறத் தாழ்ந்து துறைதுறை கவின்பெறச்
5 செய்யவ ளணியகலத் தாரமொ டணிகொள்பு
தொய்யகந் தாழ்ந்த கதுப்புப்போல் துவர்மணல்
வையைவா ரவிரறல் இடைபோழும் பொழுதினான் ;

8 விரிந்தானு மலராயின் விளித்தாலுங் குயிலாயின்
பிரிந்துள்ளா ரவராயின் பேதுறாஉம் பொழுதாயின்
அரும்பட ரவலநோ யாற்றுவ ளென்னாது
வருந்தநோய் மிகுமாயின் வணங்கிறை யளியென்னோ ;

12 புதலவை மலராயின் பொங்கரின வண்டாயின்
அயலதை யலராயின் அகன்றுள்ளா
ரவராயின்
மதலையில் நெஞ்சொடு மதனில ளென்னாது
நுதலூரும் பசப்பாயின் நுணங்கிறை யளியென்னோ ;
16

தோயின அறலாயின் சுரும்பார்க்குஞ் சினையாயின்
மாவின தளிராயின் மறந்துள்ளா ரவராயின்
பூவெழி லிழந்தகண் புலம்புகொண் டமையாது
பாயனோய் மிகுமாயின் பைந்தொடி
யளியென்னோ ; • 972

எனவாங்கு,

21

ஆயிழா யாங்கன முரையாதி சேயார்க்கு
நாந்தூது மொழிந்தனம் விடல்வேண்டா நம்மினுந்
தாம்பிரிந் துறைத லாற்றலர்
பரிந்தெவன் செய்தி வருகுவர் விரைந்தே.

இளவேனில் வரவின்கண் ஆற்றாத தலைவி தூதுவிடக்கருத, தோழி, அவர் பிரிந்திருத்தலை நம்மினுந் தாம் வல்லரல்லரெனச் சொல்லி வற்புறுத்தியது.

1677. கலித்தொகை - 29. பாலை : 28

தொல்லெழில் வரைத்தன்றி வயவுநோய் நலிதலின்
அல்லாந்தா ரலவுற ஈன்றவள் கிடக்கைபோற்
பல்பய முதவிய பசுமைதீ ரகன்ஞாலம்
புல்லிய புனிறொரீஇப் புதுநல மேர்தர
5 வளையவர் வண்டல்போல் வார்மணல் வடுக்கொள
இளையவ ரைம்பால்போ லெக்கர்போழ்ந் தறல்வார
மாவீன்ற தளிர்மிசை மாயவள் திதலைபோல்
ஆயிதழ்ப் பன்மல ரையகொங் குறைத்தர
மேதக இளவேனி லிறுத்தந்த பொழுதின்கண் ;

10 சேயார்கட் சென்றவென் னெஞ்சினைச்
சின்மொழி

நீகூறும் வரைத்தன்றி நிறுப்பென்மன்
நிறைநீவி

வாய்விரிபு பனியேற்ற விரவுப்பன் மலர்தீண்டி
நோய்சேர்ந்த வைகலான் வாடைவந்
தலைத்தரூஉம் ;

14 போழ்துள்ளார் துறந்தார்கண் புரிவாடுங்
கொள்கையைச்

சூழ்பாங்கே சுடரிழாய் கரப்பென்மன் கைநீவி
வீழ்கதிர் விடுத்தபூ விருந்துண்ணு மிருந்தும்பி
யாழ்கொண்ட இமிழிசை யியல்மாலை யலைத்தரூஉம்

18

;

தொடிநிலை நெகிழ்த்தார்கண் தோயுமென் னாருயிர்
வடுநீங்கு கிளவியாய் வலிப்பென்மன் வலிப்பவும்

நெடுநிலாத் திறந்துண்ண நிரையிதழ்
வாய்விட்ட. கடிமலர் கமழ்நாற்றங் கங்குல்வந்
தலைத்தரூஉம் ; பாலைபாடிய
பெருங்கடுங்கோ 973

எனவாங்கு,

23 வருந்தினை வதிந்தநின் வளைநீங்கச் சேய்நாட்டுப்
பிரிந்துசெய் பொருட்பிணி பின்னேக்கா தேகிநம்
அருந்துயர் களைஞர் வந்தனர்
திருந்தெயி றிலங்குநின் தேமொழி படர்ந்தே.

பருவ வரவின்கண் ஆற்ருத தலைவியைத் தோழி
வற்புறுப்ப, வன்புறையெதிரழிந்தாட்கு, தோழி அவன்
யாற் கூறியது.

வரவுணர்ந்து கழியுவகை

## 1678. கலித்தோகை - 30. பாலை : 29

அருந்தவம் ஆற்றியார் நுகர்ச்சிபோல் அணிகொள
விரிந்தானுச் சினைதொறூஉம் வேண்டுந்தா தமர்ந்தாடிப்
புரிந்தார்க்கும் வண்டொடு புலம்புதீர்ந் தெவ்வாயும்
இருந்தும்பி யிறைகொள எதிரிய வேனிலான் ;
5 துயிலின்றி யாம்நீந்தத் தொழுவையம் புனலாடி
மயிலியலார் மருவுண்டு மறந்தமைகு வான்மன்னே
வெயிலொளி யறியாத விரிமலர்த் தண்காவிற்
குயிலாலும் பொழுதெனக் கூறுந ருளராயின் ;
9 பானள்யாம் படர்கூரப் பணையெழி லணைமென்றோள்
மானேக்கி னவரொடு மறந்தமைகு வான்மன்னே
ஆனச்சீர்க் கூடலுள் அரும்பவிழ் நறுமுல்லைத்
தேனர்க்கும் பொழுதெனத் தெளிக்குந ருளராயின் ;
13 உறலியாம் ஒளிவாட உயர்ந்தவன் விழவினுள்

விறலிழை யவரோடு விளையாடு வான்மன்றே
பெறலரும் பொழுதோடு பிறங்கிணர்த்
துருத்திசூழ்ந்து அறல்வாரும் வையையென்
றறையுந ருளராயின் ;
எனவாங்கு,
18 தணியாரோ யுழந்தாளுத் தகையவள்
தகைபெற
அணிகிளர் நெடுந்திண்டே ரயர்மதி பணிபுகின்



காமர் கழலடி சேரா
நாமஞ்சால் தெவ்வரின் நடுங்கினள் பெரிதே.

பருவவரவின்கண் ஆற்றாத தலைமகள் இறந்தது சிந்தித்து நம் மாட்டுஅன்பிலராயினும் இக்காலத்து இவ்வூரின்கண் பண்டுதாம் விளையாடியவாறு நினைந்துவருவர் இக்கால வரவு சொல்லுவார் உளராயினெனக் கேட்ட பாணன் பாசறைக்கண் சென்று தலைவனைக் கண்டு கூறியது.

**1679.** கலித்தொகை - **31.** பாலை : **30**

கடும்புனல் கால்பட்டுக் கலுழ்தேறிக்
கவின்பெற
நெடுங்கயத் தயலயல் அயிர்தோன்ற

அம்மணல்

அடுத்தூர வரிப்பபோல் ஈங்கைவா டுதிர்புகப்
பிரிந்தவர் நுதல்போலப் பீர்வீயக் காதலர்ப்

5

புணர்ந்தவர் முகம்போலப் பொய்கைபூப் புதிதீன
மெய்கூர்ந்த பனியொடு மேல்நின்ற வாடையாற்

கையாறு கடைக்கூட்டக்
பொய்யேமென் றுயிழாய்

கலக்குறூஉம் பொழுதுமன்
புணர்ந்தவ ருரைத்ததை ;

9

மயங்கமர் மாறட்டு மண்வௌவி வருபவர்
தயங்கிய களிற்றின்மேல் தகைகாண விடுவதோ

பயங்கெழு பல்கதிர் பால்போலும் பொழுதொடு
வயங்கிழை தண்ணென வந்த இவ் வசைவாடை ;

13 தாள்வலம் படவென்று தகைநன்மா
மேல்கொண்டு

வாள்வென்று வருபவர் வனப்பார விடுவதோ

நீள்கழை நிவந்தபூ நிறம்வாடத் தூற்றுபு
தோளதிர் பகஞ்சேரத் துவற்றும் இச்
சின்மழை ;
17 பகைவென்றுதிறைகொண்ட
பாய்திண்டேர்மிசையவர்
வகைகொண்ட செம்மல்நாம் வனப்பார
விடுவதோ
புகையெனப் புதல்சூழ்ந்து பூவங்கட்
பொதிசெய்யா
முகைவெண்பல் நுதிபொர முற்றிய கடும்பனி
;. எனவாங்கு,

பாலைபாடிய பெருங்கடுங்கோ

975

22

வாளாதி வயங்கிழாய் வருந்துவள் இவளென
நாள்வரை நிறுத்துத்தாஞ் சொல்லிய பொய்யன்றி

மீளிவேற் றானையர் புகுதந்தார்
நீளுயர் கூடல் நெடுங்கொடி யெழவே.

' இளவேனிற்காலத்து வருவல், அத்துணையும் ஆற்றியிரு '
என்று மண்ணசையால் வேந்தன் சென்றவழி, முன்பனிக் கால
மும் பின்பனிக் காலமும் வந்து வருத்தலின் ஆற்றாத தலைவியைத்

தோழி வருவரென வற்புறுப்பவும், வன்புறை எதிரழிந்தவழி, தலைவன் யாங்குறித்த பருவம் வருந்துணையும் ஆற்றியிராளெனப் பின் பனிக்காலத்து வருகின்ற வரவுணர்ந்து தோழி கழியுவகையாற் கூறியது.

## 1680. கலித்தொகை - 32. பாலை : 31

எஃகிடை தொட்டகார்க் கவின்பெற்ற ஐம்பால்போல்
மையற விளங்கிய துவர்மண லதுவது
ஐதாக நெறித்தன்ன அறலவிர் நீளேம்பால்
அணிநகை யிடையிட்ட ஈகையங் கண்ணிபோற்
பிணிநெகி ழலர்வேங்கை விரிந்தபூ வெறிகொளத்
6 துணிநீரால் தூமதி நாளால் அணிபெற
ஈன்றவள் திதலைபோல் ஈர்பெய்யுந் தளிரொடும்
ஆன்றவ ரடக்கம்போல் அலர்ச்செல்லாச் சினையொடும்
வல்லவர் யாழ்போல வண்டார்க்கும் புதலொடும்
10 நல்லவர் நுடக்கம்போல் நயம்வந்த கொம்பொடும்
உணர்ந்தவர் ஈகைபோல் இணரூழ்த்த மரத்தொடும்
புணர்ந்தவர் முயக்கம்போற் புரிவுற்ற கொடியொடும்

நயந்தார்க்கோ நல்லமன் இளவேனில்
எம்போல ;

14 பசந்தவர் பைதல்நோய் பகையெனத்
தணித்துநம்

இன்னுயிர் செய்யும் மருந்தாகிப் பின்னிய
காதல ரெயிறேய்க்குந் தண்ணருவி
நறுமுல்லைப்

போதாரக் கொள்ளுங் கமழ்குரற் கென்னுந்



தூது வந்தன்றே தோழி
துயரறு கிளவியோ டயர்ந்தீகம் விருந்தே.

காலவரவு கண்டு ஆற்றாளாயினவிடத்துத் தோழி காலத்தை நோக்கி அழகிதாகச் செய்தாய் வந்தெனச் சொல்லி, தலைவிக்கு நங்காதலர் வருகின்றாரெனச் சொல்லிவந்த தூதுகாண் இது, நாம் விருந்தயர்மெனச் சொல்லியது.

## 1681. கலித்தொகை - 33. பாலை : 32

வீறுசால் ஞாலத்து வியலணி காணிய
யாறுகண் விழித்தபோற் கயம்நந்திக்
கவின்பெற

மணிபுரை வயங்கலுள் துப்பெறிந் தவைபோலப்

பிணிவிடு முருக்கிதழ் அணிகயத் துதிர்ந்துகத்
5 துணிகய நிழல்நோக்கித் துதைபுடன்
வண்டார்ப்ப
மணிபோல அரும்பூழ்த்து மரமெல்லாம்
மலர்வேயக்
காதலர்ப் புணர்ந்தவர் கவவுக்கை நெகிழாது
தாதவிழ் வேனிலோ வந்தன்று வாரார்நம்
போதெழி லுண்கண் புலம்ப நீத்தவர் ;
10 எரியுரு வுறழ இலவ மலரப்
பொரியுரு வுறழப் புன்குபூ வுதிரப்
புதுமலர்க் கோங்கம் பொன்னெனத்

தாதூழ்ப்பத்
தமியார்ப் புறத்தெறிந் தெள்ளி முனியவந்து
ஆர்ப்பது போலும் பொழுதென் அணிநலம்
போர்ப்பது போலும் பசப்பு ;
16 நொந்து, நகுவனபோல் நந்தின கொம்பு ;
நைந்துள்ளி
உகுவது போலுமென் நெஞ்சு ; எள்ளித்
தொகுபுட னாடுவ போலு மயில் ; கையில்
உகுவன போலும் வளை ; என்கண்போல்
இகுபறல் வாரும் பருவத்தும் வாரார்
மிகுவது போலுமிந் நோய் ;

22 நரம்பின் தீங்குரல் நிறுக்குங் குழல்போல்
இரங்கிசை மிஞிறொடு தும்பிதா தூதத்

977

தூதவர் விடுதரார் துறப்பார்கொல் நோதக
இருங்குயி லாலு மரோ ;
எனவாங்கு,

27

புரிந்துநீ எள்ளுங் குயிலையும் அவரையும் புலவாதி
நீலித ழுண்கண்ணாய் நெறிகூந்தல் பிணிவிட
நாள்வரை நிறுத்துத்தாஞ் சொல்லிய பொய்யன்றி
மாலைதாழ் வியன்மார்பர் துனைதந்தார்
காலுறழ் கடுந்திண்டேர் கடவினர் விரைந்தே.

பருவவரவின்கண் வன்புறையெதிரழிந்து
ஆற்றாளாயினாளைத் தோழி தலைவனது வரவுணர்ந்து கூறி
ஆற்றுவித்தது.

1682. கலித்தொகை - 34. பாலை : 33

மன்னுயிர் ஏமுற மலர்ஞாலம் புரவீன்று
பன்னீராற் பாய்புனல் பரந்தூட்டி யிறந்தபிற்
சின்னீரான் அறல்வார அகல்யாறு கவின்பெற
முன்னொன்று தமக்காற்றி முயன்றவ
ரிறுதிக்கண்

5 பின்னொன்று பெயர்த்தாற்றும் பீடுடை
யாளர்போற்
பன்மலர் சினையுகச் சுரும்பிமிர்ந்து வண்டார்ப்ப
இன்னமர் இளவேனில் இறுத்தந்த பொழுதினான்
;
8 விரிகாஞ்சித் தாதாடி இருங்குயில் விளிப்பவும்
பிரிவஞ்சா தவர்தீமை மறைப்பென்மன்
மறைப்பவும்
கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி
எரிபொத்தி யென்னெஞ்சஞ் சுடுமாயின் எவன்செய்கோ ;
12 பொறைதளர் கொம்பின்மேற் சிதரினம்
இறைகொள
நிறைதளரா தவர்தீமை மறைப்பென்மன்
மறைப்பவும்
முறைதளர்ந்த மன்னவன்கீழ்க் குடிபோலக் கலங்குபு
பொறைதளர்புனிவாருங்கண்ணாயின்எவன்செய்கோ;
16

தளையவிழ்பூஞ் சினைச்சுரும்பு யாழ்போல இசைப்பவும்
கொளைதளரா தவர்தீமைமறைப்பென்மன் மறைப்பவும்
கிளையழிய வாழ்பவன் ஆக்கம்போற் புல்லென்று
வளையானா நெகிழ்போடுந் தோளாயின்
எவன்செய்கோ;

எனவாங்கு,

21

நின்னுண்ணோய் நீயுரைத் தலமரல் எல்லாநாம்
எண்ணிய நாள்வரை யிறவாது காதலர்
பண்ணிய மாவினர் புகுதந்தார்
கண்ணுறு பூசல் கைகளைந் தாங்கே.

பருவங்கண்டு வன்புறையெதிரழிந்து ஆற்றாளாய தலைவிக்குத் தோழி அவன் வரவுணர்ந்து கழியுவகையாற் கூறியது.

**1683.** கலித்தொகை - **35.** பாலை : **34**

மடியிலான் செல்வம்போல் மரனந்த அச்செல்வம்
படியுண்பார் நுகர்ச்சிபோற் பல்சினை மிஞிறார்ப்ப
மாயவள் மேனிபோல் தளிரீன அம்மேனித்
தாய சுணங்குபோல் தளிர்மிசைத் தாதுக
5 மலர்தாய பொழில்நண்ணி மணிநீர கயம்நிற்ப
அலர்தாய துறைநண்ணி அயிர்வரித் தறல்வார
நனியெள்ளுங் குயில்நோக்கி யினைபுகு நெஞ்சத்தால்
துறந்துள்ளா ரவரெனத் துனிகொள்ள லெல்லாநீ ;

9

வண்ணவண் டிமிர்ந்தானு வையைவா ருயரொக்கர்த்
தண்ணருவி நறுமுல்லைத் தாதுண்ணும் பொழுதன்றோ
கண்ணிலா நீர்மல்கக் கவவிநாம் விடுத்தக்கால்
ஒண்ணுதால் நமக்கவர் வருதுமென்

றுரைத்ததை ; 13 மல்கிய துருத்தியுள் மகிழ்துணைப்

புணர்ந்தவர்
வில்லவன் விழவினுள்
வலனாக வினையென்று

விளையாடும் பொழுதன்றோ
வணங்கிநாம் விடுத்தக்கால்
ஒளியிழாய் நமக்கவர் வருதுமென் றுரைத்ததை
; 17 நிலனாவில் திரிதரூஉம் நீண்மாடக் கூடலார்
புலனாவிற் பிறந்தசொற் புதிதுண்ணும் பொழுதன்றோ
பலநாடு நெஞ்சினேம் பரிந்துநாம் விடுத்தக்காற்
சுடரிழாய் நமக்கவர் வருதுமென் றுரைத்ததை ;

எனவாங்கு,

பாலைபாடிய பெருங்கடுங்கோ

979

22

உள்ளுதொ றுடையும்நின் உயவுநோய்க் குயிர்ப்பாகி
எள்ளறு காதலர் இயைதந்தார் புள்ளியற்
காமர் கடுந்திண்டேர்ப் பொருப்பன்
வாய்மை யன்ன வைகலொடு புணர்ந்தே.

வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி இக்காலம் அல்லவோ அவர் வருதுமெனச் சொன்ன காலமென வன்புறை யெதிரழிந்தாளை நீ துனிகொள்ளல் அவர் வந்தாரெனத் தலைவன் வரவுணர்ந்து தோழி ஆற்றுவித்தது.

## 1684. கலித்தொகை - 36. பாலை : 35

கொடுமிடல் நாஞ்சிலான் தார்போல் மராத்து
நெடுமிசைச் சூழு மயிலாலுஞ் சீர
வடிநரம் பிசைப்பபோல் வண்டொடு சுரும்பார்ப்பத்
தொடிமகள் மூரற்சிபோல் தும்பிவந் திமிர்தர
5 இயனெழீஇ யவைபோல எவ்வாயும் இம்மெனக்
கயனணி பொதும்பருட் கடிமலர்த் தேனூத
மலராய்ந்து வயின்வயின் விளிப்பபோல்
மரனூழ்ப்ப
இருங்குயி லாலப் பெருந்துறை கவின்பெறக்
குழவி வேனில் விழவெதிர் கொள்ளுஞ்
10 சீரார் செவ்வியும் வந்தன்று
வாரார் தோழிநங் காத லோரே ;
12 பாஅய்ப் பாஅய்ப் பசந்தன்று நுதல்
சாஅய்ச் சாஅய் நெகிழ்ந்தன தோள் ;

14 நனியறல் வாரும் பொழுதென வெய்ய
பனியறல் வாருமென் கண் ;

16

மலையிடைப் போயினர் வரனசைஇ நோயொடு
முலையிடைக் கனலுமென் னெஞ்சு ;

18 காதலிற் பிரிந்தார் கொல்லோ வறிதோர்
தூதொடு மறந்தார் கொல்லோ நோதகக்
காதலர் காதலுங் காண்பாங் கொல்லோ
துறந்தவ ராண்டாண் டுறைகுவர் கொல்லோ
யாவது



நீளிடைப் படுதலு மொல்லும் யாழநின்
வாளிடைப் படுத்த வயங்கீ ரோதி

நாளணி சிதைத்தலு முண்டென நயவந்து
25 கேள்வி யந்தணர் கடவும்
வேள்வி யாவியின் உயிர்க்குமென் னெஞ்சே.

காலங்கண்டு
தான் ஆற்ருளாய்

ஆற்ருத தலைவியது நிலைமைகண்டு, ஆற்ருததோழி அவட்குக் கூறியது.

## 1685. குறுந்தொகை - 16. பாலை

உள்ளார் கொல்லோ தோழி கானவர்
பொன்புனை பகழி செப்பங் கொண்மார்
உகிர்நுதி புரட்டும் ஓசை போலச்
செங்காற் பல்லி தன்துணை பயிரும்
5 அங்காற் கள்ளியங் காடிறந் தோரே.

பொருள்வயிற் பிரிந்தவிடத்துத் தலைமக ளாற்ருமை தோழி கூறியது.
கண்டு:

## 1686. குறுந்தொகை - 37. பாலை

நசைபெரி துடையர் நல்கலும் நல்குவர்
பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பொளிக்கும்
அன்பின தோழிஅவர் சென்ற வாறே.

தோழி கடிது வருவரென்று ஆற்றுவித்தது.

## 1687. குறுந்தொகை - 124. பாலை

உமணர், சேர்ந்து கழிந்த மருங்கின் அகன்றலை
ஊர்பாழ்த் தன்ன ஓமையம் பெருங்காடு
இன்னு வென்றி ராயின்
இனியவோ பெரும தமியோர்க்கு மனையே.

புணர்ந்து உடன்போக நினைத்த தலைமகளொழியத் தலைமகற்குத் தோழி சொல்லியது.

போகலுற்ற

பாலைபாடிய பெருங்கடுங்கோ

981

## 1688. குறுந்தொகை - 135. பாலை

வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்
மனையுறை மகளிர்க்கு ஆடவ ருயிரென
நமக்குரைத் தோருந் தாமே
அழாஅல் தோழி அழுங்குவர் செலவே.

தலைமகன் பிரியுமென வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

## 1689. குறுந்தொகை - 137. பாலை

மெல்லியல் அரிவைநின் நல்லகம் புலம்ப
நிற்றுறந் தமைகுவெ னாயின் எற்றுறந்து
இரவலர் வாரா வைகல்
பலவா குகயான் செலவுறு தகவே.

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் பிரிவச்சம் உரைத்தது.

## 1690. குறுந்தொகை - 209. பாலை

சுரந்தலைப் பட்ட நெல்லியம் பசுங்காய்
மறப்புலிக் குருளை கோளிடங் கரக்கும்
இறப்பருங் குன்றம் இறந்த யாமே
குறுநடைப் புள்ளுள் ளலமே நெறிமுதற்
5 கடற்றிற் கலித்த முடச்சினை வெட்சித்
தளையவிழ் பல்போது கமழும்
மையிருங் கூந்தல் மடந்தை நட்பே.

பொருண்முற்றி மறுத்தருந் தலைமகன் தோழிக்கு உரைப்

பாணுய்க் கிழத்தியைத் தெருட்டியது.

**1691.** குறுந்தொகை - **231.** மருதம்

ஓரூர் வாழினுஞ் சேரி வாரார்
சேரி வரினும் ஆர முயங்கார்
ஏதி லாளர் சுடலை போலக்
காணக் கழிப மன்னே நாணட்டு



5 நல்லறி விழந்த காமம்
வில்லுமிழ் கணையிற் சென்றுசேட் படவே.

வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**1692.** குறுந்தொகை - **262.** பாலை

ஊஉ ரலரெழச் சேரி கல்லெனை
ஆனு தலைக்கும் அறனில் அன்னை
தானே யிருக்க தன்மனை யானே
நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க

5 உணலாய்ந் திசினு லவரொடு சேய்நாட்டு
விண்தொட நிவந்த விலங்குமலைக் கவாஅற்
கரும்புநடு பாத்தி யன்ன
பெருங்களிற் றடிவழி நிலைஇய நீரே.

உடன்போக்கு நேர்ந்த தோழி கிழத்திக்கு உடன்போக்கு உணர்த்தியது.

1693. குறுந்தொகை - 283. பாலை

உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்
இல்லோர் வாழ்க்கை யிரவினும் இளிவெனச்
சொல்லிய வன்மை தெளியக் காட்டிச்
சென்றனர் வாழி தோழி என்றுங்
5 கூற்றத் தன்ன கொலைவேல் மறவர்
ஆற்றிருந் தல்கி வழங்குநர்ச் செகுத்த
படுமுடைப் பருந்துபார்த் திருக்கும்
நெடுமூ திடைய நீரி லாறே.

தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவழி ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு 'அவர்பிரிய ஆற்றேனாயினேன் அல்லேன்; அவர் போயின கானத்துத்தன்மை நினைந்து வேறுபட்டேன்' என்று கிழத்தி சொல்லியது.

பாலைபாடிய பெருங்கடுங்கோ

## 1694. குறுந்தொகை - 398. பாலை

தேற்று மன்றே தோழி தண்ணெனத்
தூற்றுந் திவலைத் துயர்கூர் காலைக்
கயலே ருண்கண் கனங்குழை மகளிர்
கையுறை யாக நெய்பெய்து மாட்டிய
5 சுடர்துய ரெடுப்பும் புன்கண் மாலை
அரும்பெறற் காதலர் வந்தென விருந்தயர்பு
மெய்ம்மலி யுவகையி னெழுதரு
கண்கலி ழுகுபனி யரக்கு வோரே.

பிரிவுணர்த்திய தோழி 'பிறர் தலைமகன் பிரிந்து வினைமுற்றி வருந்துணையும் ஆற்றியுளராவர்' என்று உலகியன்மேல் வைத்து உரைத்தாட்குத் தலைமகள் ஆற்றாமை மீதூரச் சொல்லியது.

## 1695. நற்றிணை - 9. பாலை

அழிவிலர் முயலும் ஆர்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்கு
அலமரல் வருத்தந் தீர யாழநின்
நலமென் பணைத்தோள் எய்தின மாகலிற் 5
பொரிப்பூம் புன்கின் அழற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி
நிழல்காண் டோறும் நெடிய வைகி
மணல்காண் டோறும் வண்டல் தைஇ

வருந்தா தேகுமதி வாலெயிற் ரோயே
10 மாநனை கொழுதி மகிழ்குயி லாலும்
நறுந்தண் பொழில கானம்
குறும்பல் லூரயாஞ் செல்லு மாறே.

உடன்போகாநின்ற தலைமகன் தலைமகட்கு உரைத்தது.

**1696.** நற்றிணை - **48.** பாலை

அன்றை யனைய வாகி இன்றுமெங்
கண்ணுள போலச் சுழலு மாதோ



புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ
வைகுறு மீனின் நினையத் தோன்றிப்
5 புறவணி கொண்ட பூநாறு கடத்திடைக்
கிடினென இடிக்குங் கோற்றொடி மறவர்
வடிநவி லம்பின் வினைய ரஞ்சாது
அமரிடை யுறுதர நீக்கிநீர்
எமரிடை யுறுதர ஒளித்த காடே.

பிரிவுணர்த்திய தலைவற்குத் தோழி சொல்லியது.

**1697.** நற்றிணை - **118.** பாலை

அடைகரை மாஅத் தலங்குசினை யொலியத்
தளிர்கவின் எய்திய தண்ணறும் பொதும்பிற்
சேவலொடு கெழீஇய செங்க ணிருங்குயில்
புகன்றெதிர் ஆலும் பூமலி காலையும்
5 அகன்றோர் மன்றநம் மறந்திசி னோரென
இணருறு புடைவதன் றலையும் புணர்வினை
ஓவ மாக்கள் ஒள்ளரக் கூட்டிய
துகிலிகை யன்ன துய்த்தலைப் பாதிரி
வாலிதழ் அலரி வண்டுபட ஏந்திப்
10 புதுமலர் தெருவுதொறு நுவலும்
நொதும லாட்டிக்கு நோமென் னெஞ்சே.

பருவங்கண் டாற்றாளாய தலைவி சொல்லியது.

1698. நற்றிணை - 202. பாலை

புலிபொரச் சிவந்த புலாலஞ் செங்கோட்டு
ஒலிபன் முத்தம் ஆர்ப்ப வலிசிறந்து
வன்சுவற் பராரை முருக்கிக் கன்றொடு
மடப்பிடி தழீஇய தடக்கை வேழம்
5 தேன்செய் பெருங்கிளை யிரிய வேங்கைப்
பொன்புரை கவளம் புறந்தரு பூட்டும்
மாமலை விடரகங் கவைஇக் காண்வரக்
கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை

பாலைபாடிய பெருங்கடுங்கோ

அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கட்
10 செல்சுடர் நெடுங்கொடி போலப்
பல்பூங் கோங்கம் அணிந்த காடே.

உடன்போகாநின்ற தலைமகன் தலைமகட்குச் சொல்லியது.

## 1699. நற்றிணை - 224. பாலை

அன்பினர் மன்னும் பெரியர் அதன்றலைப்
பின்பனி யமையம் வருமென முன்பனிக்
கொழுந்து முந்துறீஇக் குரவரும் பினவே
5
புணர்ந்தீர் புணர்மினோ வென்ன இணர்மிசைச்
செங்க ணிருங்குயில் எதிர்குரல் பயிற்றும்
இன்ப வேனிலும் வந்தன்று நம்வயிற்
பிரியல மென்று தெளித்தோர் தேஎத்து
இனியெவன் மொழிகோ யானே கயனறக்
கண்ணழிந் துலறிய பன்மா நெடுநெறி
10 வினைமூசு கவலை விலங்கிய
வெம்முனை யருஞ்சுர முன்னி யோர்க்கே.

தோழியாற் பிரிவுணர்த்தப்பட்ட தலைமகள் பெயர்த்துஞ் சொற் கடாவப்பட்டு 'அறிவிலாதேம் என்னை சொல்லியும் பிரியாராகாரோ' என்று சொல்லியது.

## 1700. நற்றிணை - 256. பாலை

நீயே, பாடல் சான்ற பழிதபு சீறடி
அல்குற் பெருநலத் தமர்த்த கண்ணை
காடே, நிழல்கவி னிழந்த அழல்கவர் மரத்த
புலம்புவீற் றிருந்து நலஞ்சிதைந் தனவே 5 இந்நிலை
தவிர்ந்தனஞ் செலவே வைந்நுதிக் களவுடன் கமழப்
பிடவுத்தளை யவிழக் கார்பெயல் செய்த காமர் காலை
மடப்பிணை தழீஇய மாவெருத் திரலை
காழ்கொள் வேலத் தாழ்சினை பயந்த



10 கண்கவர் வரிநிழல் வதியுந்
தண்படு கானமுந் தவிர்ந்தனஞ் செலவே.

பொருள்வயிற் பிரிந்தானென் றாற்றாளாகிய
தலைமகளைத் தலைமகன் ஆற்றியது.

**1701.** நற்றிணை - **318.** பாலை

நினைத்தலும் நினைதிரோ ஐய அன்றுநாம்
பணைத்தா ளோமைப் படுசினை பயந்த
பொருந்தாப் புகர்நிழ லிருந்தனெ மாக
நடுக்கஞ் செய்யாது நண்ணுவழித் தோன்றி
5 ஒடித்துமிசைக் கொண்ட வோங்குமருப் பியானை
பொறிபடு தடக்கை சுருக்கிப் பிறிதோர்
ஆறிடை யிட்ட வளவைக்கு வேறுணர்ந்து
என்றூழ் விடரகஞ் சிலம்பப்
புன்றலை மடப்பிடி புலம்பிய குரலே.

பிரிவுணர்த்தப்பட்ட தலைமகனைத் தோழி சொல்லியது.

## 1702. நற்றிணை - 337. பாலை

உலகம் படைத்த காலைத் தலைவ
மறந்தனர் கொல்லோ சிறந்திசி னோரே
முதிரா வேனில் எதிரிய அதிரல்

பராரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர்
5 நறுமோ ரோடமொ டுடனெறிந் தடைச்சிய

செப்பிடந் தன்ன நாற்றந் தொக்குடன்
அணிநிறங் கொண்ட மணிமரு ளைம்பாற்
சூழ்நறுங் கதுப்பிற் பையென மூழ்கும்
அரும்பெறற் பெரும்பயங் கொள்ளாது
10 பிரிந்துறை மரபின பொருள்படைத் தோரே.

தோழி தலைமகன் பொருள்வயிற் பிரிதலுற்றானது குறிப்பறிந்து விலக்கியது ; தோழி உலகியல்கூறிப் பிரிவுணர்த்தியதூஉமாம்.

## பாலைபாடிய பெருங்கடுங்கோ

987.

### 1703. நற்றிணை - 384. பாலை

பைம்புறப் புறவின் செங்காற் சேவல்
களரி யோங்கிய கவைமுடக் கள்ளி
முளரியங் குடம்பை ஈன்றிளைப் பட்ட
உயவுநடைப் பேடை யுணீஇய மன்னர்
5 முனைகவர் முதுபாழ் [வ]ரகுகுநெறி பெறாஉம்
மாணில் சேய்நாட் டதரிடை மலர்ந்த
நன்னாள் வேங்கைப் பொன்மருள் புதுப்பூப்
பரந்தன நடக்கயாங் கண்டன மாதோ
காணினி வாழியென் னெஞ்சே நாண்விட்டு
10 அருந்துய ருழந்த காலை
மருந்தெனப் படூஉ மடவோ ளையே.

உடன்போகாநின்றான் மலிந்து தன் னெஞ்சிற்குச் சொல்லியது.

### 1704. நற்றிணை - 391. பாலை

ஆழல் மடந்தை யழுங்குவர் செலவே
புலிப்பொறி யன்ன புள்ளியம் பொதும்பிற்
பனிப்பவர் மேய்ந்த மாயிரு மருப்பின்
மலர்தலைக் காரான் அகற்றிய தண்ணடை
5 ஒண்டொடி மகளிர் இழையணிக் கூட்டும்
பொன்படு கொண்கான நன்ன னன்னாட்டு
ஏழிற் குன்றம் பெறினும் பொருள்வயின்
யாரோ பிரிகிற் பவரே குவளை
நீர்வார் நிகர்மல ரன்னநின்
10 பேரமர் மழைக்கண் தெண்பனி கொளவே.

பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றாளாய தலைமகளைத் தோழி |வற்புறுத்தியது; வரைவுணர்த்தியதூஉமாம்.

## 1705. புறநானூறு - 282.

எஃகுளங் கழிய இருநில மருங்கின்
அருங்கட னிறுத்த பெருஞ்செ யாளனை



யாண்டுளா னோவென வினவுதி யாயிற்
... ... ...
5 வருபடை தாங்கிய கிளர்தா ரகலம்
அருங்கட னிறுமார் வயவ ரெறிய
உடம்புந் தோன்றா வுயிர்கெட் டன்றே
மலையுநர் மடங்கி மாறெதிர் கழியத்
... ... ...

10 அலகை போகிச் சிதைந்துவே றாகிய
பலகை யல்லது களத்தொழி யாதே
சேண்விளங்கு நல்லிசை நிறீஇ
நாநவில் புலவர் வாயு ளானே.

திணை - ... ... ...

## ௩௧௯. பாவைக் கொட்டிலார்

## 1706. அகநானூறு - 336. மருதம்

குழற்காற் சேம்பின் கொழுமட லகலிலைப்
பாசிப் பரப்பிற் பறழொடு வதிந்த
உண்ணாப் பிணவின் உயக்கஞ் சொவிய
நாளிரை தரீஇய எழுந்த நீர்நாய்
5 வாளையொ டுழப்பத் துறைகலுழ்ந் தமையின்
தெண்கட் டேறல் மாந்தி மகளிர்
நுண்செய லங்குடம் இரீஇப் பண்பின்
மகிழ்நன் பரத்தைமை பாடி யவிழிணர்க்
காஞ்சி நீழற் குரவை யயருந்
10 தீம்பெரும் பொய்கைத் துறைகே ழூரன்
தேர்தர வந்த நேரிழை மகளிர்
ஏசுப வென்பவென் னலனே யதுவே
பாக னெடிதுயிர் வாழ்தல் காய்சினக்
கொல்களிற் றியானை நல்கல் மாறே
15 தாமும் பிறரு முளர்போற் சேறல்

முழவிமிழ் துணங்கை தூங்கும் விழவின்
யானவண் வாரா மாறே வரினே, வானிடைச்



சுடரொடு திரிதரு நெருஞ்சி போல
என்னொடு திரியா னாயின் வென்வேல்
20 மாரி யம்பின் மழைத்தோற் சோழர்
வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை
ஆரியர் படையின் உடைகவென்
நேரிறை முன்கை வீங்கிய வளையே.

நயப்புப்பரத்தை இற்பரத்தைக்குப் பாங்காயினோர்
கேட்பச் சொல்லியது.

## ௩கஎ. பிசிராந்தையார்

## 1707. அகநானூறு - 308. குறிஞ்சி

உழுவையொ டுழந்த உயங்குநடை யொருத்தல்

நெடுவகிர் விழுப்புண் கழாஅக் கங்குல்
ஆலி யழிதுளி பொழிந்த வைகறை
வால்வெள் ளருவிப் புனல்மலிந் தொழுகலின் 5
இலங்குமலை புதைய வெண்மழை கவைஇக்
கலஞ்சுடு புகையிற் றோன்று நாட
இரவின் வருத லெவனோ பகல்வரின்
தொலையா வேலின் வண்மகி ழெந்தை 10

களிறணந் தெய்தாக் கன்முகை யிதணத்துச்
சிறுதினைப் படுகிளி யெம்மொ டோப்பி
மல்ல லறைய மலிர்சுனைக் குவளைத்
தேம்பா யொண்பூ நறும்பல அடைச்சிய
கூந்தல் மெல்லணைத் துஞ்சிப் பொழுதுபடக்

காவலர்க் கரந்து கடிபுனந் துழைஇய
15 பெருங்களிற் றொருத்தலிற் பெயர்குவை
கருங்கோற் குறிஞ்சிநும் உறைவி னூர்க்கே.

இரவு வருவானைப் பகல் வருகென்றது.

1708. நற்றிணை - 91. நெய்தல்

நீயுணர்ந் தனையே தோழி வீயுகப்
புன்னை பூத்த இன்னிழ லுயர்கரைப்

பாடிமிழ் பனிக்கடல் துழைஇப் பெடையோடு
உடங்கிரை தேருந் தடந்தாள் நாரை
5 ஐய சிறுகட் செங்கடைச் சிறுமீன்
மேக்குயர் சினையின் மீமிசைக் குடம்பைத்
தாய்ப்பயிர் பிள்ளை வாய்ப்படச் சொரியுங்
கானலம் படப்பை யாறு வண்மகிழ்ப்
பெருநல் ஈகைநஞ் சிறுகுடிப் பொலியப்
10 புள்ளுயிர்க் கொட்பின் வள்ளுயிர் மணித்தார்க்
கடுமாப் பூண்ட நெடுந்தேர்
நெடுநீர்ச் சேர்ப்பன் பகலிவண் வரவே.

தோழி தலைமகட்கு வரைவுமலிந்துரைத்தது.

## 1709. புறநானூறு - 67.

அன்னச் சேவல் அன்னச் சேவல்
ஆடுகொள் வென்றி யடுபோ ரண்ணல்
நாடுதலை யளிக்கும் ஒண்முகம் போலக்
கோடுகூடு மதிய முகிழ்நிலா விளங்கும்
5 மையல் மாலையாங் கையறு பினையக்
குமரியம் பெருந்துறை அயிரை மாந்தி
வடமலைப் பெயர்குவை யாயின் இடையது
சோழ நன்னாட்டுப் படினே கோழி
உயர்நிலை மாடத்துக் குறும்பறை யசைஇ
10 வாயில் விடாது கோயில் புக்கெம்
பெருங்கோக் கிள்ளி கேட்க இரும்பிசி
ராந்தை யடியுறை யெனினே மாண்டநின்
இன்புறு பேடை யணியத்தன்

அன்புறு நன்கலம் நல்குவன் நினக்கே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

கோப்பெருஞ்சோழனைப் பாடியது.

**1710.** புறநானூறு - **184.**

காய்நெல் அறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்



நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்
5 அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்
10 யானை புக்கபுலம் போலத்
தானு முண்ணான் உலகமுங் கெடுமே.

திணை - பாடாண்டிணை ; துறை - செவியறிவுறூஉ.
பாண்டியன் அறிவுடைநம்பியுழைச் சென்று பாடியது.

**1711.** புறநானூறு - **191.**

யாண்டுபல வாக நரையில வாகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்
மாண்டவென் மனைவியொடு மக்களும் நிரம்பினர்
யான்கண் டனையரென் இளையரும் வேந்தனும்
5 அல்லவை செய்யான் காக்கும் அதன்றலை
ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழு மூரே.

திணை - பொதுவியல் ; துறை -
பொருண்மொழிக்காஞ்சி.
கோப்பெருஞ்சோழன்
வடக்கிருந்தானுழைச்சென்ற பிசிராந்தையாரை, 'யாண்டு பல வாக
கேட்குங்காலம் பலவாலோ? நரை நுமக்கில்லை யாலோ?'
என்ற சான்றோர்க்கு அவர் சொற்றது.

## 1712. புறநானூறு - 212.

நுங்கோ யாரென வினவின் எங்கோக்
களமர்க் கரித்த விளையல் வெங்கள்
யாமைப் புழுக்கிற் காமம் வீட ஆரா
ஆரற் கொழுஞ்சூ டங்கவுள் அடாஅ
5 வைகுதொழில் மடியு மடியா விழவின்
யாணர் நன்னாட் டுள்ளும் பாணர்



பைதற் சுற்றத்துப் பசிப்பகை யாகிக்

கோழி யோனே கோப்பெருஞ் சோழன்
பொத்தில் நண்பிற் பொத்தியொடு கெழீஇ
10 வாயார் பெருநகை வைகலும் நக்கே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
கோப்பெருஞ்சோழனைப் பாடியது.

## ருகஅ. பிரமசாரி

### 1713. நற்றிணை - 34. குறிஞ்சி

கடவுட் கற்சுனை யடையிறந் தவிழ்ந்த
பறியாக் குவளை மலரொடு காந்தட்
குருதி யொண்பூ உருகெழக் கட்டிப்
பெருவரை யடுக்கம் பொற்பச் சூர்மகள்
5 அருவி யின்னியத் தாடு நாடன்
மார்புதர வந்த படர்மலி யருநோய்
நின்னணங் கன்மை யறிந்தும் அண்ணாந்து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்
10 கடவு ளாயினு மாக
மடவை மன்ற வாழிய முருகே.

தோழி தெய்வத்துக்குரைப்பாளாய் வெறிவிலக்கியது.

## ருகக. பிரமனார்

### 1714. புறநானூறு - 357.

குன்றுதலை மணந்த மலைபிணித்து யாத்தமண்

பொதுமை சுட்டிய மூவ ருலகமும்
பொதுமை யின்றி யாண்டிசி னோர்க்கும்
மாண்ட வன்றே யாண்டுகள் துணையே
5 வைத்த தன்றே வெறுக்கை வி...
... ... ... ணை

## புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர்கிழான்

993

புணைகை விட்டோர்க் கரிதே துணையழத்
தொக்குயிர் வெளவுங் காலை
இக்கரை நின்றிவர்ந் துக்கரை கொளலே.

திணை - காஞ்சி; துறை - ... ... ...
பெருங்காஞ்சியுமாம்.

### ௬௨௦. பிரான் சாத்தனார்

**1715.** நற்றிணை - **68.** குறிஞ்சி

விளையா டாயமொ டோரை யாடாது
இளையோ ரில்லிடத் திற்செறிந் திருத்தல்
அறனு மன்றே ஆக்கமுந் தேய்ம்மெனக்
குறுநுரை சுமந்து நறுமல ருந்திப்
5 பொங்கிவரு புதுநீர் நெஞ்சுண ஆடுகம்
வல்லிதின் வணங்கிச் சொல்லுநர்ப் பெறினே

செல்கென விடுநள்மற் கொல்லோ

எல்லுமிழ்ந்து
உரவுரு முரறும் அரையிருள் நடுநாட்
கொடிநுடங் கிலங்கின மின்னி
10 ஆடுமழை யிறுத்தன்றவர் கோடுயர் குன்றே.

சிறைப்புறமாகத் தோழி தலைவிக்குரைப்பாளாய்ச்
செறிப்பறி வுறீஇயது.

## ௩உக. புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர்கிழான்

### 1716. நற்றிணை - 294. குறிஞ்சி

தீயும் வளியும் விசும்புபயந் தாங்கு
நோயும் இன்பமு மாகின்று மாதோ
மாய மன்று தோழி வேய்பயின்று
எருவை நீடிய பெருவரை யகந்தொறுந் 5
தொன்றுறை துப்பொடு முரண்மிகச் சினைஇக்
கொன்ற யானைக் கோடுகண் டன்ன
செம்புடைக் கொழுமுகை யவிழ்ந்த காந்தள் 994



சிலம்புடன் கமழுஞ் சாரல்
இலங்குமலை நாடன் மலர்ந்த மார்பே.

மணமனையுட் புக்க தோழி தலைமகளது கவின்கண்டு

வியது.
சொல் ௩௨௨. புல்லாற்றூர்

எயிற்றியனார்

## 1717. புறநானூறு - 213.

மண்டமர ரட்ட மதனுடை நோன்றாள்
வெண்குடை விளக்கும் விறல்கெழு வேந்தே
பொங்குநீ ருடுத்தவிம் மலர்தலை யுலகத்து
நின்றலை வந்த இருவரை நினைப்பின்
5 தொன்றுறை துப்பினின் பகைஞரு மல்லர்
அமர்வெங் காட்சியொடு மாறெதிர்

பெழுந்தவர்

நினையுங் காலை நீயும் மற்றவர்க்கு

அனையை யல்லை அடுமான் தோன்றல்
பரந்துபடு நல்லிசை யெய்தி மற்றுநீ
10 உயர்ந்தோ ருலக மெய்திப் பின்னும்
ஒழித்த தாயம் அவர்க்குரித் தன்றே
அதனால், அன்ன தாதலும் அறிவோய் நன்றும்
இன்னுங் கேண்மதி யிசைவெய் யோயே
நின்ற துப்பொடு நிற்குறித் தெழுந்த
15 எண்ணில் காட்சி யிளையோர் தோற்பின்

நின்பெருஞ் செல்வம் யார்க்கெஞ் சுவையே
அமர்வெஞ் செல்வ நீயவர்க் குலையின்
இகழுந ருவப்பப் பழியெஞ் சுவையே
அதனால், ஒழிகதி லத்தைநின் மறனே வல்விரைந்து
20 எழுமதி வாழ்கநின் னுள்ளம் அழிந்தோர்க்கு
ஏம மாகுநின் தாணிழல் மயங்காது
செய்தல் வேண்டுமால் நன்றே வானோர்
அரும்பெற லுலகத் தான்றவர்
விதும்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்கே.

திணை - வஞ்சி ; துறை - துணைவஞ்சி.

கோப்பெருஞ்சோழன் மக்கள்மேற்சென்றானைப் பாடியது.

## ௩௨௩. பூங்கணுத்திரையார்

### 1718. குறுந்தொகை - 48. பாலை

தாதிற் செய்த தண்பனிப் பாவை
காலை வருந்துங் கையா றோம்பென
ஓரை யாயங் கூறக் கேட்டும்
இன்ன பண்பின் இனைபெரி துழக்கும்
5 நன்னுதல் பசலை நீங்க அன்ன
நசையாகு பண்பி னொருசொல்
இசையாது கொல்லோ காதலர் தமக்கே.

பகற்குறிக்கண் காணும்பொழுதினுங் காணாப்பொழுது பெரிதாகலின் வேறுபட்ட கிழத்தியது வேறுபாடு கண்டு தோழி சொல்லியது.

## 1719. குறுந்தொகை - 171. மருதம்

காணினி வாழி தோழி யாணர்க்
கடும்புன லடைகரை நெடுங்கயத் திட்ட
மீன்வலை மாப்பட் டாஅங்கு
இதுமற் றெவனோ நொதுமலர் தலையே.

வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.

## 1720. புறநானூறு - 277.

மீனுண் கொக்கின் றூவி யன்ன
வானரைக் கூந்தல் முதியோள் சிறுவன்
களிறெறிந் து பட்டன னென்னும் உவகை
ஈன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்
5 நோன்கழை துயல்வரும் வெதிரத்து
வான்பெயத் தூங்கிய சிதரினும் பலவே.

திணை - தும்பை ; துறை - உவகைக்கலுழ்ச்சி.

### ௩௨௪. பூங்கண்ணன்

## 1721. குறுந்தொகை - 253. பாலை

கேளா ராகுவர் தோழி கேட்பின்

விழுமிது கழிவ தாயினும் நெகிழ்நூற்
பூச்சே ரணையிற் பெருங்கவின் தொலைந்தநின்
நாடுதுயர் கேட்பின் நீடலர் மாதோ
5 ஒலிகழை நிவந்த ஓங்குமலைச் சாரற்
புலிபுகா வுறுத்த புலவுநாறு கல்லளை
ஆறுசெல் மாக்கள் சேக்குங்
கோடுயர் பிறங்கல் மலையிறந் தோரே.

பிரிவிடைத் தோழி வற்புறுத்தியது.

## ௩௨௫. பூதங்கண்ணனார்

### 1722. நற்றிணை - 140. குறிஞ்சி

கொண்டல் மாமழை குடக்கேர்பு குழைத்த
சிறுகோ லிணர பெருந்தண் சாந்தம்
வகைசே ரைம்பாற் றகைபெற வாரிப்
புலர்விடத் துதிர்த்த துகள்படு கூழைப்
5 பெருங்கண் ஆயம் உவப்பத் தந்தை
நெடுந்தேர் வழங்கு நிலவுமணல் முற்றத்துப்
பந்தொடு பெயரும் பரிவி லாட்டி
அருளினும் அருளா ளாயினும் பெரிதழிந்து
பின்னிலை முனியல்மா நெஞ்சே என்னதூஉம்
10 அருந்துய ரவலந் தீர்க்கும்
மருந்துபிறி தில்லையா னுற்ற நோய்க்கே.

குறைமறுக்கப்பட்ட தலைவன் தன் நெஞ்சினை நெருங்கியது.

௩௨௬.

## பூதபாண்டியன் தேவிபெருங்கோப்பெண்டு

## 1723. புறநானூறு - 246.

பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்



பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே
அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட
5 காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டாது
அடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்
10 உயவற் பெண்டிரே மல்லேம் மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்
நுமக்கரி தாகுக தில்ல எமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென
வள்ளித ழவிழ்ந்த தாமரை

அரும்பற

15 நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே.

திணை - பொதுவியல் ; துறை - ஆனந்தப்பையுள்.
பூதபாண்டியன்தேவி பெருங்கோப்பெண்டு

தீப்பாய்வாள் சொல்லியது.

## ௩௨எ. பூதம்புல்லனார்

### 1724. குறுந்தொகை - 190. முல்லை

நெறியிருங் கதுப்பொடு பெருந்தோள் நீவிச்
செறிவளை நெகிழச் செய்பொருட் ககன்றோர்
அறிவர்கொல் வாழி தோழி பொறிவரி
வெஞ்சின அரவின் பைந்தலை துமிய
5 நரையுரு முரறும் அரையிருள் நடுநாள்
நல்லே றியங்குதோ றியம்பும்
பல்லான் தொழுவத் தொருமணிக் குரலே.

பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச்
சொல்லியது.

## ௩௨அ. பூதனார்

### 1725. நற்றிணை - 29. பாலை

நின்ற வேனில் உலந்த காந்தள்
அழலவிர் நீளிடை நிழலிடம் பெறாஅது



ஈன்றுகால் மடிந்த பிணவுப்பசி கூர்ந்தென
மான்ற மாலை வழங்குநர்ச் செகீஇய
5 புலிபார்த் துறையும் புல்லதர்ச் சிறுநெறி
யாங்குவல் லுநள்கொல் தானே யான்றன்
வனைந்தேந் திளமுலை நோவ கொல்லெனை
நினைந்துகைந் நெகிழ்ந்த வனைத்தற்குத் தான்றன்

பேரமர் மழைக்கண் ஈரிய கலுழ
10 வெய்ய வுயிர்க்குஞ் சாயல்
மையீ ரோதிப் பெருமடத் தகையே.
மகட்போக்கியதாய் சொல்லியது.

## ௩௨௧. பூதன்தேவனார்

### 1726. குறுந்தொகை - 285. பாலை

வைகா வைகல் வைகவும் வாரார்
எல்லா எல்லை யெல்லவுந் தோன்றார்
யாண்டுளர் கொல்லோ தோழி யீண்டிவர்
சொல்லிய பருவமோ இதுவே பல்லூழ்
5 புன்புறப் பெடையொடு பயிரி யின்புற
இமைக்கண் ஏதா கின்றோ ஞெமைத்தலை
ஊனசை இப் பருந்திருந் துகக்கும்
வானுயர் பிறங்கல் மலையிறந் தோரே.
பருவங்கண்டு வேறுபட்ட இடத்து வற்புறுத்தும்
தோழிக்கு வன்புறை எதிரழிந்து தலைமகள் சொல்லியது.

### 1727. நற்றிணை - 80. மருதம்

மன்ற எருமை மலர்தலைக் காரான்
இன்றீம் பாற்பயங் கொண்மார் கன்றுவிட்டு

ஊர்க்குறு மாக்கள் மேற்கொண்டு கழியும்
பெரும்புலர் விடியலின் விரும்பிப் போத்தந்து
5 தழையுந் தாருந் தந்தனன் இவனென
இழையணி யாயமொடு தகுநாண் தடைஇத்
பெருங்கண்ணனூர் 999

தைஇத் திங்கட் டண்கயம் படியும்
பெருந்தோட் குறுமக ளல்லது
மருந்துபிறி தில்லையா னுற்ற நோய்க்கே.
சேட்படுக்கப்பட்டு ஆற்றாளுைய தலைவன் தோழி கேட்பத் தன்
னெஞ்சிற்குரைத்தது.

நுநுo. பெருங்கண்ணனூர்

1728. குறுந்தொகை - 289. முல்லை

வளர்பிறை போல வழிவழிப் பெருகி
இறைவளை நெகிழ்த்த எவ்வ நோயொடு
குழைபிசைந் தனையே மாகிச் சாஅய்
உழைய ரன்மையின் உழப்ப தன்றியும்

5 மழையுந் தோழி மான்றுபட் டன்றே
பட்ட மாரி படாஅக் கண்ணும்
அவர்திறத் திரங்கு நம்மினும்
நந்திறத் திரங்குமிவ் வழுங்க லூரே.

காலங் கண்டு வேறுபட்டாள் எனக் கவன்ற
தோழிக்குக்
'காலத்து வந்திலர் என்று வேறுபட்டேனல்லேன்;
அவரைப்புறத்தார்
கொடியர் என்று கூறக் கேட்டு வேறுபட்டேன்'
என்று தலைமகள்
சொல்லியது.

**1729.** குறுந்தொகை - **310.** நெய்தல்

புள்ளும் புலம்பின பூவுங் கூம்பின
கானலும் புலம்புகனி யுடைத்தே வானமும்
நம்மே போலும் மம்மர்த் தாகி
எல்லை கழியப் புல்லென் றன்றே
5 இன்னு முளேனே தோழி இந்நிலை
தண்ணிய கமழும் ஞாழற்
றண்ணந் துறைவற் குரைக்குநர்ப்
பெறினே.

வரைவிடை முனிந்து கிழத்தி
தோழிக்குரைத்தது.



**1730.** நற்றிணை - **137.** பாலை

தண்ணிய கமழுந் தாழிருங் கூந்தற்
றடமென் பணைத்தோள் மடநல் லோள்வயிற்

பிரியச் சூழ்ந்தனை யாயின் அரியதொன் று
எய்தினை வாழிய நெஞ்சே செவ்வரை
5 அருவி யான்ற நீரில் நீளிடைக்
கயந்தலை மடப்பிடி யுயங்குபசி களைஇயர்
பெருங்களி று தொலைத்த முடத்தா ளோமை
அருஞ்சுரஞ் செல்வோர்க் கல்குநிழ லாகுங்
குன்ற வைப்பின் கானஞ்
10 சென் றுசே ணகறல் வல்லிய நீயே.

தலைவன் செலவழுங்கியது.

## ௩௩௧. பெருங்குன் றூர் கிழார்

### 1731. அகநானூறு - 8. குறிஞ்சி

ஈயற் புற்றத் தீர்ம்புறத் திறுத்த
குரும்பி வல்சிப் பெருங்கை யேற்றை
தூங்குதோற் றுதிய வள்ளுகிர் கதுவலிற்
பாம்புமதன் அழியும் பாழட் கங்குலும்
5 அரிய வல்லமன் இகுளை பெரிய
கேழ லட்ட பேழ்வா யேற்றை

பலரவம லடுக்கம் புலர ஈர்க்குங்
கழைநரல் சிலம்பி ஞுங்கண் வழையொடு
வாழை யோங்கிய தாழ்கண் அசும்பிற்
10 படுகடுங் களிற்றின் வருத்தஞ் சொலியப்
பிடிபடி முறுக்கிய பெருமரப் பூசல்
விண்தோய் விடரகத் தியம்பு மவர்நாட்டு
எண்ணரும் பிறங்கல் மானதர் மயங்காது
மின்னுவிடச் சிறிய வொதுங்கி மென்மெலத்
15 துளிதலைத் தலைஇய மணியே ரைம்பால்
சிறுபுறம் புதைய வாரிக் குரல்பிழியூஉ
பெருங்குன்றூர்கிழார்

1001

நெறிகெட விலங்கிய நீயிர் இச்சுரம்
அறிதலும் அறிதிரோ வென்னுநர்ப் பெறினே.
தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச்
சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது.

**1732.** குறுந்தொகை - **338.** பாலை

திரிமருப் பிரலை யண்ணல் நல்லேறு
அரிமடப் பிணையோ டல்குநிழ லசைஇ
வீததை வியலரிற் றுஞ்சிப் பொழுதுசெலச்
செழும்பயறு கறிக்கும் புன்கண் மாலைப்
5 பின்பனிக் கடைநாட் டண்பனி யச்சிரம்

வந்தன்று பெருவிறல் தேரே பணைத்தோள்
விளங்குநக ரடங்கிய கற்பின்
நலங்கே ழரிவை புலம்பசா விடவே.

பிரிவிடைத் தோழி வற்புறுத்தியது.

**1733.** நற்றிணை - **5.** குறிஞ்சி

நிலம்நீ ராரக் குன்றங் குழைப்ப
அகல்வாய்ப் பைஞ்சுனைப் பயிர்கால் யாப்பக்
குறவர் கொன்ற குறைக்கொடி நறைப்பவர்
நறுங்கா ழாரஞ் சுற்றுவன அகைப்பப்
5 பெரும்புயல் பொழிந்த தொழில எழிலி
தெற்கேர் பிரங்கும் அற்சிரக் காலையும்
அரிதே காதலர்ப் பிரிதல் இன்றுசெல்
இருளையர்த் தரூஉம் வாடையொடு
மயங்கிதழ் மழைக்கண் பயந்த தூதே.

தலைவன் செலவுக்குறிப்பறிந்து வேறுபட்ட
தலைவிக்குத்தோழி சொல்லியது.

**1734.** நற்றிணை - **112.** குறிஞ்சி

விருந்தெவன் செய்கோ தோழி சாரல்
அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கைச் 1002



சுரும்பிமி ரடுக்கம் புலம்பக் களிறட்டு
உரும்பி னுள்ளத் தரிமா வழங்கும்
5 பெருங்கல் நாடன் வரவறிந்து விரும்பி

மாக்கடல் முகந்து மணிநிறத் தருவித்
தாழ்நீர் நனந்தலை யழுந்துபடப் பாஅய்
மலையிமைப் பதுபோல் மின்னிச்
சிலைவ லேற்றொடு செறிந்தவிம் மழைக்கே.
பருவவரவின்கண் ஆற்றாளாய தலைவியைத்தோழி
வற்புறுத்தியது.

**1735.** நற்றிணை - **119.** குறிஞ்சி

தினையுண் கேழல் இரியப் புனவன்
சிறுபொறி மாட்டிய பெருங்கல் அடாஅர்
ஒண்கேழ் வயப்புலி படூஉம் நாட
னார்தர வந்தன னாயினும் படப்பை
5 இன்முசுப் பெருங்கலை நன்மேய லாரும்
பன்மலர்க் கான்யாற் றும்பர்க் கருங்கலை
கடும்பாட்டு வருடையொடு தாவன வுகளும்
பெருவரை நீழல் வருகுவன் குளவியொடு
கூவிளந் ததைந்த கண்ணியன் யாவதும் 10
முயங்கல் பெறுகுவ னல்லன்
புலவி கொளீஇயர்தன் மலையினும் பெரிதே.
சிறைப்புறமாகத் தோழி செறிப்பறிவுறீஇயது.

**1736.** நற்றிணை - **347.** குறிஞ்சி

முழங்குகடல் முகந்த கமஞ்சூல் மாமழை மாதிரம்
நனந்தலை புதையப் பாஅய்

ஓங்குவரை மிளிர ஆட்டிப் பாம்பெறிபு
வான்புகு தலைய குன்ற முற்றி
5 அழிதுளி தலைஇய பொழுதிற் புலையன்
பேழ்வாய்த் தண்ணுமை யிடங்கொட் டன்ன
அருவி யிழிதரும் பெருவரை நாடன்
நீரன நிலையன் பேரன் பினனெனப்

## பெருங்குன்றூர் கிழார்

1003

பன்மாண் கூறும் பரிசிலர் நெடுமொழி
10 வேனிற் றேரையின் அளிய
காண வீடுமோ தோழியென் னலனே.

வரையாது நெடுங்காலம் வந்தொழுக ஆற்றாளாய
தலைமகளைத் தோழி வற்புறுக்க மறுத்தது.

**1737—1746.** பதிற்றுப்பத்து - ஒன்பதாம் பத்து.
**81—90**

**1737.** உலகம் புரக்கும் உருகெழு சிறப்பின்
வண்ணக் கருவிய வளங்கெழு கமஞ்சூல்
அகலிரு விசும்பின் அதிர்சினஞ் சிறந்து

5

கடுஞ்சிலை கழறி விசும்படையூ நிவந்து
காலை யிசைக்கும் பொழுதொடு புலம்புகொளக்
களிறுபாய்ந் தியலக் கடுமா தாங்க
ஒளிறுகொடி நுடங்கத் தேர்திரிந்து கொட்ப
அரசுபுறத் திறுப்பினும் அதிர்விலர் திரிந்து
வாயில் கொள்ளா மைந்தினர் வயவர்
10 மாயிருங் கங்குலும் விழுத்தொடி சுடர்வரத்
தோள்பிணி மீகையர் புகல்சிறந்து நாளும்
முடிதல் வேட்கையர் நெடிய மொழியூஉக்
கெடாஅ நல்லிசைத் தங்குடி நிறுமார்
இடாஅ ஏணி வியலறைக் கொட்ப
15 நாடடிப் படுத்தலிற் கொள்ளை மாற்றி
அழல்வினை யமைந்த நிழல்விடு கட்டி
கட்டளை வலிப்பநின் தானை யுதவி
வேறுபுலத் திறுத்த வெல்போ ரண்ணல்
முழவின் அமைந்த பெரும்பழ மிசைந்து
20 சாறயர்ந் தன்ன காரணி யாணர்த்
தூம்பகம் பழுனிய தீம்பிழி மாந்திக்
காந்தளங் கண்ணிச் செழுங்குடிச் செல்வர்
கலிமகிழ் மேவலர் இரவலர்க் கீயுஞ்
சுரும்பார் சோலைப் பெரும்பெயற் கொல்லிப்
25 பெருவாய் மலரொடு பசும்பிடி மகிழ்ந்து

மின்னுமிழ்ந் தன்ன சுடரிழை யாயத்துத்
தன்னிறங் கரந்த வண்டுபடு துப்பின்
ஒடுங்கீ ரோதி யொண்ணுதல் அணிகொளக்
கொடுங்குழைக் கமர்த்த நோக்கி னயவரப்
30 பெருந்தகைக் கமர்ந்த மென்சொற் றிருமுகத்து
மாணிழை யரிவை காணிய ஒருநாட்
பூண்க மாளநின் புரவி நெடுந்தேர்
35

முனைகை விட்டு முன்னிலைச் செல்லாது
தூவெதிர்ந்து பெறுஅத் தாவில் மள்ளரொடு
தொன்மருங் கறுத்த லஞ்சி யரண்கொண்டு
துஞ்சா வேந்தருந் துஞ்சுக
விருந்து மாக நின்பெருந் தோட்கே.

துறை - முல்லை. வண்ணம் -
81 செந்தூக்கு. பெயர் - நிழல்விடுகட்டி.

ஒழுகுவண்ணம். தூக்கு - 1738. பகைபெரு மையிற்

றெய்வஞ் செப்ப
ஆரிறை யஞ்சா வெருவரு கட்டூர்ப்
பல்கொடி நுடங்கு முன்பிற் செறுநர்
செல்சமந் தொலைத்த வினைநவில் யானை

5 கடாஅம் வார்ந்து கடுஞ்சினம் பொத்தி
வண்டுபடு சென்னிய பிடிபுணர்ந் தியல
மறவர் மறல மாப்படை யுறுப்பத்
தேர்கொடி நுடங்கத் தோல்புடை யார்ப்பக்
காடுகை காய்த்திய நீடுநா ளிருக்கை
10 இன்ன வைகல் பன்னா ளாகப்
பாடிக் காண்கு வந்திசிற் பெரும
பாடுநர், கொளக்கொளக் குறையாச் செல்வத்துச்செற்றோர்
கொலக்கொலக் குறையாத் தானைச் சான்றோர்
வண்மையுஞ் செம்மையுஞ் சால்பும் அறனும்
15 புகன்றுபுகழ்ந் தசையா நல்லிசை
நிலந்தரு திருவி னெடியோய் நின்னே.

82

துறை - காட்சி வாழ்த்து. வண்ணம் - ஒழுகு வண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு - செந்தூக்கு. பெயர் - வினைநவில் யானை.

## பெருங்குன்றூர் கிழார்

1005

1739. கார்மழை முன்பிற் கைபரிந் தெழுதரும்
வான்பறைக் குருகின் நெடுவரி பொற்பக்
கொல்களிறு மிடைந்த பஃறோற் றொழுதியொடு
நெடுந்தேர் நுடங்குகொடி யவிர்வரப் பொலிந்து
5 செலவுபெரி தினிதுநிற் காணு மோர்க்கே
இன்னா தம்மவது தானே பன்மா

நாடுகெட எருக்கி நன்கலந் தரூஉம்நின்
போரருங் கடுஞ்சினம் எதிர்ந்து
மாறுகொள் வேந்தர் பாசறை யோர்க்கே.

83

துறை - தும்பையரவம். வண்ணம் - ஒழுகுவண்ணம். செந்தூக்கு. பெயர் - பஃறோற்றொழுதி.

தூக்கு 1740. எடுத்தே றேய கடிப்புடை யதிரும்

போர்ப்புறு முரசங் கண்ணதிர்ந் தாங்குக்
கார்மழை முழக்கினும் வெளில்பிணி நீவி

நுதலணந் தெழுதருந் தொழினவில் யானைப்
5 பார்வற் பாசறைத் தரூஉம் பல்வேற்
பூழியர் கோவே பொலந்தேர்ப் பொறைய
மன்பதை சவட்டுங் கூற்ற முன்ப
கொடிநுடங் காரெயில் எண்ணுவரம் பறியா
பன்மா பரந்தபுல மொன்றென் றெண்ணாது
10 வலியை யாதல்நற் கறிந்தன ராயினும்
வார்முகில் முழக்கின் மழகளிறு மிகீஇத்தன்
கான்முளை மூங்கிற் கவர்கிளை போல
உய்தல் யாவதுநின் உடற்றி யோரே
வணங்க லறியார் உடன்றெழுந் துரைஇப்
15 போர்ப்புறு தண்ணுமை ஆர்ப்பெழுந்து நுவல
நோய்த்தொழில் மலைந்த வேலீண் டழுவத்து
முனைபுகல் புகல்வின் மாறா மைந்தரொடு
உருமெறி வரையிற் களிறுநிலஞ் சேரக்
காஞ்சி சான்ற செருப்பல செய்துநின்
20 குவவுக்குரை யிருக்கை யினிதுகண் டிகுமே
காலை மாரி பெய்துதொழி லாற்றி



விண்டு முன்னிய புயல்நெடுங் காலைக்
கல்சேர்பு மாமழை தலைஇப்
பல்குரற் புள்ளின் ஒலியெழுந் தாங்கே.

84

துறை - வாகை. வண்ணமும் தூக்கும் அது. பெயர் -

தொழி னவில் யானை.

**1741.** நன்மரந் துவன்றிய நாடுபல தரீஇப்
பொன்னவிர் புனைசெய லிலங்கும் பெரும்பூண்
ஒன்னாப் பூட்கைச் சென்னியர் பெருமான்
இட்ட வெள்வேல் முத்தைத் தம்மென
5 முன்றிணை முதல்வர் போல நின்று
தீஞ்சுனை நிலைஇய திருமா மருங்கிற்
கோடுபல விரிந்த நாடுகா ணெடுவரைச்
சூடா நறவின் நாண்மகி ழிருக்கை
அரசவை பணிய அறம்புரிந்து வயங்கிய
10 மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவின்
உவலை கூராக் கவலையில் நெஞ்சின்
நனவிற் பாடிய நல்லிசைக்
கபிலன் பெற்ற வூரினும் பலவே.

85

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - நாடுகாணெடுவரை.

**1742.** உறலுறு குருதிச் செருக்களம் புலவக்
கொன்றமர்க் கடந்த வெந்திறற் றடக்கை
வென்வேற் பொறையன் என்றலின் வெருவர
வெப்புடை யாடூஉச் செத்தனென் மன்யான்
5 நல்லிசை நிலைஇய நனந்தலை யுலகத்து

இல்லோர் புன்கண் தீர நல்கும்
நாடல் சான்ற நயனுடை நெஞ்சிற்
பாடுநர் புரவலன் ஆடுநடை யண்ணல்
கழைநிலை பெறுஅக் குட்டத் தாயினும்
10 புனல்பாய் மகளி ராட வொழிந்த
பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றுஞ்

## பெருங்குன்றூர் கிழார்

1007

சாந்துவரு வானி நீரினுந்
தீந்தண் சாயலன் மன்ற தானே.

86 இதுவுமது. பெயர்-வெந்திறற்றடக்கை.

1743. சென்மோ பாடினி நன்கலம் பெறுகுவை
சந்தம் பூழிலொடு பொங்குநுரை சுமந்து
தெண்கடல் முன்னிய வெண்டலைச்
செம்புனல்
ஒய்யு நீர்வழிக் கரும்பினும்
5 பல்வேற் பொறையன் வல்லனல் அளியே.

துறை - விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - வெண்டலைச் செம்புனல்.

1744. வையக மலர்ந்த தொழில்முறை
யொழியாது

கடவுட் பெயரிய கானமொடு கல்லுயர்ந்து
தெண்கடல் வளைஇய மலர்தலை யுலகத்துத்
தம்பெயர் போகிய ஒன்னார் தேயத்
5 துளங்கிருங் குட்டந் தொலைய வேலிட்டு
அணங்குடைக் கடம்பின் முழுமுதல் தடிந்து
பொருமுர ணெய்திய கழுவுள்
நாம மன்னர் துணிய நூறிக்

புறம்பெற்று

கால்வல் புரவி யண்ட ரோட்டிச்
10 சுடர்வீ வாகை நன்னற் றேய்த்துக்
குருதி விதிர்த்த குவவுச்சோற்றுக் குன்றொடு
உருகெழு மரபின் அயிரை பரைஇ
வேந்தரும் வேளிரும் பின்வந்து பணியக்
கொற்ற மெய்திய பெரியோர் மருக

15

வியலுளை யரிமான் மறங்கெழு குருசில்
விரவுப்பணை முழங்கு நிரைதோல் வரைப்பின்

உரவுக்களிற்று வெல்கொடி நுடங்கும்
ஆரெயி லலைத்த கல்கால் கவணை

பாசறை

நாரரி நறவிற் கொங்கர் கோவே
20

உடலுநர்த் தபுத்த பொலந்தேர்க் குருசில்
வளைகடல் முழவிற் றொண்டியோர் பொருந



நீநீடு வாழிய பெரும நின்வயின்
துவைத்த தும்பை நனவுற்று வினவு
மாற்றருந் தெய்வத்துக் கூட்ட முன்னிய
25 புனல்மலி பேரியா றிழிதந் தாங்கு
வருநர் வரையாச் செழும்பல் தாரங்
கொளக்கொளக் குறையாது தலைத்தலைச் சிறப்ப
ஓவத் தன்ன உருகெழு நெடுநகர்ப்
பாவை யன்ன மகளிர் நாப்பண்
30 புகன்ற மாண்பொறிப் பொலிந்த சாந்தமொடு
தண்கமழ் கோதை சூடிப் பூண்சுமந்து
திருவிற் குலைஇத் திருமணி புரையும்
உருகெழு கருவிய பெருமழை சேர்ந்து
வேங்கை விரிந்து விசும்புறு சேட்சிமை

35 அருவி யருவரை யன்ன மார்பிற்
சேணுறு நல்லிசைச் சேயிழை கணவ
மாகஞ் சுடர மாவிசும் புகக்கும்
ஞாயிறு போல விளங்குதி பன்னாள்
ஈங்குக் காண்கு வந்தனென் யானே
40 உறுகா லெடுத்த ஓங்குவரற் புணரி
நுண்மண லடைகரை யுடைதருந்
தண்கடற் படப்பை நாடுகிழ வோயே. 87

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அது. பெயர் - கல்கால்கவணை.

1745. வானம் பொழுதொடு சுரப்பக் கானம்
தோடுறு மடமான் ஏறுபுணர்ந் தியலப்
புள்ளும் மிஞிறும் மாச்சினை யார்ப்பப்
பழனுங் கிழங்கும் மிசையற வறியாது

5 பல்லான் நன்னிரை புல்லருந் துகளப்
பயங்கடை யறியா வளங்கெழு சிறப்பிற்
பெரும்பல் யாணர்க் கூலங் கெழும
நன்பல் லூழி நடுவுநின் றொழுகப்
பல்வே றிரும்பொறை நின்கோல் செம்மையின்

பெருங்குன்றூர் கிழார்

10 நாளி னுளின் நாடுதொழு தேத்த
உயர்நிலை யுலகத் துயர்ந்தோர் பரவ
அரசியல் பிழையாது செருமேந் தோன்றி
நோயிலை யாகியர் நீயே நின்மாட்டு
அடங்கிய நெஞ்சம் புகர்படு பறியாது
15 கனவிலும் பிரியா வுறையுளொடு

தண்ணெனத்

தகரம நவய துவராக கூநதல
வதுவை மகளிர் நோக்கினர் பெயர்ந்து
20

வாழ்நா ளறியும் வயங்குசுடர் நோக்கத்து
மீனொடு புரையுங் கற்பின்
வாணுத லரிவையொடு காண்வரப் பொலிந்தே.

89

துறை - காவன்முல்லை. வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - துவராக்கூந்தல்.

1746. மீன்வயின் நிற்ப வானம் வாய்ப்ப

அச்சற் றேம மாகி யிருள் தீர்ந்து
இன்பம் பெருகத் தோன்றித் தந்துணைத்
துறையின் எஞ்சாமை நிறையக் கற்றுக்
5 கழிந்தோர் உடற்றுங் கடுந்து அஞ்சா
ஒளிறுவாள் வயவேந்தர்
களிறொடு கலந்தந்து
தொன்றுமொழிந்து தொழில்கேட்ப
அகல்வையத்துப் பகலாற்றி
10 மாயாப் பல்புகழ் வியல்விசும் பூர்தர
வாள்வலி யுறுத்துச் செம்மை பூஉண்டு
அறன்வாழ்த்த நற்காண்ட
விறல்மாந்தரன் விறல்மருக
ஈர முடைமையின் நீரோ ரனையை
15 அளப்பருமையின் இருவிசும் பனையை
கொளக்குறை படாமையின் முந்நீ ரனையை
பன்மீ னாப்பண் திங்கள் போலப்
பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை
உருகெழு மரபின் அயிரை பரவியும்




20 கடலிகுப்ப வேலிட்டும்
உடலுநர் மிடல்சாய்த்தும்

மலையவும் நிலத்தவும் அருப்பம் வெளவிப்
பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய
கொற்றத் திருவின் உரவோ ரும்பல்
25 கட்டிப் புழுக்கிற் கொங்கர் கோவே
மட்டப் புகாவிற் குட்டுவ ரேறே
எழாஅத் துணைத்தோட் பூழியர் மெய்ம்மறை
இலங்குநீர்ப் பரப்பின்
வெண்பூ வேளையொடு

மரந்தையோர் பொருந
சுரைதலை மயக்கிய
30 விரவுமொழிக் கட்டூர் வயவர் வேந்தே
உரவுக்கட லன்ன தாங்கருந் தானையொடு
மாண்வினைச் சாபம் மார்புற வாங்கி
ஞாண்பொர விளங்கிய வலிகெழு தடக்கை
வார்ந்துபுனைந் தன்ன ஏந்துகுவவு மொய்ம்பின்
35 மீன்பூத் தன்ன விளங்குமணிப் பாண்டில்
ஆய்மயிர்க் கவரிப் பாய்மா மேல்கொண்டு
காழெஃகம் பிடித்தெறிந்து
விழுமத்திற் புகலும் பெயரா ஆண்மைக்
காஞ்சி சான்ற வயவர் பெரும
40 வீங்குபெருஞ் சிறப்பின் ஓங்குபுக ழோயே
கழனி யுழவர் தண்ணுமை யிசைப்பிற்
பழன மஞ்ஞை மழைசெத் தாலுந்
தண்புன லாடுந ரார்ப்பொடு மயங்கி

வெம்போர் மள்ளர் தெண்கிணை கறங்கக்
45 கூழுடை நல்வில் ஏறுமாறு சிலைப்பச்
செழும்பல விருந்த கொழும்பல் தண்பணைக்
காவிரிப் படப்பை நன்னா டன்ன

வளங்கெழு குடைச்சூ லடங்கிய கொள்கை
ஆறிய கற்பிற் றேறிய நல்லிசை
50 வண்டார் கூந்த லொண்டொடி கணவ
நின்னாள், திங்க ளனைய வாக திங்கள்
யாண்டோ ரனைய வாக யாண்டே

பெருங்குன்றூர் கிழார்

1011

ஊழி யனைய வாக வூழி
வெள்ள வரம்பின வாகென வுள்ளிக்
55 காண்கு வந்திசின் யானே செருமிக்கு
உருமென முழங்கு முரசிற்
பெருநல் யானை யிறைகிழ வோயே.

90

துறை - காட்சி வாழ்த்து. வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர் வண்ணமும். தூக்கு-செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர்- வலிகெழுதடக்கை,

1746-a. பதிகம்

குட்டுவன் இரும்பொறைக்கு மையூர் கிழாஅன்
வேண்மாள் அந்துவஞ் செள்ளை யீன்றமகன்
வெருவரு தானையொடு வெய்துறச் செய்துசென்று
இருபெரு வேந்தரும் விச்சியும் வீழ
5 அருமிளைக் கல்லகத் தைந்தெயி லெறிந்து
பொத்தி யாண்ட பெருஞ்சோ ழனையும்
வித்தை யாண்டவிளம் பழையன் மாறனையும்
வைத்த வஞ்சினம் வாய்ப்ப வென்று
வஞ்சி மூதூர்த் தந்துபிறர்க் குதவி
10 மந்திர மரபிற் றெய்வம் பேணி
மெய்யூ ரமைச்சியல் மையூர் கிழானைப்
புரையறு கேள்விப் புரோசு மயக்கி
அருந்திறல் மரபிற் பெருஞ்சதுக் கமர்ந்த
வெந்திறற் பூதரைத் தந்திவ ணிரீஇ
15 ஆய்ந்த மரபிற் சாந்தி வேட்டு
மன்னுயிர் காத்த மறுவில் செங்கோல்
இன்னிசை முரசின் இளஞ்சேர
லிரும்பொறையைப்
பெருங்குன்றூர்கிழார் பாடினர் பத்துப்பாட்டு.

அவைதாம் : நிழல்விடுகட்டி, வினைநவில்யானை, பஃறோற் றொழுதி, தொழினவில்யானை, நாடுகாணெடுவரை, வெந்திறற்றடக்கை, வெண்டலைச் செம்புனல், கல்கால்கவணை, துவராக்கூந்தல், வலிகெழுதடக்கை. இவை பாட்டின் பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில்: மருளில்லார்க்கு மருளக் கொடுக்க வென்று உவகையின் முப்பத்தீராயிரங் காணம் கொடுத்து அவர் அறியாமை ஊரும் மனையும் வளமிகப் படைத்து ஏரும் இன்பமும் இயல்வரப் பரப்பி எண்ணற்கு ஆகா அருங்கல வெறுக்கையொடு பன்னூறாயிரம் பாற்பட வகுத்துக் காப்புமறம் தான் விட்டான் அக்கோ.

குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை பதினாறாண்டு வீற்றிருந் தான்.

## 1747. புறநானூறு - 147.

கன்முழை யருவிப் பன்மலை நீந்திச்
சீறியாழ் செவ்வழி பண்ணி வந்ததைக்
கார்வான் இன்னுறை தமியள் கேளா
நெருந லொருசிறைப் புலம்புகொண் டுறையும்
5 அரிமதர் மழைக்க ணம்மா வரிவை
நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல்
மண்ணுறு மணியின் மாசற மண்ணிப்
புதுமலர் கஞல இன்று பெயரின்
அதுமனெம் பரிசில் ஆவியர் கோவே.

திணை - பெருந்திணை; துறை - குறுங்கலி, தாபதநிலையுமாம்.

கண்ணகி காரணமாக வையாவிக்கோப் பெரும்பேகனைப் பாடியது.

## 1748. புறநானூறு - 210.

மன்பதை காக்குநின் புரைமை நோக்காது
அன்புகண் மாறிய அறனில் காட்சியொடு
நும்ம னோருமற் றினைய ராயின்
எம்ம னோரிவண் பிறவலர் மாதோ
5 செயிர்தீர் கொள்கை யெம்வெங் காதலி
உயிர்சிறி துடைய ளாயின் எம்வயின்
உள்ளா திருத்தலோ அரிதே அதனால்
அறனில் கூற்றந் திறனின்று துணியப்
பிறனா யினன்கொல் இறீஇயரென் னுயிரென

பெருங்குன்றூர் கிழார்

1013

10 நுவல்வுறு சிறுமையள் பலபுலந் துறையும்
இடுக்கண் மனையோள் தீரிய இந்நிலை
விடுத்தேன் வாழியர் குருசில் உதுக்காண்

அவல நெஞ்சமொடு செல்வல்நிற் கறுத்தோர்
அருங்கடி முனையரண் போலப்
15 பெருங்கை யற்றவென் புலம்புமுந் துறுத்தே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.
சேரமான் குடக்கோச்சேர லிரும்பொறை
பரிசினீட்டித்தானைப் பாடியது.

**1749.** புறநானூறு - **211.**

அஞ்சுவரு மரபின் வெஞ்சினப் புயலேறு

அணங்குடை யரவின் அருந்தலை துமிய
நின்றுகாண் பன்ன நீண்மலை மிளிரக்
குன்றுதூ வெறியும் அரவம் போல
5 முரசெழுந் திரங்குந் தானையொடு தலைச்சென்று
அரைசுபடக் கடக்கும் உரைசால்
தோன்றல்நின்
உள்ளி வந்த ஓங்குநிலைப் பரிசிலென்
வள்ளியை யாதலின் வணங்குவன்
இவனெனக்
கொள்ளா மாந்தர் கொடுமை கூறநின்
10 உள்ளியது முடித்தோய் மன்ற முன்னாட்
கையுள் எதுபோற் காட்டி வழிநாட்
பொய்யொடு நின்ற புறநிலை வருத்தம்
நாணு யாயினும் நாணக் கூறியென்
நுணங்கு செந்நா அணங்க ஏத்திப்
15 பாடப் பாடப் பாடுபுகழ் கொண்டநின்
ஆடுகொள் வியன்மார்பு தொழுதனென்
பழிச்சிச்
செல்வ லத்தை யானே வைகலும்
வல்சி யின்மையின் வயின்வயின் மாறி
இல்லெலி மடிந்த தொல்சுவர் வரைப்பிற்
20 பாஅ லின்மையிற் பல்பாடு சுவைத்து

மூலைக்கோள் மறந்த புதல்வனொடு
மனைத்தொலைந் திருந்தவென் வாணுதற்

படர்ந்தே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.
சேரமான் குடக்கோச்சேர லிரும்பொறையைப் பாடியது.

## 1750. புறநானூறு - 266.

பயங்கெழு மாமழை பெய்யாது மாறிக்
கயங்களி முளியுங் கோடை யாயினும்
புழற்கா லாம்பல் அகலடை நீழற்
கதிர்க்கோட்டு நந்தின் சுரிமுக வேற்றை
5 நாகிள வளையொடு பகல்மணம் புகூஉம்
நீர்திகழ் கழனி நாடுகெழு பெருவிறல்
வான்றோய் நீள்குடை வயமான் சென்னி
சான்றோ ரிருந்த அவையத் துற்றோன்
ஆசா கென்னும் பூசல் போல
10 வல்லே களைமதி யத்தை யுள்ளிய

விருந்துகண் டொளிக்குந் திருந்தா வாழ்க்கைப்
பொறிப்புண ருடம்பிற் றோன்றியென்
அறிவுகெட நின்ற நல்கூர் மையே.
திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.

சோழன் உருவப்பஃறே ரிளஞ்சேட்சென்னியைப் பாடியது.

## 1751. புறநானூறு - 318.

கொய்யடகு வாடத் தருவிற குணங்க
மயிலஞ் சாயல் மாஅ யோளொடு
பசித்தன் றம்ம பெருந்தகை யூரே
மனையுறை குரீஇக் கறையணற் சேவல்
5 பாணர் நரம்பின் சுகிரொடு வயமான்
குரற்செய் பீலியின் இழைத்த குடம்பைப்
பெருஞ்செய் நெல்லின் அரிசி யார்ந்துதன்
புன்புறப் பெடையொடு வதியும்
யாணர்த் தாகும் வேந்துவிழு முறினே.

திணை - வாகை; துறை - வல்லாண்முல்லை.

## ௩௩௨. பெருங்கௌசிகனார்

## 1752. நற்றிணை - 44. குறிஞ்சி

பொருவி லாயமோ டருவி யாடி
நீரலைச் சிவந்த பேரமர் மழைக்கட்
குறியா நோக்கமொடு முறுவல் நல்கி
மனைவயிற் பெயர்ந்த காலை நினைஇய
5 நினக்கோ அறியுநள் நெஞ்சே புனத்த
நீடிலை விளைதினைக் கொடுங்கால் நிமிரக்
கொழுங்குரல் கோடல் கண்ணிச் செழும்பல
பல்கிளைக் குறவ ரல்கயர் முன்றிற்
குடக்கா யாசினிப் படப்பை நீடிய
10 பன்மா வுயர்சினை மின்மினி விளக்கத்துச்
செல்மழை யியக்கங் காணும்
நன்மலை நாடன் காதல் மகளே.

இற்செறிப்பிற் பிற்றைஞான்று தலைமகன் குறியிடத்துவந்து சொல்லியது.

**1753.** நற்றிணை - **139.** முல்லை

உலகிற் காணி யாகப் பலர்தொழப்
பலவயின் நிலைஇய குன்றிற் கோடுதோறு
ஏயினை யுரைஇயரோ பெருங்கலி யெழிலி
படுமலை நின்ற நல்யாழ் வடிநரம்பு
5 எழீஇ யன்ன உறையினை முழவின்
மண்ணார் கண்ணின் இம்மென இமிரும்
வணர்ந்தொலி கூந்தல் மாஅ யோளொடு
புணர்ந்தினிது நுகர்ந்த சாரல் நல்லூர்
விரவுமல ருதிர வீசி

10 இரவுப்பெயல் பொழிந்த உதவி யோயே.

தலைவன் வினைமுற்றிவந்து பள்ளியிடத்தனாகப் பெய்த மழையை வாழ்த்தியது.

## ருருரு. பெருஞ்சாத்தனார்

### 1754. குறுந்தொகை - 263. குறிஞ்சி

மறிக்குரல் அறுத்துத் தினைப்பிரப் பிரீஇச்
செல்லாற்றுக் கவலைப் பல்லியங் கறங்கத்
தோற்ற மல்லது நோய்க்குமருந் தாகா
வேற்றுப்பெருந் தெய்வம் பலவுடன் வாழ்த்திப்
5 பேஎய்க் கொளீஇயள் இவளெனப் படுதல்
நோதக் கன்றே தோழி மால்வரை
மழைவிளை யாடு நாடனைப்
பிழையே மாகிய நாமிதற் படவே.

'அன்னை வெறியெடுக்கக் கருதாநின்றாள்; இனி யாம் இதற்கு என்கொலோ செயற்பாலது' எனத் தோழி தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறமாகக் கூறியது.

## ருருச. பெருஞ்சித்திரனார்

### 1755. புறநானூறு - 158.

முரசுகடிப் பிகுப்பவும் வால்வளை துவைப்பவும்
அரசுடன் பொருத அண்ணல் நெடுவரைக்

கறங்குவெள் ளருவி கல்லலைத் தொழுகும்
பறம்பிற் கோமான் பாரியும் பிறங்குமிசைக்
5 கொல்லி யாண்ட வல்வி லோரியும்
காரி யூர்ந்து பேரமர்க் கடந்த
மாரி யீகை மறப்போர் மலையனும்
ஊரா தேந்திய குதிரைக் கூர்வேற்
கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினியும்
10 ஈர்ந்தண் சிலம்பி னிருள்தூங்கு நளிமுழை
அருந்திறற் கடவுள் காக்கும் உயர்சிமைப்
பெருங்கல் நாடன் பேகனும் திருந்துமொழி
மோசி பாடிய ஆயும் ஆர்வமுற்று
உள்ளி வருநர் உலைவுநனி தீரத்



15 தள்ளா தீயுந் தகைசால் வண்மைக்
கொள்ளா ரோட்டிய நள்ளியும் எனவாங்கு
எழுவர் மாய்ந்த பின்றை அழிவரப்

பாடி வருநரும் பிறரும் கூடி
இரந்தோ ரற்றந் தீர்க்கென விரைந்திவண்
20 உள்ளி வந்தனென் யானே விசும்புறக்
கழைவளர் சிலம்பின் வழையொடு நீடி
ஆசினிக் கவினிய பலவின் ஆர்வுற்று
முட்புற முதுகனி பெற்ற கடுவன்

துய்த்தலை மந்தியைக் கையிடூஉப் பயிரும்
25 அதிரா யாணர் முதிரத்துக் கிழவ
இவண்விளங்கு சிறப்பின் இயல்தேர்க் குமண
இசைமேந் தோன்றிய வண்மையொடு
பகைமேம் படுகநீ யேந்திய வேலே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல், பரிசில்கடா நிலையுமாம்.

குமணனைப் பாடியது.

## 1756. புறநானூறு - 159.

வாழு நாளோடு யாண்டுபல வுண்மையின்
தீர்தல்செல் லாதென் னுயிரெனப் பலபுலந்து
கோல்கா லாகக் குறும்பல வொதுங்கி
நூல்விரித் தன்ன கதுப்பினள் கண்துயின்று
5 முன்றிற் போகா முதிர்வினள் யாயும்
பசந்த மேனியொடு படரட வருந்தி
மருங்கிற் கொண்ட பல்குறு மாக்கள் 10

பிசைந்துதின வாடிய முலையள் பெரிதழிந்து
குப்பைக் கீரை கொய்கண் அகைத்த
முற்றூ இளந்தளிர் கொய்துகொண் டுப்பின்று
நீருலை யாக வேற்றி மோரின்று
அவிழ்ப்பத மறந்து பாசடகு மிசைந்து
மாசொடு குறைந்த வுடுக்கையள் அறம்பழியாத்

துவ்வா ளாகிய என்வெய் யோளும்
15 என்றாங்கு, இருவர் நெஞ்சமு முவப்பக்
கரிபுன மயக்கிய அகன்கட் கொல்லை

கானவர்

ஐவனம் வித்தி மையுறக் கவினி
ஈனல் செல்லா ஏனற் கிழுமெனக்
கருவி வானந் தலைஇ யாங்கும்
20 ஈத்த நின்புக ழேத்தித் தொக்கவென்
பசிதினத் திரங்கிய ஒக்கலும் உவப்ப
உயர்ந்தேந்து மருப்பிற் கொல்களி று பெறினுந்
தவிர்ந்துவிடு பரிசில் கொள்ளலென் உவந்துநீ
இன்புற விடுதி யாயிற் சிறிது

25 குன்றியுங் கொள்வல் கூர்வேற் குமண
அதற்பட அருளல் வேண்டுவல் விறற்புகழ்
வசையில் விழுத்திணைப் பிறந்த
இசைமேந் தோன்றல்நிற் பாடிய யானே.

திணை - பாடாண்டிணை; துறை - பரிசில்கடாநிலை.

குமணனைப் பாடியது.

## 1757. புறநானூறு - 160.

உருகெழு ஞாயிற் றொண்கதிர் மிசைந்த

முளிபுற் கானங் குழைப்பக் கல்லென
அதிர்குர லேறொடு துளிசொரிந் தாங்குப்
பசிதினத் திரங்கிய கசிவுடை யாக்கை
5 அவிழ்புகு வறியா தாகலின் வாடிய
நெறிகொள் வரிக்குடர் குளிப்பத் தண்ணெனக்
குய்க்கொள் கொழுந்துவை நெய்யுடை யடிசில்
மதிசேர் நாண்மீன் போல நவின்ற
சிறுபொல் நன்கலஞ் சுற்ற இரீஇக்
10 கேடின் றாக பாடுநர் கடும்பென
அரிதுபெறு பொலங்கலம் எளிதினின் வீசி
நட்டோர் நட்ட நல்லிசைக் குமணன்
மட்டார் மறுகின் முதிரத் தோனே
செல்குவை யாயின் நல்குவன் பெரிதெனப்



15 பல்புகழ் நுவலுநர் கூற வல்விரைந்து
உள்ளந் துரப்ப வந்தனென் எள்ளுற்று
இல்லுணத் துறத்தலின் இல்மறந் துறையும்
புல்லுளைக் குடுமிப் புதல்வன் பன்மாண் 20

பாலில் வறுமுலை சுவைத்தனன் பெறாஅன்
கூழுஞ் சோறுங் கடைஇ யூழின்
உள்ளில் வறுங்கலந் திறந்தழக் கண்டு
மறப்புலி யுரைத்தும் மதியங் காட்டியும்
நொந்தன ளாகி நுந்தையை யுள்ளிப்
பொடிந்தநின் செவ்வி காட்டெனப் பலவும் 25

வினவ லாஞ ளாகி நனவின்
அல்ல லுழப்போள் மல்லல் சிறப்பச்
செல்லாச் செல்வ மீகுத்தனை வல்லே
விடுதல் வேண்டுவ லத்தை படுதிரை
நீர்சூழ் நிலவரை யுயரநின்
30 சீர்கெழு விழுப்புக ழேத்துகம் பலவே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.
குமணனைப் பாடியது.

## 1758. புறநானூறு - 161.

நீண்டொலி யழுவங் குறைபட
முகந்துகொண்டு
ஈண்டுசெலற் கொண்மூ வேண்டுவயிற் குழீஇப்
பெருமலை யன்ன தோன்றல சூன்முதிர்பு
உருமுரறு கருவியொடு பெயல்கட னிறுத்து
5 வளமழை மாறிய என்றூழ்க் காலை
மன்பதை யெல்லாஞ் சென்றுணக் கங்கைக்
கரைபொரு மலிநீர் நிறைந்து தோன்றியாங்கு
எமக்கும் பிறர்க்குஞ் செம்மலை யாகலின்
அன்பி லாடவர் கொன்றுஆறு கவரச்
10 சென்றுதலை வருந வல்ல அன்பின்று
வன்கலை தெவிட்டும் அருஞ்சுர மிறந்தோர்க்கு
இற்றை நாளொடும் யாண்டுதலைப் பெயரவெனக்

கண்பொறி போகிய கசிவோ டுரனழிந்து
15
அருந்துய ருழக்குமென் பெருந்துன் புறவிநின்
தாள்படு செல்வங் காண்டொறு மருளப்
பனைமருள் தடக்கையொடு முத்துப்பட முற்றிய
உயர்மருப் பேந்திய வரைமருள் நோன்பகடு
ஒளிதிகழ் ஓடை பொலிய மருங்கிற்
படுமணி யிரட்ட ஏறிச் செம்மாந்து
20 செலனசைஇ யுற்றனென் விறல்மிகு குருசில்
இன்மை துரப்ப இசைதர வந்துநின்
வண்மையிற் றொடுத்தவென் நயந்தனை
கேண்மதி
வல்லினும் வல்லே ஞயினும் வல்லே
என்னளந் தறிந்தனை நோக்காது சிறந்த
25 நின்னளந் தறிமதி பெரும என்றும்
வேந்தர் நாணப் பெயர்வேன் சாந்தருந்திப்
பல்பொறிக் கொண்ட ஏந்தெழி லகலம்
மாணிழை மகளிர் புல்லுதொறும் புகல
நாண்முர சிரங்கும் இடனுடை வரைப்பினின்
30 தாணிழல் வாழ்நர் நன்கலம் மிகுப்ப
வாளமரு ழந்தநின் தானையும்
சீர்மிகு செல்வமும் ஏத்துகம் பலவே.
திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.
குமணனைப் பாடிப் பகடுபெற்றது.

## 1759. புறநானூறு - 162.

இரவலர் புரவலை நீயு மல்லை
புரவல ரிரவலர்க் கில்லையு மல்லர்
இரவல ருண்மையுங் காணினி இரவலர்க்கு ஈவோ
ருண்மையுங் காணினி நின்னூர்க் 5 கடிமரம் வருந்தத்
தந்து யாம் பிணித்த நெடுநல் யானையெம் பரிசில்
கடுமான் தோன்றல் செல்வல் யானே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்விடை.

## பெருஞ்சித்திரனர் 1021.

பெருஞ்சித்திரனர் வெளிமானுழைச் சென்றார்க்கு வெளிமான் துஞ்சுவான் தம்பியைப் பரிசில்கொடுவென அவன் சிறிது கொடுப்பக் கொள்ளாது போய்க் குமணனைப்பாடிக் குமணன் பகடுகொடுப்பக் கொணர்ந்து நின்று வெளிமானூர்க் கடிமரத்து யாத்துச்சென்று அவர் சொல்லியது.

## 1760. புறநானூறு - 163.

நின்னயந் துறைநர்க்கும் நீநயந் துறைநர்க்கும்
பன்மாண் கற்பின்நின் கிளைமுத லோர்க்கும்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்
5 இன்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது

வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்
எல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேற் குமணன் நல்கிய வளனே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்.

பெருஞ்சித்திரனார் குமணனைப் பாடிப் பரிசில் கொணர்ந்து மனையோட்குச் சொல்லியது.

## 1761. புறநானூறு - 207.

எழுஇனி நெஞ்சஞ் செல்கம் யாரோ
பருகு வன்ன வேட்கை யில்வழி
அருகிற் கண்டும் அறியார் போல
அகனக வாரா முகனழி பரிசில்
5 தாளி லாளர் வேளா ரல்லர்
வருகென வேண்டும் வரிசை யோர்க்கே
பெரிதே உலகம் பேணுநர் பலரே
மீளி முன்பின் ஆளி போல
உள்ள முள்ளவிந் தடங்காது வெள்ளென 



10 நோவா தோன்வயிற் றிரங்கி
வாயா வன்கனிக் குலமரு வோரே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.

வெளிமான் துஞ்சியபின் அவன் தம்பி
இளவெளிமானைப் பரிசில் கொடுவென அவன் சிறி

துகொடுப்பக் கொள்ளாது பாடியது.

## 1762. புறநானூறு - 208.

குன்றும் மலையும் பலபின் னொழிய
வந்தனென் பரிசில் கொண்டனென்
செலற்கென
நின்ற என்னையந் தருளி யீதுகொண்டு
ஈங்கனஞ் செல்க தானென என்னை
5 யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்
காணா தீத்த இப்பொருட்கு யானோர்
வாணிகப் பரிசில னல்லென் பேணித்
தினையனைத் தாயினும் இனிதவர்
துணையள வறிந்து நல்கினர் விடினே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.
அதியமான் நெடுமானஞ்சியுழைச்சென்ற
பெருஞ்சித்திரனாரைக்
காணாது இதுகொண்டு செல்கென்று அவன் பரிசில்
கொடுப்பக்
கொள்ளாது அவர் சொல்லியது.

## 1763. புறநானூறு - 237.

நீடுவாழ் கென்றுயான் நெடுங்கடை குறுகிப் பாடி
நின்ற பசிநாட் கண்ணே

கோடைக் காலத்துக் கொழுநிழ லாகிப் பொய்த்த
லறியா வுரவோன் செவிமுதல் 5 வித்திய பனுவல்
விளைந்தன் று நன்றென நச்சி யிருந்த நசைபழு தாக
அட்ட குழிசி அழற்பயந் தாஅங்கு
அளியர் தாமே யார்க வென்னு
அறனில் கூற்றந் திறனின் று துணிய
10 ஊழி னுருப்ப எருக்கிய மகளிர்



வாழைப் பூவின் வளைமுறி சிதற
முதுவா யொக்கற் பரிசில ரிரங்கக்
கள்ளி போகிய களரியம் பறந்தலை
வெள்வேல் விடலை சென்றுமாய்ந் தனனே
15 ஆங்கது நோயின் றாக ஓங்குவரைப்
புலிபார்த் தொற்றிய களிற்றிரை பிழைப்பின்
எலிபார்த் தொற்று தாகும் மலிதிரைக்
கடல்மண்டு புனலின் இழுமெனச் சென்று
நனியுடைப் பரிசிற் றருகம்
20 எழுமதி நெஞ்சே துணிபுமுந் துறுத்தே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.

வெளிமானுழைச் சென்றார்க்கு அவன் துஞ்ச
இளவெளிமான் சிறிது கொடுப்பக் கொள்ளாது
பெருஞ்சித்திரனுர் பாடியது.

## 1764. புறநானூறு - 238.

கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா
வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடிப்
பேஎ யாயமொடு பெட்டாங்கு வழங்குங்
5 காடுமுன் னினனே கட்கா முறுநன்
தொடிகழி மகளிரிற் றொல்கவின் வாடிப்
பாடுநர் கடும்பும் பையென் றனவே
10

தோடுகொள் முரசுங் கிழிந்தன கண்ணே
ஆளில், வரைபோல் யானையு மருப்பிழந் தனவே
வெந்திறற் கூற்றம் பெரும்பே துறுப்ப
எந்தை யாகுத லதற்பட லறியேன்
அந்தோ அளியேன் வந்தனென் மன்ற
என்னா குவர்கொலெற் றுன்னி யோரே
மாரி யிரவின் மரங்கவிழ் பொழுதின்
15 ஆரு ருற்ற நெஞ்சமொ டோராங்குக்
கண்ணி லூமன் கடற்பட் டாங்கு

வரையளந் தறியாத் திரையரு நீத்தத்து

அவல மறுசுழி மறுகலின்
தவலே நன்றுமன் தகுநியு மதுவே.
திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.
வெளிமான் துஞ்சியபின் பாடியது.

## ௩௩௫. பெருந்தலைச்சாத்தனார்

### 1765. அகநானூறு - 13. பாலை

தன்கடற் பிறந்த முத்தி னாரமும்
முனைதிறை கொடுக்குந் துப்பிற் றன்மலைத்
தெறலரு மரபிற் கடவுட் பேணிக்
குறவர் தந்த சந்தி னாரமும்
5 இருபே ராரமும் எழில்பெற அணியுந்
திருவீழ் மார்பிற் றென்னவன் மறவன்
குழியிற் கொண்ட மராஅ யானை
மொழியி னுணர்த்துஞ் சிறுவரை யல்லது
வரைநிலை யின்றி யிரவலர்க் கீயும்
10 வள்வா யம்பிற் கோடைப் பொருநன்
பண்ணி தைஇய பயங்கெழு வேள்வியின்
விழுமிது நிகழ்வ தாயினுந் தெற்கேர்பு
கழிமழை பொழிந்த பொழுதுகொ
ளமையத்துச்
சாய லின்றுணை யிவட்பிரிந் துறையின் 15
நோயின் றாக செய்பொருள் வயிற்பட

மாசில் தூமடி விரிந்த சேக்கைக்
கவவின் புகுமைக் கழிக வளவயல்
அழல்நுதி யன்ன தோகை யீன்ற
கழனி நெல்லின் கவைமுத லலங்கல்
20 நிரம்பகன் செறுவின் வரம்பணை யாத் துயல்வரப்
புலம்பொடு வந்த பொழுதுகொள் வாடை
இலங்குபூங் கரும்பின் ஏர்கழை யிருந்த

பெருந்தலைச் சாத்தனார்

1025

வெண்குருகு நரல வீசும்
நுண்பல் துவலைய தண்பனி நாளே.

பொருள்வயிற் பிரியலுற்ற தலைமகனைத் தோழி செலவழுங்கு வித்தது ; உடம்பட்டதூஉமாம்.

**1766.** அகநானூறு - **224.** முல்லை

செல்க பாக எல்லின்று பொழுதே
வல்லோன் அடங்குகயி றமைப்பக் கொல்லன்
விசைத்துவாங்கு துருத்தியின் வெய்ய வுயிராக்
கொடுநுகத்து யாத்த தலைய கடுநடைக்
5 காற்கடுப் பன்ன கடுஞ்செல லிவுளி
பால்கடை நுரையின் பருஉமிதப் பன்ன
வால்வெண் தெவிட்டல் வழிவார் நுணக்கஞ்
சிலம்பி நூலி னுணங்குவன பாறிச்
சாந்துபுல ரகல மறுப்பக் காண்டகப் 10

புதுநலம் பெற்ற வெய்துநீங்கு புறவிற்
றெறிநடை மரைக்கணம் இரிய மனையோள்
ஐதுணங்கு வல்சி பெய்துமுறுக் குறுத்த
திரிமரக் குரலிசை கடுப்ப வரிமணல்
அலங்குகதிர்த் திகிரி யாழி போழ
15 வருங்கொல் தோழிநம் இன்னுயிர்த்
துணையெனச்
சில்கோ லெல்வளை யொடுக்கிப் பல்கால்
அருங்கடி வியனகர் நோக்கி
வருந்துமா லளியள் திருந்திழை தானே.
வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

## 1767. நற்றிணை - 262. பாலை

தண்புனக் கருவிளைக் கண்போல் மாமலர்
ஆடுமயிற் பீலியின் வாடையொடு துயல்வர
உறைமயக் குற்ற ஊர்துஞ்சு யாமத்து
நடுங்குபிணி நலிய நல்லெழில் சாஅய்த்
5 துனிகூர் மனத்தள் முனிபடா ருழக்கும்
65

பணைத்தோ ளரும்பிய சுணங்கிற் கணைக்காற்
குவளை நாறுங் கூந்தற் றேமொழி
இவளிற் றீர்ந்தும் ஆள்வினை வலிப்பப்
பிரிவல்நெஞ் சென்னு மாயின்
10 அரிதுமன் றம்ம இன்மைய திளிவே.

தலைமகள் ஆற்றாக்குறிப்பறிந்து பிரிவிடை விலக்கியது.

## 1768. புறநானூறு - 151.

பண்டும் பண்டும் பாடுநர் உவப்ப

விண்டோய் சிமைய விறல்வரைக் கவாஅற்
கிழவன் சேட்புலம் படரின் இழையணிந்து
புன்றலை மடப்பிடி பரிசி லாகப்
5 பெண்டிருந் தம்பதங் கொடுக்கும்
கண்டூ ரக்கோ ளாகலின் நன்றும்

வண்புகழ்க்

முயங்க லான்றிசின் யானே பொலந்தேர்
நன்னன் மருக னன்றியும் நீயும்
முயங்கற் கொத்தனை மன்னே வயங்குமொழிப்
10 பாடுநர்க் கடைத்த கதவின் ஆடுமழை
அணங்குசா லடுக்கம் பொழியும்நும்
மணங்கமழ் மால்வரை வரைந்தன
ரெமரே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

இளங்கண்டீரக்கோவும் இளவிச்சிக்கோவும் ஒருங்கிருந்த வழிச்
சென்ற பெருந்தலைச்சாத்தனார் இளங்கண்டீரக் கோவைப்புல்லி இள
விச்சிக்கோவைப் புல்லாராக, என்னை என் செயப் புல்லீராயினீ
ரென, அவர் பாடியது.

## 1769. புறநானூறு - 164.

ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்புபசி யுழவாப்
பாஅ லின்மையின் தோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
5 சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுகம் நோக்கி



நீரொடு நிறைந்த ஈரிதழ் மழைக்கணென்
மனையோ ளெவ்வம் நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண
என்னிலை யறிந்தனை யாயின் இந்நிலைத்
10 தொடுத்துங் கொள்ளா தமையலென் அடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்

மண்ணமை முழவின் வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.

தம்பியால் நாடுகொள்ளப்பட்டுக் காடுபற்றியிருந்த குமணனைப் பாடியது.

## 1770. புறநானூறு - 165.

மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே
துன்னருஞ் சிறப்பின் உயர்ந்த செல்வர்
இன்மையின் இரப்போர்க் கீஇ யாமையின்
5 தொன்மை மாக்களிற் றொடர்பறி யலரே
தாடாழ் படுமணி யிரட்டும் பூநுதல்
ஆடியல் யானை பாடுநர்க் கருகாக்
கேடில் நல்லிசை வயமான் றோன்றலைப்
பாடி நின்றனெ னாகக் கொன்னே
10 பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தல்என்
நாடிழந் ததனினும் நனியின் னாதென
வாள்தந் தனனே தலையெனக் கீயத்
தன்னிற் சிறந்தது பிறிதொன் றின்மையின்
ஆடுமலி யுவகையொடு வருவல்
15 ஓடாப் பூட்கைநின் கிழமையோற் கண்டே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்விடை.

தம்பியால் நாடு கொள்ளப்பட்டுக் காடு பற்றியிருந்த குமணனைக்கண்டு அவன் தன் வாள் கொடுப்பக் கொண்டுவந்து இளங்குமணற்குக் காட்டிப் பாடியது.

## 1771. புறநானூறு - 205.

முற்றிய திருவின் மூவ ராயினும்
பெட்பின் றீதல் யாம்வேண் டலமே
விறற்சினந் தணிந்த விரைபரிப் புரவி
உறுவர் செல்சார் வாகிச் செறுவர்
5 தாளுளந் தபுத்த வாள்மிகு தானை
வெள்வீ வேலிக் கோடைப் பொருந
சிறியவும் பெரியவும் புழைகெட விலங்கிய
மான்கணந் தொலைச்சிய கடுவிசைக் கதநாய்
நோன்சிலை வேட்டுவ நோயிலை யாகுக
10 ஆர்கலி யாணர்த் தரீஇய கால்வீழ்த்துக்
கடல்வயிற் குழீஇய அண்ணலங் கொண்மூ
நீரின்று பெயரா வாங்குத் தேரொடு
ஒளிறுமருப் பேந்திய செம்மற்
களிறின்று பெயரல பரிசிலர் கடும்பே.

திணை - பாடாண்டிணை; துறை - பரிசிற்றுறை.
கடியநெடுவேட்டுவன் பரிசில் நீட்டித்தானைப் பாடியது.

## 1772. புறநானூறு - 209.

பொய்கை நாரை போர்விற் சேக்கும்

நெய்தலங் கழனி நெல்லரி தொழுவர்
கூம்புவிடு மென்பிணி யவிழ்ந்த ஆம்பல்
அகலடை யரியல் மாந்தித் தெண்கடற்
5 படுதிரை யின்சீர்ப் பாணி தூங்கும்
மென்புல வைப்பின் நன்னாட்டுப் பொருந
பல்கனி நசைஇ அல்குவிசும் புகந்து
பெருமலை விடரகஞ் சிலம்ப முன்னிப்
பழனுடைப் பெருமரந் தீர்ந்தெனக் கையற்றுப்
10 பெறுது பெயரும் புள்ளினம் போலநின்
நசைதர வந்துநின் இசைநுவல் பரிசிலென்
வறுவியேன் பெயர்கோ வாள்மேம் படுந
ஈயா யாயினும் இரங்குவெ னல்லேன்

## பெருந்தேவனார்

1029

நோயிலை யாகுமதி பெரும நம்முட்
15 குறுநணி காண்குவ தாக நாளும்
நறும்ப லொலிவருங் கதுப்பிற் றேமொழித்
தெரியிழை மகளிர் பாணி பார்க்கும்
பெருவரை யன்ன மார்பிற்
செருவெஞ் சேஎய்நின் மகிழிருக் கையே.
திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை
மூவன் பரிசில்நீட்டித்தானைப் பாடியது.

## 1773. புறநானூறு - 294.

வெண்குடை மதிய மேனிலாத் திகழ்தரக் கண்கூ
டிறுத்த கடல்மருள் பாசறைக் குமரிப்படை தழீஇய
கூற்றுவினை யாடவர் தமர்பிற ரறியா அமர்மயங்
கழுவத்து
5 இறையும் பெயருந் தோற்றி நுமருள்
நாண்முறை தபுத்தீர் வம்மின் ஈங்கெனப்
போர்மலைந் தொருசிறை நிற்ப யாவரும் அரவுமிழ்
மணியிற் குறுகார்
நிரை தார் மார்பினின் கேள்வனைப் பிறரே. திணை -
தும்பை ; துறை - தானைமறம்.

## ௩௩௯. பெருந்தேவனார்

## 1774. அகநானூறு - 51. பாலை

ஆள்வழக் கற்ற சுரத்திடைக் கதிர்தெற நீளெரி
பரந்த நெடுந்தாள் யாத்துப்
போழ்வளி முழங்கும் புல்லெ னுயர்சினை
முடைநசை யிருக்கைப் பெடைமுகம் நோக்கி
5 ஊன்பதித் தன்ன வெருவரு செஞ்செவி
எருவைச் சேவல் கரிபுசிறை தீய
வேனில் நீடிய வேயுயர் நனந்தலை
நீயுழந் தெய்துஞ் செய்வினைப் பொருட்பிணி 1030

பல்லிதழ் மழைக்கண் மாஅ யோள்வயிற்
10 பிரியிற் புணர்வ தாயிற் பிரியாது
ஏந்துமுலை முற்றம் வீங்கப் பல்லூழ்
சேயிழை தெளிர்ப்பக் கவைஇ நாளும்
மனைமுதல் வினையொடு முவப்ப
நினைமா ணெஞ்சம் நீங்குதல் மறந்தே.

பொருள்வயிற்பிரிவு கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

**1775.** குறுந்தொகை - **255.** பாலை

பொத்தில் காழ அத்த யாஅத்துப்
பொரியரை முழுமுதல் உருவக் குத்தி
மறங்கெழு தடக்கையின் வாங்கி உயங்குநடைச்
சிறுகட் பெருநிரை யுறுபசி தீர்க்கும்
5 தடமருப் பியானை கண்டன தோழி
தங்கடன் இறீஇய ரெண்ணி யிடந்தொறும்
காமர் பொருட்பிணிப் போகிய
நாம்வெங் காதலர் சென்ற வாறே.

இடைநின்று மீள்வரெனக் கவன்ற கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது.

**1776.** நற்றிணை - **83.** குறிஞ்சி

எம்மூர் வாயில் உண்டுறைத் தடைஇய
கடவுள் முதுமரத் துடனுறை பழகிய
தேயா வளைவாய்த் தெண்கட் கூருகிர்
வாய்ப்பறை யசாஅம் வலிமுந்து கூகை

5

மையூன் தெரிந்த நெய்வெண் புழுக்கல்
எலிவான் சூட்டொடு மலியப் பேணுதும்
எஞ்சாக் கொள்கையெங் காதலர் வரனசைஇத்
துஞ்சா தலமரு பொழுதின்
அஞ்சுவரக் கடுங்குரல் பயிற்று நீமே.
இரவுக்குறிவந்த தலைவன் சிறைப்புறத்தானாகத்
தோழி சொல்லியது.

## ௩௩௭. பெருந்தோட்குறுஞ்சாத்தன்

### 1777. குறுந்தொகை - 308. குறிஞ்சி

சோலை வாழை சுரிநுகும் பினைய
அணங்குடை யிருந்தலை நீவலின் மதனழிந்து
மயங்குதுய ருற்ற மையல் வேழம்
உயங்குயிர் மடப்பிடி யுலைபுறந் தைவர
5 ஆமிழி சிலம்பின் அரிதுகண் படுக்கும்
மாமலை நாடன் கேண்மை
காமந் தருவதோர் கைதாழ்ந் தன்றே.
வரைவிடைக் கிழத்தியை வன்சொற் சொல்லி
வற்புறுத்தியது

## 1778. குறுந்தொகை - 7. பாலை

வில்லோன் காலன கழலே தொடியோள் மெல்லடி
மேலவுஞ் சிலம்பே நல்லோர்
யார்கொல் அளியர் தாமே ஆரியர் 5
கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி

வாகை வெண்ணெற் றொலிக்கும்
வேய்பயி லழுவம் முன்னி யோரே.

செலவின்கண் இடைச்சுரத்துக் கண்டார் சொல்லியது.

## 1779. நற்றிணை - 2. பாலை

அழுந்துபட வீழ்ந்த பெருந்தண் குன்றத்து ஒலிவ
லீந்தி னுலவை யங்காட்டு
ஆறுசெல் மாக்கள் சென்னி யெறிந்த
செம்மறுத் தலைய நெய்த்தோர் வாய
5 வல்லியம் பெருந்தலைக் குருளை மாலை
மரனோக்கு மிண்டிவ ரீங்கைய சுரனே வைவெயிற்
றையள் மடந்தை முன்னுற்று 1032



எல்லிடை நீங்கும் இளையோ னுள்ளம்
காலொடு பட்ட மாரி

10 மால்வரை மிளிர்க்கும் உருமினுங் கொடிதே.
உடன்போகாநின்ருரை இடைச்சுரத்துக் கண்டார் சொல்லியது.

1780. நற்றிணை - 109. பாலை

ஒன்றுது மென்ற தொன்றுபடு நட்பிற்
காதல ரகன்றெனக் கலங்கிப் பேதுற்று
அன்ன வோவிந் நன்னுதல் நிலையென
வினவ லானுப் புனையிழை கேளினி
5 உரைக்க லாகா எவ்வம் இம்மென
இரைக்கும் வாடை யிருள்கூர் பொழுதில்
துளியுடைத் தொழுவிற் றுணித லற்றத்து
உச்சிக் கட்டிய கூழை யாவின்
நிலையென வொருவே னுகி
10 உலமரக் கழியுமிப் பகல்மடி பொழுதே.
பிரிவிடை யாற்ருளாய தலைமகளது நிலைகண்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

1781. புறநானூறு - 199.

கடவு ளாலத்துத் தடவுச்சினைப் பல்பழம்
நெருந லுண்டன மென்னுது பின்னுஞ்
செலவா னுவே கலிகொள் புள்ளினம்
அனையர் வாழியோ இரவலர் அவரைப்
5 புரவெதிர் கொள்ளும் பெருஞ்செய் யாடவர்

உடைமை யாகுமவ ருடைமை
அவர், இன்மை யாகு மவரின் மையே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.

## ௩௩௯. பெரும்பாக்கன்

### 1782. குறுந்தொகை - 296. நெய்தல்

அம்ம வாழி தோழி புன்னை
அலங்குசினை யிருந்த அஞ்சிறை நாரை
அறுகழிச் சிறுமீன் முனையிற் செறுவிற்
கண்ணுறு நெய்தல் கதிரொடு நயக்குந்
5 தண்ணந் துறைவற் காணின் முன்னின்று
கடிய கழற லோம்புமதி தொடியோள்
இன்ன ளாகத் துறத்தல்
நும்மிற் றகுமோ என்றனை துணிந்தே.

காணும்பொழுதிற் காணாப்பொழுது பெரிதாகலான் ஆற்றாளாய தலைமகள் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லு வாளாய்ச் சொல்லியது.

## ௩௪௦. பெருவழுதி

### 1783. நற்றிணை - 55. குறிஞ்சி

ஓங்குமலை நாட ஒழிகநின் வாய்மை
காம்புதலை மணந்த கல்லதர்ச் சிறுநெறி
உறுபகை பேணா திரவின் வந்திவள்
பொறிகிளர் ஆகம் புல்லத் தோள்சேர்பு
5 அறுகாற் பறவை யளவில மொய்த்தலிற்

கண்கோ ளாக நோக்கிப் பண்டும்
இனையை யோவென வினவினள் யாயே
அதனெதிர் சொல்லா ளாகி யல்லாந்து
என்முகம் நோக்கி யோளே அன்னாய்
10 யாங்குணர்ந் துய்குவள் கொல்லென மடுத்த
சாந்த ஞெகிழி காட்டி
ஈங்கா யினவா லென்றிசின் யானே.

வரைவிடை மெலிவாற்றுவிக்குந் தோழி தலைவற்குச் சொல்லி யது.



## 1784. நற்றிணை - 56. பாலை

குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ
வண்டுதரு நாற்றம் வளிகலந் தீயக்
கண்களி பெறூஉங் கவின்பெறு காலை
எல்வளை ஞெகிழ்த்தோர்க் கல்ல லுறீஇச்
5 சென்ற நெஞ்சம் செய்வினைக் குசாவா
ஒருங்குவரல் நசையொடு வருந்துங் கொல்லோ
அருளா னாதலின் அழிந்திவண் வந்து
தொன்னலன் இழந்தவென் பொன்னிறம் நோக்கி
ஏதி லாட்டி யிவளெனப்
போயின்று கொல்லோ நோய்தலை மணந்தே.

வரைவிடை மெலிவாற்றுவிக்குந் தோழிக்குத் தலைவி

சொல்லியது.

## ௩௪௧. பேயனார்

### 1785. அகநானூறு - 234. முல்லை

கார்பயம் பொழிந்த நீர்திகழ் காலை
நுண்ணயிர் பரந்த தண்ணய மருங்கின்
நிரைபறை யன்னத் தன்ன விரைபரிப்
புல்லுளைக் கலிமா மெல்லிதிற் கொளீஇய
5 வள்பொருங் கமையப் பற்றி முள்கிய
பல்கதி ராழி மெல்வழி யறுப்பக்
காலென மருள ஏறி நூலியற்
கண்ணேக் கொழிக்கும் பண்ணமை நெடுந்தேர்
வல்விரைந் தூர்மதி நல்வலம் பெறுந
10 ததர்தழை முனைஇய தெறிநடை மடப்பிணை
ஏறுபுண ருவகைய ஊறில் வுகள
அஞ்சிறை வண்டின் மென்பறைத் தொழுதி
முல்லை நறுமலர்த் தாதுநயந் தூத
எல்லை போகிய புல்லென் மாலைப்
15 புறவடைந் திருந்த உறைவி னல்லூர்க்

### பேயனார் - ஐங்குறுநூறு

1035.

கழிபட ருழந்த பனிவா ருண்கண்
நன்னிறம் பரந்த பசலையள்
மின்னே ரோதிப் பின்னுப்பிணி விடவே.

தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

## 1786—1885. ஐங்குறுநூறு - 401—500. முல்லை

### 1786—1795. செவிலிகூற்றுப் பத்து

1786. மறியிடைப் படுத்த மான்பிணை போலப்
புதல்வன் நடுவண னாக நன்றும்
இனிது மன்றவவர் கிடக்கை முனிவின்றி
நீனிற வியலகங் கவைஇய
5 ஈனு மும்பரும் பெறலருங் குரைத்தே.

401.

கடிமனைச் சென்றுவந்த செவிலி உவந்த வுள்ளத்தளாய் நற்றாய்க்குச் சொல்லியது.

இனி வருகின்ற பாட்டு ஒன்பதனுள் முதல் எட்டினுக்கும் இஃது ஒக்கும்.

1787. புதல்வற் கவைஇய தாய்புறம் முயங்கி
நசையினன் வதிந்த கிடக்கை பாணர்
நரம்புளர் முரற்கை போல
இனிதா லம்ம பண்புமா ருடைத்தே.

402.

1788. புணர்ந்த காதலிற் புதல்வன் றலையும்
அமர்ந்த வுள்ளம் பெரிதா கின்றே
அகன்பெருஞ் சிறப்பிற் றந்தை பெயரன்
முறுவலின் இன்னகை பயிற்றிச்
5 சிறுதே ருருட்டுந் தளர்நடை கண்டே.

403

1789. வாணுத லரிவை மகன்முலை யூட்டத்
தானவள் சிறுபுறங் கவையினன் நன்றும்
நறும்பூந் தண்புற வணிந்த
குறும்பல் பொறைய நாடுகிழ வோனே.

404



1790. ஒண்சுடர்ப் பாண்டிற் செஞ்சுடர் போல
மனைக்குவிளக் காயினள் மன்ற கனைப்பெயற்
பூப்பல அணிந்த வைப்பிற்
புறவணி நாடன் புதல்வன் தாயே.

405

1791. மாத ருண்கண் மகன்விளை யாடக்
காதலித் தழீஇ யினிதிருந் தனனே
தாதார் பிரசம் ஊதும்
போதார் புறவின் நாடுகிழ வோனே.

406

1792. நயந்த காதலித் தழீஇப் பாணர்
நயம்படு முறற்கையின் யாத்த
பயன்தெரிந்து
இன்புறு புணர்ச்சி நுகரும்
மென்புல வைப்பின் நாடுகிழ வோனே.

407 1793. பாணர் முல்லை பாடச் சுடரிழை
வாணுத லரிவை முல்லை மலைய
இனிதிருந் தனனே நெடுந்தகை
துனிதீர் கொள்கைத்தன் புதல்வனொடு

பொலிந்தே. 1794. புதல்வற் கவைஇயினன் தந்தை
மென்மொழிப்
புதல்வன் தாயோ இருவருங் கவைஇயினள்
இனிது மன்றவவர் கிடக்கை
நனியிரும் பரப்பினிவ் வுலகுட னுறுமே.

409 1795. மாலை முன்றிற் குறுங்காட் டின்னகை
மனையோள் துணைவி யாகப் புதல்வன்
மார்பி னூரு மகிழ்நகை யின்பப்
பொழுதிற் கொத்தன்று மன்னே
5 மென்பிணித் தம்ம பாணன து யாழே.

410

கடிமனைச் சென்ற செவிலி, தலைமகனும் தலைமகளும்

புதல்வ ஞெடு பாடல் கேட்டிருந்தமை கண்டு தன்னுள்ளே உவந்து சொல்லியது.

## பேயனுர் - ஐங்குறுநூறு

1037

1796—1805. கிழவன் பருவம்பாராட்டுப் பத்து

1796 ஆர்குர லெழிலி அழிதுளி சிதறிக்
கார்தொடங் கின்றாற் காமர் புறவே
வீழ்தரு புதுப்புன லாடுகம்
தாழிருங் கூந்தல் வம்மதி விரைந்தே.

411

பருவங் குறித்துப் பிரிந்த தலைமகன் அப்பருவத்திற்கு முன்னே வந்து தலைவியொடு கூடிச் செல்லாநின்றுழிப் பருவம் வந்ததாகத் தான் பருவத்திற்கு முன்னே வந்தமை தோன்றக் கூறுவான் தலைவிக்கு உரைத்தது.

1797. காயா கொன்றை நெய்தல் முல்லை
போதவிழ் தளவமொடு பிடவலர்ந்து கவினிப்
பூவணி கொண்டன்றாற் புறவே
பேரமர்க் கண்ணி ஆடுகம் விரைந்தே.

412

இதுவு மது.

1798. நின்னுதல் நாறு நறுந்தண் புறவின்
நின்னே போல மஞ்ஞை யாலக்
கார்தொடங் கின்றாற் பொழுதே
பேரிய லரிவை நாம்நயத் தகவே.

413

இதுவு மது.

1799. புள்ளும் மாவும் புணர்ந்தினி துகளக்
கோட்டவுங் கொடியவும் பூப்பல பழுனி
மெல்லிய லரிவை கண்டிகு
மல்ல லாகிய மணங்கமழ் புறவே.

414

இதுவு மது.

1800. இதுவே மடந்தைநாம் மேவிய பொழுதே
உதுவே மடந்தைநாம் உள்ளிய புறவே
இனிதுடன் கழிக்கி விளமை
இனிதா லம்ம இனியவர்ப் புணர்வே.

415

இதுவு மது.



1801. போதார் நறுந்துகள் கவினிப் புறவிற்
றாதார்ந்து
களிச்சுரும் பரற்றுங் காமர் புதலின்
மடப்பிடி தழீஇய மாவே
5 சுடர்த்தொடி மடவரற் புணர்ந்தனம்

யாமே. 416

பருவங்குறித்துப் பிரிந்த தலைமகன் பருவத்திற்கு முன்னே வந்து தலைவியொடுகூடிச் செல்லாகின்றுழி அதற்கு இனியனுய்த் தன்னுள்ளே சொல்லுவான்போன்று தலைவி அறியுமாற்ருற் கூறியது.

1802. கார்கலந் தன்ருற் புறவே பலவுடன்
ஏர்பரந் தனவாற் புனமே யேர்கலந்து
தாதார் பிரச மொய்ப்பப்
போதார் கூந்தல் முயங்கின ளெம்மே.

417

இதுவு மது.

1803. வானம் பாடி வறங்களைந் தானது
அழிதுளி தலைஇய புறவிற் காண்வர
வானர மகளோ நீயே
மாண்முலை யடைய முயங்கி யோயே.

418

குறித்த பருவத்திற்கு உதவவாராகின்ற வழிக்கண் உருவு வெளிப்பாடு கண்ட தலைமகன் இல்லத்துப் புகுந்துழித் தலைமகட்குச் சொல்லியது.

1804. உயிர்கலந் தொன்றிய செயிர்தீர் கேண்மைப்
பிரிந்துற லறியா விருந்து கவவி
நம்போல் நயவரப் புணர்ந்தன

கண்டிகு மடவரல் புறவின் மாவே.

419

இன்ப நுகர்ச்சிக்கேற்ற பருவம் வந்துழித் தலைமகளொடு புறவிற் சென்ற தலைமகன் அவ்விடத்துமாக்களை அவட்குக் காட்டிச் சொல்லியது.



1805. பொன்னென மலர்ந்த கொன்றை மணியெனத்
தேம்படு காயா மலர்ந்த தோன்றியொடு
நன்னலம் எய்தினை புறவே நின்னைக்
காணிய வருதும் யாமே
5 வாணுத லரிவையொ டாய்நலம் படர்ந்தே. 420

குறித்த பருவத்து எய்திய அணித்தாகவந்த தலைமகன் தால் அணிகொண்ட புறவைநோக்கிச் சொல்லியது.

பருவத்

## 1806—1815. விரவுப் பத்து

1806. மாலை வெண்காழ் காவலர் வீச
நறும்பூம் புறவின் ஒடுங்குமுய விரியும்
புன்புல நாடன் மடமகள்
நலங்கிளர் பணைத்தோள் விலங்கின செலவே.

421

வினை பலவற்றிற்கும் பிரிந்தொழுகும் தலைமகன்

பின்பு மனை வயின் நீங்காது ஒழுகுகின்ற காதலுணர்ந்தோர் சொல்லியது. 1807. கடும்பரி நெடுந்தேர்க் கால்வல் புரவி

நெடுங்கொடி முல்லையொடு தளவமல ருதிர
விரையுபு கடைஇநாஞ் செல்லின்
நிரைவளை முன்கை வருந்தலோ இலளே.

422

மீள்கின்றான் தேர்ப்பாகன்கேட்பச் சொல்லியது.

1808. மாமழை யிடியூஉத் தளிசொரிந் தன்றே
வாணுதல் பசப்பச் செலவயர்ந் தனையே
யாமே நிற்றுறந் தமையலம்
ஆய்மல ருண்கணும் நீர்நிறைந் தனவே.

423

கார்ப்பருவத்தே பிரியக்கருதிய தலைமகற்குத் தோழி தலைமகளது ஆற்றாமைகூறிச் செலவழுங்குவித்தது.

1809. புறவணி நாடன் காதல் மடமகள்
ஒண்ணுதல் பசப்ப நீசெலின் தெண்ணீர்ப்



போதவிழ் தாமரை யன்னநின்
காதலம் புதல்வன் அழுமினி முலைக்கே.

424

இதுவு மது.

1810. புன்புறப் பேடை சேவ லின்புற
மன்ன ரியவரின் இரங்குங் கானம்
வல்லை நெடுந்தேர் கடவின்
அல்ல லருநோ யொழித்தலெமக் கெளிதே.

425

வினைமுற்றி மீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது 1811. வென்வேல் வேந்தன் அருந்தொழில் துறந்தினி
நன்னுதல் யானே செலவொழிந் தனனே
முரசுபா டதிர ஏவி
அரசுபடக் கடக்கும் அருஞ்சமத் தானே.

426

வேந்தற்குத் தானைத்தலைவனாய் ஒழுகும் தலைமகன் பிரிந்து வினைமுடித்துவந்து தலைவியோடு உறைகின்றுழி, 'இன்னும் பிரியுங்கொல்' என்று கருதிய தலைமகட்குக் கவற்சிதீரச் சொல்லியது.

1812. பேரமர் மலர்க்கண் மடந்தை நீயே
காரெதிர் பொழுதென விடலொல் லாயே
போருடை வேந்தன் பாசறை
வாரா னவனெனச் செலவழுங் கினனே.

427

'பிரியுங்கொல்' என்று ஐயுற்று உடன்படாமை மேற்கொண்டு ஒழுகுகின்ற தலைமகட்குத் தான் பிரிவொழிந்ததற்குக் காரணங் கூறித் தேற்றியது.

1813. தேர்செல வழுங்கத் திருவிற் கோலி
ஆர்கலி யெழிலி சோர்தொடங் கின்றே
வேந்துவிடு விழுத்தொழி லொழிய
யான்தொடங் கினனால் நிற்புறந் தரவே.

428

'பிரியுங்கொல்' என்று ஐயுற்ற தலைமகள் ஐயந்தீரத் தலைமகன் சொல்லியது.

## பேயனார் - ஐங்குறுநூறு

1041

1814. பல்லிருங் கூந்தல் பசப்பு நீவிடிற்
செல்வேந் தில்ல யாமே செற்றார்
வெல்கொடி யரண முருக்கிய
கல்லா யானை வேந்துபகை வெலற்கே.

429

குறிப்பினாற் பிரிவுணர்ந்து வேறுபட்டாளாக வேந்தற்கு உற்றுழிப்பிரியுந் தலைமகன் தலைமகள் உடம்படுவா சொல்லியது.

181 5.

நெடும்பொறை மிசைய குறுங்காற் கொன்றை
அடர்பொன் என்னச் சுடரிதழ் பகரும்
கான்கெழு நாடன் மகளே
அழுத லான்றிசின் அழுங்குவல் செலவே.

430

'பிரியுங்கொல்' என்று ஆற்றாளாகிய தலைமகட்குத் தலைமகன் பருவவரவுகூறி 'இதுகாரணத்தாலும் பிரியேன்' எனச்சொல்லியது.

## 1816—1825 புறவணிப் பத்து

1816. நன்றே காதலர் சென்ற வாறே
அணிநிற இரும்பொறை மீமிசை
மணிநிற உருவின தோகையு முடைத்தே.

431

'பிரிவுடம்பட்டும் ஆற்றுயாகின்றது என்னை'
என்று வினவிய
வழி, ' அவர்போன சுரம் போகற்கரிதென்று
ஆற்றேனுகின்றேன் '
என்ற தலைமகட்கு 'வேனிற்காலங் கழிந்தது; கார்ப்பருவத்
தோற்றத்
திலே பிரிந்தாராகலான், அச்சுரம் நன்று' எனத்
தோழி சொல்லி

ஆற்றுவித்தது.

இனி வருகின்ற பாட்டு ஒன்பதுக்கும் இஃது ஒக்கும்.

1817. நன்றே காதலர் சென்ற வாறே
சுடுபொன் அன்ன கொன்றை சூடிக்
கடிபுகு வனர்போல் மள்ளரு முடைத்தே.

432

1818. நன்றே காதலர் சென்ற வாறே
நீர்ப்பட எழிலி வீசுங்
கார்ப்பெயற் கெதிரிய கானமு முடைத்தே.

433

66



1819. நன்றே காதலர் சென்ற வாறே

மறியுடை மான்பிணை யுகளத்
தண்பெயல் பொழிந்த இன்பமு முடைத்தே.

434 1820. நன்றே காதலர் சென்ற வாறே
நிலனணி நெய்தல் மலரப்
பொலனணி கொன்றையும் பிடவமு
முடைத்தே.

1821. நன்றே காதலர் சென்ற வாறே

நன்பொன் அன்ன சுடரிணர்க்
கொன்றையொடு மலர்ந்த குருந்துமா
ருடைத்தே. 1822. நன்றே காதலர் சென்ற வாறே
ஆலித் தண்மழை தலைஇய
வாலிய மலர்ந்த முல்லையு முடைத்தே.
437 1823. நன்றே காதலர் சென்ற வாறே
பைம்புதற் பல்பூ மலர
இன்புறத் தகுந பண்புமா ருடைத்தே.
438 1824. நன்றே காதலர் சென்ற வாறே
குருந்தங் கண்ணிக் கோவலர்
பெருந்தண் நிலைய பாக்கமு முடைத்தே.
439 1825. நன்றே காதலர் சென்ற வாறே
தண்பெய லளித்த பொழுதின்
ஒண்சுடர்த் தோன்றியுந் தளவமு
முடைத்தே. 440

1826—1835 பாசறைப் பத்து

1826. ஐய வாயின செய்யோள் கிளவி
கார்நா ளுருமொடு கையறப் பிரிந்தென

நோய்நன்கு செய்தன் றெமக்கே
யாமுறு துயரமவள் அறியினோ
நன்றே. 441

சென்றவினை முடியாமையிற் கார்காலம்
வந்தவிடத்து மீளப்
பெறாத தலைமகன் தலைமகளுழைநின்றும் வந்த
தூதர் வார்த்தை
கேட்டு இரங்கியது.

1827. பெருஞ்சின வேந்தன் அருந்தொழில்
தணியின்
விருந்துநனி பெறுதலு முரியள்
மாதோ
இருண்டுதோன்று விசும்பின்
அருந்ததி யனைய கற்பிற்
உயர்நிலை யுலகத்து
குரும்பை மணிப்பூண் புதல்வன்
தாயே. 442

வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன்
வினைமுடியாமையிற்
பாசறைக்கணிருந்து பருவவரவின்கட் சொல்லியது.

1828. நனிசேய்த் தென்னாது நற்றே
ரேறிச்சென்று
இலங்கு நிலவின் இளம்பிறை போலக்

காண்குவெந் தில்லஅவள் கவின்பெறு
சுடர்நுதல்
விண்ணுயர் அரண்பல வெளவிய
மண்ணுறு முரசின் வேந்துதொழில்
விடினே. 443

இதுவு மது.

1829. பெருந்தோள் மடவரற் காண்குவெந்
தில்ல
நீண்மதி லரணம் பாய்ந்தெனத்
தொடிபிளந்து
வைந்நுதி மழுகிய தடங்கோட்டு
யானை
வென்வேல் வேந்தன் பகைதணிந்து
இன்னுந் தன்னாட்டு முன்னுதல்
பெறினே. 444

இதுவு மது.

1830. புகழ்சால் சிறப்பிற் காதலி புலம்பத்
துறந்துவந் தனையே அருந்தொழிற்
கட்டூர்
நல்லேறு தழீஇ நாகுபெயர் காலை

உள்ளுதொறுங் கலிழும் நெஞ்சம்
5 வல்லே யெம்மையும் வரவிழைத் தனையே.

445

பாசறைக்கணிருந்த தலைமகன் பருவவரவின்கண் தலைமகளை
நினைந்து நெஞ்சொடுபுலந்து சொல்லியது.

1831. முல்லை நாறுங் கூந்தல் கமழ்கொள
நல்ல காண்குவம் மாஅ யோயே
பாசறை யருந்தொழி லுதவிநங்
காதலந் ணாட்டுப் போதரும் பொழுதே. 446

பாசறைக்கணிருந்த தலைமகன் பருவவரவின்கண் உருவுவெளிப்
பாடுகண்டு சொல்லியது.

1832. பிணிவீடு பெறுக மன்னவன் தொழிலே
பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை
ஆடு சிறைவண் டவிழ்ப்பப்
பாடல் சான்ற காண்கம்வா ணுதலே.

447

வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன், அவன் வினைமுற்றி
மீளும் வேட்கையனாய்ப் பருவவரவின்கண் தலைமகளை நினைத்துச்
சொல்லியது.

1833.

தழங்குரல் முரசங் காலை யியம்பக்
கடுஞ்சின வேந்தன் தொழிலெதிர்ந் தனனே
மெல்லவல் மருங்கின் முல்லை பூப்பப்
பொங்குபெயற் கனைதுளி காரெதிர்ந்
தன்றே
5 அஞ்சி லோதியை யுள்ளுதொறுந்
துஞ்சா தலமரல் நாமெதிர்ந் தனமே.

448

வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன் பருவம்
வந்தவிடத்தி
னும் மீளப்பெறாது அரசன்செய்தியும் பருவத்தின்
செய்தியும் தன்
செய்தியுங்கூறி ஆற்றாதது.

1834. முரம்புகண் ணுடையத் திரியுந்
திகிரியொடு
பணைநிலை முணைஇய வயமாப் புணர்ந்து

---

பேயனார் - ஐங்குறுநூறு

1045

திண்ணிதின் மாண்டன்று தேரே
ஒண்ணுதற் காண்குவம் வேந்துவினை
விடிவே. 449

பாசறைக்கண் வேந்தனொடு வினைப்பொருட்டாற் போந்திருந்த தலைமகன் அவ்வேந்தன் மாற்றுவேந்தர் தருதிறைகொண்டு மீள்வானைப் பொருந்துழித் தானும் மீட்சிக்குத் தேர்சமைத்த எல்லைக் கண்ணே, அவ்வரசன் பொருத்தந்தவிர்ந்து மீண்டும் வினைமேற் கொண்டானைச் சொல்லியது.

1835. முரசுமா றிரட்டும் அருந்தொழிற் பகைதணிந்து
நாடுமுன் னியரோ பீடுகெழு வேந்தன்
வெய்ய உயிர்க்கும்நோய் தணியச்
செய்யோள் இளமுலைப் படீஇயரென் கண்ணே. 450

வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன் வினைமுற்றாமையிற் பாசறைக்கணிருந்து தன் மனக்கருத்துரைத்தது.

1836—1845. பருவங்கண்டு கிழத்தியுரைத்த பத்து

1836. கார்செய் காலையொடு கையறப் பிரிந்தோர்
தேர்தரு விருந்திற் றவிர்குதல் யாவது
மாற்றருந் தானை நோக்கி
ஆற்றவு மிருத்தல் வேந்தனது தொழிலே.

வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன்குறித்த பருவமினைந்து ஆற்றியிருந்த தலைமகள் அப்பருவவரவின்கட் பாசறையினின்றும் வந்தார் அரசன்செய்தி கூறக்கேட்டு ஆற்றாளாய்ச் சொல்லியது.

1837. வறந்த ஞாலந் தெளிர்ப்ப வீசிக்
கறங்குகுர லெழிலி கார்செய் தன்றே
பகைவெங் காதலர் திறைதரு முயற்சி
மென்றோ ளாய்கவின் மறையப்
5 பொன்புனை பீரத் தலர்செய் தன்றே. 452

குறித்த பருவத்து வாராது தலைமகன் பகைமேல் முயல்கின்ற முயற்சிகேட்ட தலைமகள் கூறியது.



1838. அவல்தொறுந் தேரை தெவிட்ட மிசைதொறும்
வெங்குரற் புள்ளினம் ஒலிப்ப உதுக்காண்
கார்தொடங் கின்றாற் காலை அதனால்
நீர்தொடங் கினவால் நெடுங்கணவர்
5 தேர்தொடங் கின்றால் நம்வயி னானே. 453

பருவங்கண்டு ஆற்றாளாகியதலைமகள் தோழிக்குச் சொல்லியது. 1839. தளவின் பைங்கொடி தழீஇப் பையென
நிலவின் அன்ன நேரரும்பு பேணிக்
கார்நயந் தெய்து முல்லைஅவர்

தேர்நயந் துறையுமென் மாமைக் கவினே.

454

பருவவரவின்கண் தலைமகள் ஆற்றாளாய்த் தோழிக்குச் சொல்லியது.

1840. அரசுபகை தணிய முரசுபடச் சினைஇ
ஆர்குர லெழிலி கார்தொடங் கின்றே
அளியவோ அளிய தாமே ஒளிபசந்து
மின்னிழை ஞெகிழச் சாஅய்த்
5 தொன்னலம் இழந்தவென் தடமென் தோளே.

455

ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

1841. உள்ளார் கொல்லோ தோழி வெள்ளிதழ்ப்
பகல்மதி யுருவிற் பகன்றை மாமலர்
வெண்கொடி யீங்கைப் பைம்புத லணியும்
அரும்பனி யளைஇய கூதிர்
5 ஒருங்கிவ ணுறைதல் தெளித்தகன் றோரே.

456

குறித்தபருவம் வரவும் தலைமகன் வந்திலனாக, ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

1842. பெய்பனி நலிய உய்தல்செல் லாது
குருகினம் நரலும் பிரிவருங் காலைத்

1047

துறந்தமை கல்லார் காதலர்
மறந்தமை கல்லாதென் மடங்கெழு நெஞ்சே.

457

பருவவரவின்கண் ஆற்றுவிக்குந்தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

1843. துணர்க்காய்க் கொன்றை குழற்பழம் ஊழ்த்தன
அதிர்பெயற் கெதிரிய சிதர்கொள் தண்மலர்
பாணர் பெருமகன் பிரிந்தென
மாணலம் இழந்தவென் கண்போன் றனவே.

458

பருவங்குறித்துப்பிரிந்த தலைமகன் வரவுபார்த்திருந்த தலைமகள் பருவமுதிர்ச்சிகூறி ஆற்றாளாயுரைத்தது.

1844. மெல்லிறைப் பணைத்தோட் பசலை தீரப்
புல்லவும் இயைவது கொல்லோ புல்லார்
ஆரரண் கடந்த சீர்கெழு தானை
வெல்போர் வேந்தனொடு சென்ற
5 நல்வய லூரன் நறுந்தண் மார்பே.

459

'வேந்தன் வினைமுற்றினன்; நின்காதலர் கடுகவருவர்' எனக் கேட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

1845. பெருஞ்சின வேந்தனும் பாசறை முனியான்
இருங்கலி வெற்பன் தூதுந் தோன்றா
தடையிலை வாழை முழுமுத லசைய
இன்னா வாடையும் அலைக்கும்
5 என்னா குவென்கொல் அளியென் யானே.

460

வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகனைப் பருவமுதிர்ச்சி யினும் வரக்காணாது தலைமகள் சொல்லியது.

1846—1855. தோழி வற்புறுத்த பத்து

1846. வான்பிசிர்க் கருவியிற் பிடவுமுகை தகையக்
கான்பிசிர் கற்பக் கார்தொடங் கின்றே

இனையல் வாழி தோழி எனையதூஉம்



நிற்றுறந் தமைகுவ ரல்லர்
வெற்றி வேந்தன் பாசறை யோரே.

461

பிரிவிடை வேறுபட்ட கிழத்தியைத் தோழி வரவுகூறி, 'உரைத்த பருவம் வந்ததாகலான் அவர்வருவர்' என வற்புறீஇயது. 1847. ஏதில பெய்ம்மழை காரென மயங்கிய

பேதையங் கொன்றைக் கோதைநிலை
நோக்கி
எவனினி மடந்தைநின் கலிழ்வே நின்வயின்
தகையெழில் வாட்டுந ரல்லர்
5 முகையவிழ் புறவின் நாடிறந் தோரே.

462

பருவங்கண்டு வேறுபட்ட கிழத்தியைத் தோழி, 'பருவமன்று' என வற்புறீஇயது.

1848.

புதல்மிசை நறுமலர் கவின்பெறத் தொடரிநின்
நலமிகு கூந்தல் தகைகொளப் புனைய
வாரா தமையலோ இலரே நேரார்
நாடுபடு நன்கலந் தரீஇயர்
5 நீடினர் தோழிநங் காத லோரே.

463

குறித்தபருவம் வரவும் தலைமகன் தாழ்த்துழித் தோழி காரணங் கூறி வற்புறீஇயது.

1849. கண்ணெனக் கருவிளை மலரப் பொன்னென

இவர்கொடிப் பீரம் இரும்புதல் மலரும்
அற்சிர மறக்குந ரல்லர்நின்
நற்றோள் மருவரற் குலமரு வோரே.

464

வரைந்த அணுமைக்கண்ணே பிரிந்த தலைமகன் குறித்தபருவம்
வந்துழி, 'இதனை மறந்தார்' என்ற தலைமகட்குத் தோழி, 'வரை
வதற்கு முன்பு அவரன்புடைமை இதுவாகலான் மறத்தல்கூடாது'
எனச்சொல்லி வற்புறீஇயது.

1850. நீரிகு வன்ன நிமிர்பரி நெடுந்தேர்
கார்செய் கானம் [க]வின்படக் கடைஇ

## பேயனார் - ஐங்குறுநூறு

1049

மயங்குமல ரகலம் நீயினிது முயங்க
வருவர் வாழி தோழி
5 செருவெங் குருசில் தணிந்தனன் பகையே.

465

பருவங்கண்டு வேறுபட்ட தலைமகளை, வேந்தன்

வினைமுடித்தா

னெனக்கேட்ட தோழி, 'வருவர்' என வற்புறீஇயது.

1851. வேந்துவிடு விழுத்தொழி லெய்தி
ஏந்துகோட்டு

அண்ணல் யானை அரசுவிடுத் தினியே
எண்ணிய நாளகம் வருதல்
பெண்ணியற்

காமர் சுடர்நுதல் விளங்கும்
5 தேமொழி யரிவை தெளிந்திசின் யானே.

466

பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைமகளை 'அவர்
போன காரியம்

இடையூறின்றி முடித்துவருதல் பல்லாற்றானுந்
தெளிந்தேன்'

எனத் தோழி சொல்லி ஆற்றுவித்தது.

1852.

புனையிழை நெகிழச் சாஅய் நொந்துநொந்து
இனையல் வாழியோ இகுளை வினைவயிற்

சென்றோர் நீடினர் பெரிதெனத்
தங்காது

நம்மினும் விரையு மென்ப

5 வெம்முரண் யானை விறற்போர்
வேந்தே. 467

தலைமகன் வினைவயிற்பிரிய ஆற்றாளாகிய
தலைமகளைத் தோழி
வற்புறீஇயது.

1853. வரிநுணல் கறங்கத் தேரை தெவிட்டக்

கார்தொடங் கின்றே காலை யினிநின்
நேரிறைப் பணைத்தோட் கார்விருந்
தாக
வடிமணி நெடுந்தேர் கடைஇ
5 வருவர் இன்றுநங் காத லோரே.
468

பிரிவுநீட ஆற்றாளாய தலைமகட்குத் தோழி
பருவங்காட்டி,
'இன்றே வருவர்' என வற்புறீஇயது.

1854. பைந்தினை யுணங்கல் செம்பூழ் கவரும்
வன்புல நாடற் றரீஇய வலனேர்பு

அங்க ணிருவிசும் பதிர ஏறொடு
பெயல்தொடங் கின்றே வானம்
5 காண்குவம் வம்மோ பூங்க ணோயே.

469

பிரிவுநீட ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி, 'அவரை நமக்குத் தருதற்கு வந்ததுகாண் இப்பருவம்' எனக்காட்டி வற்புறீஇயது.

1855. இருநிலங் குளிர்ப்ப வீசி அல்கலும்
அரும்பனி யளைஇய அற்சிரக் காலை
உள்ளார் காதல ராயின் ஒள்ளிழை
சிறப்பொடு விளங்கிய காட்சி
5 மறக்க விடுமோநின் மாமைக் கவினே.

470

பருவம் வந்ததுகண்டு தாம் குறித்த இதனை மறந்தாரென வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

## 1856—1865. பாணன் பத்து

1856. எல்வளை நெகிழ மேனி வாடப்
பல்லித ழுண்கண் பனியலைக் கலங்கத்
துறந்தோன் மன்ற மறங்கெழு குருசில்
அதுமற் றுணர்ந்தனை போலாய்
5 இன்னும் வருதி யென்அவர் தகவே.

471

பருவவரவின்கண் தூதாகிவந்த பாணன்கூறியவழித்

தோழி சொல்லியது.

1857. கைவல் சீறியாழ்ப் பாண நுமரே
செய்த பருவம் வந்துநின் றதுவே
எம்மி னுணரா ராயினுந் தம்வயிற்
பொய்படு கிளவி நாணலும்
5 எய்யா ராகுதல் நோகோ யானே.

472

குறித்தபருவம் வரவும் தலைமகன் வாராஞகியவழித் தூதாய் வந்த பாணற்குத் தோழி கூறியது.

பேயனர் - ஐங்குறுநூறு 1051

1858. பலர்புகழ் சிறப்பின்நுங் குருசி
லுள்ளிச்

செலவுநீ நயந்தனை யாயின் மன்ற
இன்னு அரும்படர் எம்வயிற் செய்த
பொய்வ லாளர் போலக்
5 கைவல் பாணவெம் மறவா தீமே.

473

'தலைமகன் பிரிந்தநாட்டிற் செல்வேம்' என்ற
அவன் பாணற்

குத் தலைமகள் சொல்லியது.

1859. மையறு சுடர்நுதல் விளங்கக்
கறுத்தோர்

செய்யரண் சிதைத்த செருமிகு தானையொடு
கதழ்பரி நெடுந்தேர் அதர்படக் கடைஇச்

சென்றவர்த் தருகுவ லென்னும்
5 நன்று லம்ம பாணன தறிவே.

474

பிரிவின்கண் ஆற்றுமைகண்டு, '
தூதாகிச்சென்று அவனைக் கொணர்வல்' என்ற
பாணன்கேட்பத் தலைமகள் கூறியது.

1860. தொடிநிலை கலங்க வாடிய தோளும்
வடிநலன் இழந்தவென் கண்ணும்
நோக்கிப்
பெரிதுபுலம் பினனே சீறியாழ்ப்
பாணன்
எம்வெங் காதலொடு பிரிந்தோர்
5 தம்மோன் போலான் பேரன்
பினனே.

475.

பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள்
தலைமகனுழைநின்று வந்
தார் கேட்பத் தன்மெலிவுகண்டு இரங்கிய
பாணனைத் தோழிக்கு
மகிழ்ந்து சொல்லியது.

1861. கருவி வானங் கார்சிறந் தார்ப்பப்
பருவஞ் செய்தன பைங்கொடி முல்லை
பல்லான் கோவலர் படலைக் கூட்டும்

அன்பின் மாலையு முடைத்தோ
5 அன்பில் பாண அவர்சென்ற நாடே.

476

'பிரிவாற்றாமை அவற்கும் உளதன்றே, நீ வேறுபடுகின்றது என்னை' என்ற பாணற்குத் தலைமகள் கூறியது.



1862. பனிமலர் நெடுங்கண் பசலை பாயத்
துனிமலி துயரமொடு அரும்படர் உழப்போள்
கையறு நெஞ்சிற் குசாஅத் துணை யாகச்
சிறுவரைத் தங்குவை யாயிற்
5 காண்குவை மன்னாற் பாணவெந் தேரே.

477

தலைமகள்மாட்டுப் பாணனைத் தூதாகவிடுத்த தலைமகன் கூறியது.

1863. நீடின மென்று கொடுமை தூற்றி
வாடிய நுதல ளாகிப் பிறிதுநினைந்து

யாம்வெங் காதலி நோய்மிகச் சாஅய்ச்
சொல்லிய துரைமதி நீயே
5 முல்லை நல்யாழ்ப் பாணமற் றெமக்கே.

478

பிரிந்துறையுந் தலைமகன் தலைமகள்விட்ட தூதாய்ச்சென்ற பாணனை, 'அவள் சொல்லிய திறம் கூறு' எனக்கேட்டது.

1864. சொல்லுமதி பாண சொல்லுதோ றினிய
நாடிடை விலங்கிய எம்வயின் நாடொறும்
அரும்பனி கலந்த அருளில் வாடை
தனிமை யெள்ளும் பொழுதிற்
5 பனிமலர்க் கண்ணி கூறிய தெமக்கே.

479

தலைவிவிடத் தூதாய்ச்சென்ற பாணன்மாற்றங் கூறக்கேட்ட தலைமகன், 'இவ்வாடை வருத்தத்திற்கு மருந்தாக இன்னுங்கூற வேண்டும்' எனக்கூறியது.

1865. நினக்கியாம் பாணரு மல்லேம் எமக்கு
நீயுங் குருசிலை யல்லை மாதோ
நின்வெங் காதலி தன்மனைப் புலம்பி
ஈரித ழுண்க ணுகுத்த
பூசல் கேட்டும் அருளா தோயே.

480

தலைமகட்குத் தூதாய்ப் பாசறைக்கண் சென்ற

பாணன் தலைமகனை நெருங்கிச் சொல்லியது.

பேயனார் - ஐங்குறுநூறு

1053

## 1866—1875. தேர்வியங்கொண்ட பத்து

1866. *சாயிறைப் பணைத்தோள் அவ்வரி யல்குற்*
*சேயிழை மாதரை யுள்ளி நோய்விட*
*முள்ளிட் டூர்மதி வலவநின்*
*புள்ளியற் கலிமாப் பூண்ட தேரே.*

481

*வினைமுற்றிமீண்ட தலைமகன் தேர்ப்பாகற்குக் கூறியது.*

இனி வருகின்றபாட்டு ஒன்பதிற்கும் இஃது ஒக்கும்.

1867. *தெரியிழை யரிவைக்குப் பெருவிருந் தாக*
*வல்விரைந்து கடவுமதி பாக வெள்வேல்*
*வென்றடு தானை வேந்தனொடு*
*நாளிடைச் சேப்பின் ஊழியின் நெடிதே.*

482

1868. *ஆறுவனப் பெய்த அலர்தா யினவே*
*வேந்துவிட் டனனே மாவிரைந் தனவே*
*முன்னுறக் கடவுமதி பாக*
*நன்னுத லரிவை தன்னலம் பெறவே.*

483

1869. வேனில் நீங்கக் கார்மழை தலைஇக்
காடுகவின் கொண்டன்று பொழுது
பாடுசிறந்து
கடியக் கடவுமதி பாக
நெடிய நீடினம் நேரிழை மறந்தே.

484 1870. அரும்பட ரவலம் அவளுந் தீரப்
பெருந்தோள் நலம்வர யாமும் முயங்க
ஏமதி வலவ தேரே
மாமருண் டுகளு மலரணிப் புறவே.

485 1871. பெரும்புன் மாலை யானது நினைஇ
அரும்பட ருழத்தல் யாவ தென்றும்
புல்லி யாற்றுப் புரையோட் காண
வள்புதெரிந் தூர்மதி வலவநின்
5 புள்ளியற் கலிமாப் பூண்ட தேரே.



1872. இதுமன் பிரிந்தோர் உள்ளும் பொழுதே
செறிதொடி யுள்ளம் உவப்ப
மதியுடை வலவ ஏமதி தேரே.

487 1873. கருவி வானம் பெயல்தொடங் கின்றே
பெருவிறற் காதலி கருதும் பொழுதே
விரியுளை நன்மாப் பூட்டிப்
பருவரல் தீரக் கடவுமதி தேரே.

1874.

488

அஞ்சிறை வண்டின் அரியின மொய்ப்ப
மென்புல முல்லை மலரு மாலைப்
பையுள் நெஞ்சிற் றைய லுவப்ப
நுண்புரி வண்கயி றியக்கிநின்
5 வண்பரி நெடுந்தேர் கடவுமதி விரைந்தே.

489 1875. அந்திங் கிளவி தான்தர எம்வயின்
வந்தன் று... ...
... ... ...
ஆய்மணி நெடுந்தேர் கடவுமதி விரைந்தே.

490

1876—1885. வரவுச்சிறப்புரைத்த பத்து

1876. காரதிர் காலையாம் ஓவின் று நலிய
நொந்துநொந் துயவு முள்ளமொடு
வந்தனெம் மடந்தைநின் வார்தர விரைந்தே.

491

வினைமுற்றிப் புகுந்த தலைமகன் தலைவிக்குச்
சொல்லியது.

1877. நின்னே போலு மஞ்ஞை யால நின்
நன்னுதல் நாறு முல்லை மலர
நின்னே போல மாமருண்டு நோக்க
நின்னே யுள்ளி வந்தனென்
5 நன்னுத லரிவை காரினும் விரைந்தே.

492

இதுவு மது.

1878. ஏறுமுரண் சிறப்ப வேறெதி ரிரங்க
மாதர் மான்பிணை மறியொடு மறுகக்

பேயனூர் - ஐங்குறுநூறு

1055

கார்தொடங் கின்றே காலை
நேரிறை முன்கைநின் உள்ளியாம் வரவே.

493

இதுவு மது.

1879. வண்டுதா துதத் தேரை தெவிட்டத்
தண்கமழ் புறவின் முல்லை மலர
இன்புறுத் தன்று பொழுதே
நின்குறி வாய்த்தனம் தீர்கிளிப் படரே.

494

இதுவு மது.

1880. சென்னில மருங்கிற் பன்மலர் தாஅய்ப்
புலம்புதீர்ந் தினிய வாயின புறவே
பின்னிருங் கூந்தல் நன்னலம் புனைய
உள்ளுதொறுங் கலிழும் நெஞ்சமொடு
5 முள்ளெயிற் றரிவையாம் வந்த மாறே.

495

இதுவு மது.

1881. மாபுதல் சேர வரகினர் சிறப்ப
மாமலை புலம்பக் கார்கலித் தலைப்பப்
பேரமர்க் கண்ணி நிற்பிரிந் துறைநர்
தோள்துணை யாக வந்தனர்
5 போதவிழ் கூந்தலும் பூவிரும் புகவே.

496

குறித்த பருவத்தின்கண் தலைமகன் வந்துழித் தோழி தலைமகட்குச் சொல்லியது.

1882. குறும்பல் கோதை கொன்றை மலர
நெடுஞ்செம் புற்றம் ஈயல் பகர
மாபசி மறுப்பக் கார்தொடங் கின்றே
பேரிய லரிவைநின் னுள்ளிப்
5 போர்வெங் குருசில் வந்த மாறே.

497

இதுவு மது.

1883. தோள்கவின் எய்தின தொடிநிலை நின்றன
நீள்வரி நெடுங்கண் வாள்வனப் புற்றன 1056

ஏந்துகோட்டு யானை வேந்துதொழில் விட்டென
விரைசெலல் நெடுந்தேர் கடைஇ
5 வரையக நாடன் வந்த மாறே.

498

இதுவு மது.

1884. பிடவ மலரத் தளவம் நனையக்
கார்கலின் கொண்ட கானங் காணின்
வருந்துவள் பெரிதென அருந்தொழிற் ககலாது
வந்தன ரால்நங் காதலர்
5 அந்தீங் கிளவிநின் ஆய்நலங் கொண்டே.

499

இதுவு மது.

1885. கொன்றைப் பூவிற் பசந்த வுண்கண்
குன்றக நெடுஞ்சுனைக் குவளை போலத்
தொல்கவின் பெற்றன இவட்கே வெல்போர்
வியனெடும் பாசறை நீடிய
5 வயமான் தோன்றல்நீ வந்த மாறே.

500

வினைமுற்றிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

**1886.** குறுந்தொகை - **233.** முல்லை

கவலை கெண்டிய கல்வாய்ச் சிறுகுழி

கொன்றை யொள்வீ தாஅய்ச் செல்வர்
பொன்பெய் பேழை மூய்திறந் தன்ன
5 காரெதிர் புறவி னதுவே உயர்ந்தோர்க்கு
நீரொடு சொரிந்த மிச்சில் யாவர்க்கும்
வரைகோ ளறியாச் சொன்றி
நிரைகோற் குறுந்தொடி தந்தை யூரே.

பட்ட பின்றை வரையாது சென்று வினைமுற்றி மீளூர் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.



## 1887. குறுந்தொகை - 339. குறிஞ்சி

நறையகில் வயங்கிய நளிபுன நறும்புகை
உறையுறு மையிற் போகிச் சாரற்
குறவர் பாக்கத் திழிதரும் நாடன்
மயங்குமலர்க் கோதை நன்மார்பு முயங்கல்
5 இனிதுமன் வாழி தோழி மாயிதழ்க்
குவளை யுண்கண் கலுழப்
பசலை யாகா வூங்கலங் கடையே.

வரைவிடை வேறுபட்ட கிழத்தியைத் தோழி கடுஞ்சொற் சொல்லி வற்புறீஇயது.

## 1888. குறுந்தொகை - 359. மருதம்

கண்டிசின் பாண பண்புடைத் தம்ம

மாலை விரிந்த பசுவெண் ணிலவிற்
குறுங்காற் கட்டில் நறும்பூஞ் சேக்கைப்
பள்ளி யானையி னுயிர்த்தனன் நசைஇப்
5 புதல்வற் றழீஇயினன் விறலவன்
புதல்வன் றாய்அவன் புறங்கவைஇ யினளே.

பரத்தையிற் பிரிந்துவந்த
தானே புக்குக் கூடியது கண்டு

தலைமகன் வாயில் வேண்டிப் பெறாது
தோழி பாணற்குச் சொல்லியது.

**1889.** குறுந்தொகை - **400.** முல்லை

சேயாறு செல்லா மாயின் இடரின்று
களைகலம் காமம் பெருந்தோட் கென்று
நன்றுபுரிந் தெண்ணிய மனத்தை யாகி
முரம்புகண் ணுடைய ஏகிக் கரம்பைப்
5 புதுவழிப் படுத்த மதியுடை வலவோய்
இன்று தந்தனை தேரோ
நோயுழந் துறைவியை நல்க லானே.
வினைமுற்றி வந்த தலைமகன் தேர்ப்பாகனைத்
67
தலையளித்தது.

## ௩௬௨. பேய்மகள் இளவெயினி

**1890.** புறநானூறு - **11.**

✓ அரிமயிர்த் திரள்முன்கை
வாலிழை மடமங்கையர்
வரிமணற் புனைபாவைக்குக்
குலவுச்சினைப் பூக்கொய்து
5 தண்பொருநைப் புனல்பாயும்
விண்பொருபுகழ் விறல்வஞ்சிப்
பாடல்சான்ற விறல்வேந்தனும்மே
வெப்புடைய அரண்கடந்து
துப்புறுவர் புறம்பெற்றிசினே
10 புறம்பெற்ற வயவேந்தன்
மறம்பாடிய பாடினியும்மே
ஏருடைய விழுக்கழஞ்சிற்
சீருடைய இழைபெற்றிசினே
இழைபெற்ற பாடினிக்குக்
15 குரல்புணர்சீர்க் கொளைவல் பாண்மகனும்மே
எனவாங்கு, ஒள்ளழல் புரிந்த தாமரை
வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.
சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோவைப் பாடியது.

## ௩௫௩. பேராலவாயர்

**1891.** அகநானூறு - **87.** பாலை

தீந்தயிர் கடைந்த திரள்கால் மத்தம்

கன்றுவாய் சுவைப்ப முன்றிற் றாங்கும்
படலைப் பந்தர்ப் புல்வேய் குரம்பை
நல்கூர் சீறூ ரெல்லித் தங்கிக்
5 குடுமி நெற்றி நெடுமரச் சேவற்



றலைக்குரல் விடியற் போகி முனாஅது
கடுங்கண் மறவர் கல்கெழு குறும்பின்
எழுந்த தண்ணுமை யிடங்கட் பாணி
அருஞ்சுரஞ் செல்வோர் நெஞ்சந் துண்ணெனக்

10 குன்றுசேர் கவலை யிசைக்கும் அத்தம்
நனிநீ டுழந்தனை மன்னே அதனால்
உவவினி வாழிய நெஞ்சே மையற
வைகுசுடர் விளங்கும் வான்தோய் வியனகர்ச்
சுணங்கழி வனமுலை நலம் பாராட்டித்
15 தாழிருங் கூந்தல்நங் காதலி
நீளமை வனப்பிற் றோளுமா ரணைந்தே.

வினைமுற்றி மீளுந் தலைமகன் இடைச்சுரத்துத்
தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

## 1892. அகநானூறு - 296. மருதம்

கோதை யிணர குறுங்காற் காஞ்சிப்
போதவிழ் நறுந்தா தணிந்த கூந்தல்

அரிமதர் மழைக்கண் மாஅ யோளொடு
நெருநையுங் கமழ்பொழிற் றுஞ்சி இன்றும்
5 பெருநீர் வையை யவளொ டாடிப்
புலரா மார்பினை வந்துநின் றெம்வயிற்
கரத்தல் கூடுமோ மற்றே பரப்பிற்
பன்மீன் கொள்பவர் முகந்த இப்பி
நாரரி நறவின் மகிழ்நொடைக் கூட்டும்
10 பேரிசைக் கொற்கைப் பொருநன் வென்வேற்
கடும்பகட்டு யானை நெடுந்தேர்ச் செழியன்
மலைபுரை நெடுநகர்க் கூடல் நீடிய
மலிதரு கம்பலை போல
அலரா கின்றது பலர்வாய்ப் பட்டே.

வாயில்வேண்டிச்சென்ற தலைமகற்கு வாயின்மறுக்குஞ்
சொல்லியது.

தோழி



## 1893. நற்றிணை - 51. குறிஞ்சி

யாங்குச்செய் வாங்கொல் தோழி
யோங்குகழைக்

காம்புடை விடரகஞ் சிலம்பப் பாம்புடன்று
ஓங்குவரை மிளிர ஆட்டி வீங்குசெலற்
கடுங்குர லேறொடு கனைதுளி தலைஇப்

5 பெயலா னாதே வானம் பெயலொடு

மின்னுகிமிர்ந் தன்ன வேலன் வந்தெனப்
பின்னுவிடு முச்சி யளிப்பா னாதே
பெருந்தண் குளவி குழைத்த பாவடி
இருஞ்சே றாடிய நுதல கொல்களிறு
10 பேதை யாகினி யொசித்த
வீதா வேங்கைய மலைகிழ வோற்கே.

ஆற்றாது ஏதமஞ்சி வேறுபட்டாள் வெறியாட லுற்றவிடத்துச் சிறைப்புறமாகச் சொல்லியது.

## 1894. நற்றிணை - 361. முல்லை

சிறுவீ முல்லைப் பெரிதுகமழ் அலரி
தானுஞ் சூடினன் இளைஞரு மலைந்தனர்
விசும்புகடப் பன்ன பொலம்படைக் கலிமாப்
படுமழை பொழிந்த தண்ணறும் புறவின்
5 நெடுநா வொண்மணி பாடுசிறந் திசைப்ப
மாலை மான்ற மணமலி வியனகர்த்
தந்தன நெடுந்தகை தேரே என்றும்
அரும்பட ரகல நீக்கி
விருந்தயர் விருப்பினள் திருந்திழை யோளே.

வாயில்களோடு தோழி யுறழ்ந்து சொல்லியது.

## 1895. புறநானூறு - 247.

யானை தந்த முளிமர விறகிற்
கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து
மடமான் பெருநிரை வைகுதுயில் எடுப்பி

பேரிசாத்தனார்

மந்தி சீக்கும் அணங்குடை முன்றிலின்
5 நீர்வார் கூந்த லிரும்புறந் தாழப்
பேரஞர்க் கண்ணள் பெருங்காடு நோக்கித்
தெருமரும் அம்ம தானேதன் கொழுநன்
முழவுகண் துயிலாக் கடியுடை வியனகர்ச்
சிறுநனி தமிய ளாயினும்
10 இன்னுயிர் நடுங்குந்தன் இளமைபுறங்
கொடுத்தே.

திணை - பொதுவியல் ; துறை - ஆனந்தப்பையுள்.
பூதபாண்டியன்தேவி பெருங்கோப்பெண்டு
தீப்பாய்வாள் சொல்லியது.

## 1896. புறநானூறு - 262.

நறவுந் தொடுமின் விடையும் வீழ்மின்
பாசுவ லிட்ட புன்காற் பந்தர்ப்
புனல்தரும் இளமணல் நிறையப் பெய்ம்மின்
ஒன்னார் முன்னிலை முருக்கிப் பின்னின்று
5 நிரையொடு வரூஉ மென்னைக்கு
உழையோர் தன்னினும் பெருஞ்சா யலரே.
திணை - வெட்சி ; துறை - உண்டாட்டு ;
தலைத்தோற்றமு மாம்.
... ...மதுரைப் பேராலவாயார் பாடியது.

## ௩௨௪. பேரிசாத்தனார்

## 1897. அகநானூறு - 38. குறிஞ்சி

விரியிணர் வேங்கை வண்டுபடு கண்ணியன்
தெரியிதழ்க் குவளைத் தேம்பாய் தாரன்
அஞ்சிலை யிடவ தாக வெஞ்செலற்
கணைவலந் தெரிந்து துணைபடர்ந் துள்ளி 5 வருதல்
வாய்வது வான்றோய் வெற்பன்
வந்தன னாயின் அந்தளிர்ச் செயலைத்

தாழ்வி லோங்குசினைத் தொடுத்த வீழ்கயிற்று



ஊசல் மாறிய மருங்கும் பாய்புடன்
ஆடா மையிற் கலுழ்பில தேறி
10 நீடிதழ் தலைஇய கவின்பெறு நீலங்
கண்ணென மலர்ந்த சுனையும் வண்பறை
மடக்கிளி யெடுத்தல் செல்லாத் தடக்குரற்
குலவுப்பொறை யிறுத்த கோற்றலை யிருவி
கொய்தொழி புனமும் நோக்கி நெடிதுநினைந்து
15 பைதலன் பெயரலன் கொல்லோ ஐதேய்கு
அயவெள் ளருவி சூடிய வுயர்வரைக்
கூஉங்க ணஃதெம் மூரென
ஆங்கதை யறிவுறல் மறந்திசின் யானே.

தோழி தலைமகன் குறை கூறியது; பகலே சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியதூஉமாம்; தோழி குறிபெயர்த்திட்டுச் சொல்லியதூஉமாம்.

## 1898. அகநானூறு - 214. முல்லை

அகலிரு விசும்பகம் புதையப் பாஅய்ப்
பகலுடன் கரந்த பல்கதிர் வானம்
இருங்களிற் றினநிரை குளிர்ப்ப வீசிப்
பெரும்பெய லழிதுளி பொழித லானது
5 வேந்தனும் வெம்பகை முரணி யேந்திலை
விடுகதிர் நெடுவே லிமைக்கும் பாசறை
அடுபுகழ் மேவலொடு கண்படை யிலனே
அமரும் நம்வயி னதுவே நமரென
நம்மறிவு தெளிந்த பொம்ம லோதி
10 யாங்கா குவள்கொல் தானே யோங்குவிடைப்
படுசுவற் கொண்ட பகுவாய்த் தெண்மணி
ஆபெயர் கோவலர் ஆம்பலொ டளைஇப்
பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப
ஆருயி ரணங்குந் தெள்ளிசை
15 மாரி மாலையுந் தமியள் கேட்டே.

பாசறைக்கண் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

பேரிசாத்தனார் 1063

## 1899. அகநானூறு - 242. குறிஞ்சி

அரும்புழுதிர் வேங்கை யலங்கல் மென்சினைச்
சுரும்புவாய் திறந்த பொன்புரை நுண்டாது
மணிமருள் கலவத் துறைப்ப அணிமிக்கு
அவிர்பொறி மஞ்ஞை யாடுஞ் சோலைப்
5 பைந்தாட் செந்தினைக் கொடுங்குரல் வியன்புனஞ்
செந்தார்க் கிள்ளை நம்மொடு கடிந்தோன்
பண்புதர வந்தமை யறியாள் நுண்கேழ்
முறிபுரை யெழில்நலத் தென்மகள் துயர்மருங்கு
அறிதல் வேண்டுமெனப் பல்பிரப் பிரீஇ
10 அறியா வேலற் றரீஇ அன்னை
வெறியயர் வியன்களம் பொலிய வேத்தி
மறியுயிர் வழங்கா வளவைச் சென்றியாம்
செலவரத் துணிந்த சேண்விளங் கெல்வனை
நெகிழ்ந்த முன்கை நேரிறைப் பணைத்தோள்
15 நல்லெழி லழிவிற் றொல்கவின் பெறீஇய
முகிழ்த்துவர விளமுலை மூழ்கப் பல்லூழ்
முயங்க லியைவது மன்னோ தோழி
நறைகால் யாத்த நளிர்முகைச் சிலம்பிற்
பெருமலை விடரகம் நீடிய சிறியிலைச்
20 சாந்த மென்சினை தீண்டி மேலது
பிரசந் தூங்கு சேட்சிமை
வரையக வெற்பன் மணந்த மார்பே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

## 1900. அகநானூறு - 268. குறிஞ்சி

அறியாய் வாழி தோழி பொறிவரிப்
பூநுதல் யானையொடு புலிபொரக் குழைந்த
குருதிச் செங்களம் புலவற வேங்கை
உருகெழு நாற்றங் குளவியொடு விலங்கும்

5 மாமலை நாடனொடு மறுவின் றாகிய



காமங் கலந்த காத லுண்டெனின்
நன்றுமன் அதுநீ நாடாய் கூறுதி
நாணும் நட்பும் இல்லோர்த் தேரின்
யானல தில்லையிவ் வுலகத் தானே
10 இன்னுயி ரன்ன நின்னொடுஞ் சூழாது
முளையணி மூங்கிலிற் கிளையொடு பொலிந்த

பெரும்பெய ரெந்தை அருங்கடி நீவிச்
செய்துபின் னிரங்கா வினையொடு
மெய்யல் பெரும்பழி யெய்தி னேனே.

குறை வேண்டிப் பின்னின்ற தலைமகனுக்குக்
குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறியது.

**1901.** அகநானூறு - **305.** பாலை

பகலினும் அகலா தாகி யாமந்
தவலில் நீத்தமொ டையெனக் கழியத்
தளிமழை பொழிந்த தண்வரல் வாடையொடு
பனிமீக் கூரும் பைதற் பானாள்
5 பல்படை நிவந்த வறுமையில் சேக்கைப்
பருகு வன்ன காதலொடு திருகி
மெய்புகு வன்ன கைகவர் முயக்கத்து
ஓருயிர் மாக்களும் புலம்புவர் மாதோ
அருளி லாளர் பொருள்வயின் அகல
10 எவ்வந் தாங்கிய இடும்பை நெஞ்சத்து
யானெவ னுளனோ தோழி தானே
பராரைப் பெண்ணைச் சேக்குங் கூர்வாய்
ஒருதனி யன்றில் உயவுக்குரல் கடைஇய
உள்ளே கனலு முள்ளம் மெல்லெனக்
15 கனையெரி பிறப்ப வூதும்
நினையா மாக்கள் தீங்குழல் கேட்டே.

பிரிவுணர்த்தப்பட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது ; தலைமகன் பிரிவின்கண் தோழி தலைமகட்குச் சொல்லியதூஉமாம்.

பேரிசாத்தனார் 1065

**1902.** குறுந்தோகை - **81.** குறிஞ்சி

இவளே,
நின்சொற் கொண்ட என்சொற் றேறிப்
பசுநனை ஞாழற் பல்கிளை யொருசிறைப்
புதுநலன் இழந்த புலம்புமா றுடையள்
5 உதுக்காண் தெய்ய உள்ளல் வேண்டும்
நிலவும் இருளும் போலப் புலவுத்திரைக்
கடலுங் கானலுந் தோன்றும்
மடல்தாழ் பெண்ணையெஞ் சிறுநல் லூரே.

தோழியிற்கூட்டம் கூடிப் பிரியும் தலைமகற்குத்
சொல்லியது.

தோழி சொல் **1903.** குறுந்தொகை - **159.**

குறிஞ்சி

தழையணி யல்குல் தாங்கல் செல்லா
நுழைசிறு நுசுப்பிற் கெவ்வ மாக
அம்மெல் லாகம் நிறைய வீங்கிக்
கொம்மை வருமுலை செப்புடன் எதிரின
5 யாங்கா குவள்கொல் பூங்குழை யென்னும்
அவல நெஞ்சமொ டுசாவாக்
கவலை மாக்கட்டுஇப் பேதை யூரே.

தலைமகன் சிறைப்புறமாகத் தோழி
செறிப்பறிவுறுத்தது. உயிர் செல வேற்றுவரைவு வரினும்
அது மாற்றுதற்கு நிகழ்ந்ததூஉ மாம்.

**1904.** குறுந்தொகை - **278.** பாலை.

உறுவளி யுளரிய அந்தளிர் மாஅத்து

முறிகண் டன்ன மெல்லென் சீறடிச்
சிறுபசும் பாவையும் எம்மும் உள்ளார்
கொடியர் வாழி தோழி கடுவன்
5 ஊழுறு தீங்கனி யுதிர்ப்பக் கீழிருந்து
ஓர்ப்பன ஓர்ப்பன வுண்ணும்
பார்ப்புடை மந்திய மலையிறந் தோரே.

பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் உரைத்தது.



## 1905. குறுந்தொகை - 314. முல்லை

சேயுயர் விசும்பின் நீருறு கமஞ்சூல்
தண்குரல் எழிலி யொண்சுட ரிமைப்பப்
பெயல்தாழ்பு இருளிய புலம்புகொள் மாலையும்
வாரார் வாழி தோழி வரூஉம்
5 இன்னுறல் இளமுலை ஞெமுங்க
இன்னா வைப்பிற் சுரனிறந் தோரே.

பிரிவிடை வேறுபட்ட கிழத்தி வற்புறுத்துந் தோழிக்குப் பருவங்காட்டி அழிந்து கூறியது.

## 1906. குறுந்தொகை - 366. குறிஞ்சி

பால்வரைந் தமைத்த லல்லது அவர்வயிற்

சால்பளந் தறிதற்கு யாஅம் யாரோ
வேறியான் கூறவும் அமையாள் அதன்றலைப்
பைங்கண் மாச்சுனைப் பல்பிணி யவிழ்ந்த
5 வள்ளிதழ் நீலம் நோக்கி யுள்ளகைபு
ஒழுகு கண்ண ளாகிப்
பழுதன் றம்மவிவ் வாயிழை துணிவே.

காவன் மிகுதிக்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடுகண்டு இவ் வேறுபாடு எற்றினன் ஆயது என்று செவிலி வினவத் தோழி கூறியது.

## 1907. நற்றிணை - 25. குறிஞ்சி

அவ்வளை வெரிநின் அரக்கீர்த் தன்ன
செவ்வரி யிதழ சேணுறு பிடவின்
நறுந்தா தாடிய தும்பி பசுங்கேழ்ப்
பொன்னுரை கல்லின் நன்னிறம் பெறூஉம்
5 வளமலை நாடன் நெருநல் நம்மொடு
கிளைமலி சிறுதினைக் கிளிகடிந் தசைஇச்
சொல்லிடம் பெறுஅன் பெயர்ந்தனன்
பெயர்ந்தது
அல்ல லன்றது காதலந் தோழி
தாதுண் வேட்கையிற் போதுதெரிந் தூதா

பேரிசாத்தனார் 1067

10 வண்டோ ரன்னஅவன் தண்டாக் காட்சி
கண்டுங் கழல்தொடி வலித்தவென்
பண்பில் செய்தி நினைப்பா கின்றே.

தலைமகளைத் தோழி குறையயப்புக்கூறியது.

**1908.** நற்றிணை - **37.** பாலை

பிணங்கரில் வாடிய பழவிறல் நனந்தலை
உணங்கூ ழாயத் தோரான் தெண்மணி
பைபய இசைக்கும் அத்தம் வையெயிற்று
இவளொடுஞ் செலினோ நன்றே குவளை
5 நீர்சூழ் மாமலர் அன்ன கண்ணழக்
கலையொழி பிணையிற் கலங்கி மாறி
அன்பிலிர் அகறி ராயின் என்பரம்
ஆகுவ தன்றிவள் அவலம் நாகத்து
அணங்குடை யருந்தலை யுடலி வலனேர்பு
10 ஆர்கலி நல்லேறு திரிதருங்
கார்செய் மாலை வரூஉம் போழ்தே.

வரைவிடைவைத்துப் பிரிவின்கண் தோழி சொல்லியது.

**1909.** நற்றிணை - **67.** நெய்தல்

சேய்விசும் பிவர்ந்த செழுங்கதிர் மண்டிலம்
மால்வரை மறையத் துறைபுலம் பின்றே
இறவருந்தி யெழுந்த கருங்கால் வெண்குருகு
வெண்கோட் டருஞ்சிறைத் தாஅய்க் கரைய
5 கருங்கோட்டுப் புன்னை யிறைகொண் டனவே
கணைக்கால் மாமலர் கரப்ப மல்குகழித்
துணைச்சுறா வழங்கலும் வழங்கும் ஆயிடை

எல்லிமிழ் பனிக்கடல் மல்குசுடர்க் கொளீஇ
எமரும் வேட்டம் புக்கனர் அதனால்
10 தங்கி னெவனோ தெய்ய பொங்குபிசிர்



முழவிசைப் புணரி யெழுதரும்
உடைகடற் படப்பையெம் உறைவி னூர்க்கே.

பகற்குறிவந்து நீங்குந் தலைமகனைத் தோழி
வரைவுகடாயது.

## 1910. நற்றிணை - 104. குறிஞ்சி

பூம்பொறி யுழுவைப் பேழ்வா யேற்றை
தேங்கமழ் சிலம்பிற் களிற்றொடு பொரினே
துறுகல் மீமிசை யுறுகண் அஞ்சாக்
குறக்குறு மாக்கள் புகற்சியின் எறிந்த
5 தொண்டகச் சிறுபறைப் பாணி அயலது
பைந்தாட் செந்தினைப் படுகிளி யோப்பும்
ஆர்கலி வெற்பன் மார்புநயந் துறையும்
யானே யன்றியும் உளர்கொல் பானாட்
பாம்புடை விடர ஓங்குமலை மிளிர
10 உருமுச்சிவந் தெறியும் பொழுதொடு பெருநீர்
போக்கற விலங்கிய சாரல்
நோக்கருஞ் சிறுநெறி நினையு மோரே.

தலைவி ஆறுபார்த்துற்ற அச்சத்தாற் சொல்லியது.

## 1911. நற்றிணை - 199. நெய்தல்

ஓங்குமணை லுடுத்த நெடுமாப் பெண்ணை
வீங்குமடற் குடம்பைப் பைதல் வெண்குருகு
நள்ளென் யாமத் துயவுதோ றுருகி
அள்ள லன்னவென் உள்ளமொ டுள்ளுடைந்து
5 உளேனே வாழி தோழி வளைநீர்க்
கடுஞ்சுறு எறிந்த கொடுந்திமிற் பரதவர்
வாங்குவிசைத் தூண்டில் ஊங்கூங் காகி
வளிபொரக் கற்றை தாஅய் நளிசுடர்
நீனிற விசும்பின் மீனொடு புரையப்
10 பைபய இமைக்குந் துறைவன்
மெய்தோய் முயக்கங் காணு வூங்கே.
வன்புறை எதிரழிந்தது.

பேரிசாத்தனுர் 1069

## 1912. நற்றிணை - 299. நெய்தல்

உருகெழு யானை யுடைகோ டன்ன
ததர்பிணி யவிழ்ந்த தாழை வான்பூத்
தயங்கிருங் கோடை தாக்கலின் நுண்டாது
வயங்கிழை மகளிர் வண்டற் ரூஉங்
5 காமர் சிறுகுடி புலம்பினும் அவர்காண்
நாமில மாகுத லறிதும் மன்னே
வில்லெறி பஞ்சி போல மல்குதிரை
வளிபொரு வயங்குபிசிர் பொங்கும்
நளிகடற் சேர்ப்பனொடு நகாஅ வூங்கே.

தோழி தலைமகன் சிறைப்புறமாகச் சொல்லியது.

## 1913. நற்றிணை - 323. நெய்தல்

ஓங்கித் தோன்றுந் தீங்கட் பெண்ணை
நடுவ ணதுவே தெய்ய மடவரல்
ஆயமும் யானும் அறியா தவணை
மாய நட்பின் மாணல மொழிந்துநின் 5 கிளைமை
கொண்ட வளையார் முன்கை
நல்லோள் தந்தை சிறுகுடிப் பாக்கம்
புலிவரிபு எக்கர்ப் புன்னை யுதிர்த்த
மலிதா தூதுந் தேனொ டொன்றி
10 வண்டிமிர் இன்னிசை கறங்கத் திண்டேர்த்
தெரிமணி கேட்டலும் அரிதே
வருமா நீதவண் மறவா தீமே.
தோழி இரவுக்குறிநேர்ந்தது.

## 1914. நற்றிணை - 378. நெய்தல்

யாமமும் நெடிய கழியும் காமமும்
கண்பட னீயாது பெருகும் தெண்கடல் முழங்குதிரை
முழவின் பாணியிற் பைபயப் பழம்புண் ணுறுநரிற்
பரவையின் ஆலும்



5 ஆங்கவை நலியவும் நீங்கி யாங்கும்
இரவிறந் தெல்லை தோன்றல தலர்வாய்
அயலிற் பெண்டிர் பசலை பாட
ஈங்கா கின்றால் தோழி ஓங்குமணல்
வரியார் சிறுமனை சிதைஇ வந்து
10 பரிவுதரத் தொட்ட பணிமொழி நம்பிப்
பாடிமிழ் பனிநீர்ச் சேர்ப்பனொடு
நாடா தியைந்த நண்பின தளவே.

தோழி சிறைப்புறமாகச் சொல்லியது ; தலைமகன் ஒருவழித் தணந்தபின்னை வன்புறை எதிர்மொழிந்ததூஉமாம்.

## 1915. புறநானூறு - 125.

பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன
நெருப்புச்சினந் தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை
பரூஉக்கண் மண்டையொ டூழ்மாறு பெயர
உண்கும் எந்தைநிற் காண்குவந் திசினே
5 நள்ளாதார் மிடல்சாய்த்த

வல்லாளநின் மகிழிருக்கையே
உழுத நோன்பகடழிதின் றாங்கு
நல்லமிழ் தாகநீ நயந்துண் ணு நறவே
குன்றத் தன்ன களிறு பெயரக்
10 கடந்தட்டு வென்றோனும் நிற்கூ றும்மே
வெலீஇயோன் இவனெனக்
கழலணிப் பொலிந்த சேவடி நிலங்கவர்பு
விரைந்துவந் து சமந்தாங்கிய
வல்வேல் மலையன் அல்ல னாயின்
15 நல்லமர் கடத்தல் எளிதுமன் நமக்கெனத்
தோற்றோன் தானும் நிற்கூ றும்மே
தொலைஇயோன் இவனென
ஒருநீ யாயினை பெரும பெருமழைக்கு

பேரிசாத்தனார் 1071

இருக்கை சான்ற வுயர்மலைத்
20 திருத்தகு சேஎய்நிற் பெற்றிசி னோர்க்கே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

சேரமான் மாந்தரஞ்சேரவிரும்பொறையும் சோழன் இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் பொருதவழிச் சோழற்குத் துப்பா கிய தேர்வண்மலையனைப் பாடியது.

**1916.** புறநானூறு - **198.**

அருவி தாழ்ந்த பெருவரை போல
ஆரமொடு பொலிந்த மார்பிற் றண்டாக்
கடவுள் சான்ற கற்பிற் சேயிழை
மடவோள் பயந்த மணிமரு ளவ்வாய்க்
5 கிண்கிணிப் புதல்வர் பொலிகென் றேத்தித்
திண்டேர் ரண்ணல் நிற்பா ராட்டிக்
காதல் பெருமையிற் கனவினும் அரற்றுமென்
காமர் நெஞ்சம் ஏமாந் துவப்ப
ஆலமர் கடவு ளன்னநின் செல்வம்
10 வேல்கெழு குருசில் கண்டே னாதலின்
விடுத்தனென் வாழ்கநின் கண்ணி தொடுத்த

தண்டமிழ் வரைப்பகங் கொண்டி யாகப்
பணித்துக்கூட் டுண்ணுந் தணிப்பருங்
நின்னோ ரன்னநின் புதல்வ ரென்றும்

கடுந்திறல்

15 ஒன்னார் வாட அருங்கலந் தந்துநும்
பொன்னுடை நெடுநகர் நிறைய வைத்தநின்
முன்னோர் போல்கிவர் பெருங்கண் ணோட்டம்
யாண்டும் நாளும் பெருகி யீண்டுதிரைப்
பெருங்கடல் நீரினும் அக்கடல் மணலினும்
20 நீண்டுயர் வானத் துறையினும் நன்றும்
இவர்பெறும் புதல்வர்க் காண்டொறும் நீயும்

புகன்ற செல்வமொடு புகழினிது விளங்கி
நீடு வாழிய நெடுந்தகை யானும்
கேளில் சேஎய் நாட்டினெந் நாளும்



25 துளிநசைப் புள்ளினின் அளிநசைக்
அடிநிழற் பழகிய அடியுறை
கிரங்கிநின்
கடுமான் மாற மறவா தீமே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.
பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய
நன்மாறனைப் பாடியது.

## ௯௨௫. பேரெயின் முறுவலார்

## 1917. குறுந்தொகை - 17. குறிஞ்சி

மாவென மடலும் ஊர்ப பூவெனக்
குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப
மறுகின் ஆர்க்கவும் படுப
பிறிதும் ஆகுப காமங்காழ்க் கொளினே.

தோழியிற் கூட்டம் வேண்டிப் பின்னின்ற
குறைமறுமற் கூறியது.

தலைமகன் தோழி

V தொடியுடைய தோள்மணந்தனன்
கடிகாவிற் பூச்சூடினன்
தண்கமழுஞ் சாந்துநீவினன்
செற்றோரை வழிதபுத்தனன்
5 நட்டோரை யுயர்புகூறினன்
வலியரென வழிமொழியலன்
மெலியரென மீக்கூறலன்
பிறரைத்தான் இரப்பறியலன்
இரந்தோர்க்கு மறுப்பறியலன்
10 வேந்துடை யவையத் தோங்குபுகழ் தோற்றினன்
வருபடை யெதிர்தாங்கினன்
பெயர்படை புறங்கண்டனன்
கடும்பரிய மாக்கடவினன்
நெடுந்தெருவிற் றேர்வழங்கினன்

போதும்பில் கிழார் 1073

15 ஓங்கியல களிறூர்ந்தனன்
தீஞ்செறி தசும்புதொலைச்சினன்
பாணுவப்பப் பசிதீர்த்தனன்
மயக்குடைய மொழிவிடுத்தனன், ஆங்குச்
செய்ப வெல்லாஞ் செய்தனன் ஆகலின்
20 இடுகவொன்றோ சுடுக வொன்றோ
படுவழிப் படுகஇப் புகழ்வெய்யோன் தலையே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.
நம்பிநெடுஞ்செழியனைப் பாடியது.

## ௩௪௬. பொதுக்கயத்துக் கீரந்தை

### 1919. குறுந்தொகை - 337. குறிஞ்சி

முலையே முகிழ்முகிழ்த் தனவே தலைஇய
கிளையேய் குரலே கிழக்குவீழ்ந் தனவே
செறிமுறை வெண்பலும் பறிமுறை நிரம்பின
சுணங்குஞ் சிலதோன் றினவே யணங்கென
5 யான்தன் னறிவல் தானறி யலளே
யாங்கா குவள்கொல் தானே
பெருமுது செல்வ ரொருமட மகளே.

தோழியை இரந்து பின்னின்ற கிழவன் தனது குறையறியக் கூறியது.

## ௩௪௭. பொதும்பில் கிழார்

### 1920 நற்றிணை - 57. குறிஞ்சி

தடங்கோட் டாமான் மடங்கல் மாநிரைக்

குன்ற வேங்கைக் கன்றொடு வதிந்தெனத்
துஞ்சுபதம் பெற்ற துய்த்தலை மந்தி
கல்லென் சுற்றங் கைகவியாக் குறுகி
5 வீங்குசுரை ஞெமுங்க வாங்கித் தீம்பால்
கல்லா வன்பறழ்க் கைந்நிறை பிழியும்
மாமலை நாட மருட்கை யுடைத்தே
செங்கோற் கொடுங்குரற் சிறுதினை வியன்புனம்
68



கொய்பதங் குறுகுங் காலையெம்
10 மையீ ரோதி மாணலந் தொலைவே.
செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

## ௩௪அ. பொதும்பில்கிழார் மகனார் வெண்கண்ணியார்

### 1921. நற்றிணை - 375. நெய்தல்

நீடுசினைப் புன்னை நறுந்தா துதிரக்
கோடுபுனை குருகின் தோடுதலைப் பெயரும்
பல்பூங் கானல் மல்குநீர்ச் சேர்ப்ப
அன்பிலை யாதலின் தன்புலன் நயந்த
5 என்னும் நாணும் நன்னுத லுவப்ப

வருவை யாயினோ நன்றே பெருங்கடல்
இரவுத்தலை மண்டிலம் பெயர்ந்தென உரவுத்திரை
எறிவன போல வரூஉம்
உயர்மணற் படப்பையெம் உறைவி னூரே.

வரையாது நெடுங்காலம்வந்தொழுகத் தலைமகளாற்றாமை கண்டு தலைமகனுக்கு உணர்ந்த தோழி வரைவுகடாயது.

## 1922. நற்றிணை - 387. பாலை

நெறியிருங் கதுப்பும் நீண்ட தோளும்
அம்ம நாளுந் தொன்னலஞ் சிதையல்
ஒல்லாச் செந்தொடை யொரீஇய கண்ணிக்
கல்லா மழவர் வில்லிடை விலங்கிய
5 துன்னருங் கவலை யருஞ்சுர மிறந்தோர்
வருவர் வாழி தோழி செருவிறந்து
ஆலங் கானத் தஞ்சுவர இறுத்த
வேல்கெழு தானைச் செழியன் பாசறை
உறைகழி வாளின் மின்னி யுதுக்காண்
10 நெடும்பெருங் குன்றம் முற்றிக்
கடும்பெயல் பொழியும் கலிகெழு வானே.

பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி பருவங்காட்டி வற்புறீஇயது.

## ௩சக. பொதும்பிற் புல்லாளங்கண்ணியார்

## 1923. அகநானூறு - 154. முல்லை

படுமழை பொழிந்த பயமிகு புறவின்
நெடுநீ ரவல பகுவாய்த் தேரை
சிறுபல் லியத்தின் நெடுநெறிக் கறங்கக்
குறும்புதற் பிடவின் நெடுங்கா லலரி
5 செந்நில மருங்கின் நுண்ணயிர் வரிப்ப
வெஞ்சின அரவின் பையணந் தன்ன
தண்கமழ் கோடல் தாதுபிணி யவிழத்
திரிமருப் பிரலை தெள்ளறல் பருகிக்
காமர் துணையொ டேமுற வதியக்
10 காடுகவின் பெற்ற தண்பதப் பெருவழி
ஓடுபரி மெலியாக் கொய்சுவற் புரவித்
தாள்தாழ் தார்மணி தயங்குபு இயம்ப
ஊர்மதி வலவ தேரே சீர்மிகுபு
நம்வயிற் புரிந்த கொள்கை
15 அம்மா வரிவையைத் துன்னுகம் விரைந்தே.

வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

## ௩௫௦. பொத்தியார்

## 1924. புறநானூறு - 217.

நினைக்குங் காலை மருட்கை யுடைத்தே
எனைப்பெருஞ் சிறப்பினோ டீங்கிது துணிதல்
அதனினு மருட்கை யுடைத்தே பிறனாட்டுத்
தோற்றஞ் சான்ற சான்றோன் போற்றி 5 இசைமர

பாக நட்புக் கந்தாக
இனையதோர் காலை ஈங்கு வருதல்
வருவ னென்ற கோனது பெருமையும்
அதுபழு தின்றி வந்தவன் அறிவும்
வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே



10 அதனால், தன்கோ லியங்காத் தேயத் துறையுஞ்
சான்றோன் நெஞ்சுறப் பெற்ற தொன்றிசை
அன்னோனை யிழந்தவிவ் வுலகம்
என்னா வதுகொல் அளியது தானே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.
கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தானுழைச்சென்ற பிசிராந் தையாரைக் கண்டு பாடியது.

## 1925. புறநானூறு - 220.

பெருஞ்சோறு பயந்து பல்யாண்டு புரந்த பெருங்களி றிழந்த பைதற் பாகன்
அதுசேர்ந் தல்கிய அழுங்க லாலை
வெளில்பா ழாகக் கண்டுகலுழ்ந் தாங்குக் 5 கலங்கினெ னல்லனோ யானே பொலந்தார்த் தேர்வண் கிள்ளி போகிய
பேரிசை மூதூர் மன்றங் கண்டே.
திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.
கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தானுழைச்சென்று மீண்டு வந்து உறையூர் கண்ட பொத்தியார் அழுது

பாடியது.

## 1926. புறநானூறு - 221.

பாடுநர்க் கீத்த பல்புக ழன்னே
ஆடுநர்க் கீத்த பேரன் பினனே
அறவோர் புகழ்ந்த ஆய்கோ லன்னே
திறவோர் புகழ்ந்த திண்ணன் பினனே
5 மகளிர் சாயல் மைந்தர்க்கு மைந்து
துகளறு கேள்வி உயர்ந்தோர் புக்கில்
அனைய னென்னா தத்தக் கோனை
நினையாக் கூற்றம் இன்னுயி ருய்த்தன்று
பைதல் ஒக்கற் றழீஇ அதனை
10 வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்
னனந்தலை உலகம் அரந்தை தூங்கக்



கெடுவில் நல்லிசை சூடி
நடுக லாயினன் புரவல னெனவே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.
கோப்பெருஞ்சோழன் நடுகற்கண்டு பாடியது.

## 1927. புறநானூறு - 222.

அழலவிர் வயங்கிழைப் பொலிந்த மேனி
நிழலினும் போகா நின்வெய்யோள் பயந்த
புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வாவென
என்னிவண் ஒழித்த அன்பி லாள
5 எண்ணா திருக்குவை யல்லை
என்னிடம் யாதுமற் றிசைவெய் யோயே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.

கோப்பெருஞ்சோழனைத் தன்மகன் பிறந்தபின் பெயர்த்துச் சென்ற பொத்தியார் எனக்கு இடந்தாவென்று சொற்றது.

## 1928. புறநானூறு - 223.

பலர்க்குநிழ லாகி உலகமீக் கூறித்
தலைப்போ கன்மையிற் சிறுவழி மடங்கி
நிலைபெறு நடுக லாகியக் கண்ணும்
இடங்கொடுத் தளிப்ப மன்ற உடம்போடு
5 இன்னுயிர் விரும்புங் கிழமைத்
தொன்னட் புடையார் தம்முழைச் செலினே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.

கல்லாகியும் இடங்கொடுத்த கோப்பெருஞ்சோழனை வடக்கிருந்த பொத்தியார் பாடியது.

## நஉக. பொய்கையார்

## 1929. நற்றிணை - 18. பாலை

பருவரல் நெஞ்சமொடு பல்பட ரகல
வருவர் வாழி தோழி மூவன்
முழுவலி முள்ளெயி றழுத்திய கதவிற்

கானலந் தொண்டிப் பொருநன் வென்வேற்
5 றெறலருந் தானைப் பொறையன் பாசறை
நெஞ்சம் நடுக்குறூஉந் துஞ்சா மறவர்
திரைதபு கடலின் இனிதுகண் படுப்பக்
கடாஅங் கழீஇய கதனடங்கு யானைத்
தடாஅநிலை யொருகோட் டன்ன
10 ஒன்றிலங் கருவிய குன்றிறந் தோரே.
பிரிவிடையாற்றாளாகிய தலைவியைத் தோழி
வற்புறுத்தியது.

## 1930. புறநானூறு - 48

கோதை மார்பிற் கோதை யானும்
கோதையைப் புணர்ந்தோர் கோதை யானும்
மாக்கழி மலர்ந்த நெய்த லானும்
கள்நா றும்மே கானலந் தொண்டி
5 அஃதெம் ஊரே அவனெம் இறைவன்
அன்னோற் படர்தி யாயின் நீயும்
எம்மும் உள்ளுமோ முதுவா யிரவல
அமர்மேம் படூஉங் காலைநின்
புகழ்மேம் படுநனைக் கண்டன மெனவே.
திணை - பாடாண்டிணை; துறை - புலவராற்றுப்படை.
சேரமான் கோக்கோதைமார்பனைப் பாடியது.

## 1931. புறநானூறு - 49.

நாடன் என்கோ ஊரன் என்கோ
பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்பன் என்கோ
யாங்கன மொழிகோ ஓங்குவாட்
கோதையைப்
புனவர் தட்டை புடைப்பின் அயலது
5 இறங்குகதி ரலமரு கழனியும்
பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங்
கெழுமே.

திணை - பாடாண்டிணை ; துறை - புலவராற்றுப்படை ;
இயன் மொழியுமாம்.

சேரமான் கோக்கோதை மார்பனைப் பாடியது.

## ௩௩௨. பொருந்தில் இளங்கீரனார்

### 1932. அகநானூறு - 19. பாலை

அன்றவண் ஒழிந்தன்று மிலையே வந்துநனி
வருந்தினை வாழியெ னெஞ்சே பருந்திருந்து
உயாவிளி பயிற்றும் யாவுயர் நனந்தலை
5

உருள்துடி மகுளியிற் பொருள்தெரிந் திசைக்குங்
கடுங்குரற் குடிஞைய நெடும்பெருங் குன்றம்
எம்மொ டிறத்தலுஞ் செல்லாய் பின்னின்று
ஒழியச் சூழ்ந்தனை யாயிற் றவிராது
செல்லினிச் சிறக்கநின் னுள்ளம் வல்லே
மறவ லோம்புமதி யெம்மே நறவின்
10 சேயித ழனைய வாகிக் குவளை
மாயிதழ் புரைய மலிர்கொள் ஈரிமை
உள்ளகங் கனல உள்ளுதொ றுலறிப்
பழங்கண் கொண்ட கலிழ்ந்துவீழ் அவிரறல்
வெய்ய வுகுதர வெரீஇப் பையெனச்
15 சில்வளை சொரிந்த மெல்லிறை முன்கை
பூவீ கொடியிற் புல்லெனப் போகி
அடர்செ யாயகற் சுடர்துணை யாக
இயங்காது வதிந்தநங் காதலி
உயங்குசாய் சிறுபுற முயங்கிய பின்னே.

நெஞ்சினாற் பொருள்வலிக்கப்பட்டுப் பிரிந்த தலைமகன் தலைமகள் நலனயந்துள்ளிய நெஞ்சினைக் கழறியது.

**1933. அகநானூறு - 351. பாலை**

வேற்றுநாட் டுறையுள் விருப்புறப் பேணிப்
பெறலருங் கேளிர் பின்வந்து விடுப்பப்
பொருளகப் படுத்த புகல்மலி நெஞ்சமொடு
குறைவினை முடித்த நிறைவின் இயக்கம்
5 அறிவுறூஉங் கொல்லோ தானே கதிர்தெறக்
கழலிலை யுகுத்த கால்பொரு தாழ்சினை



அழலகைந் தன்ன அங்குழைப் பொதும்பிற்
புழல்வீ யிருப்பைப் புன்காட் டத்தம்
மறுதர லுள்ளமொடு குறுகத் தோற்றிய
10 செய்குறி யாழி வைகல்தோ றெண்ணி
எழுதுசுவர் நினைந்த அழுதுவார் மழைக்கண்
விலங்குவீ ழரிப்பனி பொலங்குழைத் தெறிப்பத்
திருந்திழை முன்கை யணலசைத் தூன்றி
இருந்தணை மீது பொருந்துழிக் கிடக்கை
15 வருந்துதோட் பூசல் களையு மருந்தென
உள்ளுதொறு படூஉம் பல்லி
புள்ளுத்தொழு துறைவி செவிமுத லானே.

பொருண்முற்றி மறுத்தராநின்ற தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

## 1934. புறநானூறு - 53.

முதிர்வா ரிப்பி முத்த வார்மணற்
கதிர்விடு மணியிற் கண்பொரு மாடத்து
இலங்குவளை மகளிர் தெற்றி யாடும்
விளங்குசீர் விளங்கில் விழுமங் கொன்ற

5 களங்கொள் யானைக் கடுமான் பொறைய
விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்
மம்மர் நெஞ்சத் தெம்மனோர்க் கொருதலை
கைம்முற் றலநின் புகழே என்றும்
ஒளியோர் பிறந்தவிம் மலர்தலை யுலகத்து
10 வாழே மென்றலும் அரிதே தாழாது
செறுத்த செய்யுட் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்
இன்றுள னாயின் நன்றுமன் என்றநின்
ஆடுகொள் வரிசைக் கொப்பப்
15 பாடுவல் மன்னாற் பகைவரைக் கடப்பே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

சேரன் மாந்தரஞ்சேர லிரும்பொறையைப் பாடியது.

## ௩௱௩. பொன்மணியார்

## 1935. குறுந்தொகை - 391. முல்லை

உவரி யொருத்தல் உழாஅது மடியப்
புகரி புழுங்கிய புயல்நீங்கு புறவிற்
கடிதிடி யுருமிற் பாம்பு பையவிய
இடியொடு மயங்கி யினிதுவீழ்ந் தன்றே
5 வீழ்ந்த மாமழை தழீஇப் பிரிந்தோர்
கையற வந்த பையுள் மாலைப்
பூஞ்சினை யிருந்த போழ்கண் மஞ்ஞை
தாஅநீர் நனந்தலை புலம்பக்
கூஉந் தோழி பெரும்பே தையவே.

பிரிவிடைப் பருவ வரவின்கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி அழிந்து சொல்லியது.

## நடுசு. பொன்முடியார்

## 1936. புறநானூறு - 299.

பருத்தி வேலிச் சீறூர் மன்னன்
உழுத்தத ருண்ட ஓய்நடைப் புரவி
கடல்மண்டு தோணியிற் படைமுகம் போழ
நெய்ம்மிதி யருந்திய கொய்சுவ லெருத்திற்
5 றண்ணடை மன்னர் தாருடைப் புரவி
அணங்குடை முருகன் கோட்டத்துக்
கலந்தொடா மகளிரின் இகந்துநின் றவ்வே.

திணை - நொச்சி ; துறை - குதிரைமறம்.

## 1937. புறநானூறு - 310.

பால்கொண்டு மடுப்பவும் உண்ணு னாகலிற்
செறாஅ தோச்சிய சிறுகோ லஞ்சியொடு
உயவொடு வருந்து மன்னே இனியே
புகர்நிறங் கொண்ட களிறட் டானான்



5 முன்னாள் வீழ்ந்த உரவோர் மகனே
உன்னில னென்னும் புண்ணொன் றம்பு
மானுளை யன்ன குடுமித்
தோல்மிசைக் கிடந்த புல்லண லோனே.

திணை - தும்பை ; துறை - நூழிலாட்டு.

**1938. புறநானூறு - 312.**

ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித் துக் கொடுத்தல் கொல்லற்குக்

கடனே

நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
5 ஒளிறுவா ளருஞ்சம முருக்கிக்
களிறெறிந் து பெயர்தல் காளைக்குக் கடனே.

திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.

௩௫௫. பொன்முகன்

**1939. குறுந்தொகை - 114.** நெய்தல்

நெய்தற் பரப்பிற் பாவை கிடப்பி

நின்குறி வந்தனென் இயல்தேர்க் கொண்க
செல்கஞ் செலவியங் கொண்மோ அல்கலும்
ஆர லருந்தும் வயிற்ற
5 நாரை மிதிக்கு மென்மகள் நுதலே.

இடத்துய்த்து நீங்கும் தோழி தலைமகற்குக் கூறியது.

நடுசா. போதனார் 1940. நற்றிணை - 110. பாலை

பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத் தொருகை யேந்திப்
புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்
உண்ணென் றோக்குபு பிழைப்பத் தெண்ணீர்

போந்தைப்பசலையார்

5 முத்தரிப் பொற்சிலம் பொலிப்பத் தத்துற்று
அரிநரைக் கூந்தற் செம்முது செவிலியர்
பரிமெலிந் தொழியப் பந்த ரோடி
ஏவல் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி
அறிவு மொழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல்
10 கொண்ட கொழுநன் குடிவறன் உற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோ றுள்ளாள்
ஒழுகுநீர் நுணங்கறல் போலப்
பொழுதுமறுத் துண்ணுஞ் சிறுமது கையளே.

மனைமருட்சி ; மகள்நிலை யுரைத்ததூஉமாம்.

௱௰. போந்தைப்பசலையார்

1941. அகநானூறு - 110. நெய்தல்

✓ அன்னை யறியினும் அறிக அலர்வாய்
அம்மென் சேரி கேட்பினுங் கேட்க
பிறிதொன் றின்மை அறியக் கூறிக்
கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கிக்
5 கடுஞ்சூள் தருகுவென் நினக்கே கானற்
றொடலை யாயமொடு கடலுடன் ஆடியுஞ்
சிற்றி லிழைத்துஞ் சிறுசோறு குவைஇயும்
வருந்திய வருத்தந் தீர யாஞ்சிறிது
இருந்தன மாக எய்த வந்து
10 தடமென் பணைத்தோள் மடநல் லீரே
எல்லும் எல்லின் றசைவுமிக வுடையேன்
மெல்லிலைப் பரப்பின் விருந்துண்டு யானுமிக்
கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றெவனோ
எனமொழிந் தனனே யொருவன் அவற்கண்டு
15 இறைஞ்சிய முகத்தெம் புறஞ்சேர்பு பொருந்தி
இவைநுமக் குரிய வல்ல இழிந்த
கொழுமீன் வல்சி என்றனம் இழுமென
நெடுங்கொடி நுடங்கு நாவாய் தோன்றுவ
காணு மோவெனக் காலிற் சிதையா

20 நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளும்
என்னே குறித்த நோக்கமொடு நன்னுதால்
ஒழிகோ யானென அழிதகக் கூறி
யாம்பெயர் தென்ன நோக்கித் தான்தன்
நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி
25 நின்றோன் போலும் இன்றுமென் கட்கே.

தோழி செவிலித்தாய்க்கு அறத்தொடு நின்றது.

நஉஅ. மடல்பாடிய மாதங்கீரனார்

**1942. குறுந்தொகை - 182. குறிஞ்சி**

விழுத்தலைப் பெண்ணை விளையல் மாமடல்
மணியணி பெருந்தார் மார்பிற் பூட்டி
வெள்ளென் பணிக்குபிறர் எள்ளத் தோன்றி
ஒருநாள் மருங்கிற் பெருநாண் நீங்கித்
5 தெருவி னியல்வுந் தருவது கொல்லோ
கலிழ்கவின் அசைநடைப் பேதை
மெலிந்திலள் நாம்விடற் கமைந்த தூதே.

தோழியாற் குறைமறுக்கப்பட்ட தலைமகன் தன் நெஞ்சிற்கு உரைத்தது.

**1943. நற்றிணை - 377. குறிஞ்சி**

மடல்மா வூர்ந்து மாலை சூடிக்
கண்ணகன் வைப்பின் நாடும் ஊரும்
ஒண்ணுத லரிவை நலம்பா ராட்டிப்
பண்ணன் மேவல மாகி யரிதுற்று

5 அறுபிணி யாக விளியலங் கொல்லோ
அகலிரு விசும்பின் அரவுக்குறை படுத்த பசுங்கதிர்
மதியத் தகனிலாப் போல
அளகஞ் சேர்ந்த திருநுதல்
கழறு மெலிக்கு நோயா கின்றே.

சேட்படுக்கப்பட்டு ஆற்ருளுகிய தலைமகன் தோழி கேட்பத் தன்னுள்ளே சொல்லியது.

நடுகூ. மதுரை அளக்கர் ஞாழார்மகனார் மள்ளனார்

## 1944. அகநானூறு - 33. பாலை

விளைநன் ருதல் வெறுப்பக் காட்டி
மனைமாண் கற்பின் வாணுத லொழியக்
கவைமுறி யிழந்த செங்கிலை யாஅத்து
ஒன்றேங் குயர்சினை யிருந்த வன்பறை
5 வீளைப் பருந்தின் கோள்வல் சேவல்
வளைவாய்ப் பேடை வருதிறம் பயிரும்
இளிதேர் தீங்குரல் இசைக்கும் அத்தம்
செலவருங் குரைய என்னது சென்றவண்
மலர்பா டான்ற மையெழில் மழைக்கண் 10
தெளியா நோக்க முள்ளினை உளிவாய்
வெம்பர லதர குன்றுபல நீந்தி
யாமே யெமிய மாக நீயே
ஒழியச் சூழ்ந்தனை யாயின் முனாஅது
வெல்போர் வானவன் கொல்லி மீமிசை

15 நுணங்கமை புரையும் வணங்கிறைப் பணைத்தோள்
வரியணி யல்குல் வாலெயிற் றோள்வயிற்
பிரியா யாயின் நன்றுமன் றில்ல

அன்றுநம் அறியா யாயினும் இன்றுநஞ்
செய்வினை யாற்றுற விலங்கின்
20 எய்துவை யல்லையோ பிறர்நகு பொருளே.
தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

**1945.** அகநானூறு - **144.** முல்லை

வருதும் என்ற நாளும் பொய்த்தன
அரியே றுண்கண் நீரும் நில்லா
தண்கார்க் கீன்ற பைங்கொடி முல்லை
வைவாய் வான்முகை அவிழ்ந்த கோதை
5 பெய்வனப் பிழந்த கதுப்பும் உள்ளார்
அருள்கண் மாறலோ மாறுக அந்தில்



அறனுஞ் சலரே ஆயிழை நமரெனச்
சிறிய சொல்லிப் பெரிய புலம்பினும்
பனிபடு நறுந்தார் குழைய நம்மொடு
10 துனிதீர் முயக்கம் பெற்றோள் போல
உவக்குவள் வாழிய நெஞ்சே விசும்பின்

ஏறெழுந்து முழங்கினு மாறெழுந்து சிலைக்குங்
கடாஅ யானை கொட்கும் பாசறைப்
போர்வேட் டெழுந்த மள்ளர் கையதை
15 கூர்வாட் குவிமுகஞ் சிதைய நூறி
மானடி மருங்கிற் பெயர்த்த குருதி
வான மீனின் வயின்வயின் இமைப்ப
அமரோர்த் தட்ட செல்வந்
தமர்விரைந் துரைப்பக் கேட்கும் ஞான்றே.
வினைமுற்றிய தலைமகன் தன்னெஞ்சிற்
குரைப்பானாய்ப் பாகற் குச் சொல்லியது.

**1946.** அகநானூறு - **174.** முல்லை

இருபெரு வேந்தர் மாறுகொள் வியன்களத்து
ஒருபடை கொண்டு வருபடை பெயர்க்குஞ்
செல்வ முடையோர்க்கு நின்றன்று விறலெனப்
பூக்கோ ளேய தண்ணுமை விலக்கிச்
5 செல்வே மாதல் அறியாள் முல்லை
நேர்கால் முதுகொடி குழைப்ப நீர்சொரிந்து
காலை வானத்துக் கடுங்குரற் கொண்மூ
முழங்குதொறுங் கையற் றொடுங்கிநப் புலந்து
பழங்கண் கொண்ட பசலை மேனியள் 10
யாங்கா குவள்கொல் தானே வேங்கை
ஊழுறு நறுவீ கடுப்பக் கேழ்கொள
ஆகத் தரும்பிய மாசறு சுணங்கினள்
நன்மணல் வியலிடை நடந்த
சின்மெல் லொதுக்கின் மாஅ யோளே.

பாசறைக்கண் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

மதுரை அளக்கர் ஞாழார்மகனார் மள்ளனார் 1087

## 1947. அகநானூறு - 244. முல்லை

பசைபடு பச்சை நெய்தோய்த் தன்ன
சேயுயர் சினைய மாச்சிறைப் பறவை
பகலுறை முதுமரம் புலம்பப் போகி
முகைவாய் திறந்த நகைவாய் முல்லை
5 கடிமகள் கதுப்பின் நாறிக் கொடிமிசை
வண்டினந் தவிர்க்குந் தண்பதக் காலை
வரினும் வாரா ராயினும் ஆண்டவர்க்கு
இனிதுகொல் வாழி தோழி யெனத்தன்
பல்லிதழ் மழைக்கண் நல்லகஞ் சிவப்ப
10 அருந்துய ருடையள் இவளென விரும்பிப்
பாணன் வந்தனன் தூதே நீயும்
புல்லார் புரவி வல்விரைந்து பூட்டி
நெடுந்தே ரூர்மதி வலவ
முடிந்தன் றம்மநாம் முன்னிய வினையே.

வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

## 1948. அகநானூறு - 314. முல்லை நீலத்

தன்ன நீர்பொதி கருவின்

மாவிசும் பதிர முழங்கி ஆலியின்
நிலந்தண் ணென்று கானங் குழைப்ப
இனந்தே ருழவர் இன்குர லியம்ப
5 மறியுடை மடப்பிணை தழீஇப் புறவிற்

றிரிமருப் பிரலை பைம்பயி ருகள
வார்பெய லுதவிய கார்செய் காலை
நூல்நெறி நுணங்கிய கால்நவில் புரவி
கல்லெனக் கறங்குமணி யியம்ப வல்லோன்
10 வாச்செல வணக்கிய தாப்பரி நெடுந்தேர்
ஈர்ம்புற வியங்குவழி யறுப்பத் தீந்தொடைப் பையுள்
நல்யாழ் செவ்வழி பிறப்ப
இந்நிலை வாரா ராயின் தந்நிலை
எவன்கொல் பாண உரைத்திசின் சிறிதெனக்



15 கடவுட் கற்பின் மடவோள் கூறச்
செய்வினை யழிந்த மையல் நெஞ்சிற்
றுனிகொள் பருவரல் தீர வந்தோய்
இனிதுசெய் தனையால் வாழ்கநின் கண்ணி
வேலி சுற்றிய வால்வீ முல்லைப்
20 பெருந்தார் கமழும் விருந்தொலி கதுப்பின்
இன்னகை இளையோள் கவவ
மன்னுக பெரும நின் மலர்ந்த மார்பே.
வினைமுற்றிப் புகுந்த தலைமகற்குத் தோழி
சொல்லியது.

**1949.** அகநானூறு - **344.** முல்லை

வளமழை பொழிந்த வானிறக் களரி உளர்தரு
தண்வரி உறுதொறு நிலவெனத் தொகுமுகை விரிந்த
முடக்காற் பிடவின் வையேர் வாலெயிற்
றொண்ணுதல் மகளிர் 5 கைமாண் தோணி கடுப்பப்
பையென மயிலினம் பயிலும் மரம்பயில் கானம்
எல்லிடை யுறூஅ வளவை வல்லே
கழலொலி நாவிற் றெண்மணி கறங்க நிழலொளிப்
பன்ன நிமிர்பரிப் புரவி
10 வயக்குறு கொடிஞ்சி பொலிய வள்பாய்ந்து
இயக்குமதி வாழியோ கையுடை வலவ
பசப்புறு படரட வருந்திய
நயப்பின் காதலி நகைமுகம் பெறவே.

வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

**1950.** அகநானூறு - **353.** பாலை

ஆள்வினைப் பிரிதலு முண்டோ பிரியினும்
கேளினி வாழிய நெஞ்சே நாளுங்
கனவுக்கழிந் தனைய வாகி நனவின்

நாளது செலவும் மூப்பினது வரவும்
5 அரிதுபெரு சிறப்பிற் காமத் தியற்கையும்

மதுரை அளக்கர் ஞாழார்மகனார் மள்ளனார்

இந்நிலை யறியா யாயினுஞ் செந்நிலை
அமையா டங்கழை தீண்டிக் கல்லென
ஞெமையிலை யுதிர்த்த எரிவாய்க் கோடை
நெடுவெண் களரி நீறுமுகந்து சுழலக்
10 கடுவெயில் திருகிய வேனில் வெங்காட்டு

உயங்குநடை மடப்பிணை தழீஇய வயங்குபொறி
அறுகோட் டெழிற்கலை அறுகயம் நோக்கித்

15

தெண்ணீர் வேட்ட சிறுமையிற் றழைமறந்து
உண்ணீ ரின்மையின் ஒல்குவன தளர
மாநிழ லற்ற வியவிற் சுரனிறந்து

உள்ளுவை யல்லையோ மற்றே உள்ளிய
விருந்தொழி வறியாப் பெருந்தண் பந்தர் 20
வருந்தி வருந ரோம்பித் தண்ணெனத்

தாதுகு ளுதிர்த்த தாழையங் கூந்தல்
வீழித ழலரி மெல்லகஞ் சேர்த்தி
மகிழணி முறுவல் மாண்ட சேக்கை

நம்மொடு நன்மொழி நவிலும்
பொம்ம லோதிப் புனையிழை குணனே.

முன்னொரு காலத்துப் பொருள்வயிற் பொருண்முற்றி வந்திருந்த காலத்து மீண்டும் நெஞ்சிற்குச் சொல்லியது.

பிரிந்த தலைமகன்
பொருள்கடாவின

**1951.** குறுந்தொகை - **188.** முல்லை

முகைமுற் றினவே முல்லை முல்லையொடு
தகைமுற் றினவே தண்கார் வியன்புனம்
வாலிழை நெகிழ்த்தோர் வாரார்
மாலை வந்தன்றென் மாணலங் குறித்தே.

பருவங்கண்டழிந்த கிழத்தி தோழிக்கு உரைத்தது.

**1952.** குறுந்தொகை - **215.** பாலை

படரும் பைபயப் பெயரும் சுடரும்
என்றூழ் மாமலை மறையும் இன்றவர்
69

வருவர்கொல் வாழி தோழி நீரில்
வறுங்கயந் துழைஇய விலங்குமருப் பியானை
5 குறும்பொறை மருங்கின் அமர்துணை தழீஇக்
கொடுவரி யிரும்புலி காக்கும்
நெடுவரை மருங்கிற் சுரனிறந் தோரே.

பிரிவிடைத் தோழி வற்புறுத்தியது.

**1953.** நற்றிணை - **82.** குறிஞ்சி

நோயும் நெகிழ்ச்சியும் வீடச் சிறந்த
வேய்வனப் புற்ற தோளை நீயே
என்னுள வருந்தியோ நன்னடைக்
கொடிச்சி
முருகுபுணர்ந் தியன்ற வள்ளி போலநின்
5 உருவுகண் ணெறிப்ப நோக்கலாற் றலனே
போகிய நாகப் போக்கருங் கவலைச்
சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொருத்தல்
சேறா டிரும்புறம் நீறொடு சிவண
வெள்வசிப் படஇயர் மொய்த்த வள்பழீஇக்
10 கோளுய் கொண்ட கொள்ளைக்
கானவர் பெயர்க்குஞ் சிறுகுடி யானே.

தோழியிற்புணர்ச்சிக்கண் தன்னிலைக்கொளீஇயது.

**1954.** நற்றிணை - **297.** குறிஞ்சி

பொன்செய் வள்ளத்துப் பால்கிழக் கிருப்ப
நின்னொளி யெறியச் சேவடி யொதுங்காய் பன்மாண்

சேக்கைப் பகைகொள நினைஇ மகிழா நோக்க
மகிழ்ந்தனே போன்றனே 5 எவன்கொ லென்று
நினைக்கலும் நினைத்திலை நின்னுட் டோன்றுங்
குறிப்புநனி பெரிதே சிதர்நனை முணைஇய சிதர்கால்
வாரணம் உதிர்கறி யாப்பிற் றுஞ்சு நாடன் மெல்ல
வந்து நல்லகம் பெற்றமை.

மதுரை அளக்கர் ஞாழார்மகனார் மள்ளனார்
1091

10 மைய லுறுகுவ ளன்னை
ஐய மின்றிக் கடுங்கூ வினவே.

தோழி சிறைப்புறமாகத் தலைமகட் குரைப்பாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது ; தோழி தலைமகளை அறத்தொடு நிலை வலிப்பித்ததூஉமாம்.

**1955.** நற்றிணை - **321.** முல்லை

செந்நிலப் புறவின் புன்மயிர்ப் புருவை
பாடின் தெண்மணித் தோடுதலைப் பெயரக்
கான முல்லைக் கயவா யலரி
பார்ப்பன மகளிர் சாரற்புறத் தணியக்
5 கல்சுடர் சேருங் கதிர்மாய் மாலைப்
புல்லென் வறுமனை நோக்கி மெல்ல

வருந்துங் கொல்லோ திருந்திழை யரிவை
வல்லைக் கடவுமதி தேரே சென்றிக 10

குருந்தவிழ் குறும்பொறை பயிற்றப்
பெருங்கலி மூதூர் மரந்தோன் றும்மே.

வினைமுற்றி மீள்வான் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

## 1956. புறநானூறு - 388.

வெள்ளி தென்புலத் துறைய விளைவயற்
பள்ளம் வாடிய பயனில் காலை
இரும்பறைக் கிணைமகன் சென்றவன்
... ... பொருந்தித்
பெரும்பெயர்
5 தன்னிலை யறியுந ளாக அந்நிலை
இடுக்கண் இரியல் போக உடைய
கொடுத்தோ னெந்தை கொடைமேந்
தோன்ற[ல்]
... ... னுமருப்பாக
வெல்லும் வாய்மொழிப் புல்லுடைவி...
10 பெயர்க்கும் பண்ணற் கெடேரொமகிரென
வினைப்பக டேற்ற மேழி கிணைத்தொடா
நாடொறும் பாடே னாயின் ஆனா



மணிகிளர் முன்றிற் றென்னவன் மருகன்
பிணிமுர சிரங்கும் பீடுகெழு தானை

15 யண்ணல் யானை வழுதி
கண்மா றிலியரென் பெருங்கிளைப் புரவே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
சிறுகுடிகிழான் பண்ணனைப் பாடியது.

## ௩௯௦. மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்

### 1957. அகநானூறு - 56. மருதம்

நகையா கின்றே தோழி நெருநல்
மணிகண் டன்ன துணிகயந் துளங்க
இரும்பியன் றன்ன கருங்கோட் டெருமை
ஆம்பல் மெல்லடை கிழியக் குவளைக்
5 கூம்புவிடு பன்மலர் மாந்திக் கரைய
காஞ்சி நுண்டா தீர்ம்புறத் துறைப்ப
மெல்கிடு கவுள அல்குநிலை புகுதருந்
தண்டுறை யூரன் றிண்டா ரகலம்
வதுவை நாளணிப் புதுவோர்ப் புணரிய
10 பரிவொடு வரூஉம் பாணன் தெருவிற்
புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி யாழிட்டு
எம்மனைப் புகுதந் தோனே அதுகண்டு
மெய்ம்மலி யுவகை மறையினென் எதிர்சென்று
இம்மனை யன்றஃ தும்மனை யென்ற
15 என்னுந் தன்னும் நோக்கி
மம்மர் நெஞ்சினேன் தொழுதுநின் றதுவே.

பரத்தைமனைக்குச் செல்கின்ற பாணன் தன்மனைக்கு

வந்தா னாகத் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்
1093

## 1958. அகநானூறு - 124. முல்லை

நன்கலங் களிற்றொடு நண்ணார் ஏந்தி
வந்துதிறை கொடுத்து வணங்கினர் வழிமொழிந்து
சென்றீ கென்ப வாயின் வேந்தனும்
நிலம்வரத் துறூஅ ஈண்டிய தானையொடு
5 இன்றே புகுதல் வாய்வது நன்றே
மாட மாணகர்ப் பாடமை சேக்கைத்
துனிதீர் கொள்கைநங் காதலி. இனிதுறப்
பாசறை வருத்தம் வீட நீயும்
மின்னுநிமிர்ந் தன்ன பொன்னியற் புனைபடைக்
10 கொய்சுவற் புரவிக் கைகவர் வயங்குபரி
வண்பெயற் கவிழ்ந்த பைங்கொடி முல்லை
வீகமழ் நெடுவழி யூதுவண் டிரியக்
காலை யெய்தக் கடவுமதி மாலை
அந்திக் கோவல ரம்பணை யிமிழிசை
15 அரமிய வியலகத் தியம்பும்
நிரைநிலை ஞாயில் நெடுமதி லூரே.

தலைமகன் தேர்ப்பாகற் குரைத்தது.

## 1959. அகநானூறு - 230. நெய்தல்

உறுகழி மருங்கின் ஓதமொடு மலர்ந்த
சிறுகரு நெய்தற் கண்போல் மாமலர்ப்
பெருந்தண் மாத்தழை யிருந்த அல்குல்
ஐய அரும்பிய சுணங்கின் வையெயிற்று
5 மையீ ரோதி வாணுதற் குறுமகள்
விளையாட் டாயமொடு வெண்மண லுதிர்த்த
புன்னை நுண்டாது பொன்னி றெண்டு
மனைபுறந் தருதி யாயின் எனையதூஉம்
இம்மனைக் கிழமை யெம்மொடு புணரின்
10 தீது முண்டோ மாத ராயெனக்
கடும்பரி நன்மான் கொடிஞ்சி நெடுந்தேர்
கைவல் பாகன் பையென இயக்க



யாந்தற் குறுகின மாக வேந்தெழில்
அரிவே யுண்கண் பனிவர லொடுக்கிச்
15 சிறிய இறைஞ்சினள் தலையே
பெரிய எவ்வம் யாமிவ ணுறவே.

தலைமகளைக் கண்ணுற்று நீங்குந் தலைமகன்
தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

**1960.** அகநானூறு - **254.** முல்லை

நரைவிரா வுற்ற நறுமென் கூந்தற்
செம்முது செவிலியர் பலபா ராட்டப்
பொலன்செய் கிண்கிணி நலம்பெறு சேவடி

மணல்மலி மூற்றத்து நிலம்வடுக் கொளாஅ
5 மனையுறை புறவின் செங்காற் சேவல்

துணையொடு குறும்பறை பயிற்றி மேற்செல
விளையா டாயத் திளையோர்க் காண்டொறும்
நம்வயின் நினையும் நன்னுத லரிவை
புலம்பொடு வதியுங் கலங்கஞ ரகல
10 வேந்துறு தொழிலொடு வேறுபுலத் தல்கி
வந்துவினை முடித்தன மாயின் நீயும்
பணைநிலை முனைஇய வினைநவில் புரவி
இழையணி நெடுந்தே ராழி யுறுப்ப
நுண்கொடி மின்னிற் பைம்பயிர் துமியத்
15 தளவ முல்லையொடு தலைஇத் தண்ணென
வெறிகமழ் கொண்ட வீ ததை புறவின்
நெடியிடை பின்படக் கடவுமதி யென்று யான்
சொல்லிய வளவை நீடாது வல்லெனத்
தார்மணி மாவறி வுறாஅ
20 ஊர்நணித் தந்தனை யுவகையாம் பெறவே.

வினைமுற்றிவந்தெய்திய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்

1095

## 1961. அகநானூறு - 272. குறிஞ்சி

இரும்புலி தொலைத்த பெருங்கை வேழத்துப்
புலவுநாறு புகர்நுதல் கழூவக் கங்குல்
அருவி தந்த அணங்குடை நெடுங்கோட்டு

அஞ்சுவரு வடாமுகை யாரிரு ளகற்றிய
5 மின்னொளி ரெஃகஞ் சென்னெறி விளக்கத்
தனியன் வந்து பணியலை முனியான்
நீரிழி மருங்கின் ஆரிடத் தமன்ற
குளவியொடு மிடைந்த கூதளங் கண்ணி
அசையா நாற்றம் அசைவளி பகரத்
10 துறுகல் நண்ணிய கறியிவர் படப்பைக்
குறியிறைக் குரம்பைநம் மனைவயிற் புகுதரும்
மெய்ம்மலி யுவகையன் அந்நிலை கண்டு
முருகென வுணர்ந்து முகமன் கூறி
உருவச் செந்தினை நீரொடு தூஉய்
15 நெடுவேட் பரவும் அன்னை யன்னோ
என்னா வதுகொல் தானே பொன்னென
மலர்ந்த வேங்கை யலங்குசினை பொலிய
மணிநிற மஞ்ஞை யகவும்
அணிமலை நாடனொ டமைந்தநந் தொடர்பே.

இரவுக்குறிவந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத்
சொல்லுவாளாய்த் தோழிசொல்லியது.

தலைமகட்குச்

### 1962. அகநானூறு - 302. குறிஞ்சி

சிலம்பிற் போகிய செம்முக வாழை
அலங்க லந்தோ டசைவளி யுறுதொறும்
பள்ளி யானைப் பரூஉப்புறந் தைவரும்
நல்வரை நாடனொ டருவி யாடியும்
5 பல்லிதழ் நீலம் படுசுனைக் குற்றும்
நறுவீ வேங்கை யினவண் டார்க்கும்
வெறிகமழ் சோலை நயந்துவிளை யாடலும்
அரிய போலுங் காதலந் தோழி



இருங்க லடுக்கத் தென்னையர் உழுத
10 கரும்பெனக் கவினிய பெருங்குர லேனல்
கிளிபட விளைந்தமை யறிந்துஞ் செல்கென
நம்மவண் விடுநள் போலாள் கைம்மிகச்
சில்சுணங் கணிந்த செறிந்துவீங் கிளமுலை
மெல்லிய லொலிவருங் கதுப்பொடு
15 பல்கால் நோக்கும் அறனில் யாயே.

பகலே சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

### 1963. குறுந்தொகை - 185. குறிஞ்சி

நுதல்பசப் பிவர்ந்து திதலை வாடி

நெடுமென் பணைத்தோள் சாஅய்த் தொடிநெகிழ்ந்து
இன்ன ளாகுதல் நும்மின் ஆகுமெனச்
சொல்லின் எவனுந் தோழி பல்வரிப்
5 பாம்பு பையவிந் தது போலக் கூம்பிக்
கொண்டலிற் றொலைந்த ஒண்செங் காந்தள் கன்மிசைக்
கவியும் நாடற்கென்
நன்மா மேனி யழிபடர் நிலையே.
தலைமகன் இரவுக்குறி ஒழுகாநின்ற காலத்து வேறுபட்ட
தலை மகளை வேறுபட்டாயால் என்றாட்குக் கிழத்தி
உரைத்தது.

## 1964. நற்றிணை - 33. பாலை

படுசுட் ரடைந்த பகுவாய் நெடுவரை
முரம்புசேர் சிறுகுடிப் பரந்த மாலைப்
புலம்புகூட் டுண்ணும் புல்லென் மன்றத்துக்
கல்லுடைப் படுவிற் கலுழி தந்து
5 நிறைபெய லறியாக் குறைக்கூ ணல்வில் துவர்செய்
யாடைச் செந்தொடை மறவர் அதர்பார்த் தல்கும்
அஞ்சுவரு நெறியிடை இறப்ப எண்ணுவ ரவரெனின்
மறுத்தல் வல்லுவங் கொல்லோ மெல்லியல் நாமென

மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்



10 விம்முறு கிளவியள் என்முகம் நோக்கி
நல்லக வனமுலைக் கரைசேர்பு
மல்குபுனல் பரந்த மலரேர் கண்ணே.

பிரிவுணர்த்தப்பட்ட தலைமகளது
குறிப்பறிந்ததோழி தலை மகற்குச் சொல்லியது.

## 1965. நற்றிணை - 157. பாலை

இருங்கண் ஞாலத் தீண்டுதொழில் உதவிப்
பெரும்பெயல் பொழிந்த வழிநா ளமையத்துப்
பல்பொறி யரவின் செல்புறங் கடுப்ப
யாற்றறல் நுணங்கிய நாட்பத வேனில்
5 இணர் துதை மாஅத்த புணர்குயில்
விளித்தொறும் நம்வயின் நினையும் நெஞ்
சமொடு கைம்மிகக்
கேட்டொறுங் கலுழுமாற் பெரிதே காட்ட
குறும்பொறை யயல நெடுந்தாள் வேங்கை
அம்பூந் தாதுக் கன்ன
10 நுண்பல் தித்தி மாஅ யோளே.

பொருள்வயிற்பிரிந்த தலைவன் பருவமுணர்ந்த
நெஞ்சிற் குரைத்தது.

## 1966. நற்றிணை - 221. முல்லை

மணிகண் டன்ன மாநிறக் கருவிளை
ஒண்பூந் தோன்றியொடு தண்புத லணியப்
பொன்தொடர்ந் தன்ன தகைய நன்மலர்க்
கொன்றை யொள்ளிணர் கோடுதொறுந்
தூங்க

5 வம்புவிரித் தன்ன செம்புலப் புறவின்
ஈரணிப் பெருவழி நீளிடைப் போழச்
செல்க பாகநின் செய்வினை நெடுந்தேர்
விருந்து விருப்புறூஉம் பெருந்தோட்
குறுமகள்
மின்னொளி ரவிரிழை நன்னகர் விளங்க
10 நடைநாட் செய்த நவிலாச் சீறடிப்
பூங்கட் புதல்வன் தூங்குவயி னொல்கி


வந்தீ கெந்தை யென்னும்
அந்தீங் கிளவி கேட்கம் நாமே.

வினைமுற்றி மறுத்தராநின்ற தலைமகன் பாகற்குச் சொல்லியது.

**1967.** நற்றிணை - **344.** குறிஞ்சி

அணிவரை மருங்கின் ஐதுவளர்ந் திட்ட
மணியேர் தோட்ட மையா ரேனல்
5

இரும்பிடித் தடக்கையிற் றடைஇய பெரும்புனங்
காவல் கண்ணின மாயின் ஆயிழை
நந்நிலை யிடைதெரிந் துணரான் தன்மலை
ஆரம் நீவிய அணிகிளர் ராகஞ்
சாரல் நீளிடைச் சாலவண் டார்ப்பச்

செல்வன் செல்லுங்கொல் தானே உயர்வரைப்
பெருங்கல் விடரகஞ் சிலம்ப இரும்புலி
10 களிறுதொலைத் துரறுங் கடியிடி மழைசெத்துச்

செந்தினை யுணங்கல் தொகுக்கு
மின்கல் யாணர்த்தம் உறைவி னூர்க்கே.

தோழி சிறைப்புறமாகத் தலைமகன் கேட்பச் சொல்லியது.

**1968. புறநானூறு - 329.**

இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்
புடைநடு கல்லின் நாட்பலி யூட்டி
நன்னீ ராட்டி நெய்ந்நறைக் கொளீஇய
மங்குல் மாப்புகை மறுகுடன் கமழும்
5 அருமுனை யிருக்கைத் தாயினும் வரிமிடற்று
அரவுறை புற்றத் தற்றே நாளும்
புரவலர் புன்கண் நோக்கா திரவலர்க்கு
அருகா தீயும் வண்மை
உரைசால் நெடுந்தகை யோம்பு மூரே.
திணை - வாகை; துறை - மூதின்முல்லை.

**௩கா௧. மதுரை ஆசிரியர்**
**கோடங்கொற்றனார்.**

**1969. குறுந்தொகை - 144.** பாலை
கழிய காவி குற்றுங் கடல

வெண்டலைப் புணரி யாடியும் நன்றே
பிரிவில் ஆய முரியதொன் றயர
இவ்வழிப் படுதலு மொல்லாள் அவ்வழிப்
5 பரல்பாற் படுப்பச் சென்றனள், மாதோ
சென்மழை தவழுஞ் சென்னி
விண்ணுயர் பிறங்கல் விலங்குமலை நாடே.
மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

நகூஉ. மதுரை இளங்கண்ணிக்
கௌசிகனார்

## 1970. புறநானூறு - 309.

இரும்பு முகஞ் சிதைய நூறி ஒன்னார்
அருஞ்சமங் கடத்தல் ஏனோர்க்கு மெளிதே
நல்லரா வுறையும் புற்றம் போலவும்
கொல்லேறு திரிதரு மன்றம் போலவும்
5 ஆற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை
உளனென வெரூஉ மோரொளி
வலனுயர் நெடுவே லென்னைகண் ணதுவே.
திணை - தும்பை; துறை - நூழிலாட்டு.

நகூந. மதுரை இளங்கௌசிகனார்

## 1971. அகநானூறு - 381. பாலை ஆளி

நன்மான் அணங்குடை யொருத்தல் மீளி வேழத்து
நெடுந்தகை புலம்ப

ஏந்தல் வெண்கோடு வாங்கிக் குருத்தருந்தும்
அஞ்சுவரத் தகுந ஆங்கண் மஞ்சுதப



5 அழல்கான்று திரிதரும் அலங்குகதிர் மண்டிலம்
நிழல்சூன் றுண்ட நிரம்பா நீளிடைக்
கற்றுரிக் குடம்பைக் கதநாய் வடுகர்
விற்சினந் தணிந்த வெருவரு கவலைக்
குருதி யாடிய புலவுநா றிருஞ்சிறை
10 எருவைச் சேவல் ஈண்டுகிளைத் தொழுதி
பச்சூன் கொள்ளை சாற்றிப் பறைநிவந்து
செக்கர் வானின் விசும்பணி கொள்ளும்
அருஞ்சுரம் நீந்திய நம்மினும் பொருந்தார்
முனையரண் கடந்த வினைவல் தானைத்
15 தேனிமிர் நறுந்தார் வானவன் உடற்றிய
ஒன்னாத் தெவ்வர் மன்னெயில் போலப்
பெரும்பாழ் கொண்ட மேனியள் நெடிதுயிர்த்து

வருந்துங்கொல் அளியள் தானே சுரும்புண
நெடுநீர் பயந்த நிரையிதழ்க் குவளை
20 எதிர்மல ரிணைப்போ தன்னதன்
அரிமதர் மழைக்கண் தெண்பனி கொளவே.

தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

நஅஉ. மதுரை இளம்பாலாசிரியன்

## 1972. அகநானூறு - 102. குறிஞ்சி

உளைமான் துப்பின் ஓங்குதிணைப் பெரும்புனத்துக்
கழுதிற் கானவன் பிழிமகிழ்ந்து வதிந்தென உரைத்த
சந்தி னூர விருங்கதுப்பு
ஐதுவரல் அசைவளி யாற்றக் கைபெயரா 5 ஒலியல்
வார்மயிர் உளரினள் கொடிச்சி பெருவரை மருங்கிற்
குறிஞ்சி பாடக் குரலுங் கொள்ளாது நிலையினும்
பெயராது படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்யென
மறம்புகல் மழகளி றுறங்கு நாடன்

மதுரை இளம்பாலாசிரியன்...கூத்தனூர்

1101

10 ஆர மார்பின் அரிஞிமி றார்ப்பத்
தாரன் கண்ணியன் எஃகுடை வலத்தன்
காவலர் அறித லோம்பிப் பையென
வீழாக் கதவம் அசையினன் புகுதந்து
உயங்குபட ரகல முயங்கித் தோள்மணந்து
15 இன்சொல் அளைஇப் பெயர்ந்தனன் தோழி
இன்றெவன் கொல்லோ கண்டிகு மற்றவன்
நல்கா மையின் அம்ப லாகி
ஒருங்குவந் துவக்கும் பண்பின்
இருஞ்சூ ழோதி யொண்ணுதற் பசப்பே.

இரவுக்குறிக்கண் சிறைப்புறமாகத் தோழிக்குச் சொல்லுவா-

லாய்த் தலைமகள் சொல்லியது.

## 1973. அகநானூறு - 348. குறிஞ்சி

என்னு வதுகொல் தானே முன்றிற்
றேன்தேர் சுவைய திரளரை மாஅத்துக்
கோடைக் கூழ்த்த கமழ்நறுந் தீங்கனி
பயிர்ப்புறப் பலவின் எதிர்ச்சுளை யளைஇ
5 இருலொடு கலந்த வண்டுமூ சரியல்
நெடுங்கண் ஆடமைப் பழுநிக் கடுந்திறற்
பாப்புக்கடு பன்ன தோப்பி வாண்கோட்டுக்
கடவு ளோங்குவரைக் கோக்கிக் குறவர்
முறித்தழை மகளிர் மடுப்ப மாந்தி
10 அடுக்கல் ஏன லிரும்புனம் மறந்துழி
யானை வவ்வின தினையென நோனாது
இளையரு முதியருங் கிளையுடன் குழீஇச்
சிலையாய்ந்து திரிதரு நாடன்
நிலையா நன்மொழி தேறிய நெஞ்சே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத்
தோழி சொல்லெடுப்பத் தலை
மகள் சொல்லியது.



## 1974. நற்றிணை - 273. குறிஞ்சி

இஃதெவன் கொல்லோ தோழி மெய்பரந்து
எவ்வங் கூர்ந்த எழுறு துயரம்
வெம்மையிற் றான்வருத் துறீஇ நம்வயின்
அறியா தயர்ந்த அன்னைக்கு வெறியென
5 வேல னுரைக்கு மென்ப ஆகலின்

வண்ண மிகுத்த அண்ணல் யானை
நீர்கொள் நெடுஞ்சுனை யமைந்துவார்ந்
கண்போல் நீலந் தண்கமழ் சிறக்குந்

துறைந்தென்

10
குன்ற நாடனை யுள்ளுதொறும்
நெஞ்சுநடுக் குறூஉமவன் பண்புதரு படரே.

தோழி தலைமகனது வரவுணர்ந்து

தலைமகட்குரைப்பாளாய் இன் வேறுபாடு தாய்க்குப் புலனாக அவள் வேலனைக்கூவி வெறி யயருமென்பதுபடச் சொல்லியது.

௩௬௫. மதுரை ஓலைக்கடைக்
கண்ணம்புகுந்தாராயத்தனார்

1975. புறநானூறு - 350.

தூர்ந்த கிடங்கிற் சோர்ந்த ஞாயிற்
சிதைந்த இஞ்சிக் கதுவாய் மூதூர்
யாங்கா வதுகொல் தானே தாங்காது
படுமழை யுருமின் இரங்கு முரசிற்
5 கடுமான் வேந்தர் காலை வந்தெம்
நெடுநிலை வாயிற் கொட்குவர் மாதோ
பொருதா தமருவ ரல்லர் போருழந்து
அடுமுரண் முன்பிற் றன்னைய ரேந்திய
வடிவேல் எஃகிற் சிவந்த வுண்கட்
10 டொடிபிறழ் முன்கை யிளையோள்
அணிநல் லாகத் தரும்பிய சுணங்கே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

## நஉகூகூ. மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார்

**1976.** நற்றிணை - **250.** மருதம்

நகுகம் வாராய் பாண பகுவாய்

அரிபெய் கிண்கிணி யார்ப்பத் தெருவிற்
றேர்நடை பயிற்றுந் தேமொழிப் புதல்வன்
பூநாறு செவ்வாய் சிதைத்த சாந்தமொடு
5 காமர் நெஞ்சந் துரப்ப யாந்தன்
முயங்கல் விருப்பொடு குறுகினே மாகப்
பிறைவனப் புற்ற மாசறு திருநுதல்
10

நாறிருங் கதுப்பினெங் காதலி வேறுணர்ந்து
வெரூஉமான் பிணையின் ஒரீஇ
யாரை யோவென் றிகந்துநின் றதுவே.

புதல்வனொடுபுக்க தலைமகன் ஆற்றாளுய்ப் பாணற்
குரைத்தது.

1977. நற்றிணை - 369. நெய்தல்

சுடர்சினந் தணிந்து குன்றஞ் சேர
நிறைபறைக் குருகினம் விசும்புகந் தொழுக
எல்லை பைபயக் கழிப்பி முல்லை
அரும்புவா யவிழும் பெரும்புன் மாலை
5 இன்றும் வருவ தாயின் நன்றும்
அறியேன் வாழி தோழி அறியேன்
ஞெமையோங் குயர்வரை யிமையத் துச்சி
வாஅ னிழிதரும் வயங்குவெள் ளருவிக்
கங்கையம் பேர்யாற்றுக் கரையிறந் திழிதருஞ்
10 சிறையடு கடும்புன லன்னவென்

நிறையடு காமம் நீந்து மாறே.

பட்டபின்றை வரையாது பொருள்வயிற் பிரிந்து ஆற்றுனாகிய தலைமகன் வன்புறை எதிரழிந்தது.

## ௩௬௭. மதுரைக்கடையத்தார்மகன் வெண்ணுகனுர்

### 1978. குறுந்தொகை - 223. குறிஞ்சி

பேரூர் கொண்ட ஆர்கலி விழவிற்
செல்வாஞ் செல்வா மென்றி யன்றிவண்
நல்லோர் நல்ல பலவால் இல்ல
தழலுந் தட்டையும் முறியுந் தந்திவை
5 ஒத்தன நினக்கெனப் பொய்த்தன கூறி
அன்னை யோம்பிய ஆய்நலம்
என்னை கொண்டான்யாம் இன்னமால் இனியே.

வரைவிடை வேறுபட்ட கிழத்தியது வேறுபாடு கண்டு வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி கூறியது.

## ௩௬௮. மதுரைக்கணக்காயனுர்

### 1979. அகநானூறு - 27. பாலை

கொடுவரி யிரும்புலி தயங்க நெடுவரை
ஆடுகழை யிருவெதிர் கோடைக் கொல்குங்
கானங் கடிய என்னார் நாமழ
நின்றதில் பொருட்பிணிச் சென்றிவண்

5 செல்ப வென்ப என்போய் நல்ல

தருமார்

மடவை மன்ற நீயே வடவயின்
வேங்கடம் பயந்த வெண்கோட்டு யானை
மறப்போர்ப் பாண்டியர் அறத்திற் காக்குங்
கொற்கையம் பெருந்துறை முத்தி னன்ன
10 நகைப்பொலிந் திலங்கும் எயிறுகெழு துவர்வாய்
தகைப்பத் தங்கல ராயினும் இகப்ப
யாங்ஙனம் விடுமோ மற்றே தேம்படத்
தெண்ணீர்க் கேற்ற திரள்காற் குவளைப்
பெருந்தகை சிதைத்தும் அமையா

பருந்துபட

மதுரைக் கணக்காயனர்

1105

15 வேத்தமர்க் கடந்த வென்றி நல்வேல்
குருதியொடு துயல்வந் தன்னநின்
அரிவே யுண்கண் அமர்த்த நோக்கே.
செலவுணர்ந்து வேறுபட்ட தலைமகட்குத் தோழி
சொல்லியது.

**1980. அகநானூறு - 338. குறிஞ்சி**

குன்றோங்கு வைப்பின் நாடுமீக் கூறும்
மறங்கெழு தானை யரச ருள்ளும்
அறங்கடைப் பிடித்த செங்கோ லுடனமர்
மறஞ்சாய்த் தெழுந்த வலனுயர் திணிதோட்
5 பலர்புகழ் திருவிற் பசும்பூட் பாண்டியன்
அணங்குடை யுயர்நிலைப் பொருப்பிற் கவாஅன்
சிலையொண் காந்தள் நாறும் நறுநுதற்
றுணையீ ரோதி மாஅ யோள்வயின்
நுண்கோ லவிர்தொடி வண்புறஞ் சுற்ற 10
முயங்கல் இயையா தாயினும் என்றும்
வயவுறு நெஞ்சத் துயவுத்துணை யாக
ஒன்னார் தேஎம் பாழ்பட நூறுந்
துன்னருந் துப்பின் வென்வேற் பொறையன்
அகலிருங் கானத்துக் கொல்லி போலத்
15 தவாஅ லியரோ நட்பே அவள்வயின்
அறாஅ லியரோ தூதே பொருஅர்
விண்பொரக் கழித்த திண்பிடி யொள்வாட்
புனிற்றான் றரவின் இளையர் பெருமகன்
தொகுபோர்ச் சோழன் பொருள்மலி
20 வழங்க லானாப் பெருந்துறை

பாக்கத்து

முழங்கிரு முந்நீர்த் திரையினும் பலவே.

அல்ல குறிப்பட்ட தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

## 1981. அகநானூறு - 342. குறிஞ்சி

ஒறுப்ப ஓவலை நிறுப்ப நில்லலை
புணர்ந்தோர் போலப் போற்றுமதி நினக்கியான்
70



கிளைஞ னல்லெனோ நெஞ்சே தெனாஅது
வெல்போர்க் கவுரியர் நன்னாட் டுள்ளதை
5 மண்கொள் புற்றத் தருப்புழை திறப்பின்
ஆகொள் மூதூர்க் கள்வர் பெருமகன்
ஏவ லிளையர் தலைவன் மேவார்
அருங்குறும் பெறிந்த ஆற்றலொடு பருந்துபடப்
பல்செருக் கடந்த செல்லுறழ் தடக்கைக் 10
கெடாஅ நல்லிசைத் தென்னன் தொடாஅ
நீரிழி மருங்கிற் கல்லளைக் கரந்தவவ்
வரையர மகளிரின் அரியள்
அவ்வரி யல்குல் அணையாக் காலே.

அல்லகுறிப்பட்ட தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

## 1982. நற்றிணை - 23. குறிஞ்சி

தொடிபழி மறைத்தலின் தோளுய்ந் தனவே
வடிக்கொள் கூழை யாயமோ டாடலின்

இடிப்பு மெய்யதோன் றுடைத்தே கடிக்கொள
அன்னை காக்குந் தொன்னலஞ் சிதையக்
5 காண்டொறுங் கலுழ்த லன்றியும் ஈண்டுநீர்
முத்துப்படு பரப்பிற் கொற்கை முன்றுறைச்
சிறுபா சடைய செப்பூர் நெய்தற்
றெண்ணீர் மலரிற் றொலைந்த
கண்ணே காமங் கரப்பரி யவ்வே.
தலைவி துயராற்றாமை யுணர்ந்த தோழி
வரைவுகடாயது.

1983. புறநானூறு - 330.
வேந்துடைத் தானை முனைகெட நெரிதர ஏந்துவாள்
வலத்த னொருவ னாகித்
தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற்கு
ஆழி யனையன் மாதோ என்றும்
5 பாடிச் சென்றோர்க் கன்றியும் வாரிப்
மதுரைக் கண்ணத்தனார்
1107
புரவிற் காற்றாச் சீறூர்த்
தொன்மை சுட்டிய வண்மை யோனே.
திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.

நஉ௬௩. மதுரைக்கண்டராதத்தனார்

1984. குறுந்தொகை - 317. குறிஞ்சி

புரிமட மரையான் கருநரை•நல்லேறு
தீம்புளி நெல்லி மாந்தி அயலது
தேம்பாய் மாமலர் நடுங்க வெய்துயிர்த்து
ஓங்குமலைப் பைஞ்சுனை பருகும் நாடன்
5 நம்விட் டமையுமோ மற்றே கைம்மிக
வடபுல வாடைக் கழிமழை
தென்புலம் படருந் தண்பனி நாளே.
பிரிவிடைக் கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது.

## ௩௭௦. மதுரைக் கண்ணத்தனார்

**1985.** அகநானூறு - **360.** நெய்தல்

பல்பூந் தண்பொழிற் பகலுடன் கழிப்பி
ஒருகா லூர்திப் பருதியஞ் செல்வன்
குடவயின் மாமலை மறையக் கொடுங்கழித்
தண்சேற் றடைஇய கணைக்கால் நெய்தல் 5 நுண்டா
துண்டு வண்டினந் துறப்ப
வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து உருவுட
னியைந்த தோற்றம் போல
அந்தி வானமொடு கடலணி கொளாஅ வந்த மாலை
பெயரின் மற்றிவள்
10 பெரும்புலம் பினளே தெய்ய அதனாற்
பாணி பிழையா மாண்வினைக் கலிமா
துஞ்சூர் யாமத்துத் தெவிட்ட லோம்பி நெடுந்தே
ரகல நீக்கிப் பையெனக்

குன்றிழி களிற்றிற் குவவுமணல் நீந்தி
15 இரவின் வம்மோ உரவுநீர்ச் சேர்ப்ப
இனமீன் அருந்து நாரையொடு பனைமிசை
அன்றில் சேக்கு முன்றிற் பொன்னென
நன்மலர் நறுவீ தாஅம்
புன்னை நறும்பொழிற் செய்தநங் குறியே.

பகற்குறிவந்த தலைமகற்குத் தோழி பகற்குறி மறுத்து இரவுக் குறி நேர்ந்தது.

## 1986. நற்றிணை - 351. குறிஞ்சி

இளமை தீர்ந்தனள் இவளென வளமனை
அருங்கடிப் படுத்தனை யாயினுஞ் சிறந்திவள்
பசந்தன ளென்ப துணராய் பன்னாள்

5

எவ்வ நெஞ்சமொடு தெய்வம் பேணி
வருந்தல் வாழிவேண் டன்னை கருந்தாள்
வேங்கையங் கவட்டிடைச் சாந்திற் செய்த

களிற்றுத்துப் பஞ்சாப் புலியத ளிதணத்துச்
சிறுதினை வியன்புனங் காப்பிற்
பெறுகுவள் மன்னோவென் தோழிதன்
னலனே.

தோழி அருகடுத்தது.

௩௭க. மதுரைக் கவுணியன் பூதத்தனார்

1987. அகநானூறு - 74. முல்லை

வினைவலம் படுத்த வென்றியொடு மகிழ்சிறந்து
போர்வல் இளையர் தாள்வலம் வாழ்த்தத்
தண்பெயல் பொழிந்த பைதறு காலைக்
குருதி யுருவின் ஒண்செம் மூதாய்
5 பெருவழி மருங்கிற் சிறுபல வரிப்பப்
பைங்கொடி முல்லை மென்பதப் புதுவீ
வெண்களர் அரிமணல் நன்பல தாஅய்
வண்டுபோ தவிழ்க்குந் தண்கமழ் புறவிற்

மதுரைக்கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார் 1109

கருங்கோட் டிரலைக் காமர் மடப்பிணை
10 மருண்டமா னோக்கங் காண்டொறும் நின்னினைந்து
திண்டேர் வலவ கடவெனக் கடைஇ
இன்றே வருவ ரான்றிகம் பனியென
வன்புறை யின்சொல் நன்பல பயிற்றும்

நின்வலித் தமைகுவன் மன்னோ அல்கற்
15 புன்கண் மாலையொடு பொருந்திக் கொடுங்கோற்
கல்லாக் கோவல ரூதும்
வல்வாய்ச் சிறுகுழல் வருத்தாக் காலே.

தலைமகன் பிரிவின்கண் அழிந்த கிழத்தி வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.

## ருஎ௨. மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார்

### 1988. அகநானூறு - 170. நெய்தல்

கானலும் கழறாது கழியும் கூறாது
தேனிமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியாது
ஒருநின் னல்லது பிறிது யாது மிலனே
இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தற்
5 கமழிதழ் நாற்றம் அமிழ்தென நசைஇத்
தண்டா தூதிய வண்டினங் களிசிறந்து
பறைவ தளருந் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமா லலவ பல்காற்
கைதையம் படுசினை யெவ்வமொ டசாஅங் 10
கடற்சிறு காக்கை காமர் பெடையொடு
கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின்
வெள்ளிறாக் கனவு நள்ளென் யாமத்து
நின்னுறு விழுமங் களைந்தோள்

தன்னூறு விழுமம் நீந்துமோ வெனவே.

தலைமகள் காமமிக்க கழிபடர்கிளவியாற் சொற்றது.



## 1989. புறநானூறு - 316.

கள்ளின் வாழ்த்திக் கள்ளின் வாழ்த்திக் காட்டொடு
மிடைந்த சியா முன்றில்
நாட்செருக் கனந்தர்த் துஞ்சு வோனே அவனெம்
இறைவன் யாமவன் பாணர் 5 நெருநை வந்த
விருந்திற்கு மற்றுத்தன் இரும்புடைப் பழவாள்
வைத்தனன் இன்றிக் கருங்கோட்டுச் சீறியாழ்
பணையம் இதுகொண்டு ஈவதி லாள னென்னுது நீயும்
வள்ளி மருங்குல் வயங்கிழை யணியக்
10 கள்ளுடைக் கலத்தேம் யாமகிழ் தூங்கச்
சென்றுவாய் சிவந்துமேல் வருக
சிறுகண் யானை வேந்துவிழு முறவே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை.

நஎந. மதுரைக் காமக்கணி
நப்பாலத்தனார்

## 1990. அகநானூறு - 204. முல்லை

உலகுடன் நிழற்றிய தொலையா வெண்குடைக்
கடல்போல் தானைக் கலிமா வழுதி
வென்றம ருழந்த வியன்பெரும் பாசறைச்

சென்றுவினை முடித்தன மாயின் இன்றே 5
கார்ப்பெயற் கெதிரிய காண்டகு புறவிற்
கணங்கொள் வண்டின் அஞ்சிறைத் தொழுதி
மணங்கமழ் முல்லை மாலை யார்ப்ப
உதுக்காண் வந்தன்று பொழுதே வல்விரைந்து
செல்க பாகநின் நல்வினை நெடுந்தேர்
10 வெண்ணெ லரிநர் மடிவாய்த் தண்ணுமை
பன்மலர்ப் பொய்கைப் படுபுள் ளோப்புங் காய்நெற்
படப்பை வாணன் சிறுகுடித்

மதுரைக் கூத்தனர் 1111

தண்டலை கமழுங் கூந்தல்
ஒண்டொடி மடந்தை தோளிணை பெறவே.

வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

நஎசு. மதுரைக் காருலவியங் கூத்தனர்

1991. நற்றிணை - 325. பாலை

கவிதலை யெண்கின் பருஉமயி ரேற்றை
இரைதேர் வேட்கையின் இரவிற் போகி
நீடுசெயற் சிதலைத் தோடுபுனைங் கெடுத்த

அரவாழ் புற்றம் ஒழிய ஒய்யென
5 முரவாய் வள்ளுகிர் இடப்ப வாங்கும்
ஊக்கருங் கவலை நீந்தி மற்றிவள்
பூப்போ லுண்கண் புதுநலஞ் சிதைய
வீங்குநீர் வாரக் கண்டும்
தகுமோ பெரும தவிர்கநுஞ் செலவே.

தோழி செலவழுங்குவித்தது.

## ௩எரு. மதுரைக் கூத்தனார்

## 1992. அகநானூறு - 334. முல்லை

ஓடா நல்லேற் றுரிவை தைஇய
ஆடுகொள் முரசம் இழுமென முழங்க
நாடுதிறை கொண்டன மாயிற் பாக
பாடிமிழ் கடலின் எழுந்த சும்மையொடு
5 பெருங்களிற் றுத் தடக்கை புரையக் கால்வீழ்த்து
இரும்பிடித் தொழுதியின் ஈண்டுவன குழீஇ
வணங்கிறை மகளிர் அயர்ந்தன ராடுங்
கழங்குறழ் ஆலியொடு கதழுறை சிதறிப்
பெயல்தொடங் கின்றால் வானம் வானின்
10 வயங்குசிறை யன்னத்து நிரைபறை கடுப்ப
நால்குடன் பூண்ட கால்நவில் புரவிக்

கொடிஞ்சி நெடுந்தேர் கடும்பரி தவிராது
இனமயில் அகவுங் கார்கொள் வியன்புனத்து
நோன்சூட் டாழி யீர்நிலந் துமிப்ப
15 ஈண்டே காணக் கடவுமதி பூங்கேழ்ப்
பொலிவன அமர்த்த வுண்கண்
ஒலிபல் கூந்த லாய்சிறு நுதலே.

வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது. ·
நஎசு. மதுரைக் கொல்லன்புல்லன்

## 1993. குறுந்தொகை - 373. குறிஞ்சி

நிலம்புடை பெயரினும் நீர்திரிந் து பிறழினும்
இலங்குதிரைப் பெருங்கடற் கெல்லை தோன்றினும்
வெவ்வாய்ப் பெண்டிர் கெளவை யஞ்சிக்
கேடெவ னுடைத்தோ தோழி நீடுமயிர்க்
5 கடும்ப லூகக் கறைவிர லேற்றை
புடைத்தாடு புடைய பூநா று பலவுக்கனி
காந்தளஞ் சிறுகுடிக் கமழும்
ஓங்குமலை நாடனொ டமைந்தநம் தொடர்பே.

அலர் மிக்கவழி ஆற்றுளாகிய தலைமகட்குத் தோழி சொல்லியது.

நஎஎ. மதுரைக் கொல்லன் வெண்ணாகனார்

நிரைசெலல் இவுளி விரைவுடன் கடைஇ
அகலிரு விசும்பிற் பகல்செலச் சென்று
மழுகுசுடர் மண்டிலம் மாமலை மறைய
பொழுதுகழி மலரிற் புனையிழை சாஅய்
5 அணையணைந் தினையை யாகல் கணையரைப்
புல்லிலை நெல்லிப் புகரில் பசுங்காய்
கல்லதர் மருங்கிற் கடுவளி யுதிர்ப்பப்
பொலஞ்செய் காசிற் பொற்பத் தாஅம்

மதுரைச்சுள்ளம் போதனர்

1113

அத்தம் நண்ணி யதர்பார்த் திருந்த
10 கொலைவெங் கொள்கைக் கொடுந்தொழில் மறவர்
ஆறுசெல் மாக்கள் அருநிறத் தெறிந்த
எஃகுறு விழுப்புண் கூர்ந்தோ ரெய்திய
வளைவாய்ப் பருந்தின் வள்ளுகிர்ச் சேவல்
கிளைதரு தெள்விளி கெழுமுடைப் பயிரும்
15 இன்னா வெஞ்சுரம் இறந்தோர் முன்னிய
செய்வினை வலத்த ராகி யிவணயந்து
எய்த வந்தனரே தோழி மையெழிற்
றுணையே ரெதிர்மல ருண்கட்
பிணையோர் நோக்கம் பெருங்கவின் கொளவே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழிசொல்லியது.

## 1995. நற்றிணை - 285. குறிஞ்சி

அரவிரை தேரும் ஆரிருள் நடுநாள்
இரவின் வருத லன்றியும் உரவுக்கணை
வன்கைக் கானவன் வெஞ்சிலை வணக்கி
உளமிசைத் தவிர்த்த முளவுமா னேற்றையொடு
5 மனைவாய் ஞமலி யொருங்குபுடை யாட
வேட்டுவலம் படுத்த உவகையன் காட்ட
நடுகாற் குரம்பைத்தன் குடிவயிற் பெயருங்
குன்ற நாடன் கேண்மை நமக்கே
நன்றால் வாழி தோழி என்றும்
10 அயலோ ரம்பலின் அகலான்
பகலின் வரூஉம் எறிபுனத் தானே.

தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலை மகன் கேட்ப அம்பலும் அலரு மாயிற்றென்று சொல்லியது.

## ௩௭அ. மதுரைச் சுள்ளம் போதனார்

## 1996. நற்றிணை - 215. நெய்தல்

குணகடல் இவர்ந்து குரூஉக்கதிர் பரப்பிப்
பகல்கெழு செல்வன் குடமலை மறையப்

புலம்புவர் இறுத்த புன்கண் மாலை
இலங்குவளை மகளிர் வியனகர் அயர
5 மீனிணக் தொகுத்த ஊனெய் ஒண்சுடர்
நீனிறப் பரப்பிற் றயங்குதிரை யுதைப்பக்
கரைசேர் பிருந்த கல்லென் பாக்கத்து
இன்றுநீ யிவணை யாகி யெம்மொடு
தங்கி னெவனோ தெய்ய செங்கோற்
10 கொடுமுடி யவ்வலை பரியப் போகிய
கோட்சுறுக் குறித்த முன்பொடு
வேட்டம் வாயா தெமர்வா ரலரே.

பகற்குறிவந்து மீள்வானை 'அவள் ஆற்றுந் தன்மையளல்லள்; நீயிர் இங்குத் தங்கற்பாலீர்; எமரும் இன்னதொரு தவற்றினர்' எனத் தோழி தலைமகற்குச் சொல்லியது. இரவுக்குறி மறுத்து வரைவுகடாயதூஉமாம்.

## ௩எக. மதுரைத் தத்தங்கண்ணனார்

### 1997. அகநானூறு - 335. பாலை

இருள்படு நெஞ்சத் திடும்பை தீர்க்கும்
அருள்நன் குடைய ராயினும் ஈதல்
பொருளில் லோர்க்கஃ தியையா தாகுதல்
யானும் அறிவென் மன்னே யானைதன்

5 கொல்மருப் பொடியக் குத்திச் சினஞ்சிறந்து
இன்னு வேனில் இன்றுணை யார
முளிசினை மராஅத்துப் பொளிபிளந் தூட்டப்
புலம்புவீற் றிருந்த நிலம்பகு வெஞ்சுரம்
அரிய வல்லமன் நமக்கே விரிதார்
10 ஆடுகொள் முரசின் அடுபோர்ச் செழியன்
மாட மூதூர் மதிற்புறந் தழீஇ
நீடுவெயி லுழந்த குறியிறைக் கணைக்காற்
றொடையமை பன்மலர்த் தோடுபொதிந் தியாத்த
குடையோ ரன்ன கோளமை யெருத்திற்
15 பாளை பற்றழிந் தொழியப் புறஞ்சேர்பு

மதுரைக் தமிழக்கூத்தன் நாகன்தேவனர்

1115

வாள்வடித் தன்ன வயிறுடைப் பொதிய
நாளுறத் தோன்றிய நயவரு வனப்பின்
ஆரத் தன்ன அணிகிளர் புதுப்பூ
வாருறு கவரியின் வண்டுண விரிய

20 முத்தி னன்ன வெள்வீ தாஅய்
அலகி னன்ன வரிநிறத் தாலி
நகைநனி வளர்க்குஞ் சிறப்பிற் றகைமிகப்
பூவொடு வளர்ந்த மூவாப் பசுங்காய்

நீரினு மினிய வாகிக் கூரெயிற்று
25 அமிழ்த மூறுஞ் செவ்வாய்
ஒண்டொடிக் குறுமகட் கொண்டனஞ்

செலினே.

தலைமகன் பொருள்கடைக்கூட்டிய நெஞ்சினைக்

கழறிச் செல வழுங்கியது.

## ௩அ௦. மதுரைத் தமிழக்கூத்தன் நாகன்தேவனார்

### 1998. அகநானூறு - 164. முல்லை

கதிர்கை யாக வாங்கி ஞாயிறு
பைதறத் தெறுதலிற் பயங்கரந்து மாறி
விடுவாய்ப் பட்ட வியன்கண் மாநிலங்
காடுகவின் எதிரக் கனைபெயல் பொழிதலிற்
5 பொறிவரி யினவண் டார்ப்பப் பலவுடன்
நறுவீ முல்லையொடு தோன்றி தோன்ற
வெறியேன் றன்றே வீகமழ் கானம்
எவன்கொல் மற்றவர் நிலையென மயங்கி
இருபனி யுறைக்குங் கண்ணொடு இனையாங்கு
10 இன்னா துறைவி தொன்னலம் பெறூஉம்
இதுநற் காலங் கண்டிசின் பகைவர்

மதில்முக முருக்கிய தொடிசிதை மருப்பிற்
கந்துகா லொசிக்கும் யானை
வெஞ்சின வேந்தன் வினைவிடப் பெறினே.

பாசறைக்கணிருந்த தலைமகன் தன்னெஞ்சிற்குச்
சொல்லியது.

## ௩அக. மதுரைத் தமிழக்கூத்தனார்

## 1999. புறநானூறு - 334.

காமரு பழனக் கண்பி னன்ன
தூமயிர்க் குறுந்தாள் நெடுஞ்செவிக் குறுமுயல்
புன்றலைச் சிறாஅர் மன்றத் தார்ப்பிற்

படப்பொடுங் கும்மே...பின்பு...
5 ... ... ...னூரே மனையோள்
பாண ரார்த்தவும் பரிசில ரோம்பவும்
ஊணொலி யரவமொடு கைதூ வானே
உயர்மருப்பு யானைப் புகர்முகத் தணிந்த 10
பொலம்... ... ...ப்
பரிசில் பரிசிலர்க் கீய
உரவுவேற் காளையுங் கைதூ வானே.

திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.

## ௩அ௨. மதுரைப் படைமங்க மன்னியார்

## 2000. புறநானூறு - 351.

படுமணி மருங்கின பணைத்தாள் யானையும்
கொடிநுடங்கு மிசைய தேரும் மாவும்
படையமை மறவரொடு துவன்றிக் கல்லெனக்
கடல்கண் டன்ன கண்ணகன் தானை
5 வென்றெறி முரசின் வேந்தர் என்றும்
வண்கை யெயினன் வாகை யன்ன
இவள்நலந் தாரா தமைகுவ ரல்லர்
என்னு வதுகொல் தானே தெண்ணீர்ப்
பொய்கை மேய்ந்த செவ்வரி நாரை
10 தேங்கொள் மருதின் பூஞ்சினை முனையிற்
காமரு காஞ்சித் துஞ்சும்
ஏமஞ்சால் சிறப்பினிப் பணைநல் லூரே.
திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

## ௩அ௩. மதுரைப் பாலாசிரியர் சேந்தன்கொற்றனார்

## 2001. நற்றிணை - 322. குறிஞ்சி

ஆங்கனந் தணிகுவ தாயின் யாங்கும்
இதனிற் கொடியது பிறிதொன் றில்லை

வாய்கொல் வாழி தோழி வேயுயர்ந்து
எறிந்துசெறித் தன்ன பிணங்கரில் விடர்முகை
5 ஊன்தின் பிணவின் உட்குபசி களைஇயர்
ஆளியங் கரும்புழை யொற்றி வாள்வரிக்
க்டுங்கண் வயப்புலி யொடுங்கு நாடன்

தண்கமழ் வியன்மார் புரிதினிற் பெறுது
நன்னுதற் பசந்த படர்மலி யருநோய்
10 அணங்கென வுணரக் கூறி வேலன்
இன்னியங் கறங்கப் பாடிப்
பன்மலர் சிதறிய பரவுறு பலிக்கே.

தோழி சிறைப்புறமாகச் சொல்லியது ; தலைமகள் பாங்கிக்கு உரைத்ததூஉமாம்.

## ௩௮௪. மதுரைப் பாலாசிரியர் நப்பாலனார்

### 2002. அகநானூறு - 172. குறிஞ்சி

வாரணம் உரறு நீர்திகழ் சிலம்பிற்
பிரசமொடு விரைஇய வயங்குவெள் ளருவி
இன்னிசை யிமிழியங் கடுப்ப இம்மெனக்
கன்முகை விடரகஞ் சிலம்ப வீழுங்
5 காம்புதலை மணந்த ஓங்குமலைச் சாரல்
இரும்புவடித் தன்ன கருங்கைக் கானவன்
விரிமலர் மராஅம் பொருந்திக் கோல்தெரிந்து
வரிநுதல் யானை அருநிறத் தழுத்தி
இகலடு முன்பின் வெண்கோடு கொண்டுதன்
10 புல்வேய் குரம்பை புலர வூன்றி

முன்றில் நீடிய முழவுறழ் பலவிற்
பிழிமகிழ் உவகையன் கிளையொடு கலிசிறந்து
சாந்த ஞெகிழியின் ஊன்புழுக் கயருங்
குன்ற நாடநீ யன்பிலை யாகுதல்
15 அறியேன் யானஃ தறிந்தனெ னாயின்
அணியிழை யுண்க ணொயிதழ்க் குறுமகள்
மணியேர் மாணலஞ் சிதையப்
பொன்னேர் பசலை பாவின்று மன்னே.

தோழி தலைமகளை இடத்துய்த்துவந்து தலைமகனை வரைவு கடாயது.

## ந௫அரு. மதுரைப் பாலாசிரியர் நற்றாமனார்

### 2003. அகநானூறு - 92. குறிஞ்சி

நெடுமலை யடுக்கங் கண்கெட மின்னிப்
படுமழை பொழிந்த பானாட் கங்குற்
குஞ்சரம் நடுங்கத் தாக்கிக் கொடுவரிச்
செங்க ணிரும்புலி குழுமுஞ் சாரல்
5 வாரல் வாழியர் ஐய நேரிறை
நெடுமென் பணைத்தோ ளிவளும் யானும்
காவல் கண்ணினந் தினையே நாளை
மந்தியும் அறியா மரம்பயி லிறும்பின்
ஒண்செங் காந்தள் அவிழ்ந்த ஆங்கண்
10 தண்பல் லருவித் தாழ்நீ ரொருசிறை

உருமுச்சிவந் தெறிந்த உரனழி பாம்பின்
திருமணி விளக்கிற் பெறுகுவை
இருள்மென் கூந்தல் ஏமுறு துயிலே.

இரவுக்குறிச்சென்று தலைமகளைக் கண்ணுற்று நீங்குந் தலைமகனைப் பகற்குறிநேர்ந்த வாய்பாட்டால் தோழி வரைவுகடாயது.

## ௨அ௬. மதுரைப் புல்லங்கண்ணனார்

### 2004. அகநானூறு - 161. பாலை

வினைவயிற் பிரிதல் யாவது வணர்சுரி
வடியாப் பித்தை வன்கண் ஆடவர்
அடியமை பகழி யார வாங்கி
வம்பலர்ச் செகுத்த அஞ்சுவரு கவலைப்
5 படுமுடை நசைஇய வாழ்க்கைச் செஞ்செவி
எருவைச் சேவல் ஈண்டுகிளை பயிரும்
வெருவரு கானம் நீந்திப் பொருள்புரிந்து
இறப்ப எண்ணினை ரென்பது சிறப்பக்
கேட்டனள் கொல்லோ தானே தோட்டாழ்பு

10 சுரும்புண ஒலிவரும் இரும்பல் கூந்தல்
அம்மா மேனி யாயிழைக் குறுமகள்
சுணங்குசூ ழாகத் தணங்கென வுருத்த
நல்வரல் இளமுலை நனையப்
பல்லித ழுண்கண் பரந்தன பனியே.

பிரிவுணர்த்தியதோழி தலைமகளதுவேறுபாடுகண்டு முன்னமே யுணர்ந்தாள் நம்பெருமாட்டியென்று தலைமகனைச் செலவு விலக்கியது.

நஅஎ. மதுரைப் பூதனிளநாகனார்

2005. புறநானூறு - 276.

நறுவிரை துறந்த நரைவெண் கூந்தல்
இரங்கா ழன்ன திரங்குகண் வறுமுலைச்
செம்முது பெண்டின் காதலஞ் சிறுஅன்
மடப்பா லாய்மகள் வள்ளுகிர்த் தெறித்த 5
குடப்பாற் சில்லுறை போலப்
படைக்குநோ யெல்லாந் தாஅ யினனே.

திணை - தும்பை ; துறை - தானைநிலை.

நஅஅ. மதுரைப் பூவண்டநாகன் வேட்டனார்

2006. நற்றிணை - 317. குறிஞ்சி

நீடிருஞ் சிலம்பிற் பிடியொடு புணர்ந்த
பூம்பொறி யொருத்தல் ஏந்துகை கடுப்பத்

தோடுதலை வாங்கிய நீடுகுரற் பைந்தினை
பவளச் செவ்வாய்ப் பைங்கிளி கவரும்
5 உயர்வரை நாடநீ நயந்தோள் கேண்மை
அன்னை அறிகுவ ளாயிற் பனிகலந்து
என்னா குவகொல் தானே எந்தை
ஓங்குவரைச் சாரற் றீஞ்சுனை யாடி
ஆயமொடு குற்ற குவளை
10 மாயிதழ் மாமலர் புரைஇய கண்ணே.

தோழி தலைமகனை வரைவு கடாயது.

## ௩௮௧. மதுரைப் பெருங்கொல்லன்

### 2007. குறுந்தொகை - 141. குறிஞ்சி

வளைவாய்ச் சிறுகிளி விளைதினை கடீஇயர்
செல்கென் றோளே அன்னை யெனநீ
சொல்லி னெவனோ தோழி கொல்லை
நெடுங்கை வன்மான் கடும்பகை யுழந்த
5 குறுங்கை யிரும்புலிக் கொலைவல் லேற்றை
பைங்கட் செந்நாய் படுபதம் பார்க்கும்
ஆரிருள் நடுநாள் வருதி
சாரல் நாட வாரலோ வெனவே.

இற்செறிக்கப்பட்டுழி இரவுக்குறி வந்தொழுகுந் தலைமகற்கு வரும் ஏதமஞ்சிப் பகற்குறி நேர்ந்த வாய்பாட்டான் அதுவும் மறுத்துச் சிறைப்புறமாகத் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

## ௩௯௦. மதுரைப் பெருமருதனார்

### 2008. நற்றிணை - 241. பாலை

உள்ளார் கொல்லோ தோழி கொடுஞ்சிறைப்
புள்ளடி பொறித்த வரியுடைத் தலைய
நீரழி மருங்கின் ஈரயிர் தோன்ற
வாளரா வரைடை யுளர்புகனி நீண்டலின்
5 வேழ வெண்பூ விரிவன பலவுடன்
வேந்துவீசு கவரியிற் பூம்புத லணிய
மழைகழி விசும்பின் மாறி ஞாயிறு
விழித்திமைப் பதுபோல் விளங்குபு மறைய
எல்லை போகிய பொழுதின் எல்லுறப்
10 பனிக்காற் கொண்ட பையுள் யாமத்துப்
பல்லித ழுண்கண் கலுழ
நில்லாப் பொருட்பிணிப் பிரிந்திசி னோரே.

தலைமகள் வன்புறை எதிரழிந்தது.

## ௩௯௧. மதுரைப் பெருமரு திளநாகனார்

### 2009. நற்றிணை - 251. குறிஞ்சி

நெடுநீ ரருவிய கடும்பாட் டாங்கண்

பிணிமுத லரைய பெருங்கல் வாழைக்
கொழுமுத வாய்கனி மந்தி கவரும்
நன்மலை நாடனை நயவாய் யாமவன்
5 அளியே ரன்பின் நின்குர லோப்பி
நிற்புறங் காத்தலுங் காண்போய் நீயென்
தளிரேர் மேனித் தொல்கவின் அழியப்
பலிபெறு கடவுட் பேணிக் கலிசிறந்து
நுடங்குநிலைப் பறவை யுடங்குபீள் கவருந்
10 தோடிடங் கோடாய் கிளர்ந்து
நீடினை விளைமோ வாழிய தினையே.
சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீஇயது.
71

## நகூஉ. மதுரைப் போத்தனார்

2010. அகநானூறு - 75. பாலை

அருளன் றுக ஆள்வினை யாடவர்
பொருளென வலித்த பொருளல் காட்சியின்,
மைந்துமலி யுள்ளமொடு துஞ்சல் செல்லாது
எரிசினந் தவழ்ந்த இருங்கடற் றடைமுதற்
5 கரிகுதிர் மரத்த கான வாழ்க்கை
அடுபுலி முன்பிற் றொடுகழல் மறவர்
தொன்றியற் சிறுகுடி மன்றுநிழற் படுக்கும்
அண்ணல் நெடுவரை ஆமறப் புலர்ந்த
கன்னெறிப் படர்குவ ராயின் நன்னுதற்

10 செயிர்தீர் கொள்கைச் சின்மொழித்
துவர்வாய்
அவிர்தொடி முன்கை யாயிழை மகளிர்
ஆரந் தாங்கிய அலர்முலை யாகத்து
ஆராக் காதலொடு தாரிடைக் குழையாது
சென்றுபடு விறற்கவின் உள்ளி யென்றும்
15 இரங்குந ரல்லது பெயர்ந்து யாவருந்
தருநரு முளரோ இவ்வுலகத் தானென
மாரி யீங்கை மாத்தளி ரன்ன
அம்மா மேனி ஐதமை நுசுப்பிற்
பல்காசு நிரைத்த கோடேந் தல்குல்
20 மெல்லியற் குறுமகள் புலந்துபல கூறி
ஆனா நோயை யாக யானே
பிரியச் சூழ்தலு முண்டோ
அரிதுபெறு சிறப்பின் நின்வயி னானே.
பொருள்வயிற் பிரிவரென வேறுபட்ட
தலைமகட்குப் பிரியா
ரெனத் தோழி சொல்லியது.
௩௯௩. மதுரை மருதங்கிழார்மகனார்
சொகுத்தனார்
**2011.** நற்றிணை - **329.** பாலை
வரையா நயவினர் நிரையம் பேணார்

கொன்றுற்றுத் துறந்த மாக்களின் அடுபிணன்
இடுமுடை மருங்கின் தொடுமிடம் பெறாஅது
புனிற்றுநிரை கதித்த பொறிய முதுபாறு
5 இறகுபுடைத் திற்ற பறைப்புன் தூவி
செங்கணைச் செறித்த வன்க ணாடவர்
ஆடுகொள் நெஞ்சமோ டதர்பார்த் தல்கும்
அத்த மிறந்தன ராயினும் நத்துறந்து
அல்கலர் வாழி தோழி உதுக்காண்
10 இருவிசும் பதிர மின்னிக்
கருவி மாமழை கடல்முகந் தனவே.

பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி பருவங்
காட்டி வற்புறுத்தது.

**2012. நற்றிணை - 352. பாலை**

இலைமாண் பகழிச் சிலைமாண் இரீஇய
அன்பி லாடவர் அலைத்தலிற் பலருடன்
வம்பலர் தொலைந்த அருஞ்சுரக் கவலை
அழல்போல் செவிய சேவ லாட்டி
5 நிழலொடு கதிக்கும் நிணம்புரி முதுநரி
பச்சூன் கொள்ளை மாந்தி வெய்துற்றுத்
தேர்திகழ் வறும்புலந் துழைஇ நீர்நயந்து
பதுக்கை நீழ லொதுக்கிடம் பெறாஅ
அஞ்சுவரு கவலை வருதலின் வருந்திய
10 நமக்கும் அரிய வாயின அமைத்தோள்

மாண்புடைக் குறுமகள் நீங்கி
யாகுங்வந் தனள்கொல் அளியள் தானே.

பொருள்வயிற் பிரிந்த தலைமகன்
இடைச்சுரத்துக்கண் ஆற்றானாய்த் தன்னுள்ளே
சொல்லியது.

## ௩௯௪. மதுரை மருதங்கிழார்மகனார் பெருங்கண்ணனார்

### 2013. அகநானூறு - 247. பாலை

மண்ணா முத்தம் ஒழுக்கிய வனமுலை
நன்மா ணாகம் புலம்பத் துறந்தோர்
அருளிலர் வாழி தோழி பொருள்புரிந்து
இருங்கிளை யெண்கின் அழல்வா யேற்றை
5 கருங்கோட் டிருப்பை வெண்பூ முனையிற்
பெருஞ்செம் புற்றின் இருந்தலை யிடக்கும்
அரிய கான மென்னார் பகைபட
முனைபாழ் பட்ட ஆங்க ணாட்பார்த்துக்
கொலைவல் யானை சுரங்கடி கொள்ளும்
10 ஊறுபடு கவலைய ஆறுபல நீந்திப்
படுமுடை நசைஇய பறைநெடுங் கழுத்திற்

பாறுகிளை சேக்குஞ் சேட்சிமைக்
கோடுயர் பிறங்கல் மலையிறந் தோரே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது

வேறுபாடு கண்டு வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

## 2014. அகநானூறு - 364. முல்லை

மாதிரம் புதையப் பாஅய்க் கால்வீழ்த்து
ஏறுடைப் பெருமழை பொழிந்தென அவல்தோறு
ஆடுகளப் பறையின் வரிநுணல் கறங்க
ஆய்பொன் அவிரிழை தூக்கி யன்ன
5 நீடிணர்க் கொன்றை கவின்பெறக் காடுடன்
சுடர்புரை தோன்றிப் புதல்தலைக் கொளாஅ
முல்லை யில்லமொடு மலரக் கல்ல

பகுவாய்ப் பைஞ்சுனை மாவுண மலிரக்
கார்தொடங் கின்றே காலை காதலர்

10 வெஞ்சின வேந்தன் வியன்பெரும் பாசறை
வென்றி வேட்கையொடு நம்மு முள்ளார்

மதுரை மருதங்கிழார்மகன் இளம்போத்தன்
1125

யாதுசெய் வாங்கொல் தோழி நோதகக்
கொலைகுறித் தன்ன மாலை
துனைதரு போழ்தின் நீந்தலோ அரிதே.

பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

**2015.** நற்றிணை - **388.** நெய்தல்

அம்ம வாழி தோழி நன்னுதற்கு
யாங்கா கின்றுகொல் பசப்பே நோன்புரிக்
கயிறுகடை யாத்த கடுநடை யெறியுளித்
திண்டிமிற் பரதவர் ஒண்சுடர்க் கொளீஇ
5 நடுநாள் வேட்டம் போகி வைகறைக்
கடல்மீன் தந்து கானற் குவைஇ
ஓங்கிரும் புன்னை வரிநிழ லிருந்து
தேங்கமழ் தேறல் கிளையொடு மாந்திப்
பெரிய மகிழுந் துறைவன் எம்
10 சிறிய நெஞ்சத் தகல்வறி யானே.

வரைவுநீட ஆற்றாளாகிய தோழிக்குத் தலைமகன் சிறைப்புறமாகச் சொல்லியது; மனையுள் வேறுபடா தாற்றின வென்றாற்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

## ௩௬௫. மதுரை மருதங்கிழார்மகன் இளம்போத்தன்

**2016.** குறுந்தொகை - **332.** குறிஞ்சி

வந்த வாடைச் சில்பெயற் கடைநாள்
நோய்நீந் தரும்படர் தீர நீநயந்து
கூறின் எவனோ தோழி நாறுயிர்
மடப்பிடி தழீஇத் தடக்கை யானை

5 குன்றகச் சிறுகுடி யிழிதரும்
மன்றம் நண்ணிய மலைகிழ வோற்கே.

வரையாது வந்தொழுகாநின்ற காலத்துக் கிழவன் கேட்பக் கிழத்திக்குத் தோழி கூறியது.

## ருகசு. மதுரை வேளாசான்

### 2017. புறநானூறு - 305.

வயலைக் கொடியின் வாடிய மருங்குல்
உயவ லூர்திப் பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லோ சிலவே அதற்கே
5 ஏணியுஞ் சீப்பும் மாற்றி
மாண்வினை யானையு மணிகளைந் தனவே.

திணை - வாகை ; துறை - பார்ப்பனவாகை.

## ருசுஎ. மருங்கூர்கிழார் பெருங்கண்ணனார்

### 2018. அகநானூறு - 80. நெய்தல்

கொடுந்தாள் முதலையொடு கோட்டுமீன் வழங்கும்
இருங்கழி யிட்டுச்சுரம் நீந்தி யிரவின்
வந்தோய் மன்ற தண்கடற் சேர்ப்ப
நினக்கெவன் அரியமோ யாமே எந்தை

5 புணர்திரைப் பரப்பகந் துழைஇத் தந்த
பன்மீ னுணங்கற் படுபுள் ஓப்புநும்
முண்டகங் கவித்த முதுநீ ரடைகரை
ஒண்பன் மலரக் கவட்டிலை யடும்பின்
செங்கேழ் மென்கொடி யாழி யறுப்ப
10 இனமணிப் புரவி நெடுந்தேர் கடைஇ
மின்னிலைப் பொலிந்த விளங்கிணர் அவிழ்பொற்
றண்ணறும் பைந்தா துறைக்கும்

புன்னையங் கானற் பகல்வந் தீமே.

இரவுக்குறிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

## ௩௧௮. மருங்கூர்ப்பட்டினத்துச் சேந்தன் குமரனார்

2019. நற்றிணை - 289. முல்லை அம்ம

வாழி தோழி காதலர்
நில்புடை பெயர்வ தாயினுங் கூறிய சொற்புடை
பெயர்தலோ இலரே வானம்
நளிகடல் முகந்து செறிதக இருளிக்
5 கனைபெயல் பொழிந்து கடுங்குரல் பயிற்றிக்
கார்செய் தென்னுழை யதுவே ஆயிடைக்
கொல்லைக் கோவலர் எல்லி மாட்டிய
பெருமர வொடியல் போல
அருளிலேன் அம்ம அளியேன் யானே.
பிரிவிடைப் பருவங்கண்டு சொல்லியது.

## ௩௯௯. மருங்கூர்ப்பாகை

## சாத்தன்பூதனார்

### 2020. அகநானூறு – 327. பாலை

இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
நன்பக லமையமும் இரவும் போல
வேறுவே றியல வாகி மாறெதிர்ந்து
உளவென உணர்ந்தனை யாயின் ஒரூஉம்
5 இன்னா வெஞ்சுரம் நன்னசை துரப்பத்
துன்னலுந் தகுமோ துணிவில் நெஞ்சே
நீசெல வலித்தனை யாயின் யாவது
நினைதலுஞ் செய்தியோ எம்மே கனைகதிர்
ஆவி யவ்வரி நீரென நசைஇ
10 மாதவப் பரிக்கு மரல்திரங்கு நனந்தலைக்

களர்கால் யாத்த கண்ணகன் பாப்பிற்
செவ்வரைக் கொழிநீர் கடுப்ப அரவின்
அவ்வரி யுரிவை அணவரு மருங்கிற்
புற்றரை யாத்த புலர்சினை மரத்த



மைந்நிற உருவின் மணிக்கட் காக்கை
பைந்நிணங் கவரும் படுபிணக் கவலைச்
சென்றோர் செல்புறத் திரங்கார் கொன்றோர்
கோல்கழிபு இரங்கும் அதர
வேய்பயில் அழுவ மிறந்த பின்னே.

பொருள் கடைக்கூட்டிய நெஞ்சினைக் கழறியது.

## ௨௦௦. மருதம்பாடிய

## இளங்கடுங்கோ

### 2021. அகநானூறு - 96. மருதம்

நறவுண் மண்டை நுடக்கலின்
இறவுக்கலித்துப்
பூட்டறு வில்லிற் கூட்டுமுதற் றெறிக்கும்
பழனப் பொய்கை யடைகரைப் பிரம்பின்
அரவா யன்ன அம்முள் நெடுங்கொடி
5 அருவி யாம்ப லகலடை துடக்கி
அசைவரல் வாடை தூக்கலின் ஊதுலை

விசைவாங்கு தோலின் வீங்குபு ஞெகிழுங்
கழனியம் படப்பைக் காஞ்சி யூர
ஒண்டொடி யாயத் துள்ளும் நீநயந்து
10 கொண்டனை யென்பவோர் குறுமகள் அதுவே
செம்பொற் சிலம்பிற் செறிந்த குறங்கின்
அங்கலுழ் மாமை யஃதை தந்தை
அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்
வெண்ணெல் வைப்பிற் பருவூர்ப் பறந்தலை
15 இருபெரு வேந்தரும் பொருதுகளத் தொழிய
ஒளிறுவாள் நல்லமர்க் கடந்த ஞான்றைக்
களிறுகவர் கம்பலை போல
அலரா கின்றது பலர்வாய்ப் பட்டே.

தோழி வாயின்மறுத்தது.

## 2022. அகநானூறு - 176. மருதம்

கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பின்
நிலம்பக வீழ்ந்த வேர்முதிர் கிழங்கின்

மருதம்பாடிய இளங்கடுங்கோ



கழைகண் டன்ன தூம்புடைத் திரள்காற்
களிற்றுச்செவி யன்ன பாசடை மருங்கிற்
5 கழுநிவந் தன்ன கொழுமுகை யிடையிடை
முறுவல் முகத்திற் பன்மலர் தயங்கப்
பூத்த தாமரைப் புள்ளிமிழ் பழனத்து
வேப்புநனை யன்ன நெடுங்கண் ஈர்ஞெண்டு 10

இரைதேர் வெண்குரு கஞ்சி அயலது
ஒலித்த பகன்றை இருஞ்சேற் றள்ளற்
றிதலையின் வரிப்ப ஓடி விரைந்துதன்
நீர்மலி மண்ணளைச் செறியும் ஊர
மனைநகு வயலை மரனிவர் கொழுங்கொடி
அரிமல ராம்பலொ டார்தழை தைஇ
15 விழவாடு மகளிரொடு தழூஉவணிப் பொலிந்
து
மலரே ருண்கண் மாணிழை முன்கைக்
குறுந்தொடி துடக்கிய நெடுந்தொடர் விடுத்தது
உடன்றனள் போலும்நின் காதலி எம்போற்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து
20 நெல்லுடை நெடுநகர் நின்னின் றுறைய
என்ன கடத்தளோ மற்றே தன்முகத்து
எழுதெழில் சிதைய அழுதன ளேங்கி
வடித்தென வுருத்த தித்திப் பல்லூழ்
கொடித்தெனச் சிவந்த மெல்விரற் றிருகுபு
25 கூர்நுனை மழுகிய எயிற்றள்
ஊர்முழுது நுவலுநிற் காணிய சென்மே.
தோழி தலைமகனை வாயின்மறுத்தது.

## 2023. நற்றிணை - 50. மருதம்

அறியா மையின் அன்னை யஞ்சிக்
குழையன் கோதையன் குறும்பைந் தொடியன்
விழவயர் துணங்கை தழூஉகஞ் செல்ல நெடுநிமிர்

தெருவிற் கைபுகு கொடுமிடை 5 நொதும லாளன்
கதுமெனத் தாக்கலிற்



கேட்போ ருளர்கொல் இல்லைகொல் போற்றென
யாணது பசலை யென்றனன் அதனெதிர்
நாணிலை யெலுவ என்றுவந் திசினே
செறுநரும் விழையுஞ் செம்மலோனென 10
நறுநுதல் அரிவை போற்றேன்
சிறுமை பெருமையிற் காணாது துணிந்தே.
தோழி பாணற்கு வாயின் மறுத்தது.

௨௦௧. மருதனிள நாகனார்

2024. அகநானூறு - 34. முல்லை
சிறுகரும் பிடவின் வெண்டலைக் குறும்புதல்
கண்ணியின் மலருந் தண்ணறும் புறவிற் றொடுதோற்
கானவன் கவைபொறுத் தன்ன இருதிரி மருப்பின்
அண்ணல் இரலை
5 செறியிலைப் பதவின் செங்கோல் மென்குரல்
மறியாடு மருங்கின் மடப்பிணை யருத்தித் தெள்ளறல்
தழீஇய வார்மண லடைகரை மெல்கிடு கவுள

துஞ்சுபுறங் காக்கும்
பெருந்தகைக் குடைந்த நெஞ்சம் ஏமுறச் 10 செல்க
தேரே நல்வலம் பெறுந
பசைகொல் மெல்விரற் பெருந்தோட் புலத்தி
துறைவிட் டன்ன தூமயி ரெகினம்
துணையொடு திளைக்குங் காப்புடை வரைப்பிற்
செந்தார்ப் பைங்கிளி முன்கை யேந்தி
15 இன்றுவர லுரைமோ சென்றிசினோர்
திறத்தென இல்லவர் அறித லஞ்சி மெல்லென
மழலை யின்சொற் பயிற்றும்
நாணுடை யரிவை மாணலம் பெறவே. வினைமுற்றிய
தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

மருதனிளநாகனுர் 1131

2025. அகநானூறு - 59. பாலை

தண்கயத் தமன்ற வண்டுபடு துணைமலர்ப்
பெருந்தகை யிழந்த கண்ணினை பெரிதும்
வருந்தினை வாழியர் நீயே வடாஅது
வண்புனற் றொழுநை வார்மண லகன்றுறை
5 அண்டர் மகளிர் தண்டழை யுடீஇயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போலப்
புன்றலை மடப்பிடி யுணீஇயர் அங்குழை
நெடுநிலை யாஅ மொற்றி நனைகவுட்
படிஞிமிறு கடியுங் களிறே தோழி
10 சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேற்
சினமிகு முருகன் தண்பரங் குன்றத்து
அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை
இன்றீம் பைஞ்சுனை ஈரணிப் பொலிந்த
தண்ணறுங் கழுநீர்ச் செண்ணியற் சிறுபுறந்

15 தாம்பா ராட்டிய காலையும் உள்ளார்
வீங்கிறைப் பணைத்தோள் நெகிழச் சேய்நாட்டு

அருஞ்செயற் பொருட்பிணி முன்னிநப்
பிரிந்துசே ணுறைநர் சென்ற வாறே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட கிழத்திக்குத்

தோழி சொல்லியது.

**2026.** அகநானூறு - **77.** பாலை

நன்னுதல் பசப்பவும் ஆள்வினை தரீஇயர்

துன்னருங் கானந் துன்னுதல் நன்றெனப்
பின்னின்று சூழ்ந்தனை யாயின்நன் றின்னுச்
சூழ்ந்திசின் வாழிய நெஞ்சே வெய்துற
5 இடியுமிழ் வானம் நீங்கி யாங்கணுங்
குடிபதிப் பெயர்ந்த சுட்டுடை முதுபாழ்க்
கயிறுபிணிக் குழிசி யோலை கொண்மார்
பொறிகண் டழிக்கும் ஆவண மாக்களின்
உயிர்திறம் பெயர நல்லமர்க் கடந்த



10 தறுக ணாளர் குடர்தரீஇத் தெறுவரச்
செஞ்செவி யெருவை அஞ்சுவர இருக்குங்
கல்லதர்க் கவலை போகிற் சீறூர்ப்
புல்லரை யித்திப் புகர்படு நீழல்
எல்வளி யலைக்கும் இருள்கூர் மாலை
15 வானவன் மறவன் வணங்குவிற் றடக்கை
ஆஅ நறவின் வண்மகிழ்ப் பிட்டன்
பொருந்தா மன்னர் அருஞ்சமத் துயர்த்த
திருந்திலை யெஃகம் போல
அருந்துயர் தருமிவள் பனிவார் கண்ணே.

தலைமகன் பிரியக்கருதிய நெஞ்சிற்குச் சொல்லிச்
வித்தது.

செலவழுங்கு

2027. அகநானூறு - 90.

நெய்தல்

மூத்தோ ரன்ன வெண்டலைப் புணரி
இளையோ ராடும் வரிமனை சிதைக்குந்
தளையவிழ் தாழைக் கானலம் பெருந்துறைச்
சில்செவித் தாகிய புணர்ச்சி அலரெழ
5 இல்வயிற் செறித்தமை அறியாய் பன்னாள்
வருமுலை வருத்தா அம்பகட்டு மார்பிற்
றெருமர லுள்ளமொடு வருந்து நின்வயின்
நீங்கு கென்றியான் யாங்கன மொழிகோ
அருந்திறற் கடவுட் செல்லூர்க் குணாஅது
10 பெருங்கடல் முழக்கிற் றாகி யாணர்
இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்
கருங்கட் கோசர் நியம மாயினும்
உறுமெனக் கொள்குந ரல்லர்
நறுநுத லரிவை பாசிழை விலையே.

பகற்குறி வந்து கண்ணுற்று நீங்குந்
தலைமகனைத் தோழி
எதிர்ப்பட்டு நின்று இற்செறிப்பறிவுறீஇயது.

மருதனிளநாகனார் 1133

## 2028. அகநானூறு - 104. முல்லை

வேந்துவினை முடித்த காலைத் தேம்பாய்ந்து
இனவண் டார்க்குந் தண்ணறும் புறவின்
வென்வேல் விளையர் இன்புற வலவன்
வள்புவலித் தூரி னல்லது முள்ளுறின்
5 முந்நீர் மண்டிலம் ஆகி யாற்றா
நன்னால்கு பூண்ட கடும்பரி நெடுந்தேர்
வாங்குசினை பொலிய ஏறிப் புதல
பூங்கொடி யவரைப் பொய்யத ளன்ன
உள்ளில் வயிற்ற வெள்ளை வெண்மறி
10 மாழ்கி யன்ன தாழ்பெருஞ் செவிய
புன்றலைச் சிறுரோ டுகளி மன்றுழைக்
கவையிலை யாரின் அங்குழை கறிக்குஞ்
சீறூர் பலபிறக் கொழிய மாலை
இனிதுசெய் தனையால் எந்தை வாழிய
15 பனிவார் கண்ணள் பலபுலந் துறையும்
ஆய்தொடி யரிவை கூந்தற்
போதுகுர லணிய வேய்தந் தோயே.

வினைமுற்றி மீளுந் தலைமகற்குத் தோழி சொல்லியது.

**2029.** அகநானூறு - **121.** பாலை

நாநகை யுடைய நெஞ்சே கடுந்தெறல்
வேனில் நீடிய வானுயர் வழிநாள்
வறுமை கூரிய மண்ணீர்ச் சிறுகுளத்
தொடுகுழி மருங்கிற் றுவ்வாக் கலங்கல்
5 கன்றுடை மடப்பிடிக் கயந்தலை மண்ணிச்

சேறுகொண் டாடிய வேறுபட்டு வயக்களிறு
செங்கோல் வாளினர் தயங்கத் தீண்டிச்
சொரிபுற முரிஞிய நெறியயல் மராஅத்து
அல்குறு வரிநிழ லசைஇ நம்மொடு
10 தான்வரு மென்ப தடமென் றோளி
உறுகண் மழவ ருருள்கீண் டிட்ட



ஆறுசெல் மாக்கள் சோறுபொதி
வெண்குடைக்
கணைவிசைக் கடுவளி யெடுத்தலின்
துணைசெத்து
வெருவேறு பயிரு மாங்கண்
15 கருமுக முசுவின் கானத் தானே.

தோழியால் தலைமகளை யுடன்வரு மெனக் கேட்ட தலைமகன் நெஞ்சிற்குச் சொல்லியது.

## 2030. அகநானூறு - 131. பாலை

விசும்புற நிவந்த மாத்தாள் இதணைப்

பசுங்கேழ் மெல்லிலை யருகுநெறித் தன்ன
வண்டுபடுபு இருளிய தாழிருங் கூந்தற்
சுரும்புண விரிந்த பெருந்தண் கோதை
5 இவளினுஞ் சிறந்தன் றீதல் நமக்கென
வினை யம்பின் விழுத்தொடை மழவர்
நாளா வுய்த்த நாம வெஞ்சுரத்து
நடைமெலிந் தொழிந்த சேட்படர் கன்றின்
கடைமணி யுகுநீர் துடைத்த ஆடவர்
10 பெயரும் பீடு மெழுதி அதர்தொறும்

பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்
வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்
வெருவரு தகுந கானம் நம்மொடு
வருக வென்னுதி யாயின்
15 வாரே னெஞ்சம் வாய்க்கநின் வினையே.

பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

**2031.** அகநானூறு - **184.** முல்லை

கடவுட் கற்பொடு குடிக்குவிளக் காகிய
புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்
நன்ன ராட்டிக் கன்றியும் எனக்கும்
இனிதா கின்றாற் சிறக்கநின் ஆயுள்
5 அருந்தொழில் முடித்த செம்ம லுள்ளமொடு
சுரும்பிமிர் மலர கானம் பிற்பட

வெண்பிடவு அவிழ்ந்த வீகமழ் புறவிற்
குண்டைக் கோட்ட குறுமுட் கள்ளிப்
புன்றலை புதைத்த கொழுங்கொடி முல்லை
10 ஆர்கழல் புதுப்பூ உயிர்ப்பின் நீக்கித்
தெள்ளறல் பருகிய திரிமருப் பெழிற்கலை
புள்ளியம் பிணையொடு வதியு மாங்கண்
கோடுடைக் கையர் துளரெறி வினைஞர்
அரிய லார்கையர் விளைமகிழ் தூங்கச்
15 செல்கதிர் மழுகிய உருவ ஞாயிற்றுச்
செக்கர் வானஞ் சென்ற பொழுதிற்
கற்பா லருவியின் ஒலிக்கும் நற்றேர்த்
தார்மணி பலவுடன் இயம்பச்
சீர்மிகு குரிசில்நீ வந்துநின் றதுவே.

தலைமகன் வினைவயிற்பிரிந்துவந்து எய்தியவிடத்துத் தோழி புல்லுமகிழ்வுரைத்தது.

**2032.** அகநானூறு - **193.** பாலை

கா னுயர் மருங்கிற் கவலை யல்லது
வானம் வேண்டா வில்லே ருழவர்
பெருநாள் வேட்டங் கிளையெழ வாய்த்த
பொருகளத் தொழிந்த குருதிச் செவ்வாய்ப்
5 பொறித்த போலும் வானிற எருத்தின்
அணிந்த போலுஞ் செஞ்செவி யெருவை
குறும்பொறை யெழுந்த நெடுந்தாள்
யா அத்து
அருங்கவட் டுயர்சினைப் பிள்ளை யூட்ட
விரைந்துவாய் வழுக்கிய கொழுங்கண்
ஊன் றடி
10 கொல்பசி முதுநரி வல்சி யாகுஞ்
சுரன்நமக் கெளிய மன்னே நன்மனைப்
பன்மாண் தங்கிய சாய லின்மொழி
முருந்தேர் முறுவ லிளையோள்
பெருந்தோ ளின்துயில் கைவிடு கலனே.
பொருள்வலித்த நெஞ்சிற்குச் சொல்லித்
தலைமகன் செல
வழுங்கியது.



**2033.** அகநானூறு - **206.** மருதம்
என்னெனப் படுங்கொல் தோழி நன்மகிழ்ப்
பேடிப் பெண்கொண் டாடுகை கடுப்ப

நகுவரப் பணைத்த திரிமருப் பெருமை
மயிர்க்கவின் கொண்ட மாத்தோல் இரும்புறஞ்
5 சிறுதொழில் மகாஅர் ஏறிச் சேணோர்க்குத்
துறுகல் மந்தியிற் றோன்றும் ஊரன்
மாரி யீங்கை மாத்தளி ரன்ன
அம்மா மேனி யாயிழை மகளிர்
ஆரந் தாங்கிய அலர்முலை யாகத்து
10 ஆராக் காதலொடு தாரிடை குழைய
முழவுமுகம் புலரா விழவுடை வியனகர்
வதுவை மேவல னாகலின் அதுபுலந்து
அடுபோர் வேளிர் வீரை முன்றுறை
நெடுவெள் ளுப்பின் நிரம்பாக் குப்பை
15 பெரும்பெயற் குருகி யாஅங்குத்
திருந்திழை நெகிழ்ந்தன தடமென் தோளே.

வாயில்வேண்டிச்சென்ற விறலிக்குத் தலைமகள் வாயின் மறுத்தது.

## 2034. அகநானூறு - 220. நெய்தல்

உளருஞ் சேரியும் உடனியைந் தலரெழத்
தேரொடு மறுகியும் பணிமொழி பயிற்றியும்
கெடாஅத் தீயின் உருகெழு செல்லூர்க்

கடாஅ யானைக் குழூஉச்சமந் ததைய
5 மன்மருங் கறுத்த மழுவாள் நெடியோன்
முன்முயன் றரிதினின் முடித்த வேள்விக்
கயிறரை யாத்த காண்டகு வனப்பின்
அருங்கடி நெடுந்தூண் போல யாவருங்
காண லாகா மாணெழி லாகம்
10 உள்ளுதொறும் பனிக்கு நெஞ்சினை நீயே
நெடும்புற நிலையினை வருந்தினை யாயின்
முழங்குகட லோதங் காலைக் கொட்கும்

மருதனிளநாகனுர் 1137

பழம்ப னெல்லின் ஊஉணூ ராங்கண்
நோலா இரும்புட் போல நெஞ்சமர்ந்து
15 காதல் மாறாக் காமர் புணர்ச்சியின்
இருங்கழி முகந்த செங்கோ லவ்வலை
முடங்குபுற இறவோ டினமீன் செறிக்கும்
நெடுங்கதிர்க் கழனித் தண்சாய்க் கானத்து
யாணர்த் தண்பணை யுறுமெனக் கானல்
20 ஆயம் ஆய்ந்த சாயிறைப் பணைத்தோள்
நல்லெழில் சிதையா ஏமம்
சொல்லினித் தெய்யயாந் தெளியு மாறே.

இரவுக்குறிவந்து நீங்குந் தலைமகனை யெதிர்ப்பட்டுத்
தோழி சொல்லியது.

2035. அகநானூறு - 245. பாலை

உயிரினுஞ் சிறந்த ஒண்பொருள் தருமார்
நன்றுபுரி காட்சியர் சென்றனர் அவரென
மனைவலித் தொழியு மதுகைய ளாதல்
நீநற் கறிந்தனை யாயின் நீங்கி
5 மழைபெயல் மறந்த கழைதிரங் கியவிற்
செல்சாத் தெறியும் பண்பில் வாழ்க்கை
வல்வி லிளையர் தலைவர் எல்லுற
அரிகிளர் பணைத்தோள் வயிறணி திதலை
அரிய லாட்டியர் அல்குமனை வரைப்பின்
10 மகிழ்நொடை பெறூஅ ராகி நனைகவுட்
கான யானை வெண்கோடு சுட்டி
மன்றோடு புதல்வன் புன்றலை நீவும்
அருமுனைப் பாக்கத் தல்கி வைகுற
நிழல்படக் கவின்ற நீளரை யிலவத்து
15 அழலகைந் தன்ன அலங்குசினை யொண்பூக்
குழலிசைத் தும்பி யார்க்கு மாங்கண்

குறும்பொறை யுணங்குந் ததர்வெள் ளென்பு
கடுங்கா லொட்டகத் தல்குபசி தீர்க்குங்
கன்னெடுங் கவலைய கானம் நீந்தி
72





20 அம்மா வரிவை யொழியச்
சென்மோ நெஞ்சம் வாரலென் யானே.

பொருள்கடைக்கூட்டிய நெஞ்சினைக்கழறித் தலைமகன் சொல்லிச் செலவழுங்கியது.

**2036.** அகநானூறு - **255.** பாலை

உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ
இரவு மெல்லையும் அசைவின் றாகி

விரைசெல லியற்கை வங்கூழ் ஆட்டக்
5 கோடுயர் திணிமணல் அகன்றுறை நீகான்
மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய
ஆள்வினைப் பிரிந்த காதலர் நாள்பல
கழியா மையே யழிபட ரகல
வருவர் மன்னால் தோழி தண்பணைப்
10 பொருபுனல் வைப்பின் நம்மூ ராங்கண்
கருவிளை முரணிய தண்புதற் பகன்றை
பெருவள மலர அல்லி தீண்டிப்
பலவுக்காய்ப் புறத்த பசும்பழப் பாகல்
கூதள மூதிலைக் கொடிநிரைத் தூங்க
15 அறனின் றலைக்கும் ஆறு வாடை
கடிமனை மாடத்துக் கங்குல் வீசத்
திருந்திழை நெகிழ்ந்து பெருங்கவின் சாய
நிரைவளை யூருந் தோளென

உரையொடு செல்லும் அன்பினர்ப் பெறினே.

பிரிவிடைவேறுபட்ட தலைமகள் ஆற்றுமைமீதூரத் தோழிக்குச் சொல்லியது.

## 2037.* அகநானூறு - 269. பாலை

தொடிதோள் இவர்க எவ்வமுந் தீர்க
நெறியிருங் கதுப்பிற் கோதையும் புனைக ஏறுடை
யினநிரை பெயரப் பெயராது

மருதனிளநாகனுர் 

செறிசுரை வெள்வேல் மழவர்த் தாங்கிய
5 தறுக ணாளர் நல்லிசை நிறுமார்
பிடிமடிந் தன்ன குறும்பொறை மருங்கின்
நட்ட போலும் நடாஅ நெடுங்கல்
அகலிடங் குயின்ற பல்பெயர் மண்ணி
நறுவிரை மஞ்சள் ஈர்ம்புறம் பொலிய
10 வம்புகொண் டறுத்த வார்நா ருரிவையிற்
செம்பூங் கரந்தை புனைந்த கண்ணி
வரிவண் டார்ப்பச் சூட்டிக் கழற்கால்
இளையர்பதிப் பெயரும் அருஞ்சுர மிறந்தோர்
தைஇ நின்ற தண்பெயற் கடைநாட்
15 பொலங்காசு நிரைத்த கோடேந் தல்குல்
நலங்கேழ் மாக்குரல் குழையொடு துயல்வரப்
பாடேர்பு எழுதரும் பகுவாய் மண்டிலத்து
வயிரிடைப் பட்ட தெள்விளி யியம்ப

வண்டற் பாவை யுண்டுறைத் தரீஇத்
20 திருநுதல் மகளிர் குரவை அயரும்
பெருநீர்க் கானல் தழீஇய இருக்கை

வாணன் சிறுகுடி வணங்குகதிர் நெல்லின்
யாணர்த் தண்பணைப் போதுவா யவிழ்ந்த 25

ஒண்செங் கழுநீ ரன்னநின்
கண்பனி துடைமார் வந்தனர் விரைந்தே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி
வற்புறுத்தியது.

## 2038. அகநானூறு - 283. பாலை

நன்னெடுங் கதுப்பொடு பெருந்தோள் நீவி
நின்னிவ ணொழிதல் அஞ்சிய என்னினுஞ் 5
செலவுதலைக் கொண்ட பெருவிதுப் புறவி

பல்கவர் மருப்பின் முதுமான் போக்கிச்
சில்லுணாத் தந்த சீறூர்ப் பெண்டிர்
திரிவயிற் றெவுட்டுஞ் சேட்புலக் குடிஞைப்
பைதல் மென்குரல் ஐதுவந் திசைத்தொறும்
போகுநர் புலம்பு மாறே எகுதற்கு

அரிய வாகு மென்னுமைக் கரிமரங்
10 கண்ணகை யிளங்குழை கான்முதற் கவினி
விசும்புடன் இருண்டு வெம்மை நீங்கப்
பசுங்கண் வானம் பாய்தளி பொழிந்தெனப்
புன்னுகும் பெடுத்த நன்னெடுங் கானத்து ஊட்டு
பஞ்சிப் பிசிர்பரந் தன்ன
15 உண்ணு மூதாய் தண்ணிலம் வரிப்ப
இனிய வாருக தணிந்தே
இன்று நீப்பின் நின்னொடு செலற்கே.
உடன்போக்கு வலித்த தோழி தலைமகற்குச் சொல்லியது.

**2039.** அகநானூறு - **297.** பாலை

பானாட் கங்குலும் பெரும்புன் மாலையும் ஆறு
நோயொ டழிபடர்க் கலங்கி
நம்வயின் இனையு மிடும்பை கைம்மிக
என்னை யாகுமோ நெஞ்சே நம்வயின் 5 இருங்கவி
னில்லாப் பெரும்புன் தாடிக் கடுங்கண் மறவர் பகழி
மாய்த்தென
மருங்குல் நுணுகிய பேஎமுதிர் நடுகற் பெயர்பயம்
படரத் தோன்று குயிலெழுத்து இயைபுடன்
நோக்கல் செல்லா தசைவுடன் 10 ஆறுசெல் வம்பலர்
விட்டனர் கழியும் சூர்முத லிருந்த ஓமையம் புறவின்
நீர்முள் வேலிப் புலவுநாறு முன்றில்
எழுதி யன்ன கொடிபடு வெருகின்
பூளை யன்ன பொங்குமயிர்ப் பிள்ளை

15 மதிசூழ் மீனிற் றுய்வழிப் படூஉஞ்
சிறுகுடி மறவர் சேக்கோட் டண்ணுமைக்கு எருவைச்
சேவல் இருஞ்சிறை பெயர்க்கும்

மருதனிளநாகனுர் **1141**

வெருவரு கானம் நம்மொடு
வருவ லென்றோள் மகிழ்மட நோக்கே.

பொருள்வயிற்போகாநின்ற தலைமகன்
தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

## 2040. அகநானூறு - 312. குறிஞ்சி

நெஞ்சுடம் படுதலின் ஒன்றுபுரிந் தடங்கி
இரவின் வரூஉம் இடும்பை நீங்க
வரையக் கருது மாயிற் பெரிதுவந்து
ஓங்குவரை யிழிதரும் வீங்குபெயல் நீத்தம்
5 காந்தளஞ் சிறுகுடிக் கெளவை பேணாது
அரிமதர் மழைக்கண் சிவப்ப நாளைப்
பெருமலை நாடன் மார்புபுணை யாக
ஆடுகம் வம்மோ காதலந் தோழி
வேய்பயி லடுக்கம் புதையக் கால்வீழ்த்து
10 இன்னிசை முரசின் இரங்கி யொன்னார்
ஓடுபுறங் கண்ட தாடோய் தடக்கை
வெல்போர் வழுதி செல்சமத் துயர்த்த
அடுபுக ழெஃகம் போலக்
கொடிபட மின்னிப் பாயின்றால் மழையே.

தலைமகன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது ; தலைமகள் சொல்லியதூஉமாம்.

**2041.** அகநானூறு - **343.** பாலை.

வாங்கமை புரையும் வீங்கிறைப் பணைத்தோட்
சில்சுணங் கணிந்த பல்பூண் மென்முலை
நல்லெழி லாகம் புல்லுதல் நயந்து
மரங்கோ ளுமண்மகன் பேரும் பருதிப்
5 புன்றலை சிதைத்த வன்றலை நடுகற்
கண்ணி வாடிய மண்ணு மருங்குற்
கூருளி குயின்ற கோடுமா யெழுத்தவ்
வாறுசெல் வம்பலர் வேறுபயம் படுக்கும் 1142



கண்பொரி கவலைய கானத் தாங்கண்
10 நனந்தலை யாஅத் தந்தளிர்ப் பெருஞ்சினை
இல்போல் நீழற் செல்வெயில் ஒழிமார்
நெடுஞ்செவிக் கழுதைக் குறுங்கா லேற்றைப்
புறநிறை பண்டத்துப் பொறையசாஅக் களைந்த
பெயர்படை கொள்ளார்க் குயவுத்துணை யாகி
15 உயர்ந்த ஆள்வினை புரிந்தோய் பெயர்ந்துநின்று
உள்ளினை வாழியென் னெஞ்சே கள்ளின்
மகிழின் மகிழ்ந்த அரிமதர் மழைக்கட்
சின்மொழிப் பொலிந்த துவர்வாய்ப்
பன்மாண் பேதையிற் பிரிந்த நீயே.

தலைமகன் இடைச்சுரத்து மீளக்கருதிய

நெஞ்சினைக் கழறிப் போயது.

**2042.** அகநானூறு - **358.** குறிஞ்சி

நீலத் தன்ன நிறங்கிள ரெருத்திற்
காமர் பீலி யாய்மயிற் றோகை
இன்றீங் குரல துவன்றி மென்சீர்
ஆடுதகை யெழில்நலங் கடுப்பக் கூடிக்
5 கண்ணே ரிதழ தண்ணறுங் குவளைக்
குறுந்தொட ரடைச்சிய நறும்பல் கூழை
நீடுநீர் நெடுஞ்சுனை ஆயமொ டாடாய்
உயங்கிய மனத்தை யாகிப் புலம்புகொண்டு
இன்னை யாகிய நின்னிறம் நோக்கி
10 அன்னை வினவின ளாயின் அன்னோ
என்னென உரைக்கோ யானே துன்னிய
பெருவரை யிழிதரு நெடுவெள் ளருவி
ஓடை யானை யுயர்மிசை யெடுத்த
ஆடுகொடி கடுப்பத் தோன்றுங்
15 கோடுயர் வெற்பன் உறீஇய நோயே.

பகலே சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச்
சொல்லியது. மருதனிளநாகனார் 1143

**2043.** அகநானூறு - **365.** பாலை

அகல்வாய் வான மாலிருள் பரப்பப்
பகலாற் றுப் படுத்த பையென் தோற்றமொடு
சினவல் போகிய புன்கண் மாலை

அத்த நடுகல் ஆளென வுதைத்த
5 கான யானைக் கதுவாய் வள்ளுகிர்
இரும்பனை யிதக்கையின் ஒடியு மாங்கண்
கடுங்க ணாடவர் ஏமுயல் கிடக்கை
வருநர் இன்மையிற் களையுநர்க் காணா
என்றூழ் வெஞ்சுரந் தந்த நீயே
10 துயர்செய் தாற்று யாகிப் பெயர்பாங்கு
உள்ளினை வாழிய நெஞ்சே வென்வேல்
மாவண் கழுவுள் காமூ ராங்கட்
பூதந் தந்த பொரியரை வேங்கைத்
தண்கமழ் புதுமலர் நாறும்
15 அஞ்சி லோதி யாய்மடத் தகையே.

தலைமகன் இடைச்சுரத்து நின்று சொல்லியது.

## 2044. அகநானூறு - 368. குறிஞ்சி

தொடுதோற் கானவன் சூடுறு வியன்புனங் கரிபுறங்
கழீஇய பெரும்பாட் டீரத்துத் தோடுவளர் பைந்தினை
நீடுகுரல் காக்கும் ஒண்டொடி மகளிர்க் கூச லாக

5 ஆடுசினை யொழித்த கோடிணர் கஞலிய
குறும்பொறை யயலது நெடுந்தாள் வேங்கை
மடமயிற் குடுமியிற் றோன்று நாடன்
உயர்வரை மருங்கிற் காந்தளஞ் சோலைக்
குரங்கறி வாரா மரம்பயி லிறும்பிற்

10 கடிசுனைத் தெளிந்த மணிமருள் தீநீர்
பிடிபுணர் களிற்றின் எம்மொ டாடிப் பன்னா
ளும்பர்ப் பெயர்ந்து சின்னாள் கழியா மையே
வழிவழிப் பெருகி



அம்பணை விளைந்த தேக்கட் டேறல்
15 வண்டுபடு கண்ணியர் மகிழுஞ் சீறூர்
எவன்கொல் வாழி தோழி கொங்கர்
மணியரை யாத்து மறுகின் ஆடும்
உள்ளி விழவின் அன்ன
அலரா கின்றது பலர்வாய்ப் பட்டே.

பகலே சிறைப்புறமாகத் தலைமகட்குச்
சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.

**2045.** அகநானூறு - **380.** நெய்தல்

தேர்சேண் நீக்கித் தமியன் வந்துநும்
ஊர்யா தென்ன நணிநணி யொதுங்கி
முன்னாட் போகிய துறைவன் நெருநை
அகலிலை நாவ லுண்டுறை யுதிர்த்த
5 கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன்
தாழை வேரளை வீழ்துணைக் கிடூஉம்
அலவற் காட்டி நற்பாற் றிதுவென
நினைந்த நெஞ்சமொடு நெடிதுபெயர்ந் தோனே

உதுக்காண் தோன்றுந் தேரே இன்று
10 நாமெதிர் கொள்ளா மாயின் தானது
துணிகுவன் போலாம் நாணுமிக வுடையன்
வெண்மணல் நெடுங்கோட்டு மறைகோ
அம்ம தோழி கூறுமதி நீயே.

பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது.

**2046.** அகநானூறு - **387.** பாலை

திருந்திழை நெகிழ்ந்து பெருந்தோள் சாஅய்
அரிமதர் மழைக்கண் கலுழச் செல்வீர்
வருவீ ராகுதல் உரைமின் மன்னோ
பூக்கண் பறைந்த புன்றலைச் சிறாஅரொடு
5 அவ்வரி கொன்ற கறைசேர் வள்ளுகிர்ப்



பசைவிரற் புலைத்தி நெடிதுபிசைந் தூட்டிய
பூந்துகி லிமைக்கும் பொலன்காழ் அல்குல்
அவ்வரி சிதைய நோக்கி வெவ்வினைப்
பயிலரிற் கிடந்த வேட்டுவிளி வெரீஇ
10 வரிப்புற இதலின் மணிக்கட் பேடை

நுண்பொறி யணிந்த எருத்திற் கூர்முட்
செங்காற் சேவற் பயிரு மாங்கண்
வில்லீண் டருஞ்சமந் ததைய நூறி
நல்லிசை நிறுத்த நாணுடை மறவர்
15 நிரைநிலை நடுகற் பொருந்தி இமையாது
இரைநசைஇக் கிடந்த முதுவாய்ப் பல்லி
சிறிய தெற்றுவ தாயிற் பெரிய
ஓடை யானை யுயர்ந்தோ ராயினும்
நின்றுங்குப் பெயருங் கானஞ்
20 சென்றோர் மன்னென இருக்கிற் போர்க்கே.

தலைமகளது குறிப்பறிந்து தோழி தலைமகனைச் சொல்லியது.
செலவழுங்கச்

**2047. கலித்தொகை - 66. மருதம் : 1**

வீங்குநீர் அவிழ்நீலம் பகர்பவர் வயற்கொண்ட
ஞாங்கர் மலர்சூழ்தந் தூர்புகுந்த வரிவண்டு
ஓங்குயர் எழில்யானைக் கனைகடாங் கமழ்நாற்றம்

ஆங்கவை விருந்தாற்றப் பகலல்கிக் கங்குலான் 5
வீங்கிறை வடுக்கொள வீழுநர்ப் புணர்ந்தவர்
தேங்கமழ் கதுப்பினுள் அரும்பவிழ் நறுமுல்லை
பாய்ந்தூதிப் படர்தீர்ந்து பண்டுதா மரீஇய
பூம்பொய்கை மறந்துள்ளாப் புனலணி நல்லூர ! 9

அணைமென்றோள் யாம்வாட அமர்துணைப்
புணர்ந்துநீ மணமனையா யெனவந்த மல்லலின்
மாண்பன்றோ பொதுக்கொண்ட கவ்வையிற்
பூவணிப் பொலிந்தநின் வதுவையங் கமழ்நாற்றம்
வைகறைப் பெற்றதை ; 1146 சங்க
இலக்கியம்

13 கனலுநோய்த் தலையும்நீ கனங்குழை யவரொடு
புனலுளா யெனவந்த பூசலிற் பெரிதன்றோ
தார்கொண்டாள் தலைக்கோதை தடுமாறிப் பூண்டநின்
ஈரணி சிதையாதெம் இல்வந்து நின்றதை ;
17 தணந்ததன் றலையும்நீ தளரிய லவரொடு

துணங்கையா யெனவந்த கவ்வையிற்
கடப்பன்றோ
ஒளிபூத்த
களிதட்ப

நுதலாரோ டோரணிப் பொலிந்தநின்
வந்த இக் கவின்காண இயைந்ததை ;
எனவாங்கு,
22 அளிபெற்றேம் எம்மைநீ அருளினை விளியாது
வேட்டோர் திறத்து விரும்பியநின் பாகனும்
நீட்டித்தா யென்று கடாஅங் கடுந்திண்டேர்
பூட்டு விடாஅ நிறுத்து.
பரத்தையிற் பிரிந்துவந்த தலைவன் தனது

ஆற்றுமையே வாயிலாகத் தலைவியுழைச் சென்றற்கு, அவன் முன்பு வதுவையயர்ந்ததூஉம் அப்பொழுது புனலாடியதூஉம் இப்பொழுது அணங்கையாடியதூஉங் கூறிப் புலந்தாள் தலைவி; அவள் புலந்தவாறு கண்டு சென்றுசார்ந்த தலைமகனுடன் ஊடல் தீர்கின்றாள் கூறியது.

**2048.** கலித்தொகை - **67.** மருதம் : **2.**

கார்முற்றி யிணரூழ்த்த கமழ்தோட்ட மலர்வேய்ந்து
சீர்முற்றிப் புலவர்வாய்ச் சிறப்பெய்தி யிருநிலம்
தார்முற்றி யதுபோலத் தகைபூத்த வையைதன்
நீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லால் நேராதார்
போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்;

6 நலத்தகை யெழிலுண்க ணல்லார்தங் கோதையால்
அலைத்தபுண் வடுக்காட்டி அன்பின்றி வரினெல்லா
புலப்பென்யான் என்பேன்மன் அந்நிலையே அவற்காணின்
கலப்பென் என்னுமிக் கையறும் நெஞ்சே;
10

கோடெழில் அகலல்குற் கொடியன்னார் முலைமூழ்கிப்
பாடழி சாந்தினன் பண்பின்றி வரினெல்லா

## மருதனிளநாகனுர் 1147

ஊடுவென் என்பேன்மன் அந்நிலையே
அவற்காணின்
கூடுவென் என்னுமிக் கொள்கையில் நெஞ்சே ;
14 இனிப்புணர்ந்த எழினல்லார் இலங்கெயி
றுறூஉவின்
நனிச்சிவந்த வடுக்காட்டி நாணின்றி
வரினெல்லா
துனிப்பென்யான் என்பேன்மன் அந்நிலையே
யவற்காணின்
தனித்தே தாழுமித் தனியில் நெஞ்சே ;
எனவாங்கு,
19 பிறைபுரை யேர்நுதால் தாமெண்ணி
யவையெல்லாம்
துறைபோத லொல்லுமோ தூவாகா தாங்கே
அறைபோகும் நெஞ்சுடை யார்க்கு.

இது வாயின்மறுத்த தலைமகள் ஆற்றுமைவாயிலாகப் புக்குக் கூடிய தலைமகனது நீக்கத்துக்கண் புக்க தோழிக்குக் கூறியது.

## 2049. கலித்தொகை - 68. மருதம் : 3

பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளுஞ்

செல்வர்க்கு

மதிமொழி யிடல்மாலை வினைவர்போல் வல்லவர்
செதுமொழி சீத்த செவிசெறு வாக
முதுமொழி நீராப் புலனா வுழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர

!

6 ஊரன்மன் உரனல்லன் நமக்கென்ன

வுடன்வாளாது

ஓரூர்தொக் கிருந்தநின் பெண்டிருள் நேராகிக்
களையாநின் குறிவந்தெங் கதவஞ்சேர்ந் தசைத்தகை
வளையின்வாய் விடல்மாலை மகளிரை நோவேமோ

கேளலன் நமக்கவன் குறுகன்மி னெனமற்றெந்
தோளொடு பகைபட்டு நினைவாடு நெஞ்சத்தேம் ;

12 ஊடியார் நலந்தேம்ப ஒடியெறிந் தவர்வயின்
மால்தீர்க்கு மவன்மார்பென் றெழுந்தசொல்

நோவேமோ-

முகைவாய்த்த முலைபாயக் குழைந்தநின் தாரெள்ள
வகைவரிச் செப்பினுள் வைகிய கோதையேம் ;

16 சேரியாற் சென்றுநீ சேர்ந்தஇல் வினாயினன்
தேரொடு திரிதரும் பாகனைப் பழிப்பேமோ

ஒலிகொண்ட சும்மையான் மணமனை குறித்தெம்மிற்
பொலிகெனப் புகுந்தநின் புலையனைக் கண்டயாம் ;

எனவாங்கு,

21 நனவினுள் வேறாகும் வேளா முயக்கம்
மனைவரிற் பெற்றுவந்து மற்றெந்தோள்
வாட
இனைய ரெனவுணர்ந்தார் என்றேக்கற் றாங்குக்
கனவினுள் எய்திய செல்வத் தனையதே
ஐய எமக்குநின் மார்பு.

பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைவனொடு
ஊடிய காமக் கிழத்தி தன்காதல்மிகுதி கூறி ஊடியவாறு
கண்டு சென்று சார்ந்த தலைமகனுடன் ஊடல் தீர்கின்றாள்
கூறியது.

**2050.** கலித்தொகை - **69.** மருதம் : **4**

போதவிழ் பனிப்பொய்கைப் புதுவது
தளைவிட்ட
தாதுசூழ் தாமரைத் தனிமலர்ப் புறஞ்சேர்பு
காதல்கொள் வதுவைநாட் கலிங்கத்து
ளொடுங்கிய
மாதர்கொள் மானோக்கின் மடந்தைதன்
துணையாக
5 ஓதுடை யந்தணன் எரிவலஞ்

செய்வான்போல்
ஆய்தூவி யன்னந்தன் அணிநடைப்
பெடையொடு
மேதகத் திரிதரூஉ மிகுபுனல் நல்லூர!
8

தெள்ளரிச் சிலம்பார்ப்பத் தெருவின்கண் தாக்கிநின்
உள்ளங்கொண் டொழித்தாளைக் குறைகூறிக் கொளநின்றாய்
துணிந்தது பிறிதாகத் துணிவிலள் இவளெனப்
பணிந்தாய்போல் வந்தீண்டுப் பயனில
மொழிவாயோ;
12 பட்டுழி யறியாது பாகனைத் தேரொடும்
விட்டவள் வரல்நோக்கி விருந்தேற்றுக்
கொளநின்றாய்
நெஞ்சத்த பிறவாக நிறையிலள் இவளென
வஞ்சத்தான் வந்தீங்கு வலியலைத் தீவாயோ;
16 இணர்ததை தண்காவின் இயன்றநின்
குறிவந்தாள்
புணர்வினிற் புகன்றாங்கே புனலாடப்
பண்ணியாய் மருதனிளநாகனூர் 1149

தருக்கிய பிறவாகத் தன்னிலள் இவளெனச்
செருக்கினால் வந்தீங்குச் சொல்லுகுத் தீவாயோ

;

எனவாங்கு,

21 தருக்கேம் பெருமநின் நல்கல் விருப்புற்றுத்
தாழ்ந்தாய்போல் வந்து தகவில செய்யாது

சூழ்ந்தவை செய்துமற் றெம்மையும்
வீழ்ந்தார் விருப்பற்றக் கால்.

உள்ளுவாய்

இதுவும் அது.

## 2051. கலித்தொகை - 70. மருதம் : 5

மணிநிற மலர்ப்பொய்கை மகிழ்ந்தாடும்
அன்னந்தன்
அணிமிகு சேவலை அகலடை மறைத்தெனக்
கதுமெனக் காணாது கலங்கியம் மடப்பெடை
மதிநிழல் நீருட்கண் டதுவென உவந்தோடித்
துன்னத்தன் எதிர்வரூஉந் துணைகண்டு
மிகநாணிப்
பன்மல ரிடைப்புகூஉம் பழனஞ்சே ரூரகேள் !
7 நலம்நீப்பத் துறந்தெம்மை நல்காய்நீ விடுதலிற்
பலநாளும் படாதகண் பாயல்கொண்
டியைபவால்
துணைமலர்க் கோதையார் வைகலும் பாராட்ட
மணமனைத் ததும்புநின் மணமுழவந் தெடுப்புமே

;11 அகலநீ துறத்தலின் அழுதோவா உண்கணெம்
புதல்வனை மெய்தீண்டப் பொருந்துதல் இயைபவால்
நினக்கொத்த நல்லாரை நெடுநகர்த் தந்துநின்
தமர்பாடுந் துணங்கையுள் அரவம்வந்
தெடுப்புமே ;15 வாராய்நீ துறத்தலின் வருந்திய எமக்காங்கே
நீரிதழ் புலராக்கண் இமைகூம்ப இயைபவால்
நேரிழை நல்லாரை நெடுநகர்த் தந்துநின்
தேர்பூண்ட நெடுநன்மான் தெண்மணிவந்
தெடுப்புமே; எனவாங்கு,
20 மெல்லியான் செவிமுதல் மேல்வந்தான் காலைபோல்
எல்லாந் துயிலோ எடுப்புக நின்பெண்டிர்



இல்லின் எழீஇய யாழ்தழீஇக் கல்லாவாய்ப்
பாணன் புகுதராக் கால்.

பரத்தையிற் பிரிந்துவந்த தலைவன் தோழியை வாயில் வேண்ட அவள் வாயினேர்வாள் நெருங்கிக் கூறியது.

**2052.** கலித்தொகை - **71.** மருதம் : **6**

விரிகதிர் மண்டிலம் வியல்விசும் பூர்தரப்

புரிதலை தளையவிழ்ந்த பூவங்கட் புணர்ந்தாடி
வரிவண்டு வாய்சூழும் வளங்கெழு பொய்கையுள்
துனிசிறந் திழிதருங் கண்ணினீர் அறல்வார
5 இனிதமர் காதலன் இறைஞ்சித்தன் அடிசேர்பு
நனிவிரைந் தளித்தலின் நகுபவள் முகம்போலப்
பனியொரு திறம்வாரப் பாசடைத் தாமரைத்
தனிமலர் தளைவிடூஉந் தண்டுறை நல்லூர !

9 ஒருநீ பிறரில்லை யவன்பெண்டி ரென்வுரைத்துத்
தேரொடுந் தேற்றிய பாகன்வந் தீயான்கொல்
ஓரிற்றன் கொணர்ந்துய்த்தார் புலவியுட் பொறித்தபுண்
பாரித்துப் புணர்ந்தநின் பரத்தைமை காணிய ;
13

மடுத்தவன் புகுவழி மறையேனென் றியாழொடும்
எடுத்துச்சூள் பலவுற்ற பாணன்வந் தீயான்கொல்
அடுத்துத்தன் பொய்யுண்டார்ப் புணர்ந்தநின்
எருத்தின்கண்
எடுத்துக்கொள் வதுபோலுந் தொடிவடுக்
காணிய ;

17 தணந்தனை யெனக்கேட்டுத் தவறோரா
தெமக்குநின்
குணங்களைப் பாராட்டுந் தோழன்வந்
தீயான்கொல்
கணங்குழை நல்லவர் கதுப்பற லணைத்துஞ்சி

அணங்குபோற் கமழுநின் அலர்மார்பு காணிய
;
என்றுநின்,
22 தீரா முயக்கம் பெறுநர்ப் புலப்பவர்
யார்நீ வருநாட்போல் அமைகுவம்யாம்
புக்கீமோ
மாரிக் கவாவுற்றுப் பீள்வாடு நெல்லிற்காங்கு



ஆராத் துவலை யளித்தது போலும்நீ
ஓர்யாட் டொருகால் வரவு.

பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனது வரவுகண்டு
ஊடிய காமக்
கிழத்தி ஊடியவாறுகண்டு சென்று சார்ந்த
தலைவனுடன் அவள்
ஊடல் தீர்கின்றாள் கூறியது.

**2053. கலித்தொகை - 72. மருதம் : 7**

இணைபட நிவந்த நீலமென் சேக்கையுள்
துணைபுணர் அன்னத்தின் தூவிமெல் லணையசைஇச்

சேடியல் வள்ளத்துப் பெய்தபால் சிலகாட்டி
ஊடுமென் சிறுகிளி யுணர்ப்பவள் முகம்போலப்

5

புதுநீர புதலொற்றப் புணர்திரைப் பிதிர்மல்க
மதிநோக்கி யலர்வீத்த ஆம்பல்வான் மலர்கண்ணிக்

கடிகயத் தாமரைக் கமழ்முகை கரைமாவின்
வடிதீண்ட வாய்விடூஉம் வயலணி நல்லூர!

9 கண்ணிநீ கடிகொண்டார்க் கனைதொறும் யாமழப்
பண்ணினாற் களிப்பிக்கும் பாணன்காட் டென்றானோ
பேணானென் றுடன்றவர் உகிர்செய்த வடுவினன்
மேனாள்நின் தோள்சேர்ந்தார் நகைசேர்ந்த இதழினை;

13 நாடிநின் தூதாடித் துறைச்செல்லாள் ஊரவர்
ஆடைகொண் டொலிக்குநின் புலைத்திகாட் டென்றாளோ
கூடியார் புனலாடப் புணையாய மார்பினில்
ஊடியார் எறிதர ஒளிவிட்ட அரக்கினை;

17 வெறிதுநின் புகழ்களை வேண்டாரில் எடுத்தேத்தும்
அறிவுடை யந்தணன் அவளைக்காட் டென்றானோ

களிபட்டார் கமழ்கோதை கயம்பட்ட
வுருவின்மேற்
குறிபெற்றார் குரற்கூந்தற் கோடுளர்ந்த
துகளினை ;

எனவாங்கு,

22 செறிவுற்றேம் எம்மைநீ செறிய அறிவுற்று
அழிந்துகு நெஞ்சத்தேம் அல்லல் உழப்பக்
கழிந்தவை யுள்ளாது கண்ட விடத்தே



அழிந்துநிற் பேணிக் கொளலின் இழிந்ததோ
இந்நோ யுழத்த லெமக்கு.

இதுவும் அது.

**2054.** கலித்தொகை - **73.** மருதம் : **8**

அகன்துறை அணிபெறப் புதலொடு தாழ்ந்த
பகன்றைப்பூ வுறநீண்ட பாசடைத் தாமரை
கண்பொர ஒளிவிட்ட வெள்ளிய வள்ளத்தால்
தண்கமழ் நறுந்தேறல் உண்பவள் முகம்போல
வண்பிணி தளைவிடூஉம் வயலணி நல்லூர !

6 நோதக்க தெனநின்னை நொந்தீவா ரில்வழித்
தீதிலேன் யானெனத் தேற்றிய வருதிமன்
ஞெகிழ்தொடி யிளையவ ரிடைமுலைத் தாதுசோர்ந்து
இதழ்வனப் பிழந்தநின் கண்ணிவந் துரையாக்கால் ;

10 கனற்றிநீ செய்வது கடிந்தீவா ரில்வழி
மனத்திற்றீ திலனென மயக்கிய வருதிமன்
அலமர லுண்கண்ணார் ஆய்கோதை குழைத்தநின்
மலர்மார்பின் மறுப்பட்ட சாந்தம்வந் துரையாக்கால்;

14 என்னைநீ செய்யினும் உரைத்தீவா ரில்வழி
முன்னடிப் பணிந்தெம்மை யுணர்த்திய வருதிமன்
நிரைதொடி நல்லவர் துணங்கையுள்
தலைக்கொள்ளக்
கரையிடைக் கிழிந்தநின் காழகம்வந்
துரையாக்கால்;

எனவாங்கு,

19 மண்டுநீ ராரா மலிகடல் போலும்நின்
தண்டாப் பரத்தை தலைக்கொள்ள நாளும்
புலத்தகைப் பெண்டிரைத் தேற்றிமற்
றியாரெனின்
தோலாமோ நின்பொய் மருண்டு.

" தங்கிய வொழுக்கத்துக் கிழவனை வணங்கி
யெங்கையர்க் குரையென விரத்தற்கண் " தலைவி கூறியது.

மருதனிளநாகனார் 1153

## 2055. கலித்தொகை - 74. மருதம் : 9

பொய்கைப்பூப் புதிதுண்ட வரிவண்டு
கழிப்பூத்த

நெய்தற்று தமர்ந்தாடிப் பாசடைச் சேப்பினுட்
செய்தியற்றி யதுபோல வயற்பூத்த தாமரை
மைதபு கிளர்கொட்டை மாண்பதிப்
படர்தரூஉங்
கொய்குழை அகைகாஞ்சித் துறையணி நல்லூர
!

6 அன்பிலன் அறனிலன் எனப்படா
னெனவேத்தி
நின்புகழ் பலபாடும் பாணனும் எழுற்றான் ;
8

நஞ்சுயிர் செகுத்தலும் அறிந்துண்டாங் களியின்மை
கண்டுநின் மொழிதேறும் பெண்டிரும் எழுற்றார் ;

10 மூன்பகற் றலைக்கூடி நன்பகல் அவள்நீத்துப்
பின்பகற் பிறர்த்தேரும் நெஞ்சமும் எழுற்றாய்
;

எனவாங்கு,

13 கிண்கிணி மணித்தாரோ டொலித்தார்ப்ப
ஒண்டொடிப்
போமர்க் கண்ணார்க்கும் படுவலை யிதுவென
ஊரவ ருடன்நகத் திரிதரும்
தேரேமுற் றன்று நின்னினும் பெரிதே.

பரத்தையிற்பிரிந்து வந்த தலைவனோடு ஊடிய

காமக்கிழத்தியை அவன் இவ்வகையன கூற நீ
ஏமுற்றாயோவென்றாற்கு அவள் கூறிபதி.

**2056. கலித்தொகை - 75. மருதம் : 10**

நீரார் செறுவில் நெய்தலொடு நீடிய
நேரித ழாம்பல் நிரையிதழ் கொண்மார்
சீரார் சேயிழை யொலிப்ப ஓடும்
ஓரை மகளி ரோதை வெரீஇயெழுந்து
5 ஆர லார்கை யஞ்சிறைத் தொழுதி
உயர்ந்த பொங்க ருயர்மர மேறி
அமர்க்கண் மகளி ரலப்பிய அந்நோய்
தமர்க்குரைப் பனபோற் பல்குரல் பயிற்றும்
73



உயர்ந்த போரின் ஒலிநல் லூரன்
10 புதுவோர்ப் புணர்தல் வெய்ய னாயின்
வதுவை நாளால் வைகலும் அஃதியான்
நோவேன் தோழி நோவாய் நீயென
எற்பார்த் துறுவோய் கேளினித் தெற்றென ;
14 எல்லினை வருதி யெவன்குறித் தனையெனச்
சொல்லா திருப்பே னாயின் ஒல்லென
விரியுளைக் கலிமான் தேரொடு வந்த
விருந்தெதிர் கோடலின் மறப்ப லென்றும் ;

18 வாடிய பூவொடு வாரலெம் மனையென
ஊடி யிருப்பே னாயின் நீடாது
அச்சா றாக வுணரிய வருபவன்
பொய்ச்சூ ளஞ்சிப் புலவே னாகுவல் ;
22 பகலாண் டல்கினை பரத்த என்றியான்
இகலி யிருப்பே னாயின் தான்றன்
முதல்வன் பெரும்பெயர் முறையுளிப் பெற்ற
புதல்வற் புல்லிப் பொய்த்துயில் துஞ்சும் ;

ஆங்க,
27 விருந்தெதிர் கொள்ளவும் பொய்ச்சூள் அஞ்சவும்
அரும்பெறற் புதல்வனை முயங்கக் காணவும்
ஆங்கவிந் தொழியுமென் புலவி தாங்காது
30 அவ்வவ் விடத்தான் அவையவை காணப்
பூங்கண் மகளிர் புனைநலஞ் சிதைக்கும்
மாய மகிழ்நன் பரத்தைமை
நோவென் தோழி கடன்நமக் கெனவே.

தலைவன் நாடோறும் வதுவையயர்ந்து வந்தால் யான் அதற்குப் பொறேனாக நீ ஊடலின்றி அவன் வந்தபொழுதே எதிர்கொள்ளுதி யென்ற தோழிக்குத் தலைமகள் அதற்குக் காரணங் கூறியது.

**2057.** கலித்தொகை - **76.** மருதம் : **11**

புனையிழை நோக்கியும் புனலாடப் புறஞ்சூழ்ந்தும்

நினையுபு வருந்துமிந் நெடுந்தகை திறத்திவ்வூர்
இனையளென் றெடுத்தோதற் கனையையோ நீயென
வினவுதி யாயின் விளங்கிழாய் கேளினி!

6 செவ்விரல் சிவப்பூரச் சேட்சென்று
யென்றவன்
பௌவநீர்ச் சாய்க்கொழுதிப் பாவைதந்
தனைத்தற்கோ
கௌவைநோ யுற்றவர் காணுது கடுத்தசொல்
ஒவ்வாவென் றுணராய்நீ யொருநிலையே
யுரைத்ததை ;
10 ஒடுங்கியாம் புகலொல்லேம் பெயர்தர
அவன்கண்டு
நெடுங்கய மலர்வாங்கி நெறித்துத்தந்
தனைத்தற்கோ
விடுந்தவர் விரகின்றி யெடுத்தசொற்
பொய்யாகக்
கடிந்தது மிலையாய்நீ கழறிய வந்ததை ;
14

வரிதேற்றாய் நீயென வணங்கிறை யவன்பற்றித் [கோ
தெரிவேய்த்தோட்கரும்பெழுதித்தொய்யில்செய்தனைத்தற்
புரிபுநம் ஆயத்தார் பொய்யாக எடுத்தசொல்
உரித்தென வுணராய்நீ யுலமந்தாய் போன்றதை

;

எனவாங்கு,

19

அரிதினி ஆயிழாய் அதுதேற்றல் புரிபொருங்கு
அன்றுநம் வதுவையுள் நமர்செய்வ தின்றீங்கே
தானயந் திருந்த திவ்வூ ராயின்
நாஞ்செயற் பால தினி.

எவன்கொலோ

"அச்ச நீடினும்" என்றதனுற் கூட்டமுண்மை உணர்ந்த தோழிக்கு உண்மை கூறுதற்கு அஞ்சிய அச்சம் நீட்டித்துத் தலைவி கூறியது. இது "திணைமயக் குறுதலுங் கடிநிலையிலவே" என்னும் சூத்திரவிதியான் மருதத்துக் குறிஞ்சி வந்தது.

## 2058. கலித்தொகை - 77. மருதம் : 12

இணையிரண்டியைந்தொத்தமுகைநாப்பண்பிறிதியாதுந்
துணையின்றித் தளைவிட்ட தாமரைத் தனிமலர்

5

திருமுக மிறைஞ்சினள் வீழ்பவற் கினைபவள்
அரிமதர் மழைக்கண்ணீர் அலர்முலைமேல் தெறிப்பபோல்
தகைமலர்ப் பழனத்த புள்ளொற்ற ஒசிந்தொல்கி



மிகநனி சேர்ந்த அம் முகைமிசை யம்மலர்
அகவிதழ்த் தண்பனி யுறைத்தரு மூரகேள் !

8

தண்டளிர்த் தகைபூத்த தாதெழில் நலஞ்செலக்
கொண்டுநீ மாறிய கவின்பெறல் வேண்டேன்மன்
உண்டாதல் சாலாவென் உயிர்சாதல்
உணர்ந்துநின்
பெண்டெனப் பிறர்கூறும் பழிமாறப்
பெறுகற்பின் ;
12 பொன்னெனப் பசந்தகண் போதெழில்
நலஞ்செலத்
தொன்னல மிழந்தகண் துயில்பெறல்
வேண்டேன்மன்
நின்னணங் குற்றவர் நீசெய்யுங் கொடுமைகள்
என்னுழை வந்துநொந் துரையாமை

பெறுகற்பின் ; 16 மாசற மண்ணுற்ற மணியேசும் இருங்கூந்தல்
வீசேர்ந்து வண்டார்க்குங்கவின்பெறல் வேண்டேன்மன்
நோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாணன் எம்மனை
நீசேர்ந்த இல்வினாய் வாராமை பெறுகற்பின் ;

ஆங்க,

21 கடைஇய நின்மார்பு தோயலம் என்னும்
இடையும் நிறையும் எளிதோநிற் காணிற்
கடவுபு கைத்தங்கா நெஞ்சென்னுந் தம்மோடு
உடன்வாழ் பகையுடை யார்க்கு.

பரத்தையர் சேரியிற்சென்றுவந்த தலைவனோடு ஊடிய தலைவி ஊடல் தீர்கின்றாள் கூறியது.

## 2059. கலித்தொகை - 78. மருதம் : 13.

பன்மலர்ப் பழனத்த பாசடைத் தாமரை
இன்மலர் இமிர்பூதுந் துணைபுணர் இருந்தும்பி
உண்டுறை யுடைந்தபூப் புனல்சாய்ப்பப் புலந்தூடிப்
பண்புடை நன்னாட்டுப் பகைதலை வந்தென
5 அதுகைவிட் டகன்றொரீஇக் காக்கிற்பான் குடைநீழற்
பதிபடர்ந் திறைகொள்ளுங் குடிபோலப் பிறிதுமொரு
பொய்கைதேர்ந் தலமரும் பொழுதினான் மொய்தப
இறைபகை தணிப்பஅக் குடிபதிப் பெயர்ந்தாங்கு

நிறைபுனல் நீங்கவந் தத்தும்பி யம்மலர்ப்
பறைதவிர் பசைவிடூஉம் பாய்புனல் நல்லூர!

11

நீங்குங்கால் நிறஞ்சாய்ந்து புணருங்காற் புகழ்பூத்து
நாங்கொண்ட குறிப்பிவள் நலமென்னுந் தகையோதான்
நெரியிதழ் சோர்ந்துக ஏதிலார்ப் புணர்ந்தமை
கரிகூறுங் கண்ணியை ஈங்கெம்மில் வருவதை;

15 சுடர்நோக்கி மலர்ந்தாங்கே படிற்கூம்பு
மலர்போலென்
தொடர்நீப்பின் தொகுமிவள் நலமென்னுந் தகையோதான்
அலர்நாணிக் கரந்தநோய் கைம்மிகப் பிறர்கூந்தல்
மலர்நாறு மார்பினை ஈங்கெம்மில் வருவதை;

19 பெயினந்தி வறப்பிற்சாம் புலத்திற்குப்
பெயல்போல்யான்
செலினந்திச் செறிற்சாம்பு மிவளென்னுந்
தகையோதான்
முடியுற்ற கோதைபோல் யாம்வாட ஏதிலார்
தொடியுற்ற வடுக்காட்டி ஈங்கெம்மில் வருவதை
;

ஆங்க,

24 ஐய அமைந்தன் றனைத்தாகப் புக்கீமோ
வெய்யாரும் வீழ்வாரும் வேறாகக் கையின்
முகைமலர்ந் தன்ன முயக்கிற் றகையின்றே
தண்பனி வைகல் எமக்கு.

பரத்தையர்சேரியிற் சென்றுவந்த தலைவனோடு
ஊடிய காமக் கிழத்தி ஊடல்தீர்கின்றாள் கூறியது.

**2060.** கலித்தோகை - **79.** மருதம் : **14**

புள்ளிமிழ் அகல்வயல் ஒலிசெந்நெ லிடைப்பூத்த
முள்ளரைத் தாமரை முழுமுதல் சாய்த்ததன்
வள்ளித ழுறநீடி வயங்கிய வொருகதிர்
அவைபுக ழரங்கின்மேல் ஆடுவாள் அணிநுதல்.

5 வகைபெறச் செரீஇய வயந்தகம்
போல்தோன்றுந்
தகைபெறு கழனியந் தண்டுறை யூரகேள் ! 7
அணியொடு வந்தீங்கெம் புதல்வனைக் கொள்ளாதி
மணிபுரை செவ்வாய்நின் மார்பகலம்
நனைப்பதால்



தோய்ந்தாரை யறிகுவேன் யானெனக்
கமழும்நின்
சாந்தினாற் குறிகொண்டாள் சாய்குவ
ளல்லளோ ;

11 புல்லலெம் புதல்வனைப் புகலகல் நின்மார்பிற்

பல்காழ்முத் தணியாரம் பற்றினன் பரிவானுன்
மாணிழை மடநல்லார் முயக்கத்தை
நின்மார்பிற்
பூணினாற் குறிகொண்டாள் புலக்குவ
ளல்லளோ ;
15 கண்டேயெம் புதல்வனைக் கொள்ளாதி
நின்சென்னி
வண்டிமிர் வகையிணர் வாங்கினன் பரிவானுன்
நண்ணியார்க் காட்டுவ திதுவெனக் கமழும்நின்
கண்ணியாற் குறிகொண்டாள் காய்குவ ளல்லளோ ;

எனவாங்கு,

20 பூங்கட் புதல்வனைப் பொய்பல பாராட்டி
நீங்கா யிகவாய் நெடுங்கடை நில்லாதி
ஆங்கே அவர்வயிற் சென்றீ அணிசிதைப்பான்
ஈங்கெம் புதல்வனைத் தந்து.

செல்லாக் காலைச் செல்கெனக் கூறிவிடுத்தது. அது தலைவன் இனிச்செல்லா னென்பது இடமுங்காலமும்பற்றி அறிந்த காலத்து ஊடலுள்ளத்தாற் கூடப்பெறுதாள் செல்கெனக் கூறிவிடுத்தாற்றுதலாம்.

**2061.** கலித்தொகை - **80.** மருதம் : **15**

நயந்தலை மாறுவார் மாறுக மாறுக்
கயந்தலை மின்னுங் கதிர்விடு முக்காழ்ப்
பயந்தவெங் கண்ணுரை யாங்காண நல்கித்
திகழொளி முத்தங் கரும்பாகத் தைஇப்
5 பவழம் புனைந்த பருதி சுமப்பக்

கவழம் அறியாநின் கைபுனை வேழம்
புரிபுனை பூங்கயிற்றிற் பையப வாங்கி
அரிபுனை புட்டிலின் ஆங்கணீர்த் தீங்கே
வருகவெம் பாக மகன் ;

10 கிளர்மணி யார்ப்பார்ப்பச் சாஅய்ச்சாஅய்ச்
செல்லுந்
தளர்நடை காண்டல் இனிதுமற் றின்னுதே

மருதனிளநாகனுர் 1159

உளமென்ன நுந்தைமாட் டெவ்வம்
உழப்பார்
வளைநெகிழ்பு யாங்காணுங் கால் ;

14

ஐய, காமரு நோக்கினை யத்தத்தா வென்னுநின்
தேமொழி கேட்டல் இனிதுமற் றின்னுதே
உய்வின்றி நுந்தை நலனுணச்
சாஅய்ச்சாஅய்மார்
எவ்வநோ யாங்காணுங் கால் ;

18

ஐய, திங்கட் குழவி வருகென யான்நின்னை
அம்புலி காட்டல் இனிதுமற் றின்னாதே
நலக்காது நாநதை புறமர் றப ப்டடவா
அல்குல்வரி யாங்காணுங் கால் ;
22 ஐயளம், காதிற் கனங்குழை வாங்கிப்
பெயர்தொறும்
போதில் வறுங்கூந்தற் கொள்வதை
நின்னையாம்
ஏதிலார் கண்சாய நுந்தை வியன்மார்பில் .
தாதுதேர் வண்டின் கிளைபடத் தைஇய
கோதை பரிபாடக் காண்கும்.
பரத்தையிற்பிரிந்து வந்ததலைவன்
சிறைப்புறத்தானாகத் தலைவி
மகனுக்கு உரைத்தது.

**2062.** கலித்தொகை - **81.** மருதம் : **16**

மையற விளங்கிய மணிமருள் அவ்வாய்தன்
மெய்பெறு மழலையின் விளங்குபூண் நனைத்தரப்
பொலம்பிறை யுட்டாழ்ந்த புனைவினை யுருள்கலன்
நலம்பெறு கமழ்சென்னி நகையொடு துயல்வர

5 உருவெஞ்சா திடைகாட்டு முடைகழ லந்துகில்
அரிபொலி கிண்கிணி யார்ப்போவா அடிதட்பப்
பாலோ டலர்ந்த முலைமறந்து முற்றத்துக்
கால்வல்தேர் கையின் இயக்கி நடைபயிற்றா
ஆலமர் செல்வன் அணிசால் பெருவிறல்
போல வருமென் னுயிர் ;

11 பெரும, விருந்தொடு கைதுவா எம்மையும் உள்ளாய்
பெருந்தெருவிற் கொண்டாடி ஞாயர் பயிற்றத்



திருந்துபு நீகற்ற சொற்கள்யாங்
கேட்ப
மருந்தோவா நெஞ்சிற் கமிழ்தம்
பெருந்தகாய் கூறு சில ;

அயின்றற்றுப்

16 எல்விழாய்,சேய்கின்று நாங்கொணர்ந்த
பாணன்சிதைந்தாங்கே
வாயோடி
நோய்நாந்

யேனுதிப் பாடியம் என்றற்று

தணிக்கு மருந்தெனப் பாராட்ட
ஓவா தடுத்தடுத்தத் தத்தாவென்
பான்மாண
வேய்மென்தோள் வேய்த்திறஞ்
சேர்த்தலு மற்றிவன்
வாயுள்ளிற் போகா னரோ ;
22 உள்ளி யுழையே யொருங்கு
படைவிடக்
கள்வர் படர்தந் ததுபோலத்
தாமெம்மை
எள்ளுமார் வந்தாரே யீங்கு ;
25 ஏதப்பா டெண்ணிப் புரிசை
வியலுள்ளோர்
கள்வரைக் காணாது கண்டேமென்
பார்போலச்
சேய்நின்று செய்யாத சொல்லிச்
சினவல்நின்
ஆணை கடக்கிற்பார் யார் ;
29 அதிர்வில் படிறெருக்கி வந்தென்
மகன்மேல்
முதிர்பூண் முலைபொருத ஏதிலாள்
முச்சி
உதிர்துக ளுக்கநின் ஆடை யொலிப்ப
எதிர்வளி நின்றாய்நீ செல் ;

33 இனியெல்ல
ாயாம்,தீதிலேமென் றுதெளிப்பவுங்கைந்நீவி
யாதொன்று மெங்கண் மறுத்தர
வில்லாயின்
மேதக்க எந்தை பெயர்‌னே
யாங்கொள்வேம்
தாவா விருப்பொடுகன் று யாத்துழிச்
செல்லும்
ஆபோற் படர்தக நாம்.
தலைவன் பரத்தையிற்பிரிந்து வந்துழித்
தலைவி தன்மகனைத்
தழீஇ விளையாடுகின்ற விளையாட்டின்கண்,
தன்வரவு அறியாமைச்
சென்றுநின்ற தலைவன் அவள் ஊடலுணர்வனவும்
உறழ்ந்துசொல்லி
மகன்வாயிலாக ஊடல்தீர்ந்தது.

மருதனிளநாகனுர் 1161

**2063. கலித்தொகை - 82. மருதம் : 17**

ஞாலம் வறந்தீரப் பெய்யக் குணக்கேர்பு
காலத்திற் ரோன்றிய கொண்மூப்போல் எம்முலை
பாலொடு வீங்கத் தவகெடி தாயினை
புத்தேளிர் கோட்டம் வலஞ்செய் திவனொடு 5 புக்க
வழியெல்லாங் கூறு ;
கூறுவேன், மேயாயே போல வினவி வழிமுறைக்
காயாமை வேண்டுவல் யான்';

காயேம் ;
9 மடக்குறு மாக்களோடு ஓரை யயரும்
அடக்கமில் போழ்தின்கண் தந்தைகா

முற்ற
தொடக்கத்துத் தாயுழைப் புக்காற் கவளும்
மருப்புப்பூண் கையுறை யாக அணிந்து
பெருமான் நகைமுகங் காட்டென்பாள் கண்ணீர்
சொரிமுத்தங் காழ்சோர்வ போன்றன மற்றும்
15 வழிமுறைத் தாயுழைப் புக்காற் கவளும்
மயங்குநோய் தாங்கி மகனெதிர் வந்து
முயங்கினள் முத்தினள் நோக்கி நினைந்தே
நினக்கியாம் யாரேம் ஆகுது மென்று
வனப்புறக் கொள்வன நாடி அணிந்தனள்
20 ஆங்கே, அரிமத ருண்கண் பசப்பநோய் செய்யும்
பெருமான் பரத்தைமை யொவ்வாதி யென்றுள்
அவட்கினி தாகி விடுத்தனன் போகித்
தலைக்கொண்டு நம்மொடு காயுமற் றீதோர்
புலத்தகைப் புத்தேளில் புக்கான்
அலைக்கொரு

25 கோல்தா நினக்கவள் யாராகும் எல்லா
வருந்தியாம் நோய்கூர நுந்தையை
யென்றும்
பருந்தெறிந் தற்ருகக் கொள்ளுங்கொண்
டாங்கே
தொடியு முகிரும் படையாக நுந்தை
கடியுடை மார்பிற் சிறுகண் ணும்
உட்காள்
30 வடுவுங் குறித்தாங்கே செய்யும் விடுவினி



அன்ன பிறவும் பெருமான் அவள்வயின்
துன்னுத லோம்பித் திறவதின் முன்னிநீ
ஐயமில் லாதவ ரில்லொழிய எம்போலக்

கையா றுடையவ ரில்லல்லாற் செல்லல்
35 அமைந்த தினிநின் தொழில்.

புத்தேளிர் கோட்டம் வலஞ்செய்வித்துக்கொண்டு வருதற்குச் சேடியருடன் மகற்போக்கிய தலைமகள் அவன் நீட்டித்து வந்தவழித் 'தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை, மாயப்பரத்தை யுள்ளியவழி' யால், தலைமகன் சிறைப்புறத்தானுகச் சொல்லியது.

**2064.** கலித்தொகை - **83.** மருதம் : **18**

பெருந்திரு நிலைஇய வீங்குசோற்
றகன்மனைப்
பொருந்துநோன் கதவொற்றிப் புலம்பியாம்
உலமர
இளையவர் தழூஉவாடும் எக்கர்வாய் வியன்தெருவின்
விளையாட்டிக் கொண்டு வரற்கெனச் சென்றாய்
5 உளைவிலை, ஊட்டலென் தீம்பால் பெருகு மளவெல்லாம்
நீட்டித்த காரண மென் ;

கேட்டீ,

8 பெருமடற் பெண்ணைப் பிணர்த்தோட்டுப் பைங்குரும்பைக்
குடவாய்க் கொடிப்பின்னல் வாங்கித் தளரும்
பெருமணித் திண்டேர்க் குறுமக்கள் நாப்பண்
அகனகர் மீள்தருவா ளகப் புரிஞெகிழ்பு
நீல நிரைப்போ துறகாற் குலைவனபோற்
சாலகத் தொல்கிய கண்ணர் உயர்சீர்த்தி
15

ஆலமர் செல்வன் அணிசால் மகன்விழாக்
கால்கோளென் றாக்கிக் கதுமென நோக்கித்
திருந்தடி நூ புரமார்ப்ப இயலி விருப்பினாற்
கண்ணும் நுதலுங் கவுளுங் கவவியார்க்கு
ஒண்மை யெதிரிய அங்கையுந் தண்ணெனச்
செய்வன சிறப்பிற் சிறப்புச்செய் திவ்விரா
20 எம்மொடு சேர்ந்துசென் றீவாயாற்
செம்மால் நலம்புதி துண்டுள்ளா நாணிலி

செய்த

## மருதனிளநாகனுர்

1163

புலம்பெலாந் தீர்க்குவே மன்னென் றிரங்குபு
வற்றுஞத் தாயர் எதிர்கொள்ள மாற்றுத
கள்வஞல் தங்கிய தல்லாற் கதியாதி
ஒள்ளிழா யான்தீ திலேன் ;

26 எள்ளலான், அம்மென்பணைத்தோளுமர்வேய்ந்தகண்ணியோடு
எம்மில் வருதியோ எல்லாநீ தன்மெய்க்கண்
அந்தீஞ்சொல் நல்லா ரணிந்த கலங்காட்டி
30

முந்தை யிருந்து மகன்செய்த நோய்த்தலை
வெந்தபுண் வேலெறிந் தற்றுல் வடுவொடு
தந்தையும் வந்து நிலை.

விளையாட்டிக்கொண்டு வாற்குச் சேடியரோடு மகற்போக்கிய

தலைவி அவன் நீட்டித்துவந்தவழி, " தாயர் கண்ணிய நல்லணிப்

புதல்வனை, மாயப் பரத்தை யுள்ளிய வகை" சிறைப்புறமாகக்

கேட்டுவந்த தலைவனைக் கண்டு அவள் தன்னுள்ளே

புலர்தது.

2065. கலித்தொகை - 84. மருதம் : 19

உறுவளி தூக்கும் உயர்சினை மாவின்
நறுவடி யாரிற் றவைபோல் அழியக்
கரந்தியான் அரக்கவுங் கைநில்லா
வீங்கிச்
சுரந்தவென் மென்முலைப் பால்பழு தாக
நீ
5 நல்வாயிற் போத்தந்த பொழுதினான்
எல்லா
கடவுட் கடிநகர் தோறும் இவனை
வலங்கொளீஇ வாவெனச் சென்றாய்
விலங்கினை
ஈர மிலாத இவன்தந்தை பெண்டிருள்
யாரிற் றவிர்ந்தனை கூறு ;

10 நீருள், அடைமறை யாயிதழ்ப்
போதுபோற் கொண்ட
குடைநிழற் றோன்றுநின் செம்மலைக்
காணூஉ
இவன்மன்ற யானோவ வுள்ளங்கொண்
டுள்ளா
மகனல்லான் பெற்ற மகனென்று
அகனகர்

வாயில் வரையிறந்து போத்தந்து தாயர்

15 தெருவிற் றவிர்ப்பத் தவிர்ந்தனன்
மற்றவர்



தத்தங் கலங்களுட்
ஒத்தவை யாராய்ந்
கையுறை யென்றிவற்கு
தணிந்தார் பிறன்பெண்டிர்
ஈத்தவை கொள்வானும் இஃதொத்தன்
சீத்தை
செறுதக்கான் மன்ற பெரிது ;
20 சிறுபட்டி, ஏதிலார் கையெம்மை
மோதிரம் யாவோயாங் காண்கு

யெள்ளுபு நீதொட்ட
;
22 அவற்றுள், நறுவிதழ் கண்டன்ன
செவ்விரற் கேற்பச்
சுருவே றெழுதிய மோதிரந் தொட்டாள்
குறியறிந்தேன் காமன் கொடியெழுதி யென்றுஞ்
செறியாப் பரத்தை யிவன்தந்தை மார்பிற்
பொறியொற்றிக் கொண்டாள்வ

லென்பது தன்னை
அறீஇய செய்த வினை ;
அன்னையோ இஃதொன்று,
29

மூந்தைய கண்டும் எழுகல்லா தென்முன்னர்
வெந்தபுண் வேலெறிந் தற்றா இஃதொன்று
தந்தை யிறைத்தொடி மற்றிவன்
தன்கைக்கண்
தந்தார்யா ரெல்லாஅ இது ;
33 இஃதொன்
று,என்னொத்துக்காண்கபிறருமிவற்கென்னும்
தன்னலம் பாடுவி தந்தாளா நின்னை
இதுதொடு கென்றவர் யார் ;
36 அஞ்சாதி, நீயுந் தவறிலை நின்கை
யிதுதந்த
பூவெழி
வேனிற்

லுண்க ணவளுந் தவறிலள்
புனலன்ன நுந்தையை நோவார்யார்
மேனின்று மெள்ளி இதுவிவன்
கைத்தந்தாள்
40 தான் யாரோ வென்று வினவிய
நோய்ப்பாலேன்

யானே தவறுடையேன்.

கடவுட் கடிநகர் தோறும் வலங்கொளீஇ வரற்குச் சேடியரோடு மகற்போக்கிய தலைவி அவன் மீட்டித்துவந்துழி, “ தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை, மாயப் பரத்தை யுள்ளியவழி ”யின்கண், தந்தைதொடி மகன் கைக்கண்டு புலந்தாள் தன்னுள்ளே அழிந்து கூறியது.

## மருதனிளநாகனுர் 1165

## 2066. கலித்தொகை - 85. மருதம் : 20

காலவை, சுடுபொன் வளைஇய ஈரமை
சுற்றொடு
பொடியழற் புறந்தந்த செய்வுறு கிண்கிணி
;
3 உடுத்தவை, கைவினைப் பொலிந்த
காசமைபொலங்காழ்மேல்
மையில் செந்துகிர்க் கோவை
அவற்றின்மேல்
தைஇய பூந்துகி லைதுகழல் ஒருதிரை ;
6 கையதை, அலவன் கண்பெற அடங்கச்
சுற்றிய
பலவுறு கண்ணுட் சிலகோ லவிர்தொடி ;

8 பூண்டவை, எறியா வாளும் எற்று
செறியக் கட்டி ஈரிடைத் தாழ்ந்த

மழுவும்

பெய்புல மூதாய்ப் புகர்நிறத் துகிரின்
மையற விளங்கிய ஆனேற் றவிர்பூண் ;

12

சூடின, இருங்கடல் முத்தமும் பன்மணி பிறவுமாங்கு
ஒருங்குடன் கோத்த உருளமை மூக்காழ்மேற்

சுரும்பார் கண்ணிக்குச் சூழ்நூ லாக
அரும்பவிழ் நீலத் தாயிதழ் நாணச்
சுரும்பாற்றுப் படுத்த மணிமருள் மாலே ;

17 ஆங்க, அவ்வும் பிறவும் அணிக்கணி

யாகநின்

செல்வுறு திண்டோர்க் கொடுஞ்சினை

கைப்பற்றிப்

பைபயத் தூங்குநின் மெல்விரற் சீறடி
நோதலு முண்டீங் கென்கை வந்தீ
செம்மால்நின் பாலுண் ணிய ;

22 பொய்போர்த்துப், பாண்தலை யிட்ட
பலவல் புலையனைத்
தூண்டிலா விட்டுத் துடக்கித்தான் வே
வண்டியார்
நெஞ்சம் பிணித்தல் தொழிலாத் திரிதரும்
நுந்தைபா லுண்டி சில;
26 நுந்தைவாய், மாயச்சூள் தேறி மயங்குநோய்
பூவெழி லுண்கண் பனிபரப்பக் கண்படா
கைமிகப்
ஞாயர்பா லுண்டி சில;



29 அன்னையோ, யாமெம் மகனைப்பா
ராட்டக் கதுமெனத்
தாம்வந்தார் தம்பா லவரொடு தம்மை
வருகென்றார் யார்கொலோ ஈங்கு;
32
என்பாலல்,பாராட் டுவந்தோய்குடியுண்டீத்தையென்
பாராட்டைப் பாலோ சில;

செருக்குறித் தாரை யுவகைக்கூத் தாட்டும்
வரிசைப் பெரும்பாட்டொ டெல்லாம் பருகித்தை
தண்டுவென் ஞாயர்மாட்டைப் பால்.

தலைவி தன் மகனைப் பாராட்டிப் பால்
கூறிட்டு ஊட்டுகின்ற
வழிச் சிறைப்புறமாகக் கேட்டுப் புக்க
தலைவனைக்கண்டு தன்னுள்ளே
புலந்து புலவியோடு பின்னும் பாராட்டியது.

**2067**. கலித்தொகை - **86**. மருதம்
**: 21**

ஐடபடு சென்னி மழகளிற்
றோடைபோற்
கைபுனை முக்காழ் கயந்தலைத் தாழப்
பொலஞ்செய் மழுவொடு வாளணி
கொண்ட

5

நலங்கிள ரொண்பூண் நனைத்தரு மவ்வாய்
கலந்துகண் ணோக்கார் காண்பின் துகிர்மேற்
பொலம்புனை செம்பாகம் போர்கொண் டிமைப்பக்
கடியரணம் பாயாதின் கைபுனை வேழம்
தொடியோர் மணலி னுழக்கி
அடியார்ந்த
தேரைவாய்க் கிண்கிணி யார்ப்ப
இயலுமென்
போர்யானை வந்தீக ஈங்கு ;
11 செம்மால், வனப்பெலாம் நுந்தையை
யொப்பினும் நுந்தை
நிலைப்பாலு ளொத்த குறியென்வாய்க்
கேட்டொத்தி

கன்றிய தெவ்வர்க் கடந்து களங்கொள்ளும்
வென்றிமாட் டொத்தி பெருமமற் றிவ்வாதி
ஒன்றினேம் யாமென் றுணர்ந்தாரை நுந்தைபோல்
மென்தோள் நெகிழ விடல் ;
17 பால்கொள லின்றிப் பகல்போல்
முறைக்கொல்காக்
கோல்செம்மை யொத்தி பெருமமற்
றிவ்வாதி

கால்பொரு பூவிற் கவின்வாட நுந்தைபோற்
சால்பாய்ந்தார் சாய விடல் ;

21 வீத லறியா விழுப்பொருள் நச்சியார்க்கு
ஈதல்மாட் டொத்தி பெருமமற் றெவ்வாதி
மாதர்மென் னோக்கின் மகளிரை நுந்தைபோல்
நோய்கூர நோக்காய் விடல் ;

ஆங்க,

26 திறனல்ல யாங்கழற யாரை நகுமிம்
மகனல்லான் பெற்ற மகன் ;

28 மறைநின்று, தாமன்ற வந்தீத் தனர் ;

29

ஆயிழாய், தாவாத எற்குத் தவறுண்டோ காவாதீங்கு
ஈத்தை யிவனையாங் கோடற்குச் சீத்தையாங்
கன்றி யதனைக் கடியவுங் கைநீவிக்
குன்ற இறுவரைக் கோண்மா இவர்ந்தாங்குத்
தந்தை வியன்மார்பிற் பாய்ந்தான் அறனில்லா
அன்பிலி பெற்ற மகன்.

" தந்தைய ரொப்பர் மக்களென்பதனு, லந்தமில்
சிறப்பின் மகப்பழித்து நெருங்கலும் " என்பதனுல்,
மகனைத் தலைவனை ஒக்க லாங் குணனும் ஒக்கலாகாக்

குணனும் தலைவிகூறுகின்றுழி மறைந்து புக்க தலைவன்
அவள் ஊடலுணர்வன சொல்ல, மகன் வாயிலாக
ஊடல்தீர்வாள் தன்னுள்ளே கூறியது.

## 2068. கலித்தொகை - 87. மருதம் : 22

ஒரூஉநீ யெங்கூந்தல் கொள்ளல்யாம் நின்னை
வெரூஉதுங் காணுங் கடை ;
3 தெரியிழாய், செய்தவ றில்வழி யாங்குச்
சினவுவாய்
மெய்பிரிந் தன்னவர் மாட்டு ;
5 ஏடா, நினக்குத் தவறுண்டோ நீவீடு பெற்றாய்
இமைப்பி னிதழ்மறை பாங்கே கெடுதி



நிலைப்பா லறியினும் நின்னொந்து நின்னைப்
புலப்பா ருடையர் தவறு ;
9 அணைத்தோளாய், தீயாரைப் போலத்
திறனின் றுடற்றுதி
காயுந் தவறிலேன் யான் ;
11 மானோக்கி நீயழ நீத்தவன் ஆனாது
நாணில னாயின் நலிதந் தவன்வயின்
ஊடுத லென்னோ இனி ;

14 இனியாது மீக்கூற்றம் யாமில மென்னும்
தகையது காண்டைப்பாய் நெஞ்சே
பனியானுப்
பாடில்கண் பாயல் கொள.

பரத்தையர் சேரிச் சென்றமை அறிந்திலனெனத் தலைவி மாட்டுச் சென்றஃனேடு அவள் ஊடி உறழ்ந்துகூறித் தோழி வாயி லாக ஊடல்தீர்வாள் தன் னெஞ்சொடு கூறியது.

## 2069. கலித்தொகை - 88. மருதம் : 23

ஒரூஉ, கொடியியல் நல்லார் குரல்நாற்றத்
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
தொடிய எமக்குநீ யாரை பெரியார்க்கு

துற்ற

அடியரோ ஆற்று தவர் ;

5 கடியர்தமக்கு, யார்சொல்லத் தக்கார்
மாற்று ;

6 வினைக்கெட்டு, வாயல்லா வெண்மை
யுரையாது கூறுநின்
மாய மருள்வா ரகத்து ;

8 ஆயிழாய், நின்கண் பெறினல்லால் இன்னுயிர்

என்கண் எவனோ தவறு ;
வாழ்கல்லா

10 இஃதொத்தன், புள்ளிக் களவன் புனல்சேர்
பொதுக்கம்போல்

வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி
றுற்றனவும்

ஒள்ளிதழ் சேர்ந்தநின் கண்ணியும் நல்லார்
சிரறுபு சீறச் சிவந்தநின் மார்பும்
தவறுதல் சாலாவோ கூறு ;

மருதனிளநாகனுர் 1169

15 அதுதக்கது, வேற்றுமை யென்கண்ணோ ஓராதி
தீதின்மை

தேற்றக்கண் டியாய் தெளிக்கு ;

17 இனித் தேற்றேம்யாம் ;

18 தேர்மயங்கி வந்த தெரிகோதை யந்நல்லார்
தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர்மயங்கி
நீயுறும் பொய்ச்சூள் அணங்காகின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு.

அவ்வாற்றூற் புக்க தலைவனுடன் ஊடியும்
உறழ்ந்துஞ்சொல்லி,

பொய்ச்சூளஞ்சி ஊடல் தீர்ந்தது.

**2070.** கலித்தொகை - **89.** மருதம் : **24**

யாரிவன் எங்கூந்தல் கொள்வான்
இதுவுமோர்

ஊராண்மைக் கொத்த படிறுடைத் தெம்மனை
வாரல்நீ வந்தாங்கே மாறு ;

4 என்னிவை, ஒருயிர்ப் புள்ளின் இருதலை
யுள்ளொன் று
போரெதிர்ந் தற்றாப் புலவல்நீ கூறின்என்
ஆருயிர் நிற்குமா றியாது ;

7 என, தெளிந்தேம்யாம் காயாதி யெல்லாம்வல்
லெல்லா
பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய்கொடுத்
வருந்தல்நின் வஞ்ச முரைத்து ;

தாங்கு

10 மருந்தின்று, மன்னவன் சீறின் தவறுண்டோ
நீநயந்த
இன்னகை தீதோ இலேன் ;

12 மாண மறந்துள்ளா நாணிலிக் கிப்போர்
புறஞ்சாய்ந்து காண்டைப்பாய் நெஞ்சே
யுறழ்ந்திவ ...
பொய்ப்ப விடேஎ மெனநெருங்கின்
தப்பினேன்
என்றடி சேர்தலு முண்டு.

தலைவன் "காமத்தின்வலியும்" என்றதனால்
ஆற்றாமைவாயிலாக வலிந்துபுக்கு நெருங்கிக் கூடுமிடத்து
அவனுடன் தலைவி ஊடிச் சிலசொல்லி, அவன் ஆற்றாமை

கூறுவது கேட்டு ஊடல் தீர்ந்தது.
74



## 2071. கலித்தொகை - 90. மருதம் : 25

கண்டேனின் மாயங் களவாதல்
பொய்ந்நகா
மண்டாத சொல்லித் தொடாஅல்
தொடீஇயநின்
பெண்டிரு ளர்மன்னோ ஈங்கு ;
4 ஒண்டொடிநீ, கண்ட தெவனோ தவறு ;

5 கண்டது, நோயும் வடுவுங் கரந்து
மகிழ்செருக்கிப்
பாடு பெயல்நின்ற பானா ளிரவில்
தொடிபொலி தோளும் முலையுங் கதுப்பும்
வடிவார் குழையும் இழையும் பொறையா
ஒடிவது போலும் நுசுப்போ டடிதளரா
10 ஆராக் கவவின் ஒருத்திவந் தல்கற்றன்
சீரார் ஞெகிழஞ் சிலம்பச் சிவந்துநின்
போரார் கதவ மிதித்த தமையுமோ
ஆயிழை யார்க்கும் ஒலிகேளா அவ்வெதிர்

தாழா தெழுந்துநீ சென்ற தமையுமோ
15 மாருள் சினைஇ அவளாங்கே நின்மார்பின்
நாறிணர்ப் பைந்தார் பரிந்த தமையுமோ
தேறிநீ தீயே னலேனென்று மற்றவள்
சீறடி தோயா இறுத்த தமையுமோ
கூறினிக் காயேமோ யாம் ;
20 தேறிற், பிறவுந் தவறிலேன் யான்
அல்கற், கனவுக்கொல் நீகண் டது ;
22 கனைபெயற் றண்டுளி வீசும் பொழுதிற்
குறிவந்தாட்
கண்ட கனவெனக் காணாது மாறூற்றுப்
பண்டைய வல்லநின் பொய்ச்சூள் நினக்கெல்லா
நின்றாய்நின் புக்கில் பல ;
26 மென்தோளாய், நல்குநின் நல்லெழி
லுண்கு ; மருதனிளநாகனார் 1171

27

வடா, குறையுற்று நீயெம் உரையல்நின் தீமை
பொறையாற்றே மென்றல் பெறுதுமோ யாழ
நிறையாற்றா நெஞ்சுடை யேம்.
" புல்லுதன்மயக்கும் புலவிக்கண்ணும் "
என்பதனல், தலைவன் புலப்படப் பரத்தையரிடத்து
ஒழுகாது மறைந்தொழுகி வந்து நின்றவனுடன்
காமக்கிழத்தி ஊடிச்சொல்லித் தலைமகன் ஆற்றாமை கண்டு

தன் ஆற்றாமையுஞ்சொல்லி ஊடல் தீர்ந்தது.

## 2072. கலித்தொகை - 91. மருதம் : 26

அரிநீர் அவிழ்நீலம் அல்லி அனிச்சம்
புரிநெகிழ் முல்லை நறவோ டமைந்த
தெரிமலர்க் கண்ணியுந் தாரும் நயந்தார்
பொருமுரண் சீறச் சிதைந்து நெருநையின்
இன்றுநன் றென்னை யணி ;

6

அணைமென்தோளாய், செய்யாத சொல்லிச் சினவுவதீங்கெவ
ஐயத்தா லென்னைக் கதியாதி தீதின்மை [ன்
தெய்வத்தாற் கண்டீ தெளிக்கு ;

9 மற்றது, அறிவல்யான் நின்சூள் அனைத்தாக
செறிதொடி யுற்ற வடுவுங் குறிபொய்த்தார்
கூருகிர் சாடிய மார்புங் குழைந்தநின்

நல்லார்

தாருந் ததர்பட்ட சாந்தமுஞ் சேரி
அரிமதருண்கண்ணார் ஆராக் கவவிற்

பரிசழிந்து யாழுநின் மேனிகண்டு யானுஞ்
செருவொழிந்தேன் சென்றீ யினி ;

16

தெரியிழாய், தேற்ருய் சிவந்தனை காண்பாய்நீ தீதின்மை
ஆற்றின் நிறுப்பல் பணிந்து ;

18 அன்னதேல் ஆற்றல்காண் ;
வேறுபட் டாங்கே கலுழ்தி அகப்படின்

மாறுபட் டாங்கே மயங்குதி யாதொன்றுங்
கூறி யுணர்த்தலும் வேண்டாது மற்றுநீ
மாறு செயினும் மறுத்தாங்கே நின்வயிற்



காணின் நெகிழுமென் னெஞ்சாயின்
பேணுய்நீ பெட்பச் செயல்.

என்னுற்ருய்

இதவும் அது.

2073. கலித்தொகை - 92. மருதம் :

புனவளர் பூங்கொடி யன்னாய் கழியக்
கனவெனப் பட்டதோர் காரிகை நீர்த்தே
முயங்கிய நல்லார் முலையிடை மூழ்கி
மயங்கிமற் றுண்டாண்டுச் சேறலுஞ் செல்லாது
5 உயங்கி யிருந்தார்க் குயர்ந்த பொருளும்
அரிதின் அறஞ்செய்யா ஆன்றோ ருலகும்
உரிதி னொருதலை யெய்தலும் வீழ்வார்ப்
பிரிதலும் ஆங்கே புணர்தலுந் தம்மில்
தருதல் தகையாதால் மற்று ;

10 நனவினாற் போலும் நறுநுதால் அல்கற்
கனவினாற் சென்றேன் கலிகெழு கூடல்
வரையுறழ் நீண்மதில் வாய்சூழ்ந்த வையைக்
கரையணி காவின் அகத்து ;

14 உரையினி, தண்டாத்தீஞ் சாயல் நெடுந்தகா
கண்ட தெவன்மற்று நீ ;

யவ்வழிக்

16 கண்டது, உடனமர் ஆயமொ டவ்விசும்

பாயும்

மடநடை மாயினம் அந்தி யமையத்து

இடன்விட் டியங்கா இமையத் தொருபால்
இறைகொண் டிருந்தன்ன நல்லாரைக் கண்டேன்
துறைகொண் டுயர்மணல் மேல், ஒன்றி
நிறைவதை ;

21 ஓர்த்த இசைக்கும் பறைபோல்நின்
வேட்டதே கண்டாய் கனு ;

நெஞ்சத்து

23 கேட்டை, விரையல்நீ மற்று வெகுள்வா

யுரையாண்டு
இதுவாகும் இன்னகை நல்லாய்
பொதுவாகத்
தாங்கொடி யன்ன தகையா ரெழுந்ததோர்
பூங்கொடி வாங்கி யிணர்கொய்ய ஆங்கே



சினையலர் வேம்பின் பொருப்பன் பொருத
முனையரண் போல உடைந்தன்றக் காவில்
துனைவரி வண்டி னினம் ;
30 மற்றுங்கே, நேரிணர் மூசிய வண்
டெல்லாம் அவ்வழிக்
காரிகை நல்லார் நலங்கவர்ந்

தண்பபோலோராங்குழ்ச
அவருள,
ஒருத்தி, செயலமை கோதை நகை
ஒருத்தி, இயலார் செருவிற் றொடியொடு
35 ஒருத்தி, தெரிமுத்தஞ் சேர்ந்த திலகம்

தடப

ஒருத்தி, அரிமா ணவிர்குழை ஆய்காது

வாங்க

ஒருத்தி, வரியா ரகலல்குற் காழகம்
ஒருத்தி, அரியார் ஞெகிழத் தணிசுறுத்

தடப

40

ஒருத்தி, புலவியாற் புல்லா திருந்தாள் அலவுற்று
வண்டின மார்ப்ப இடைவிட்டுக் காதலன்
தண்டா ரகலம் புகும் ;
42 ஒருத்தி, அடிதாழ் கலிங்கந் தழீஇ

யொருகை

முடிதாழ் இருங்கூந்தல் பற்றிப்பூ வேய்ந்த

கடிகயம பாயும அலந்து ;

45

ஒருத்தி, கணங்கொண்டவைமூசக் கையாற்றுள் பூண்ட
மணங்கமழ் கோதை பரிபுகொண் டோச்சி
வணங்குகாழ் வங்கம் புகும் ;

48 ஒருத்தி, இறந்த களியான் இதழ்மறைந்த கண்ணள்
பறந்தவை மூசக் கடிவாள் கடியும்
இடந்தேற்றுள் சோர்ந்தனள் கை ;

51 ஆங்க, கடிகாவிற் காலொற்ற ஒல்கி யொசியாக்
கொடிகொடி தம்மிற் பிணங்கி யவைபோல்
தெரியிழை யார்ப்ப மயங்கி யிரிவுற்றார் வண்டிற்கு
வண்டலவர் கண்டே னியான் ;

55 நின்னைநின் பெண்டிர் புலந்தனவும் நீயவர்
முன்னடி யொல்கி யுணர்த்தினவும் பன்மாண்

கனவின் றலையிட் டுரையல்
சினை இயான்
செய்வதில் என்பதோ கூறு ;
[ 59 பொய்கூறேன்; அன்ன
வகையால்யான் கண்டகன வுதா
நன்வாயாக் காண்டை நறுநுதால் பன்மாணுங்
கூடிப் புணர்ந்தீர் பிரியன்மின் நீடிப்
[ண்
பிரிந்தீர் புணர்தம்மின் என்பன போல
அரும்பவிழ் பூஞ்சினை தோறும் இருங்குயில்
ஆனு தகவும் பொழுதினன் மேவர
65 நான்மாடக் கூடல் மகளிரு மைந்தரும்
தேனிமிர் காவிற் புணர்ந்திருந் தாடுமார்
ஆனு விருப்போ டணியயர்ப
காமற்கு
வேனில் விருந்தெதிர் கொண்டு.

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன்
வாயில்பெறாது ஆற்றாமை
வாயிலாகப் புக்கு, தலைவியை நயப்பித்தல்
காரண மாகத் தெய்வ மகளிர்
பொய்தலயர்வதோர் கனாக்கண்டேன் ; அது நன்வாயாப்
பருவம்வந்து இறுத்தது பாராயென ஊடல்

தீர்வது பயனுகத்- தலைவிக்குக்
கூறியது.

## 2074. கலித்தொகை - 93.

மருதம் : 28

வண்டூது சாந்தம் வடுக்கொள நீவிய
தண்டாத்தின் சாயற் பரத்தை
வியன்மார்ப
பண்டின்னை யல்லைமன் ஈங்கெல்லி
வந்தீயக்
கண்ட தெவன்மற் றுரை ;
5 நன்றும், தடைஇய மென்றோளாய்
கேட்டீவா யாயின் உட
னுறை வாழ்க்கைக் குதவி யுறையுங்
கடவுளர் கட்டங்கி னேன் ;
8 சோலை, மலர்வேய்ந்த மான்பிணை
யன்னார் பலர்நீ
கடவுண்மை கொண்டொழுகு வார் ;
10 அவருள், எக்கடவுள் மற்றக்
கடவுளைச் செப்பீமன் ;

முத்தேர் முறுவலாய் நாமணம் புக்கக்கால்
இப்போழ்து போழ்தென் றதுவாய்ப்பக் கூறிய
அக்கடவுள் மற்றக் கடவுள் ; அதுவொக்கும் ;

15

நாவுள் அழுந்து தலைசாய்த்து நீகூறு
மாயமோ கைப்படுக்கப் பட்டாய்நீ கண்டாரை
வாயாக யாங்கூற வேட்டீவாய்
கேளினி ;

17 பெறல்நசை வேட்கையில் நின்குறி
வாய்ப்பப்
பறிமுறை நேர்ந்த நகாராகக் கண்டார்க்கு
இறுமுறை செய்யு முருவொடு நும்மிற்
செறிமுறை வந்த கடவுளைக் கண்டாயோ ;

21 நறுந்தண் தகரமு நானமும் நாறு
நெறிந்த குரற்கூந்தல் நாளணிக் கொப்ப
நோக்கிற் பிணிகொள்ளுங் கண்ணொடு மேனுள்நீ
பூப்பலி விட்ட கடவுளைக் கண்டாயோ ;

25 ஈரணிக் கேற்ற ஒடியாப் படிவத்துச்
சூர்கொன்ற செவ்வேலாற் பாடிப் பலநாளும்
ஆராக் கனைகாமங் குன்றத்து நின்னொடு
மாரி யிறுத்த கடவுளைக் கண்டாயோ ;

29 கண்ட கடவுளர் தம்முளும் நின்னை
வெறிகொள் வியன்மார்பு வேருகச்
செய்து
குறிகொளச் செய்தார்யார்
செப்புமற்று யாரும்
சிறுவரைத் தங்கின் வெகுள்வர்
செறுதக்காய் தேறினேன் சென்றீநீ
செல்லா விடுவாயேல்
நற்று ரகலத்துக் கோர்சார மேவிய
35 நெட்டிருங் கூந்தற் கடவுள
ரெல்லார்க்கும்
முட்டுப்பா டாகலும் உண்டு.

"காவற் பாங்கி னுங்கோர் பக்கமும்"
என்புழி, ஆங்கோர்
பக்கமான கடவுளரைக்கண்டு தங்கினேனென்ற
தலைவற்கு நீ கண்ட
கடவுளர் இவரெனக் கூறிப்புலந்தது.



**2075.** கலித்தொகை - **94.** மருதம் : **29**

என் நோற் றனைகொல்லோ
நீருள் நிழற்போல் நுடங்கிய மென்சாயல்

ஈஙகுருச சுருஙக
இயலுவாய் நின்னோ டுசாவுவேன் நின்றீத்தை
;
5

அன்னையோ, காண்டகையில்லாக்குறள் நாழிப்போழ்திருன்
ஆண்டலைக் கீன்ற பறழ்மகனே நீயெம்மை
வேண்டுவ லென்று விலக்கினை நின்போல்வார்
தீண்டப் பெறுபவோ மற்று ;
9 மாண்ட, எறித்த படைபோல் முடங்கி மடங்கி
நெறித்துவிட் டன்ன நிறையோரால் என்னைப்
பொறுக்கல்லா நோய்செய்தாய் பொறீஇ நிறுக்கல்லேன்
நீநல்கின் உண்டென் உயிர் ;
13 குறிப்புக்காண், வல்லுப் பலகை யெடுத்து
நிறுத்தன்ன
கல்லாக் குறள கடும்பகல் வந்தெம்மை
இல்லத்து வாவென மெய்கொளீஇ யெல்லாநின்
பெண்டி ருளர்மன்னோ கூறு ;
17 நல்லாய்கேள், உக்கத்து மேலும் நடுவுயர்ந்து
வாள்வாய
கொக்குரித் தன்ன கொடுமடாய் நின்னையான்
புக்ககலம் புல்லினெஞ் சூன்றும் புறம்புல்லின்
அக்குளுத்துப் புல்லலும் ஆற்றேன் அருளீமோ

பக்கத்துப் புல்லச் சிறிது ;
22 போசீத்தை, மக்கள் முரியேசீ மாறினித்
தொக்க
மரக்கோட்டஞ் சேர்ந்தெழுந்த பூங்கொடி
போல
நிரப்பமில் யாக்கை தழீஇயினர் எம்மைப்
புரப்பேமென் பாரும் பலராற் பரத்தையென்
பக்கத்துப் புல்லீயா யென்னுமால் தொக்க

உழுந்தினுந் துவ்வாக் குறுவட்டா நின்னின்



இழிந்ததோ கூனின் பிறப்பு ; கழிந்தாங்கே
யாம்வீழ்தும் என்றுதன் பின்செலவு முற்றீயாக்
கூனி குழையுங் குழைவுகாண் ;
31 யாமை யெடுத்து நிறுத்தற்றுல் தோளிரண்டும்
வீசி
யாம்வேண்டே மென்று விலக்கவும்
எம்வீழுங்
காமர் நடக்கும் நடைகாண் கவர்கணைச்
சாமனார் தம்முன் செலவுகாண் ;
35 ஓஒகாண், நம்முள் நகுதற் றொடீஇயர்
உசாவுவங் கோனடிதொட் டேன் ;

நம்முள்நாம்

37 ஆங்காக, சாயலின் மார்ப அடங்கினேன் என
பேயும் பேயுந் துள்ள லுறுமெனக்
கோயிலுட் கண்டார் நகாமை வேண்டுவல்
40 தண்டாத் தகடுருவ வேறுகக் காவின்கீழ்ப்
போத ரகடாரப் புல்லி முயங்குவேம்
துகள்தபு காட்சி யவையத்தார் ஓலை
முகடுகாப்பு யாத்துவிட் டாங்கு.

" அடியோர் பூங்கினும் வினைவலர் பாங்கினுங்,
கடிவரை
யிலபுறத் தென்மனார் புலவர் " என்பதனல்
அடியோராகிய கூனுங்
குறளும் உறழ்ந்து கூறிக் கூடியது.

**2076.** கலித்தொகை - **95.** மருதம் : **30**

நில்லாங்கு நில்லாங் கிவர்தரல் எல்லாநீ
நாறிருங் கூந்தலார் இற்செல்வா யிவ்வழி
ஆறு மயங்கினை போறிநீ வந்தாங்கே

மாறினி நின்னுங்கே நின்சே
5 செறிந்தொளிர் வெண்பல்லா

வடிசிவப்பச்
யாம்வே றியைந்த

குறும்பூழ்ப்போர் கண்டே மனைத்தல்லது யாதும்
அறிந்தோ வில்லைநீ வேறோர்ப் பது ;
8 குறும்பூழ்ப்போர் கண்டமை கேட்டேன்நீ யென்றும்
புதுவன ஈகை வளம்பாடிக் காலிற்
பிரியாக் கவிகைப் புலையன்றன் யாழின்



இகுத்த செவிசாய்த் தினியினிப் பட்டன
ஈகைப்போர் கண்டாயும் போறிமெய் யெண்ணின்
தபுத்த புலர்வில புண் ;
14

ஊரவர் கவ்வை யுளைந்தீயாய் அல்கல்நின்
தாரின்வாய்க் கொண்டு முயங்கிப் பிடிமாண்டு
போர்வாய்ப்பக் காணினும் போகாது கொண்டாடும்
பார்வைப்போர் கண்டாயும் போறிநின்
தோள்மேலாம்

ஈரமாய் விட்டன புண் ;

19

கொடிற்றுப்புண் செய்யாது மெய்ம்முழுதுங் கையிற்
றுடைத்துநீ வேண்டினும் வெல்லாது கொண்டாடும்

ஒட்டியபோர் கண்டாயும் போறி
கொட்டிக் கொடுக்குங் குறிப்பு ;

முகந்தானே

23 ஆயின், ஆயிழா யன்னவை யான்ஆங்
போற்றிய நின்மெய் தொடுகு ;

கறியாமை

25 அன்னையோ,மெய்யைப்பொய் யென்று மயங்கிய
கையொன்று

அறிகல்லாய் போறிகா ணீ ;

27 நல்லாய், பொய்யெல்லாம் ஏற்றித் தவறு
தலைப்பெய்து

கையொடு கண்டாய் பிழைத்தேன் அருளினி ;

29 அருளுகம் யாம்யாரேம் எல்லா தெருள
அளித்துநீ பண்ணிய பூழெல்லாம் இன்னும்
விளித்துநின் பாணனோ டாடி யளித்தி
விடலைநீ நீத்தலின் நோய்பெரி தேய்க்கும்
நடலைப்பட் டெல்லாநின் பூழ்.

" கொடியோர் கொடுமை சுடுமென வொடியாது, நல்லிசைநயந் தோர் சொல்லொடு தொகைஇப், பகுதியி னீங்கிய தகுதிக்கண் " தலைவி பரத்தையரைப் பூழாக்கிக் கூறியது.

**2077. கலித்தொகை - 96. மருதம் : 31**

ஏந்தெழில் மார்ப எதிரல்ல நின்வாய்ச்சொற்
பாய்ந்தாய்ந்த தானைப் பரிந்தானா மைந்தினை

மருதனிளநாகனார் 1179

சாந்தழி வேரை சுவற்றூழ்ந்த கண்ணியை
யாங்குச்சென் றீங்குவந் தீத்தந்தாய் கேளினி
;

5 ஏந்தி, எதிரிதழ் நீலம் பிணைந்தன்ன
குதிரை வழங்கி வருவல் ;

கண்ணாய்

7 அறிந்தேன் குதிரைதான்
பால்பிரியா ஐங்கூந்தற் பன்மயிர்க் கொய்சுவல்
மேல்விரித்து யாத்த சிகழிகைச் செவ்வுளை
10 நீல மணிக்கடிகை வல்லிகை யாப்பின்கீழ்
ஞாலியல் மென்காதிற் புல்லிகைச் சாமரை
மத்திகைக் கண்ணுறை யாகக் கவின்பெற்ற
உத்தி யொருகாழ்நூ லுத்தரியத் திண்பிடி
நேர்மணி
15 தார்மணி

நேர்முக்காழ்ப் பல்பல கண்டிகைத்
பூண்ட தமனிய மேகலை
நூபுரப் புட்டில் அடியொ டமைத்தியாத்த
வார்பொலங் கிண்கிணி யார்ப்ப இயற்றிநீ

காதலித் தூர்ந்தநின் காமக் குதிரையை
ஆய்சுதை மாடத் தணிநிலா முற்றத்துள்
20 ஆதிக் கொளீஇ யசையினை யாகுவை
வாதுவன் வாழிய நீ ;
22 சேகா, கதிர்விரி வைகலிற் கைவாரூஉக்
கொண்ட
மதுரைப் பெருமுற்றம் போலநின்
மெய்க்கண்
குதிரையோ வீறி யது ;
25 கூருகிர் மாண்ட குளம்பி னதுநன்றே

கோரமே வாழிகுதி ரை ;

27 வெதிருழக்கு நாழியாற் சேதிலைகக் குத்திக்
குதிரை யுடலணி போலநின் மெய்க்கண்
குதிரையோ கவ்வி யது ;

30 சீத்தை, பயமின்றி யீங்குக் கடித்தது நன்றே
வியமமே வாழிகுதி ரை ;



32 மிகநன்று, இனியறிந்தேன் இன்றுநீ யூர்ந்த
குதிரை
பெருமணம் பண்ணி யறத்தினிற் கொண்ட
பருமக் குதிரையோ அன்று பெருமநின்

35 ஏதில் பெரும்பாணன் தூதாட ஆங்கேயோர்
வாதத்தான் வந்த வளிக்குதிரை யாதி
உருவழிக்கும் அக்குதிரை யூரல்நீ யூரிற்
பாத்தை
பரியாக வாதுவனு யென்றுமற் றச்சார்த்
திரிகுதிரை யேறிய செல்.

"கொடியோர் கொடுமை சுடுமென வொடியாது, நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப், பகுதியி னீங்கிய தகுதிக்கண்" தலைவி பரத்தையரைக் குதிரையாக்கிக்

கூறியது.

## 2078. கலித்தொகை - 97. மருதம் : 32

அன்னை கடுஞ்சொல் அறியாதாய் போலநீ
என்னைப் புலப்ப தொறுக்குவென் மன்யான்
சிறுகாலை யிற்கடை வந்து குறிசெய்த
அவ்வழி யென்றும்யான் காணேன் திரிதர
எவ்வழிப் பட்டாய் சமனக இவ்வெள்ளல் ;
6 மூத்தோர் முறுவலாய் நம்வலைப் பட்டதோர்
புத்தியானை வந்தது காண்பான்யான்
தங்கினேன் ;
8 ஒக்கும் ;
அவ்வியானை வனப்புடைத் தாகலுங்

கேட்டேன்
அவ்வியானைதான், சுண்ணநீ ருடி நறுநரு
நீருண்டு
ஒண்ணுதல் யாத்த திலக அவிரோடைத்
தொய்யில் பொறித்த வனமுலை
வான்கோட்டுத்
தொய்யகத் தோட்டிக் குழைதாழ் வடிமணி
உத்தி பொறித்த புனைபூண் பருமத்து
15 முத்தேய்க்கும் வெண்பல் நகைதிறந்து
நன்னகர் வாயிற் கதவ வெளில்சார்ந்து

தன்னலங் காட்டித் தகையினுற் கால்தட்டி
தொடர்தொட ராக வலந்து படர்செய்யும்

வீழ்க்குந்

மென்ரூேட் டடக்கையின் வாங்கித்தற்
கண்டார்

மருதனிளநாகனர் 1181
20

நலங்கவளங் கொள்ளும் நகைமுக வேழத்தை
இன்றுகண் டாய்போல் எவனெம்மைப் பொய்ப்பதுநீ

;

22 எல்லா, கெழீஇத் தொடிசெறித்த
தோளிணை தத்தித்
தழீஇக்கொண் டூர்ந்தாயும் நீ ;
24 குழீஇ, அவாவினுல் தேம்புவார்
உவாவணி யூர்ந்தாயும் நீ ;
இற்கடை யாரு

26 மிகாஅது, சீர்ப்பட வுண்ட சிறுகளி
நீர்க்குவிட் டோர்ந்தாயும் நீ ;

யேருண் கண்

28

சார்ச்சார், நெறிதாழிருங்கூந்தல்நின்பெண்டிரெல்லாம்
சிறுபாக ராகச் சிரற்றுது மெல்ல
விடாஅது நீயெம்மில் வந்தாயவ்

வியானே

கடாஅம் படுமிடத் தோம்பு.

" கொடியோர் கொடுமை

சுடுமென,.....பகுதியி னீங்கிய

தகுதிக்கண் " தலைவி பரத்தையரை யானையாகக் கூறிப் புலந்தது.

## 2079. கலித்தொகை - 98. மருதம் : 33

யாரைநீ எம்மில் புகுதர்வாய் ஓரும்
புதுவ மலர்தேரும் வண்டேபோல் யாழ
வதுவை விழவணி வைகலுங் காட்டினையாய்
மாட்டுமாட் டோடி மகளிர்த் தரத்தரப்
5 பூட்டுமான் திண்டேர் புடைத்த மறுகெல்லாம்
பாட்டாதல் சான்றநின் மாயப் பரத்தைமை
காட்டிய வந்தமை கைப்படுத்தேன்

பண்டெலாங்

கேட்டும் அறிவேன்மன் யான் ;
9 தெரிகோதை யந்நல்லாய் தேறீயல் வேண்டும்
பொருகரை வாய்சூழ்ந்த பூமலி வையை
வருபுன லாடத் தவிர்ந்தேன் பெரிதென்னைச்
செய்யா மொழிவ தெவன் ;
13 ஓஒ, புனலாடி னாயெனவுங் கேட்டேன்
புனலாங்கே
நீணீர் நெறிகதுப்பு வாரும் அறலாக


மாணெழில் உண்கண் பிறழுங் கயலாகக்
கார்மலர் வேய்ந்த கமழ்பூம் பரப்பாக
நாணுச் சிறையழித்து நன்பகல் வந்தஅவ்
யாணர்ப் புதுப்புன லாடினாய் முன்மாலை
பாணன் புணையாகப் புக்கு ;
20 ஆஅஅ, அளித்தமர் காதலோ டப்புன லாடி
வெளிப்படு கவ்வையை யானறிதல் அஞ்சிக்
குளித்தொழுகி னாயெனவுங் கேட்டேன்
குளித்தாங்கே
போர்த்த சினத்தாற் புருவத் திரையிடா
ஆர்க்கு ஞெகிழத்தான் அன்னீர் நடைதட்பச்
25 சேர்த்தக வந்த புதுப்புனல் நின்னைக்கொண்டு
ஈர்த்துய்ப்பக் கண்டா ருளர் ;
27 ஈர்த்தது, உரைசால் சிறப்பின்நின் னீருள்ளம்
வாங்கப்

புரைதீர் புதுப்புனல் வெள்ளத்தின் இன்னுங்
கரைகண்ட தூஉ மிலை ;
30 கிரைதொடீஇ
பொய்யாவாட்டானைப்புனைகழற்காற்றென்னவ
வையைப் புதுப்புன லாடத் தவிர்ந்ததைத்
[ன்
தெய்வத்திற் றேற்றித் தெளிப்பேன்
பெரிதென்னைச்
செய்யா மொழிவ தெவன் ;
34 மெய்யதை, மல்கு மலர்வேய்ந்த மாயப்
புதுப்புனல்
பல்காலும் ஆடிய செல்வுழி யொல்கிக்
கிளைஞரு மில்வழிக் காலாழ்ந்து தேரோடு
இளமண லுட்பட லோம்பு முளைநேர்
முறுவலார்க் கோர்நகை செய்து.

பரத்தையிற்பிரிந்துவந்த தலைவன் ஆற்றாமையே
வாயிலாகச் .
சென்றுழி அவனைக் கண்டு நீ தாழ்த்த
காரணமென்னென, புதுப்
புனலாடித் தாழ்த்ததென்ன, தலைவி இன்ன
புதுப்புனலே ஆடிய தென நெருங்கிக் கூறியது.

மருதனிளநாகனுர் 1183

2080. கலித்தொகை - 99 மருதம் : 34

நறவினைவரைந்தார்க்கும்வரை
யார்க்கும்அவையெடுத்து
அறவினை யின்புறூஉம் அந்தண ரிருவருந்
திறம்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
5

குழவியைப் பார்த்துறூஉந் தாய்போல் உலகத்து
மழைசுரந் தளித்தோம்பு நல்லூழி யாவர்க்கும்

பிழையாது
இழையணி

வருதல்நின் செம்மையிற் றவாய்ந்த
கொடித்திண்டேர் இனமணி யானையாய்!
8

அறனிழ லெனக்கொண்டாய் ஆய்குடை அக்குடைப்
புறநிழற்கீழ்ப் பட்டாளோ இவளிவட் காண்டிகா
பிறைநுதல் பசப்பூரப் பெருவிதுப் புற்றனள்;
11 பொய்யாமை நுவலுநின்
செங்கோல்அச்செங்கோலின்
செய்தொழிற்கீழ்ப் பட்டாளோ இவளிவட் காண்டிகா
காமநோய் கடைக் கூட்ட வாழுநாள் முனிந்தனள்;

14 ஏமமென் றிரங்குநின் எறிமுரசம் அம்முரசின்
ஏமத் திகந்தாளோ இவளிவட் காண்டிகா
வேய்நல மிழந்ததோள் கவின்வாட இழப்பாளை
;
ஆங்கு,
18 நெடிதுசேண் இகந்தவை காணினுந் தானுற்ற

வடுக்காட்டக் கண்காணு தற்றாக என்தோழி
தொடிகொட்ப நீத்த கொடுமையைக்
கடிதென வுணராமை கடிந்ததோ நினக்கே.

அரசன் தலைவனுயவன்தலைவியைநீங்கி

இருந்ததற்குத் தலைவி புலவிநீட்டித்து ஆற்றுளாயவழி,
அவட்கு நிகழ்ந்த காமத்து மிகு திறத்தை அவ்வரசனை
நோக்கிச் சான்றோர் கூறியது. இது பெருந் திணை.

**2081. கலித்தொகை - 100. மருதம் : 35**

ஈண்டுநீர் மிசைத்தோன்றி யிருள்சீக்குஞ்
சுடரேபோல்
வேண்டாதார் நெஞ்சுட்க வெருவந்த கொடுமையும்
நீண்டுதோன் றுயர்குடை நிழலெனச் சேர்ந்தார்க்குக்



காண்டகு மதியென்னக் கதிர்விடு தண்மையும்

5 மாண்டநின் ஒழுக்கத்தான் மறுவின்றி
வியன்ஞாலத்து
யாண்டோருந் தொழுதேத்தும் இரங்கிசை
முரசினய் !

7

ஐயந்தீர்ந்து யார்கண்ணும் அருந்தவ முதல்வன்போற்
பொய்கூறு யெனநின்னைப் புகழ்வது கெடாதோதான்
நல்கிநீ தெளித்தசொல் நசையெனத் தேறியாள்
பல்லிதழ் மலருண்கண் பனிமல்கக் காணுங்கால்
;
11

சுரந்தவான் பொழிந்தற்றாச் சூழநின்று யாவர்க்கும்
ரெங்கத நசைவாட்டா யென்பது கெடாதோதான்

கலங்கஞ ருற்றுநின் கமழ்மார்பு நசைஇயாள்
இலங்குகோ லவிர்தொடி யிறையூரக் காணுங்கால்

15
;

உறைவரை நிறுத்தகோ லுயிர்திறம்பெயர்ப்பான்போல்
மறைசெய்தி யெனநின்னை மொழிவது கெடாதோதான்

அழிபடர் வருத்தநின் அளிவேண்டிக் கலங்கியாள்
பழிதபு வாண்முகம் பசப்பூரக் காணுங்கால் ;

ஆங்கு,

20 தொன்னலம் இழந்தோள்நீ துணையெனப் புணர்ந்தவள்
இன்னுறல் வியன்மார்ப இனையையாற் கொடிதென
நின்னையான் கழறுதல் வேண்டுமோ
என்னோர்க ளிடும்பையுங் களைந்தீவாய் நினக்கே.

இதுவும் அது.

## 2082. குறுந்தொகை - 77. பாலை

அம்ம வாழி தோழி யாவதும்
தவறெனின் தவறோ விலவே வெஞ்சுரத்து
உலந்த வம்பலர் உவலிடு பதுக்கை

நெடுநல் யானைக் கிடுநீ ராகும்
5 அரிய கானஞ் சென்றோர்க்கு
எளிய வாகிய தடமென் தோளே.

பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

மருதனிளநாகனார்

**2083.** குறுந்தொகை - **160.** குறிஞ்சி

நெருப்பின் அன்ன செந்தலை யன்றில்
இறவின் அன்ன கொடுவாய்ப் பெடையொடு
தடவின் ஓங்குசினைக் கட்சியிற் பிரிந்தோர்
கையற நரலும் நள்ளென் யாமத்துப்
5 பெருந்தண் வாடையும் வாரார்
இஃதோ தோழிநங் காதலர் வரவே.

வரைவு நீட்டிப்ப ஆற்றளாகிய தலைமகளை நோக்கித் தோழி
வரைவரென ஆற்றுவிப்புழித் தலைமகள் கூறியது.

**2084.** குறுந்தொகை - **279.** முல்லை

திரிமருப் பெருமை யிருள்நிற மையான்
வருமிடறு யாத்த பகுவாய்த் தெண்மணி
புலம்புகொள் யாமத் தியங்குதோ றிசைக்கும்
இதுபொழு தாகவும் வாரார் கொல்லோ
5 மழைகழூஉ மறந்த மாயிருந் துறுகல
துகள்சூழ் யானையிற் பொலியத் தோன்றும்
இரும்பல் குன்றம் போகித்
திருந்திறைப் பணைத்தோள் உள்ளா தோரே.

வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

**2085.** குறுந்தொகை - **367.** மருதம்

கொடியோர் நல்கா ராயினும் யாழநின்
தொடிவிளங் கிறைய தோள்கவின்
பெறீஇயர்
உவக்காண் தோழி அவ்வந் திசினே
**5**

தொய்யல் மாமழை தொடங்கலின் அவர்நாட்டுப்
பூச லாயம் புகன்றிழி யருவி
மண்ணுறு மணியிற் றோன்றுந்
தண்ணறுந் துறுகல் ஓங்கிய மலையே.

வரைவுணர்த்திய தோழி தலைமகட்குக்
கழியுவகை மீதூராமை
யுணர்த்தியது ;
தோழி ஆற்றும்

வரைவு நீட்டித்த விடத்து ஆற்றுளாகிய தலைமகளைத்
வகையான் ஆற்றுவித்ததூஉமாம்.

75



**2086.** நற்றிணை - **21.** முல்லை

விரைப்பரி வருந்திய வீங்குசெலல் இளையர்
அரைச்செறி கச்சை யாப்பழித் தசைஇ
வேண்டமர் நடையர் மென்மெல வருக
தீண்டா வைமுட் டீண்டி நாஞ்சிலற்கு
5 ஏமதி வலவ தேரே உதுக்காண்

உருக்குறு நறுநெய் பால்விதிர்த் தன்ன
அரிக்குரல் மிடற்ற அந்நுண் பல்பொறிக்
காமரு தகைய கான வாரணம்
பெயனீர் போகிய வியனெடும் புறவிற்
10 புலரா ஈர்மணல் மலிரக் கெண்டி
நாளிரை கவர மாட்டித்தன்
பேடை நோக்கிய பெருந்தகு நிலையே.

வினைமுற்றிமீள்வான் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

2087. நற்றிணை - 39. குறிஞ்சி

சொல்லிற் சொல்லெதிர் கொள்ளா யாழநின்

திருமுக மிறைஞ்சி நாணுதி கதுமெனக்
காமங் கைம்மிகின் தாங்குத லெளிதோ
கொடுங்கே ழிரும்புறம் நடுங்கக் குத்திப்
5 புலிவிளை யாடிய புலவுநாறு வேழத்தின்
தலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்தநின்
கண்ணே கதவ வல்ல நண்ணார்
அரண்டலை மதில ராகவு முரசுகொண்டு
ஓம்பரண் கடந்த அடுபோர்ச் செழியன்
10 பெரும்பெயர்க் கூட லன்னநின்
கரும்புடைத் தோளும் உடையவா லணங்கே.

இரண்டாங் கூட்டத் தெதிர்ச்சியில் தலைவன் சொல்லியது.

## 2088. நற்றிணை - 103. பாலை

ஒன்றுதெரிந் துரைத்திசின் நெஞ்சே புன்காற்
சிறியிலை வேம்பின் பெரிய கொன்று

மருதனிளநாகனார் 1187

கடாஅஞ் செருக்கிய கடுஞ்சின முன்பிற்
களிறுநின் றிறந்த நீர லீரத்துப்
5 பால்வீ தோல்முலை யகடுநிலஞ் சேர்த்திப்
பசியட முடங்கிய பைங்கட் செந்நாய்
மாயா வேட்டம் போகிய கணவன்
பொய்யா மரபிற் பிணவுநினைந் திரங்கும்

விருந்தின்வெங் காட்டு வருந்துதும் யாமே
10 ஆள்வினைக் ககல்வா மெனினும்
மீள்வா மெனினும் நீதுணிந் ததுவே.

பொருள்வயிற் பிரிந்த தலைவன்
இடைச்சுரத்து ஆற்றுதாகிய
நெஞ்சினைக் கழறியது.

## 2089. நற்றிணை - 194. குறிஞ்சி

அம்ம வாழி தோழி கைம்மாறு
யாதுசெய் வாங்கொல் நாமே
கயவாய்க்
5

கன்றுடை மருங்கிற் பிடிபுணர்ந் தியலும்
வலனுயர் மருப்பின் நிலனீர்த் தடக்கை
அண்ணல் யானைக் கன்றியுங் கன்மிசைத்
தனிநிலை யிதணம் புலம்பப் போகி
மந்தியும் அறியா மரம்பயி
லொருசிறைக்
குன்ற வெற்பனொடு நாம்விளை யாட
விரும்புகவர் கொண்ட ஏனற்
10 பெருங்குரல் கொள்ளாச் சிறுபசுங்
கிளிக்கே.

சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீஇயது.

## 2090. நற்றிணை - 216. மருதம்

துனிதீர் கூட்டமொடு துன்னு ராயினும்
இனிதே காணுநர்க் காண்புழி வாழ்தல்
கண்ணுறு விழுமங் கைபோ லுதவி
நம்முறு துயரங் களையா ராயினும்
5 இன்னு தன்றே அவரில் லூரே
எரிமருள் வேங்கைக் கடவுள் காக்குங்



குருகார் கழனியின் இதணத் தாங்கண்
ஏதி லாளன் கவலை கவற்ற
ஒருமுலை யறுத்த திருமா வுண்ணிக்
10 கேட்டோ ரனைய ராயினும்
வேட்டோ ரல்லது பிறரின் ஞூரே.

தலைமகட்குப் பாங்காயினார்கேட்பத் தலைமகன் தலைவின் ஞெழுகப்படாநின்ற பரத்தை பாணர்க்காயினும் விறலிக்காயினும் சொல்லுவாளாய் நெருங்கிச் சொல்லியது.

**2091.** நற்றிணை - **283.** நெய்தல்

ஒண்ணுதல் மகளிர் ஓங்குகழிக் குற்ற
கண்ணேர் ரொப்பின கமழ்நறு நெய்தல்
அகல்வரிச் சிறுமனை யணியுந் துறைவ
வல்லோ ராய்ந்த தொல்கவின் தொலைய
5 இன்னை யாகுதல் தகுமோ ஓங்குதிரை
முந்நீர் மீமிசைப் பலர்தொழத் தோன்றி
ஏமுற விளங்கிய சுடரினும்

வாய்மை சான்றநின் சொல்நயந் தோர்க்கே.

பகற்குறிவந்த தலைமகனைத் தோழிவரைவுகடாயது; கடிநகர் புக்க தோழி பிற்றைஞான்று வேறுபடாது ஆற்றினுயென்று சொல் லியதூஉமாம்.

**2092.** நற்றிணை - **290.** மருதம்

வயல்வெள் ளாம்பற் சூடுதரு புதுப்பூக்
கன்றுடைப் புனிற்றா தின்ற மிச்சில்
ஓய்நடை முதுபக டாரு மூரன்
தொடர்புநீ வெஃகினை யாயின் என்சொற்
5 கொள்ளல் மாதோ முள்ளெயிற் றோயே
நீயே பெருநலத் தையே அவனே
நெடுநீர்ப் பொய்கை நடுநா ளெய்தித்

மருதனிளநாகனுர் 1189

தண்கமழ் புதுமல ரூதும்
வண்டென மொழிப மகனென் னுரே.

பரத்தை விறலிமேல்வைத்துத் தலைமகளை நெருங்கிச் சொல்லியது. பரத்தையிற் பிரிய வாயிலாய்ப்புக்க பாணன் கேட்பத் தோழி சொல்லியதூஉமாம்.

**2093.** நற்றிணை - **302.** பாலை

இழையணி மகளிரின் விழைதகப் பூத்த
நீடுசுரி யிணர சுடர்வீக் கொன்றைக்

காடுகவின் பூத்த வாயினும் நன்றும்
வருமழைக் கெதிரிய மணிநிற இரும்புதல்
5 நரைநிறம் படுத்த நல்லிணர்த் தெறுழ்வீ

தாஅந் தேரலர் கொல்லோ சேய்நாட்டுக்
களிறுதைத் தாடிய கவிழ்கண் இடுநீறு
வெளிறில் காழ வேலம் நீடிய
பழங்கண் முதுநெறி மறைக்கும்
10 வழங்கருங் கானம் இறந்திசி னோரே.

பருவங்கழிந்தது கண்டு தலைமகள் சொல்லியது.

## 2094. நற்றிணை - 326. குறிஞ்சி

கொழுஞ்சுளைப் பலவின் பயங்கெழு கவாஅற்
செழுங்கோள் வாங்கிய மாச்சினைக் கொக்கினம்
மீன்குடை நாற்றந் தாங்கல் செல்லாது
துய்த்தலை மந்தி தும்மு நாட
5 நினக்கும் உரைத்தல் நாணுவல் இவட்கே
நுண்கொடிப் பீரத்தின் ஊழுறு பூவெனப்
பசலை யூரு மன்னே பன்னாள்
அரியமர் வனப்பினெங் கானம் நண்ண
வண்டெனு முணரா வாகி
10 மலரென மரீஇ வரூஉமிவள் கண்ணே.

தோழி தலைமகனை வரைவு கடாயது.

## 2095. நற்றிணை - 341. குறிஞ்சி

வங்கவரிப் பாறைச் சிறுபாடு முணையிற்
செம்பொறி யரக்கின் வட்டுநா வடிக்கும்
விணையா டின்னகை யழுங்காப் பால்மடுத்து
அலையா வுலவை யோச்சிச் சிலகிளையாக்
5 குன்றக் குறவனொடு குறுநொடி பயிற்றுந்
துணைநன் குடையள் மடந்தை யாமே
வெம்பகை யருமுனைத் தண்பெயல் பொழிந்தென
நீரிரங் கரைநாள் மயங்கிக் கூதிரொடு
வேறுபுல வாடை யலைப்பத் 10
துணையிலேந் தமியேம் பாசறை யேமே.

விணைவயிற்பிரிந் தாற்றானாகிய தலைமகன் சொல்லியது.

## 2096. நற்றிணை - 362. பாலை

விணையமை பாவையின் இயலி நுந்தை மனைவரை
யிறந்து வந்தனை யாயின்
தலைநாட் கெதிரிய தண்பத எழிலி
அணிமிகு கானத் தகன்புறம் பரந்த
5 கடுஞ்செம் மூதாய் கண்டுங் கொண்டும் நீவிளை
யாடுக சிறிதே யானே
மழகளி றுரிஞ்சிய பராரை வேங்கை
மணவிடு மருங்கின் இரும்புறம் பொருந்தி அமர்வரி
னஞ்சேன் பெயர்க்குவென்
10 நுமர்வரின் மறைகுவென் மாஅ யோளே.

உடன்போகாநின்ற தலைமகன் தலைமகட்குச் சொல்லியது.

## 2097. நற்றிணை - 392. நெய்தல்

கடுஞ்சுறு எறிந்த கொடுந்தாட் டந்தை புள்ளிமிழ்
பெருங்கடற் கொள்ளான் சென்றென மனையழு
தொழிந்த புன்றலைச் சிறுஅர் துணையதின் முயன்ற
தீங்க ணுங்கின்



5 பணைகொள் வெம்முலை பாடுபெற் றுவக்கும்
பெண்ணை வேலி யுழைகட் சீறூர்
நன்மனை யறியின் நன்றுமன் தில்ல
செம்மல் நெஞ்சமொடு தாம்வந்து பெயர்ந்த
கானலோ டழியுநர் போலாம் பானாள்
10 முனிபடர் களையினுங் களைப
நனிபே ரன்பினர் காத லோரே.

இரவுக்குறி முகம்புக்கது ; வரைவுநீட ஆற்றாளாய தலைமகளைத்
தோழி வரைவுணர்த்தி வற்புறுத்தியதூஉமாம்.

## 2098. புறநானூறு - 52.

அணங்குடை நெடுங்கோட் டளையக முனைஇ
முணங்குநிமிர் வயமான் முழுவலி யொருத்தல்
ஊனசை யுள்ளந் துரப்ப இரைகுறித்துத்
தான்வேண்டு மருங்கின் வேட்டெழுந் தாங்கு
5 வடபுல மன்னர் வாட அடல்குறித்து

இன்னு வெம்போ ரியல்தேர் வழுதி
இதுநீ கண்ணிய தாயின் இருநிலத்து
யார்கொல் அளியர் தாமே ஊர்தொறும்
மீன்சுடு புகையின் புலவுநாறு நெடுங்கொடி
10 வயலுழை மருதின் வாங்குசினை வலக்கும்
பெருநல் யாணரின் ஒரீஇ இனியே
கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப்
பலிகண் மாறிய பாழ்படு பொதியில்
நரைமூ தாளர் நாயிடக் குழிந்த
15 வல்லின் நல்லகம் நிறையப் பல்பொறிக்
கான வாரணம் ஈனுங்
காடாகி விளியும் நாடுடை யோரே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.
பாண்டியன் கூடாகாரத்துத்துஞ்சிய
மாறன்வழுதியைப் பாடி
யது.



## 2099. புறநானூறு - 55.

ஓங்குமலைப் பெருவிற் பாம்புஞாண் கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றிப்
பெருவிற லமரர்க்கு வென்றி தந்த
கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்

5 பிறைநுதல் விளங்கு மொருகண் போல
வேந்துமேம் பட்ட பூந்தார் மாற
கடுஞ்சினத்த கொல்களிறுங் கதழ்பரிய
கலிமாவும்
நெடுங்கொடியநிமிர்தேரும்நெஞ்சுடையபுகல்மறவரும்,
நான்குடன் மாண்ட தாயினும் மாண்ட

என

10 அறநெறி முதற்றே அரசின் கொற்றம்
அதனால், நமரெனக் கோல்கோடாது
பிறரெனக் குணங்கொல்லாது
ஞாயிற் றன்ன வெந்திற லாண்மையும்
திங்க ளன்ன தண்பெருஞ் சாயலும்
15 வானத் தன்ன வண்மையு மூன்றும்
உடைமை யாகி இல்லோர் கையற
நீநீடு வாழிய நெடுந்தகை தாழ்நீர்
வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்றுறைக்
20 கடுவளி தொகுப்ப ஈண்டிய
வடுவா ழெக்கர் மணலினும் பலவே.

திணை - பாடாண்டிணை ; துறை - செவியறிவுறூஉ.
பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய
நன்மாறனைப் பாடியது.

**2100. புறநானூறு - 138.**

ஆனினங் கலித்த அதர்பல கடந்து
மானினங் கலித்த மலையின் ஒழிய
மீனினங் கலித்த துறைபல நீந்தி
உள்ளி வந்த வள்ளுயிர்ச் சீறியாழ்
5 சிதாஅ ருடுக்கை முதாஅரிப் பாண

மருதனிளநாகனுர் 1193

நீயே பேரெண் ணலையே நின்இறை
மாறி வாவென மொழியலன் மாதோ
ஒலியிருங் கதுப்பின் ஆயிழை கணவன்
கிளிமரீஇய வியன்புனத்து

10 மரனணி பெருங்குரல் அனையன் ஆதலின்
நின்னை வருதல் அறிந்தனர் யாரே.

திணை - பாடாண்டிணை ; துறை - பாணாற்றுப்படை.
நாஞ்சில் வள்ளுவனைப் பாடியது.

## 2101. புறநானூறு - 139.

சுவலழுந்தப் பலகாய
சில்லோதிப் பல்லிளைஞருமே
அடிவருந்த நெடிதேறிய
கொடி மருங்குல் விறலியருமே
5 வாழ்தல் வேண்டிப்
பொய்கூறேன் மெய்கூறுவல்

ஓடாப் பூட்கை யுரவோர் மருக
உயர்சிமைய உழாஅ நாஞ்சிற் பொருந
மாயா வுள்ளமொடு பரிசில் துன்னிக்
10 கனிபதம் பார்க்குங் காலே யன்றே
ஈத லானுன் வேந்தே வேந்தற்குச்
சாத லஞ்சாய் நீயே ஆயிடை
இருநில மிளிர்ந்திசி னூஅங் கொருநாள்
அருஞ்சமம் வருகுவ தாயின்
15 வருந்தலு முண்டென் பைதலங் கடும்பே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.
நாஞ்சில் வள்ளுவனைப் பாடியது.

## 2102. புறநானூறு - 349.

நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்
கடிய கூறும் வேந்தே தந்தையும்
நெடிய வல்லது பணிந்து மொழியலனே



இஃதிவர் படிவ மாயின் வையெயிற்று
5 அரிமதர் மழைக்கண் அம்மா வரிவை
மரம்படு சிறுதீப் போல
அணங்கா யினள்தான் பிறந்த வூர்க்கே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

## ௨0௨. மலையனூர்

### 2103 நற்றிணை - 93. குறிஞ்சி

பிரசந் தூங்கப் பெரும்பழந் துணர
வரைவெள் ளருவி மாலையி னிழிதரக்
கூல மெல்லாம் புலம்புக நாளும்
மல்லற் றம்ம இம் மலைகெழு வெற்பெனப்
5 பிரிந்தோ ரிரங்கும் பெருங்கன் னாட
செல்க மெழுமோ சிறக்கநின் னூழி
மருங்கு மறைத்த திருந்திழைப் பணைத்தோள்
நல்கூர் நுசுப்பின் மெல்லியற் குறுமகள்
பூண்டாழ் ஆகம் நாணட வருந்திய
10 பழங்கண் மாமையு முடைய தழங்குகுரல்
மயிர்க்கண் முரசி னோருமுன்
உயிர்க்குறி யெதிர்ப்பை பெறலருங் குரைத்தே.

வரைவுகடாயது.

## ௨0௩. மள்ளனூர்

### 2104. குறுந்தொகை - 72. குறிஞ்சி பூவொத்

தலமருந் தகைய வவொத்து
எல்லாரும் அறிய நோய்செய் தனவே
தேமொழித் திரண்ட மென்தோள் மாமலைப் பரீஇ
வித்திய வெனற்
குரீஇ யோப்புவாள் பெருமழைக் கண்ணே. தலைமகன் தன்வேறுபாடுகண்டு வினவிய பாங்கற்கு உரைத்தது.

## 2105. நற்றிணை - 204. குறிஞ்சி

தளிர்சேர் தண்டழை தைஇ நுந்தை
குளிர்வாய் வியன்புனத் தெற்பட வருகோ
குறுஞ்சுனைக் குவளை யடைச்சிநாம் புணரிய
நறுந்தண் சாரல் ஆடுகம் வருகோ
5 இன்சொல் மேவலைப் பட்டவென் னெஞ்சுணக்
கூறினி மடந்தைநின் கூரெயி றுண்கென
யான்தன் மொழிதலின் மொழியெதிர் வந்து
தான்செய் குறிநிலை யினிய கூறி
ஏறுபிரி மடப்பிணை கடுப்ப வேறுபட்டு
10 உறுகழை நிவப்பிற் சிறுகுடிப் பெயருங்
கொடிச்சி செல்புறம் நோக்கி
விடுத்த நெஞ்சம் விடலொல் லாதே.

பின்னின்ற தலைமகன் ஆற்றானாய்த் தோழிகேட்பத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

## ௨௦௪. மாங்குடி மருதனார்

## (மதுரைக்காஞ்சிப் புலவர்)

## 2106. அகநானூறு - 89. பாலை

தெறுகதிர் ஞாயிறு நடுநின்று காய்தலின் உறுபெயல்

வறந்த ஓடுதேர் நனந்தலை உருத்தெழு குரல குடிஞைச்
சேவல்
புல்சாய் விடரகம் புலப்ப வரைய
5 கல்லெறி யிசையின் இரட்டும் ஆங்கண் சிள்வீடு
கறங்குஞ் சிறியிலை வேலத்து ஊழுறு விளைநெற்று
உதிரக் காழியர் கவ்வைப் பரப்பின் வெவ்வுவர்ப்
பொழியக்,
களரி பரந்த கன்னெடு மருங்கின்
10 விளரூன் தின்ற வீங்குசிலை மறவர்
மைபடு திண்டோள் மலிர ஆட்டிப்



பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய
திருந்துவாள் வயவர் அருந்தலை துமித்த
படுபுலாக் கமழும் ஞாட்பிற் றுடியிகுத்து
15 அருங்கலந் தெறுத்த பெரும்புகல் வலத்தர்
வில்கெழு குறும்பிற் கோள்முறை பகுக்குங்
கொல்லை யிரும்புனம் நெடிய என்னாது
மெல்லென் சேவடி மெலிய ஏக
வல்லுநள் கொல்லோ தானே தேம்பெய்து
20 அளவுறு தீம்பால் அலைப்பவு முண்ணாள்
இடுமணற் பந்தருள் இயலும்
நெடுமென் பணைத்தோள் மாஅ யோளே.
மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

**2107.** குறுந்தொகை - **164.** மருதம்

கணைக்கோட்டு வாளைக் கமஞ்சூல் மடநாகு
துணர்த்தேக் கொக்கின் தீம்பழங் கதூஉந்
தொன்றுமுதிர் வேளிர் குன்றூர்க் குணாது
தண்பெரும் பௌவம் அணங்குக தோழி
5 மனையோள் மடமையிற் புலக்கும்
அனையேம் மகிழ்நற்கியாம் ஆயின மெனினே.

காதற்பரத்தை தலைமகட்குப் பாங்காயினர் கேட்ப உரைத்தது.

**2108.** குறுந்தொகை - **173.** குறிஞ்சி

பொன்னேர் ஆவிரைப் புதுமலர் மிடைந்த
பன்னூல் மாலைப் பனைபடு கலிமாப்
பூண்மணி கறங்க ஏறி நாணட்டுப்
பழிபட ருண்ணோய் வழிவழி சிறப்ப
5 இன்னள் செய்த திதுவென முன்னின்று

அவள்பழி நுவலு மிவ்வூர்
ஆங்குணர்ந் தமையினீங்கு ஏகுமா றுளேனே.

குறை மறுக்கப்பட்ட தலைமகன் தோழிக்கு உரைத்தது. மாங்குடி மருதனார்

1197

**2109.** குறுந்தொகை - **302.** குறிஞ்சி

உரைத்திசின் தோழி அது புரைத்தோ வன்றே

அருந்துய ருழத்தலும் ஆற்றும் அதன்றலைப்
பெரும்பிறி தாகல் அதனினும் அஞ்சுதும்
அன்னோ இன்னும் நன்மலை நாடன்
5 பிரியா நண்பின ரிருவரு மென்னும்
அலர தற் கஞ்சினன் கொல்லோ பலருடன்
துஞ்சூர் யாமத் தானுமென்
நெஞ்சத் தல்லது வரவறி யானே.

வரைவிடைக் கவன்ற தோழிக்குக் கிழத்தி சொல்லியது.

## 2110. நற்றிணை - 120. மருதம்

தடமருப் பெருமை மடநடைக் குழவி
தூண்டொறும் யாத்த காண்டகு நல்லிற்
கொடுங்குழை பெய்த செழுஞ்செய் பேழை
சிறுதாழ் செறித்த மெல்விரல் சேப்ப
5 வாளை யீர்ந்தடி வல்லிதின் வகைஇப்
புகையுண் டமர்த்த கண்ணள் தகைபெறப்
பிறைநுதற் பொறித்த சிறுநுண் பல்வியர்
அந்துகிற் றலையிற் றுடையினள் நப்புலந்து
அட்டி லோளே யம்மா வரிவை
10 எமக்கே வருகதில் விருந்தே சிவப்பான்று
சிறிய முள்ளெயிறு தோன்ற
முறுவல் கொண்ட முகங்காண் கம்மே.

விருந்து வாயிலாகப்புக்க தலைவன் சொல்லியது.

## 2111. நற்றிணை - 123. நெய்தல்

உரையாய் வாழி தோழி இருங்கழி

இரையார் குருகின் நிரைப்பறைத் தொழுதி
வாங்குமடற் குடம்பைத் தூங்கிருட் டுவன்றும்
பெண்ணை யோங்கிய வெண்மணற் படப்பைக்



5 கான லாயமொடு காலைக் குற்ற
கட்கம ழுலர தண்ணறுங் காவி
அம்பகை நெறித்தழை அணிபெறத் தைஇ
வரிபுனை சிற்றிற் பரிசிறந் தோடிப்
புலவுத்திரை யுதைத்த கொடுந்தாட் கண்டற்
10 செம்பே ரீரலை யலவற் பார்க்குஞ்
சிறுவிளை யாடலும் அழுங்க
நினக்குப்பெருந் துயர மாகிய நோயே.

தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்கு உரைப்பா ளாய்ச் சொல்லியது

## 2112. பத்துப்பாட்டு - 6-வது மதுரைக்காஞ்சி

ஓங்குதிரை வியன்பரப்பின்
ஒலிமுந்நீர் வரம்பாகத்
தேன்தூங்கு முயர்சிமைய
மலைநாறிய வியன்ஞாலத்து
5 வலமாதிரத்தான் வளிகொட்ப
வியனாண்மீன் நெறியொழுகப்
பகற்செய்யுஞ் செஞ்ஞாயிறும்

இரவுச்செய்யும் வெண்டிங்களும்
மைதீர்ந்து கிளர்ந்துவிளங்க
10 மழைதொழில் உதவ மாதிரங் கொழுக்கத்
தொடுப்பின் ஆயிரம் வித்தியது விளைய நிலனும்
மரனும் பயனெதிர்பு நந்த
நோயிகந்து நோக்குவிளங்க
மேதக மிகப்பொலிந்த
15 ஓங்குநிலை வயக்களிறு
கண்டுதண்டாக் கட்கின்பத்து
உண்டுதண்டா மிகுவளத்தான்
உயர்பூரிம விழுத்தெருவிற்
பொய்யறியா வாய்மொழியாற்
20 புகழ்நிறைந்த நன்மாந்தரொடு

மாங்குடி மருதனார் - மதுரைக்காஞ்சி

1199

நல்லூழி அடிப்படரப்
பல்வெள்ளம் மீக்கூற
உலகம் ஆண்ட உயர்ந்தோர் மருக
பிணக்கோட்ட களிற்றுக்குழும்பின்
25 நிணம்வாய்ப்பெய்த பேய்மகளிர்
இணையொலியிமிழ் துணங்கைச்சீர்ப்

பிணையூபம் எழுந்தாட
அஞ்சுவந்த போர்க்களத்தான்
ஆண்டலை யணங்கடுப்பின்
30 வயவேந்தர் ஒண்குருதி
சினத்தீயிற் பெயர்புபொங்கத்
தெறலருங் கடுந்துப்பின்
விறல்விளங்கிய விழுச்சூர்ப்பின்
தொடித்தோட்கை துடுப்பாக
35 ஆடுற்ற வூன்சோறு
நெறியறிந்த கடிவாலுவன்
அடியொதுங்கிப் பிற்பெயராப்
படையோர்க்கு முருகயர
அமர்கடக்கும் வியன்தானைத்
40 தென்னவற் பெயரிய துன்னருந் துப்பின்
தொன்முது கடவுட் பின்னர் மேய
வரைத்தா ழருவிப் பொருப்பிற் பொருந
விழுச்சூழிய விளங்கோடைய
கடுஞ்சினத்த கமழ்கடாஅத்து
45 அளறுபட்ட நறுஞ்சென்னிய
வரைமருளும் உயர்தோன்றல
வினைநவின்ற பேர்யானை
சினஞ்சிறந்து களனுழக்கவும்
மாவெடுத்த மலிகுரூஉத்துகள்
50 அகல்வானத்து வெயில்கரப்பவும்
வாம்பரிய கடுந்திண்டேர்
காற்றென்னக் கடிதுகொட்பவும்

தோள்முறையான் வீறுமுற்றவும்
55 இருபெரு வேந்தரொடு வேளிர் சாயப்
பொருதவரைச் செருவென்றும்
இலங்கருவிய வரைநீந்திச்
சுரம்போழ்ந்த இகலாற்றல்
உயர்ந்தோங்கிய விழுச்சிறப்பின்
60 நிலந்தந்த பேருதவிப்
பொலந்தார் மார்பின் நெடியோ னும்பல்
மரந்தின்னூஉ வரையுதிர்க்கும்
நரையுருமின் ஏறனையை

அருங்குழுமிளைக் குண்டுகிடங்கின்
65 உயர்ந்தோங்கிய நிரைப்புதவின்
நெடுமதில் நிரைஞாயில்
அம்புமிழ் அயிலருப்பம்
தண்டாது தலைச்சென்று
கொண்டுநீங்கிய விழுச்சிறப்பின்
70 தென்குமரி வடபெருங்கல்
குணகுடகட லாவெல்லைத்
தொன்றுமொழிந்து தொழில்கேட்ப
வெற்றமொடு வெறுத்தொழுகிய

கொற்றவர்தங் கோனாகுவை
75 வானியைந்த இருமுந்நீர்ப்
பேஎநிலைஇய இரும்பௌவத்துக்
கொடும்புணரி விலங்குபோழக்
கடுங்காலொடு கரைசேர
நெடுங்கொடிமிசை இதையெடுத்து
80 இன்னிசைய முரசமுழங்கப்
பொன்மலிந்த விழுப்பண்டம்
நாடார நன்கிழிதரும்
ஆடியற் பெருநாவாய்
மழைமுற்றிய மலைபுரையத்
85 துறைமுற்றிய துளங்கிருக்கைத்
தெண்கடற் குண்டகழிச்

மாங்குடி மருதனார் - மதுரைக்காஞ்சி

1201

சீர்சான்ற உயர்நெல்லின்
ஊர்கொண்ட உயர்கொற்றவ
நீர்த்தெவ்வு நிரைத்தொழுவர்
90 பாடுசிலம்பும் இசையேற்றத்
தோடுவழங்கும் அகலாம்பியிற்
கயன்அகைய வயல்நிறைக்கும்
மென்தொடை வன்கிழாஅர்

அதரி கொள்பவர் பகடுபூண் தெண்மணி
95 இரும்புள் ஓப்பும் இசையே யென்றும்
மணிப்பூ முண்டகத்து மணல்மலி கானற்
பரதவர் மகளிர் குரவையொ டொலிப்ப
ஒருசார், விழவுநின்ற வியலாங்கண்
முழவுத்தோள் முரட்பொருநர்க்கு
100 உருகெழு பெருஞ்சிறப்பின்
இருபெயர்ப் பேராயமொடு
இலங்குமருப்பிற் களிறுகொடுத்தும்
பொலந்தாமரைப் பூச்சூட்டியும்
நலஞ்சான்ற கலஞ்சிதறும்
105 பல்குட்டுவர் வெல்கோவே
கல்காயுங் கடுவேனிலொடு

இருவானம் பெயலொளிப்பினும்
வரும்வைகல் மீன்பிறழினும்
வெள்ளமா றாது விளையுள் பெருக
110 நெல்லின் ஓதை அரிநர் கம்பலை
புள்ளிமிழ்ந் தொலிக்கும் இசையே யென்றும்
சலம்புகன் று சுறவுக்கலித்த
புலவுநீர் வியன்பௌவத்து
நிலவுக்கானல் முழவுத்தாழைக்
115 குளிர்ப்பொதும்பர் நளித்தூவல்
நிரை திமில் வேட்டுவர் கரைசேர் கம்பலை
இருங்கழிச் செறுவின் வெள்ளுப்புப் பகர்நரொடு
ஒலியோவாக் கலியாணர்

முதுவெள்ளிலே மீக்கூறும்
76



120 வியன்மேவல் விழுச்செல்வத்து
இருவகையான் இசைசான்ற
சிறுகுடிப் பெருந்தொழுவர்
குடிகெழீஇய நானிலவரொடு
தொன்றுமொழிந்து தொழில்கேட்பக்
125 காலென்னக் கடிதுராஅய்
நாடுகெட எரிபரப்பி
ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்து
அரசுபட அமருழக்கி
முரசுகொண்டு களம்வேட்ட
130 அடுதிறலுயர் புகழ்வேந்தே
நட்டவர் குடியுயர்க்குவை
செற்றவர் அரசுபெயர்க்குவை
பேருலகத்து மேஎந்தோன்றிச்
சீருடைய விழுச்சிறப்பின்
135 விளைந்துமுதிர்ந்த விழுமுத்தின்
இலங்குவளை யிருஞ்சேரிக்
கட்கொண்டிக் குடிப்பாக்கத்து
நற்கொற்கையோர் நசைப்பொருந
செற்ற தெவ்வர் கலங்கத் தலைச்சென்று

140 அஞ்சுவரத் தட்கும் அணங்குடைத் துப்பிற்
கோழூஉன்குறைக் கொழுவல்சிப்
புலவுவிற் பொலிகூவை
ஒன்றுமொழி ஒலியிருப்பின்
தென்பரதவர் போரேறே
145 அரியவெல்லாம் எளிதினிற்கொண்டு
உரியவெல்லாம் ஓம்பாது வீசி
நனிபுகன் றுறைதமென்று தேற்றெழுந்து
பனிவார் சிமையக் கானம் போகி
அகநாடு புக்கவர் அருப்பம் வௌவி
150 யாண்டுபல கழிய வேண்டுபுலத் திறுத்து
மேம்பட மரீஇய வெல்போர்க் குருசில்
உறுசெறுநர் புலம்புக்கவர்

மாங்குடி மருதனூர் - மதுரைக்காஞ்சி

1203

கடிகாவின் நிலைதொலைச்சி
இழிபறியாப் பெருந்தண்பணை
155 குரூஉக்கொடிய எரிமேய
நாடெனும்பேர் காடாக

ஆசேந்தவழி மாசேப்ப
ஊரிருந்தவழி பாழாக
இலங்குவளை மடமங்கையர்
160 துணங்கையஞ்சீர்த் தழூஉமறப்ப
அவையிருந்த பெரும்பொதியிற்
கவையடிக் கடுநோக்கத்துப்
பேய்மகளிர் பெயர்பாட
அணங்குவழங்கும் அகலாங்கண்
165 நிலத்தாற்றுங் குழூஉப்புதவின்
அரந்தைப் பெண்டிர் இனைந்தனர் அகவக்
கொழும்பதிய குடிதேம்பிச்
செழுங்கேளிர் நிழல்சேர
நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளிக்
170 குடுமிக் கூகை குராலொடு முரலக்
கழுநீர் பொலிந்த கண்ணகன் பொய்கைக்
களிறுமாய் செருந்தியொடு கண்பமன் றூர்தர
நல்லேர் நடந்த நகைசால் விளைவயற்
பன்மயிர்ப் பிணவொடு கேழல் உகள
175 வாழா மையின் வழிதவக் கெட்டுப்
பாழா யினநின் பகைவர் தேஎம்
எழாஅத்தோள் இமிழ்முழக்கின்
மாஅத்தா ளுயர்மருப்பிற்
கடுஞ்சினத்த களிறுபரப்பி
180 விரிகடல் வியன்தானையொடு

முருகுறழப் பகைத்தலைச்சென்று
அகல்விசும்பின் ஆர்ப்பிமிழப்
பெயலுறழக் கணைசிதறிப்
பலபுரவி நீறுகைப்ப
185 வளைநரல வயிரார்ப்பப்



பீடழியக் கடந்தட்டவர்
நாடழிய எயில்வௌவிச்
சுற்றமொடு தூவறுத்தலிற்
செற்ற தெவ்வர் நின்வழி நடப்ப
190 வியன்கண் முதுபொழில் மண்டில முற்றி
அரசியல் பிழையா தறநெறி காட்டிப்
பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது
குடமுதற் றோன்றிய தொன்றுதொழு
பிறையின்
வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றம்
195 குணமுதற் றோன்றிய ஆரிருள் மதியின்
தேய்வன கெடுகநின் தெவ்வ ராக்கம்
உயர்நிலை யுலகம் அமிழ்தொடு பெறினும்
பொய்சேண் நீங்கிய வாய்நட் பினையே
முழங்குகட லேணி மலர்தலை யுலகமொடு 200

உயர்ந்த தேஎத்து விழுமியோர் வரினும்
பகைவர்க் கஞ்சிப் பணிந்தொழு கலையே
தென்புல மருங்கின் விண்டு நிறைய
வாணன் வைத்த விழுநிதி பெறினும்
பழிநமக் கெழுக வென்னாய் விழுநிதி 205 ஈத
லுள்ளமொடு இசைவேட் குவையே
அன்னாய் நின்னொடு முன்னிலை எவனோ
கொன்னொன் றுகிளக்குவல் அடுபோ ரண்ணல்
கேட்டிசின் வாழி கெடுகநின் அவலம்
கெடாது நிலைஇயர்நின் சேண்விளங்கு நல்லிசை
210 தவாப்பெருக்கத் தறாயாணர்
அழித்தானாக் கொழுந்திற்றி
இழித்தானாப் பலசொன்றி
உண்டானாக் கூர்நறவின்
தின்றாநா இனவைகல்
215 நிலனெடுக் கல்லா ஒண்பல் வெறுக்கைப்
பயனற வறியா வளங்கெழு திருநகர்
நரம்பின் முரலும் நயம்வரு முரற்சி
விறலியர் வறுங்கைக் குறுந்தொடி செறிப்பப்
மாங்குடி மருதனார் - மதுரைக்காஞ்சி



பாணர் உவப்பக் களிறுபல தரீஇக்
220 கலந்தோர் உவப்ப எயிற்பல கடைஇ

மறங்கலங்கத் தலைச்சென்று
வாளுழந்ததன் தாள்வாழ்த்தி
நாளீண்டிய நல்லகவர்க்குத்
தேரோடு மாசிதறிச்
225 சூடுற்ற சுடர்ப்பூவின்
பாடுபுலர்ந்த நறுஞ்சாந்தின்
விழுமிய பெரியோர் சுற்ற மாகக்
கள்ளின் இரும் பைக் கலஞ்செல வுண்டு
பணிந்தோர் தேஎந் தம்வழி நடப்பப்
230 பணியார் தேஎம் பணித்துத்திறை கொண்மார்
பருந்துபறக் கல்லாப் பார்வற் பாசறைப்
படுகண் முரசங் காலை யியம்ப
வெடிபடக் கடந்து வேண்டுபுலத் திறுத்த

பணைகெழு பெருந்திறற் பல்வேல் மன்னர்
235 கரைபொரு திரங்குங் கனையிரு முந்நீர்த்
திரையிடு மணலினும் பலரே உரைசெல
மலர்தலை யுலகம் ஆண்டுகழிந் தோரே
அதனால், குணகடல் கொண்டு குடகடல்
இரவு மெல்லையும் விளிவிடன் அறியாது

முற்றி

240 அவலும் மிசையும் நீர்த்திரள்பு ஈண்டிக்

கவலையங் குழும்பின் அருவி யொலிப்பக்
கழைவளர் சாரற் களிற்றினம் நடுங்க
வரைமுத லிரங்கும் ஏறொடு வான்ஞெமிர்ந்து
சிதாற் பெரும்பெயல் சிறத்தலின் தாங்காது
245 குணகடற் கிவர்தருங் குரூஉப்புன லுந்தி
நிவந்துசெல் நீத்தங் குளங்கொளச் சாற்றிக்
களிறுமாய்க்குங் கதிர்க்கழனி
ஒளிறிலஞ்சி அடைநிவந்த
முட்டாள சுடர்த்தாமரை
250 கட்கமழும் நறுநெய்தல்
வள்ளித ழவிழ்நீலம்



மெல்லிலை அரியாம்பலொடு
வண்டிறை கொண்ட கமழ்பூம் பொய்கைக்
கம்புட் சேவல் இன்துயி லிரிய
255 வள்ளை நீக்கி வயமீன் முகந்து
கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்
வேழப் பழனத்து நூழி லாட்டுக்
கரும்பின் எந்திரங் கட்பின் ஓதை
அள்ளற் றங்கிய பகடுறு விழுமம்
260 கள்ளார் களமர் பெயர்க்கும் ஆர்ப்பே
ஒலிந்த பகன்றை விளைந்த கழனி

வன்கை வினைஞர் அரிபறை யின்குரல்
தளிமழை பொழியுந் தண்பரங் குன்றிற்
கலிகொள் சும்மை ஒலிகொள் ஆயம்
265 தழைந்த கோதை தாரொடு பொலியப்
புணர்ந்துடன் ஆடும் இசையே அனைத்தும்
அகலிரு வானத் திமிழ்ந்தினிது இசைப்பக்
குருகுநரல மனைமரத்தான்
மீன்சீவும் பாண்சேரியொடு
270 மருதஞ் சான்ற தண்பணை சுற்றி; ஒருசார்ச்
சிறுதினை கொய்யக் கவ்வை கறுப்பக்
கருங்கால் வரகின் இருங்குரல் புலர
ஆழ்ந்த குழும்பிற் றிருமணி கிளர
எழுந்த கடற்றின் நன்பொன் கொழிப்பப்
275 பெருங்கவின் பெற்ற சிறுதலை நௌவி
மடக்கட் பிணையொடு மறுகுவன உகளச்
சுடர்ப்பூங் கொன்றை தாஅய நீழற்
பாஅ யன்ன பாறை யணிந்து
நீலத் தன்ன பைம்பயிர் மிசைதொறும்
280 வெள்ளி யன்ன ஒள்வீ யுதிர்ந்து
சுரிமுகிழ் முசுண்டையொடு முல்லை தாஅய்
மணிமருள் நெய்தல் உறழக் காமர்
துணிநீர் மெல்லவற் றொய்யிலொடு மலர
வல்லோன் தைஇய வெறிக்களங் கடுப்ப

285 முல்லை சான்ற புறவணிந்து ஒருசார்
நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய
குறுங்கதிர்த் தோரை நெடுங்கால் ஐயவி
ஐவன வெண்ணெலொடு அரில்கொள்பு நீடி

இஞ்சி மஞ்சட் பைங்கறி பிறவும்
290 பல்வேறு தாரமொடு கல்லகத் தீண்டித்
தினைவிளை சாரற் கிளிகடி பூசல்
மணிப்பூ அவரைக் குரூஉத்தளிர் மேயும்
ஆமா கடியுங் கானவர் பூசல்
சேணோன் அகழ்ந்த மடிவாய்ப் பயம்பின்
295 வீழ்முகக் கேழல் அட்ட பூசல்
கருங்கால் வேங்கை யிருஞ்சினைப் பொங்கர்
நறும்பூக் கொய்யும் பூசல் இருங்கேழ்
ஏறடு வயப்புலிப் பூசலொ டனைத்தும்
இலங்குவெள் ளருவியொடு சிலம்பகத்து இரட்டக்
300 கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பணிந்து
அருங்கடி மாமலை தழீஇ ஒருசார்
இருவெதிர்ப் பைந்தூறு கூரெரி நைப்ப
நிழத்த யானை மேய்புலம் படரக்
கலித்த இயவர் இயந்தொட் டன்ன
305 கண்விடு புடையூஉத் தட்டை கவினழிந்து

அருவி யான்ற அணியின் மாமலை
வைகண் டன்ன புன்முளி யங்காட்டுக்
கமஞ்சூழ் கோடை விடரக முகந்து
காலுறு கடலின் ஒலிக்குஞ் சும்மை
310 இலைவேய் குரம்பை யுழையதட் பள்ளி
உவலைக் கண்ணி வன்சொல் இளைஞர்
சிலையுடைக் கையர் கவலை காப்ப
நிழலுரு விழந்த வேனிற் குன்றத்துப்
பாலை சான்ற சுரஞ்சேர்ந்து ஒருசார் 315
முழங்குகடல் தந்த விளங்குகதிர் முத்தம்
அரம்போழ்ந் தறுத்த கண்ணேர் இலங்குவளை
பரதர் தந்த பல்வேறு கூலம்



இருங்கழிச் செறுவிற் றீம்புளி வெள்ளுப்புப்
பரந்தோங்கு வரைப்பின் வன்கைத் திமிலர்
320 கொழுமீன் குறைஇய துடிக்கட் டுணியல்
விழுமிய நாவாய் பெருநீர் ஒச்சுநர்
நனந்தலைத் தேஎத்து நன்கலன் உய்ம்மார்
புணர்ந்துடன் கொணர்ந்த புரவியொ டனைத்தும்
வைகல் தோறும் வழிவழிச் சிறப்ப
325 நெய்தல் சான்ற வளம்பல பயின்றங்கு
ஐம்பாற் றிணையும் கவினி அமைவர
முழவிமிழும் அகலாங்கண்
விழவுநின்ற வியன்மறுகில்

துணங்கையந் தழூஉவின் மணங்கமழ் சேரி
330 இன்கலி யாணர்க் குழூஉப்பல பயின்றாங்குப்
பாடல் சான்ற நன்னாட்டு நடுவண்
கலைதாய உயர்சிமையத்து
மயிலகவு மலிபொங்கர்
மந்தி யாட மாவிசும் புகந்து
335

முழங்குகால் பொருத மரம்பயில் காவின்
இயங்குபுனல் கொழித்த வெண்டலைக் குவவுமணற்
கான்பொழில் தழீஇய அடைகரை தோறும்

தாதுசூழ் கோங்கின் பூமலர் தாஅய்க்
கோதையி னொழுகும் விரிநீர் நல்வரல்
340 அவிரறல் வையைத் துறைதுறை தோறும்
பல்வேறு பூத்திரட் டண்டலை சுற்றி
அழுந்துபட் டிருந்த பெரும்பாண்
இருக்கையும்
நிலனும் வளனுங் கண்டமை கல்லா
விளங்குபெருந் திருவின் மான விறல்வேள்
345 அழும்பி லன்ன நாடிழந் தனரும்
கொழும்பல் பதிய குடியிழந் தனரும்
தொன்றுகறுத் துறையுந் துப்புத்தர வந்த

அண்ணல் யானை அடுபோர் வேந்தர்
இன்னிசை முரசம் இடைப்புலத் தொழியப்
350 பன்மா றோட்டிப் பெயர்புறம் பெற்று

மாங்குடி மருதனார் - மதுரைக்காஞ்சி

1209

மண்ணுற வாழ்ந்த மணிநீர்க் கிடங்கின்
விண்ணுற ஓங்கிய பல்படைப் புரிசைத்
தொல்வலி நிலைஇய அணங்குடை நெடுநிலை
நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்
355 மழையாடு மலையின் நிவந்த மாடமொடு
வையை யன்ன வழக்குடை வாயில்
வகைபெற எழுந்து வான மூழ்கிச்
சில்காற் றிசைக்கும் பல்புழை நல்லில்
யாறுகிடந் தன்ன அகனெடுந் தெருவிற்
360 பல்வேறு குழாஅத் திசையெழுந் தொலிப்ப
மாகா லெடுத்த முந்நீர் போல
முழங்கிசை நன்பணை அறைவனர் நுவலக்
கயங்குடைந் தன்ன இயந்தொட் டிமிழிசை
மகிழ்ந்தோ ராடுங் கலிகொள் சும்மை
365 ஓவுக்கண் டன்ன இருபெரு நியமத்துச்
சாறயர்ந் தெடுத்த உருவப் பல்கொடி
வேறுபல் பெயர ஆரெயில் கொளக்கொள
நாடோ றெடுத்த நலம்பெறு புனைகொடி
நீரொலித் தன்ன நிலவுவேற் றானையொடு

370 புலவுப்படக் கொன்று மிடைதோல் ஓட்டிப்
புகழ்செய் தெடுத்த விறல்சால் நன்கொடி
கள்ளின் களிநவில் கொடியொடு நன்பல
375

பல்வேறு குழூஉக்கொடி பதாகை நிலைஇப்
பெருவரை மருங்கின் அருவியின் நுடங்கப்
பணைமீன் வழங்கும் வளைமேய் பரப்பின்
வீங்குபிணி நோன்கயி றரீஇ இதைபுடையூக்
கூம்புமுதல் முருங்க எற்றிக் காய்ந்துடன்
கடுங்காற் றெடுப்பக் கல்பொரு துரைஇ
380

நெடுஞ்சுழிப் பட்ட நாவாய் போல
இருதலைப் பணில மார்ப்பச் சினஞ்சிறந்து
கோலோர்க் கொன்று மேலோர் வீசி
மென்பிணி வன்தொடர் பேணாது
காழ்சாய்த்துக்
கந்துநீத் துழிதருங் கடாஅ யானையும்



அங்கண்மால் விசும்பு புதைய வளிபோழ்ந்து
385 ஒண்கதிர் ஞாயிற் றூறளவாத் திரிதரும்
செங்கா லன்னத்துச் சேவ லன்ன

குரூஉமயிர்ப் புரவி யுராலிற் பரிநிமிர்ந்து
காலெனக் கடுக்குங் கவின்பெறு தேரும்
கொண்ட கோலன் கொள்கை நவிற்றலின்
390 அடிபடு மண்டிலத் தாஇ போகிய
கொடிபடு சுவல விடுமயிர்ப் புரவியும்
வேழத் தன்ன வெருவரு செலவிற்
கள்ளார் களமர் இருஞ்செரு மயக்கமும்
அரியவும் பெரியவும் வருவன பெயர்தலின்
395 தீம்புழல் வல்சிக் கழற்கால் மழவர்
பூந்தலை முழவின் நோன்றலை கடுப்பப்
பிடகைப் பெய்த கமழ்நறும் பூவினர்
பலவகை விரித்த எதிர்பூங் கோதையர்
பலர்தொகுபு இடித்த தாதுகு சுண்ணத்தர்
400 தகைசெய் தீஞ்சேற் றின்னீர்ப் பசுங்காய்
நீடுகொடி யிலையினர் கோடுசுடு நூற்றினர்
இருதலை வந்த பகைமுனை கடுப்ப
இன்னுயி ரஞ்சி இன்னா வெய்துயிர்த்து
ஏங்குவனர் இருந்தவை நீங்கிய பின்றைப்
405 பல்வேறு பண்ணியந் தழீஇத்திரி விலைஞர்
மலைபுரை மாடத்துக் கொழுநிழல் இருத்தர
இருங்கடல் வான்கோடு புரைய வாருற்றுப்
பெரும்பின் னிட்ட வாலரைக் கூந்தலர்
நன்னர் நலத்தர் தொன்முது பெண்டிர்
410 செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை
செல்சுடர்ப் பசுவெயிற் றோன்றி யன்ன
செய்யர் செயிர்த்த நோக்கினர் மடக்கண்

ஐஇய கலுழும் மாமையர் வையெயிற் று
வார்ந்த வாயர் வணங்கிறைப் பணைத்தோட்
415 சோர்ந்துகு வன்ன வயக்குறு வந்திகைத்
தொய்யில் பொறித்த சுணங்கெதி ரிளமுலை

மாங்குடி மருதனார் - மதுரைக்காஞ்சி

1211

மையுக் கன்ன மொய்யிருங் கூந்தல்
மயிலிய லோரும் மடமொழி யோரும் 420
கைஇ மெல்லிதி னொதுங்கிக் கையெறிந்து
கல்லா மாந்தரொடு நகுவனர் திளைப்பப்
புடையமை பொலிந்த வகையமை செப்பிற்
காம ருருவிற் றும்வேண்டு பண்ணியம்
கமழ்நறும் பூவொடு மனைமனை மறுக

மழைகொளக் குறையாது புனல்புக மிகாது
425 கரைபொரு திரங்கு முந்நீர் போலக்
கொளக்கொளக் குறையாது தரத்தர மிகாது

கழுநீர் கொண்ட எழுநா ளந்தி
ஆடுதுவன் று விழவின் நாடார்த் தன்றே
மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்

430 நாளங் காடி நனந்தலைக் கம்பலை
வெயிற்கதிர் மழுங்கிய படர்கூர் ஞாயிற்றுச்
செக்க ரன்ன சிவந்துநுணங்கு உருவிற்
கண்பொரு புகூஉம் ஒண்பூங் கலிங்கம்
பொன்புனை வாளொடு பொலியக் கட்டித்
435 திண்டேர்ப் பிரம்பிற் புரளுந் தானைக்
கச்சந் தின்ற கழல்தயங்கு திருந்தடி
மொய்ம்பிறந்து திரிதரும் ஒருபெருந் தெரியல்
மணிதொடர்ந் தன்ன ஒண்பூங் கோதை
அணிகிளர் மார்பின் ஆரமொ டளைஇக்
440 காலியக் கன்ன கதழ்பரி கடைஇக்
காலோர் காப்பக் காலெனக் கழியும்
வான வண்கை வளங்கெழு செல்வர்
நாண்மகி ழிருக்கை காண்மார் பூணொடு
தெள்ளரிப் பொற்சிலம் பொலிப்ப ஒள்ளழற்
445 றுவற விளங்கிய ஆய்பொன் அவிரிழை
அணங்குவீழ் வன்ன பூந்தொடி மகளிர்
மணங்கமழ் நாற்றந் தெருவுடன் கமழ
ஒண்குழை திகழும் ஒளிகெழு திருமுகம்
திண்கா ழேற்ற வியலிரு விலோதம்



450 தெண்கடற் றிரையின் அசைவளி புடைப்ப
நிரைநிலை மாடத் தரமியந் தோறும்

மழைமாய் மதியிற் றோன்றுபு மறைய
நீரும் நிலனுந் தீயும் வளியும்
மாக விசும்போ டைந்துடன் இயற்றிய
455 மழுவாள் நெடியோன் தலைவ னாக
மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்
வாடாப் பூவின் இமையா நாட்டத்து
நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு
மாற்றரு மரபின் உயர்பலி கொடுமார் 460
அந்தி விழவிற் றூரியங் கறங்கத்
திண்கதிர் மதாணி ஒண்குறு மாக்களை
ஓம்பினர்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்
தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத்
தாமும் அவரும் ஓராங்கு விளங்கக்
465 காமர் கவினிய பேரிளம் பெண்டிர்
பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச்
சிறந்துபுறங் காக்குங் கடவுட் பள்ளியும்
சிறந்த வேதம் விளங்கப் பாடி
விழுச்சீ ரெய்திய ஒழுக்கமொடு புணர்ந்து
470 நிலமமர் வையத் தொருதா மாகி
உயர்நிலை யுலகம் இவணின் றெய்தும்
அறநெறி பிழையா அன்புடை நெஞ்சிற்
பெரியோர் மேஎ யினிதின் உறையும்
குன்றுகுயின் றன்ன அந்தணர் பள்ளியும்
475 வண்டுபடப் பழுநிய தேனார் தோற்றத்துப்

பூவும் புகையுஞ் சாவகர் பழிச்சச்
சென்ற காலமும் வரூஉம் அமயமும்
இன்றிவண் தோன்றிய ஒழுக்கமொடு

நன்குணர்ந்து
வானமும் நிலனுந் தாமுழு துணரும்
480 சான்ற கொள்கைச் சாயா யாக்கை
ஆன்றடங் கறிஞர் செறிந்தனர் நோன்மார்
கல்பொளிந் தன்ன இட்டுவாய்க் கரண்டைப்

மாங்குடி மருதனார் - மதுரைக்காஞ்சி

1213

பல்புரிச் சிமிலி நாற்றி நல்குவரக்
கயங்கண் டன்ன வயங்குடை நகரத்துச்
485 செம்பியன் றன்ன செஞ்சுவர் புனைந்து
நோக்குவிசை தவிர்ப்ப மேக்குயர்ந்
தோங்கி
இறும்பூது சான்ற நறும்பூஞ் சேக்கையும்
குன்றுபல குழீஇப் பொலிவன தோன்ற
அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்
490 செற்றமும் உவகையுஞ் செய்யாது காத்து
ஞெமன்கோ லன்ன செம்மைத் தாகிச்

சிறந்த கொள்கை அறங்கூ றவையமும்
நறுஞ்சாந்து நீவிய கேழ்கிள ரகலத்து
ஆவுதி மண்ணி அவிர்துகில் முடித்து
495 மாவிசும்பு வழங்கும் பெரியோர் போல
நன்றுந் தீதுங் கண்டாய்ந் தடக்கி
அன்பும் அறனும் ஒழியாது காத்துப்
பழியொரீஇ உயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்களும்
500 அறநெறி பிழையா தாற்றின் ஒழுகிக்
குறும்பல் குழுவிற் குன்றுகண் டன்ன
பருந்திருந் துகக்கும் பன்மாண் நல்லிற்
பல்வேறு பண்டமோ டூண்மலிந்து கவினி
மலையவும் நிலத்தவும் நீரவும் பிறவும்
505 பல்வேறு திருமணி முத்தமொடு
பொன்கொண்டு
சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரும்
மழையொழுக் கறாஅப் பிழையா விளையுட்
பழையன் மோகூர் அவையகம் விளங்க

நான்மொழிக் கோசர் தோன்றி யன்ன
510

தாமேஎன் தோன்றிய நாற்பெருங் குழுவும்
கோடுபோழ் கடைநருந் திருமணி குயினரும்
சூடுறு நன்பொன் சுடரிழை புனைநரும்
பொன்னுரை காண்மருங் கலிங்கம்
பகர்நரும்
செம்புநிறை கொண்மரும் வம்புநிறை
முடிநரும் 515 பூவும் புகையும் ஆயு மாக்களும்



எவ்வகைச் செய்தியும் உவமங் காட்டி
நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கிற்
கண்ணுள் வினைஞரும் பிறருங் கூடித்
தெண்டிரை யவிரறல் கடுப்ப ஒண்பல்
520 குறியவும் நெடியவும் மடிதரூஉ விரித்துச்
சிறியரும் பெரியருங் கம்மியர் குழீஇ
நால்வேறு தெருவினுங் காலுற நிற்றரக்
கொடும்பறைக் கோடியர் கடும்புடன் வாழ்த்தும்
தண்கடல் நாடன் ஒண்பூங் கோதை
525 பெருநா ளிருக்கை விழுமியோர் குழீஇ
விழைவுகொள் கம்பலை கடுப்பப் பலவுடன்
சேறும் நாற்றமும் பலவின் சுளையும்
வேறுபடக் கவினிய தேமாங் கனியும்

பல்வே றுருவிற் காயும் பழனும்
530 கொண்டல் வளர்ப்பக் கொடிவிடுபு கவினி
மென்பிணி யவிழ்ந்த குறுமுறி யடகும்
அமிர்தியன் றன்ன தீஞ்சேற்றுக் கடிகையும்
புகழ்படப் பண்ணிய பேரூன் சோறும்
கீழ்செல வீழ்ந்த கிழங்கொடு பிறவும்
535 இன்சோறு தருநர் பல்வயின் நுகர
வாலிதை யெடுத்த வளிதரு வங்கம்
பல்வேறு பண்டம் இழிதரும் பட்டினத்து
ஒல்லெ னிமிழிசை மானக் கல்லென
நனந்தலை வினைஞர் கலங்கொண்டு மறுகப்
540 பெருங்கடற் குட்டத்துப் புலவுத்திரை யோதம்
இருங்கழி மருவிப் பாயப் பெரிதெழுந்து
உருகெழு பானாள் வருவன பெயர்தலின்
பல்வேறு புள்ளின் இசையெழுந் தற்றே
அல்லங் காடி அழிதரு கம்பலை
545 ஒண்சுட ருருப்பொளி மழுங்கச் சினந்தணிந்து
சென்ற ஞாயிறு நன்பகற் கொண்டு
குடமுதற் குன்றஞ் சேரக் குணமுதல்
நாண்முதிர் மதியந் தோன்றி நிலாவிரிபு

பகலுரு வுற்ற இரவுவர நயந்தோர்
550 காத லின்றுணை புணர்மார் ஆயிதழ்த்
தண்ணறுங் கழுநீர் துணைப்ப இழைபுனையூஉ
நன்னெடுங் கூந்தல் நறுவிரை குடைய
நரந்தம் அரைப்ப நறுஞ்சாந்து மறுக
மென்னூற் கலிங்கம் கமழ்புகை மடுப்பப்
555 பெண்மகிழ் வுற்ற பிணைநோக்கு மகளிர்
நெடுஞ்சுடர் விளக்கங் கொளீஇ நெடுநகர்
எல்லை யெல்லா நோயொடு புகுந்து
கல்லென் மாலை நீங்க நாணுக்கொள
ஏழ்புணர் சிறப்பின் இன்தொடைச் சீறியாழ்
560 தாழ்பெயற் கனைகுரல் கடுப்பப் பண்ணுப்பெயர்த்து
வீழ்துணை தழீஇ வியல்விசும்பு கமழ
நீர்திரண் டன்ன கோதை பிறக்கிட்டு
ஆய்கோல் அவிர்தொடி விளங்க வீசிப்
போதவிழ் புதுமலர் தெருவுடன் கமழ
565

மேதகு தகைய மிகுநல மெய்திப்
பெரும்பல் குவளைச் சுரும்புபடு பன்மலர்
திறந்துமோந் தன்ன சிறந்துகமழ் நாற்றத்துக்
கொண்டல் மலர்ப்புதல் மானப்
பூவேய்ந்து
நுண்பூ ணாகம் வடுக்கொள முயங்கி
570 மாயப் பொய்பல கூட்டிக் கவவுக்கரந்து

சேயரும் நணியரும் நலனயந்து வந்த
இளம்பல் செல்வர் வளந்தப வாங்கி

நுண்தா துண்டு வறும்பூத் துறக்கும்
மென்சிறை வண்டினம் மானப் புணர்ந்தோர்
575 நெஞ்சே மாப்ப இன்துயில் துறந்து
பழந்தேர் வாழ்க்கைப் பறவை போலக்
கொழுங்குடிச் செல்வரும் பிறரும் மேஎய
மணம்புணர்ந் தோங்கிய அணங்குடை நல்லில்
ஆய்பொன் அவிர்தொடிப் பாசிழை
மகளிர்
580 ஒண்சுடர் விளக்கத்துப் பலருடன்
துவன்றி
நீனிற விசும்பில் அமர்ந்தன ராடும்

வானவ மகளிர் மானக் கண்டோர்
நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர்
யாம நல்யாழ் நாப்பண் நின்ற
585 முழவின் மகிழ்ந்தன ராடிக் குண்டுநீர்ப்
பனித்துறைக் குவவுமணல் முனைஇ மென்தளிர்க்
கொழுங்கொம்பு கொழுதி நீர்நனை மேவர
நெடுந்தொடர்க் குவளை வடிம்புற அடைச்சி
மணங்கமழ் மனைதொறும் பொய்தல் அயரக்
590 கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய ஓண நன்னாள்
கோணந் தின்ற வடுவாழ் முகத்த
சாணந் தின்ற சமந்தாங்கு தடக்கை
மறங்கொள் சேரி மாறுபொரு செருவின்
595 மாறா துற்ற வடுப்படு நெற்றிச்
சுரும்பார் கண்ணிப் பெரும்புகல் மறவர்
கடுங்களி றோட்டலிற் காணுநர் இட்ட
நெடுங்கரைக் காழகம் நிலம்பர லுறுப்பக்
கடுங்கட் பேறல் மகிழ்சிறந்து திரிதரக்

600 கணவ ருவப்பப் புதல்வர்ப் பயந்து
பணைத்தேந் திளமுலை அமுதம் ஊறப்
புலவுப்புனிறு தீர்ந்து பொலிந்த சுற்றமொடு
வளமனை மகளிர் குளநீர் அயரத்
திவவுமெய்ந் நிறுத்துச் செவ்வழி பண்ணிக்
605 குரல்புணர் நல்யாழ் முழவோ டொன்றி
நுண்ணீர் ஆகுளி இரட்டப் பலவுடன்
ஒண்சுடர் விளக்கம் முந்துற மடையொடு
நன்மா மயிலின் மென்மெல இயலிக்
கடுஞ்சூல் மகளிர் பேணிக் கைதொழுது
610 பெருந்தோட் சாலினி மடுப்ப ஒருசார்
அருங்கடி வேலன் முருகொடு வளைஇ
அரிக்கூ டின்னியங் கறங்க நேர்நிறுத்துக்
கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்
சீர்மிகு நெடுவேட் பேணித் தழூஉப்பிணையூஉ



615 மன்றுதொறும் நின்ற குரவை
சேரிதொறும்
உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ
வேறுவேறு கம்பலை வெறிகொள்பு
மயங்கிப்
பேரிசை நன்னன் பெறும்பெயர் நன்னா
ள்

சேரி விழவின் ஆர்ப்பெழுந் தாங்கு
620 முந்தை யாமஞ் சென்ற பின்றைப்
பணிலங் கலியவிந் தடங்கக்
காழ்சாய்த்து
நொடைநவில் நெடுங்கடை யடைத்து
மடமதர்
ஒள்ளிழை மகளிர் பள்ளி அயர
நல்வரி யிறூஅல் புரையும் மெல்லடை
625 அயிருருப்
கவவொடு

புற்ற ஆடமை விசயம்
பிடித்த வகையமை மோதகம்
தீஞ்சேற்றுக் கூவியர் தூங்குவனர்
உறங்க
விழவின் ஆடும் வயிரியர் மடியப்
பாடான் றவிந்த பனிக்கடல் புரையப்
630 பாயல் வளர்வோர் கண்ணினிது
மடுப்பப்
பானாட் கொண்ட கங்கு லிடையது
பேயும் அணங்கும் உருவுகொண் டாய்கோற்
கூற்றக் கொல்தேர் கழுதொடு கொட்ப
635

இரும்பிடி மேஎந்தோ லன்ன இருள்சேர்பு
கல்லும் மரனுந் துணிக்குங் கூர்மைத்
தொடலை வாளர் தொடுதோ லடியர்
குறங்கிடைப் பதித்த கூர்நுனைக் குறும்பிடிச்
சிறந்த கருமை நுண்வினை நுணங்கறல்
நிறங்கவர்பு புனைந்த நீலக் கச்சினர்
640

மென்னூ லேணிப் பன்மாண் சுற்றினர்
நிலனகழ் உளியர் கலனசைஇக் கொட்கும்
கண்மா றாடவர் ஒடுக்க மொற்றி

வயக்களிறு பார்க்கும் வயப்புலி போலத்
துஞ்சாக் கண்ணர் அஞ்சாக் கொள்கையர்
645 அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர் செறிந்த
நூல்வழிப் பிழையா நுணங்குநுண்
தேர்ச்சி
ஊர்காப் பாளர் ஊக்கருங் கணையினர்
77



தேர்வழங்கு தெருவின் நீர்திரண் டொழுக

மழையமைந் துற்ற அரைநா ளமயமும்
650 அசைவில ரெழுந்து நயம்வந்து வழங்கலின்
கடவுள் வழங்குங் கையறு கங்குலும்
அச்சம் அறியா தேம மாகிய
மற்றை யாமம் பகலுறக் கழிப்பிப்
போதுபிணி விட்ட கமழ்நறும் பொய்கைத்
655 தாதுண் தும்பி போது முரன்றாங்கு
ஓத லந்தணர் வேதம் பாடச்
சீரினிது கொண்டு நரம்பினிது இயக்கி
யாழோர் மருதம் பண்ணக் காழோர்
கடுங்களிறு கவளங் கைப்ப நெடுந்தேர்ப்
660 பணைநிலைப் புரவி புல்லுளைத் தெவிட்டப்
பல்வேறு பண்ணியக் கடைமெழுக் குறுப்பக்
கள்ளோர் களிநொடை நுவல இல்லோர்
நயந்த காதலர் கவவுப்பிணித் துஞ்சிப்
புலர்ந்துவிரி விடிய லெய்த விரும்பிக்
665 கண்பொரா எறிக்கு மின்னுக்கொடி புரைய
ஒண்பொன் அவிரிழை தெழிப்ப இயலித்
திண்சுவர் நல்லிற் கதவங் கரைய
உண்டுமகிழ் தட்ட மழலை நாவிற்
பழஞ்செருக் காளர் தழங்குகுரல் தோன்றச்
670 சூதர் வாழ்த்த மாகதர் நுவல
வேதா ளிகரொடு நாழிகை இசைப்ப
இமிழ்முர சிரங்க ஏறுமாறு சிலைப்பப்
பொறிமயிர் வாரணம் வைகறை இயம்ப

யானையங் குருகின் சேவலொடு காமர்
675 அன்னங் கரைய அணிமயில் அகவப்
பிடிபுணர் பெருங்களிறு முழங்க முழுவலிக்
கூட்டுறை வயமாப் புலியொடு குழும
வானம் நீங்கிய நீனிற விசும்பின்
மின்னுநிமிர்ந் தனைய ராகி நறவுமகிழ்ந்து
680 மாணிழை மகளிர் புலந்தனர் பரிந்த

மாங்குடி மருதனார் - மதுரைக்காஞ்சி

1219

பரூஉக்கா ழாரஞ் சொரிந்த முத்தமொடு
பொன்சுடு நெருப்பின் நிலமுக் கென்ன
அம்மென் குரும்பைக் காய்படுபு பிறவும்
தருமணல் முற்றத் தரிஞிமி றூர்ப்ப
685 மென்பூஞ் செம்மலொடு நன்கலஞ் சீப்ப
இரவுத்தலைப் பெயரும் ஏம வைகறை
மைபடு பெருந்தோள் மழவ ரோட்டி
இடைப்புலத் தொழிந்த ஏந்துகோட்டு யானை
பகைப்புலங் கவர்ந்த பாய்பரிப் புரவி
690 வேல்கோ லாக ஆள்செல நூறிக்

காய்சின முன்பிற் கடுங்கட் கூளியர்
ஊர்சுடு விளக்கிற் றந்த ஆயமும்
நாடுடை நல்லெயில் அணங்குடைத் தோட்டி
நாடொறும் விளங்கக் கைதொழூஉப் பழிச்சி
695 நாள்தர வந்த விழுக்கலம் அனைத்தும்
கங்கையம் பேரியாறு கடற்படர்ந் தாஅங்கு
அளந்துகடை யறியா வளங்கெழு தாரமொடு
புத்தே ளுலகங் கவினிக் காண்வர
மிக்குப்புக ழெய்திய பெரும்பெயர் மதுரைச்
700 சினைதலை மணந்த சுரும்புபடு செந்தீ
ஒண்பூம் பிண்டி யவிழ்ந்த காவிற்
சுடர்பொழிந் தேறிய விளங்குகதிர் ஞாயிற்று
இலங்குகதி ரிளவெயிற் றோன்றி யன்ன
தமனியம் வளைஇய தாவில் விளங்கிழை
705 நிலம்விளக் குறுப்ப மேதகப் பொலிந்து
மயிலோ ரன்ன சாயல் மாவின்
தளிரே ரன்ன மேனித் தளிர்ப்புறத்து
ஈர்க்கின் அரும்பிய திதலையர் கூரெயிற்று
ஒண்குழை புணரிய வண்தாழ் காதிற்
710 கடவுட்கயத் தமன்ற சுடரிதழ்த் தாமரைத்
தாதுபடு பெரும்போது புரையும் வாண்முகத்து
ஆய்தொடி மகளிர் நறுந்தோள் புணர்ந்து
கோதையிற் பொலிந்த சேக்கைத் துஞ்சித்

இருந்துதுயி லெடுப்ப இனிதின் எழுந்து
715 திண்கா ழாரம் நீவிக் கதிர்விடும்
ஒண்கா ழாரங் கவைஇய மார்பின்
வரிக்கடைப் பிரசம் மூசுவன மொய்ப்ப
எருத்தந் தாழ்ந்த விரவுப்பூந் தெரியற்
பொலஞ்செயப் பொலிந்த நலம்பெறு விளக்கம்
720 வலிகெழு தடக்கைத் தொடியொடு சுடர்வரச்
சோறமை வுற்ற நீருடைக் கலிங்கம்
உடையணி பொலியக் குறைவின்று கவைஇ
வல்லோன் தைஇய வரிப்புனை பாவை
முருகியன் றன்ன உருவினை யாகி
725 வருபுனற் கற்சிறை கடுப்ப இடையறுத்து

ஒன்னா ரோட்டிய செருப்புகல் மறவர்
வாள்வலம் புணர்ந்தநின் தாள்வலம் வாழ்த்த

வில்லைக் கவைஇக் கணைதாங்கு மார்பின்
மாதாங் கெறுழ்த்தோள் மறவர்த் தம்மின்
730 கல்லிடித் தியற்றிய இட்டுவாய்க் கிடங்கின்
நல்லெயில் உழந்த செல்வர்த் தம்மின்
கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த
மாக்கண் முரசம் ஓவில கறங்க
எரிநிமிர்ந் தன்ன தானை நாப்பண்
735 பெருநல் யானை போர்க்களத் தொழிய
விழுமிய வீழ்ந்த குரிசிலர்த் தம்மின்

புரையோர்க்குத் தொடுத்த பொலம்பூந் தும்பை
நீர்யா ரென்னது முறைகருதுபு சூட்டிக்
காழ்மண் டெஃகமொடு கணையலைக் கலங்கிப்
740 பிரிபிணை யரிந்த நிறஞ்சிதை கவயத்து
வானத் தன்ன வளநகர் பொற்ப
நோன்குறட் டன்ன ஊன்சாய் மார்பின்
உயர்ந்த உதவி யூக்கலர்த் தம்மின்
நிவந்த யானைக் கணநிரை கவர்ந்த
745 புலர்ந்த சாந்தின் விரவுப்பூந் தெரியற்
பெருஞ்செ யாடவர்த் தம்மின் பிறரும்

மாங்குடி மருதனர் - மதுரைக்காஞ்சி
1221

யாவரும் வருக ஏனோருந் தம்மென
வரையா வாயிற் செறாஅ திருந்து
பாணர் வருக பாட்டியர் வருக
750 யாணர்ப் புலவரொடு வயிரியர் வருகென
இருங்கிளை புரக்கும் இரவலர்க் கெல்லாம்
கொடுஞ்சி நெடுந்தேர் களிற்றொடும்
வீசிக்
களந்தோறுங் கள்ளரிப்ப
மரந்தோறும் மைவீழ்ப்ப
755 நிணவூன்சுட் டுருக்கமைய •
நெய்கனிந்து வறையார்ப்பக்

குரூஉக்குய்ப்புகை மழைமங்குலிற்
பரந்துதோன்றா வியனகராற்
பல்சாலை முதுகுடுமியின்
760 நல்வேள்வித் துறைபோகிய
தொல்லாணை நல்லாசிரியர்
புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்

நிலந்தரு திருவின் நெடியோன் போல
வியப்புஞ் சால்புஞ் செம்மை சான்றோர்
765 பலர்வாய்ப் புகரறு சிறப்பிற் றோன்றி
அரியதந்து குடியகற்றிப்
பெரியகற்று இசைவிளக்கி
முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும்
பன்மீன் நடுவண் திங்கள் போலவும்
770 பூத்த சுற்றமொடு பொலிந்தினிது
விளங்கிப்
பொய்யா நல்லிசை நிறுத்த புனைதார்ப்
பெரும்பெயர் மாறன் தலைவ னாகக்
கடந்தடு வாய்வாள் இளம்பல் கோசர்
இயல்நெறி மரபின்நின் வாய்மொழி
கேட்பப்
775 பொலம்பூ ணைவர் உட்படப் புகழ்ந்த
மறமிகு சிறப்பிற் குறுநில மன்னர்
அவரும் பிறருந் துவன்றிப்
பொற்புவிளங்கு புகழவை நிற்புகழ்ந் தேத்த

இலங்கிழை மகளிர் பொலங்கலத்
தேந்திய 1222 சங்க இலக்கியம்

780 மணங்கமழ் தேறல் மடுப்ப நாளும்
மகிழ்ந்தினி துறைமதி பெரும
வரைந்துநீ பெற்ற நல்லூ ழியையே.
தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன்
நெடுஞ்செழி யனைப் பாடியது.

## 2112-a.

பைங்கண் இளம்பகட்டின் மேலானைப்
பால்மதிபோல் திங்கள் நெடுங்குடையின்
கீழானை—அங்கிரந்து நாம்வேண்ட நன்னெஞ்சே
நாடுதிபோய் நானிலத்தோர் தாம்வேண்டுங் கூடற் றமிழ்.

## 2112-b.

சொல்லென்னும் பூம்போது தோற்றிப்
பொருளென்னும் நல்லிருந் தீந்தாது
நாறுதலால்—மல்லிகையின் வண்டார் கமழ்தாம
மன்றே மலையாத
தண்டாரான் கூடற் றமிழ்.

## 2113. புறநானூறு - 24.

நெல்லரியும் இருந்தொழுவர்
செஞ்ஞாயிற்று வெயில்முனையின்
தெண்கடற்றிரை மிசைப்பாயுந்து
திண்டிமில் வன்பரதவர்

5 வெப்புடைய மட்டுண்டு
தண்குரவைச் சீர்தூங்குந்து
தூவற் கலித்த தேம்பாய் புன்னை
மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்தர்
எல்வளை மகளிர்த் தலைக்கை தரூஉந்து
10 வண்டுபட மலர்ந்த தண்ணறுங் கானல்
முண்டகக் கோதை யொண்டொடி மகளிர்
இரும்பனையின் குரும்பைநீரும்
பூங்கரும்பின் தீஞ்சாறும்

ஓங்குமணற் குவவுத்தாழைத்
15 தீநீரோ டுடன்விராஅய்



முந்நீ ருண்டு முந்நீர்ப் பாயுந்து
தாங்கா உறையுள் நல்லூர் கெழீஇய
ஓம்பா ஈகை மாவேள் எவ்வி
புனலம் புதவின் மிழலையொடு கழனிக்
20 கயலார் நாரை போர்விற் சேக்கும்
பொன்னணி யானைத் தொன்முதிர்
வேளிர்
குப்பை நெல்லின் முத்தூறு தந்த
கொற்ற நீள்குடைக் கொடித்தேர்ச் செழிய
நின்று நிலைஇயர் நின் நாண்மீன் நில்லாது
25 படாஅச் செலீயர்நின் பகைவர் மீனே

நின்னொடு, தொன்று மூத்த வுயிரினும்
நின்று மூத்த யாக்கை யன்னநின்

உயிரொடு

ஆடுகுடி மூத்த விழுத்திணைச் சிறந்த
வாளின் வாழ்நர் தாள்வலம் வாழ்த்த
30 இரவல் மாக்கள் ஈகை நுவல
ஒண்டொடி மகளிர் பொலங்கலத்

தேந்திய

தண்கமழ் தேறல் மடுப்ப மகிழ்சிறந்து
ஆங்கினி தொழுகுமதி பெரும ஆங்கது
வல்லுநர் வாழ்ந்தோ ரென்ப தொல்லிசை
35 மலர்தலை யுலகத்துத் தோன்றிப்
பலர்செலச் செல்லாது நின்றுவிளிந்

தோரே.

திணை - பொதுவியல் ; துறை -
பொருண்மொழிக்காஞ்சி. பாண்டியன்
தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழி
யனைப் பாடியது.

**2114.** புறநானூறு - **26.**
நளிகடல் இருங்குட்டத்து
வளிபுடைத்த கலம்போலக்

களிறுசென்று களனகற்றவும்
களனகற்றிய வியலாங்கண்
5 ஒளிறிலைய எஃகேந்தி
அரைசுபட அமருழக்கி
உரைசெல முரசுவெளவி



முடித்தலை அடுப்பாகப்
புனற்குருதி உலைக்கொளீஇத்
10 தொடித்தோட் டுடுப்பிற் றுழந்த வல்சியின்
அடுகளம் வேட்ட அடுபோர்ச் செழிய
ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்ற மாக
மன்னர் ஏவல் செய்ய மன்னிய

15 வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே
நோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு
மாற்றா ரென்னும் பெயர்பெற்று
ஆற்றா ராயினும் ஆண்டுவாழ் வோரே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழி
யனைப் பாடியது.

## 2115. புறநானூறு - 313.

அத்தம் நண்ணிய நாடுகெழு பெருவிறல்
கைப்பொருள் யாதொன்று மிலனே
காணிய சென்ற இரவல் மாக்கள்

நச்சிக்

களிறொடு நெடுந்தேர் வேண்டினுங் கடவ
5 உப்பொய் சாகாட் டுமணர் காட்ட
கழிமுரி குன்றத் தற்றே
எள்ளமை வின்றவன் உள்ளிய பொருளே.

திணை - வாகை; துறை - வல்லாண்முல்லை.

## 2116. புறநானூறு - 335.

அடலருந் துப்பின்... ...
... ...குருந்தே முல்லையென்று
இந்நான் கல்லது பூவும் இல்லை
5

கருங்கால் வரகே இருங்கதிர்த் தினையே
சிறுகொடிக் கொள்ளே பொறிகிளர் அவரையொடு
இந்நான் கல்லது உணவும் இல்லை

மாங்குடி மருதனார்

துடியன் பாணன் பறையன் கடம்பனென்று
இந்நான் கல்லது குடியும் இல்லை
ஒன்றுத் தெவ்வர் முன்னின்று விலங்கி
10 ஒளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவி னல்லது
நெல்லுகுத்துப் பரவுங் கடவுளும் இலவே.

திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.

## 2117. புறநானூறு - 372.

விசிபிணித் தடாரி விம்மென ஒற்றி
ஏத்தி வந்த தெல்லா முழுத்த
இலங்குவாள் அவிரொளி வலம்பட மின்னிக்
கணைத்துளி பொழிந்த கண்கூடு பாசறைப்
5 பொருந்தாத் தெவ்வர் அரிந்தகலை யடுப்பிற்
கூவிள விறகி ஞக்குவரி நுடங்கல்
ஆனு மண்டை வன்னியந் துடுப்பின்
ஈனு வேண்மாள் இடந்துழந் தட்ட
மாமறி பிண்டம் வாலுவன் ஏந்த
10 வதுவை விழவிற் புதுவோர்க் கெல்லாம்
வெவ்வாய்ப் பெய்த பூதநீர் சால்கெனப்
புலவுக்களம் பொலிய வேட்டோய்நின்
நிலவுத்திகழ் ஆரம் முகக்குவ மெனவே.

திணை - வாகை ; துறை - மறக்களவேள்வி.

தலையாலங்கானத்துச் செருவென்ற
நெடுஞ்செழியனைப் பாடியது.

## 2118. புறநானூறு - 396.

இழ்நீரான் மீன்வழங்குந்து
மீநீராற் கண்ணன்ன மலர்பூக்குந்து
கழிசுற்றிய விளைகழனி
அரிப்பறையாற் புள்ளோப்புந்து
5 நெடுநீர் கூஉம் மணற்றண்கால்
மென்பறையாற் புள்ளிரியுந்து



நனைக்கள்ளின் மனைக்கோசர்
தீந்தேறல் நறவுமகிழ்ந்து
தீங்குரவைக் கொளைத்தாங்குந்து
10 உள்ளிலோர்க்கு வலியாகுவன்
கேளிலோர்க்குக் கேளாகுவன்
கழுமிய வென்வேல் வேளே
வளநீர் வாட்டாற் றெழினி யாதன்
கிணையேம் பெரும
15 கொழுந்தடிய சூடென்கோ
வளநனையின் மட்டென்கோ
குறுமுயலின் நிணம் பெய்தந்த
நறுநெய்ய சோறென்கோ
திறந்து மறந்து கூட்டுமுதல்
20 முகந்துகொள்ளும் உணவென்கோ
அன்னவை பலபல... ...

...             ...             ...ருநதய
இரும்பே ரொக்கல் இருளுசெளுசிய
அழித்துவப்ப எத்தோனெந்தை
25 எம்மோ ராக்கக் கங்குண்டே
மாரிவானத்து மீனுப்பண்
விரிகதிர வெண்டிங்களின்
விளங்கித் தோன்றுகஅவன் கலங்கா நல்லிசை
யாமும் பிறரும் வாழ்த்த நாளும்
30 நிரைசால் நன்கலன் நல்கி
உரைசெலச் சிறக்கஅவன் பாடல்சால்
வளனே.

திணை - பாடாண்டிணை ; துறை - கடைநிலை.
வாட்டாற்றெழினியாதனைப் பாடியது.

சஂ௫. மாடலூர்கிழார்

## 2119. குறுந்தொகை - 150. குறிஞ்சி

சேஞேன் மாட்டிய நறும்புகை ஞெகிழி
வாஅன் மீனின் வயின்வயின் இமைக்கும்



ஓங்குமலை நாடன் சாந்துபுல ரகலம்
உள்ளின் உண்ணேய் மல்கும்
5 புல்லின் மாய்வ தெவன்கொல் அன்னாய்.
இரவுக்குறி நேர்ந்த தோழிக்குத் தலைமகள் கூறியது.

## ௨௦௬. மாதீர்த்தன்

### 2120. குறுந்தொகை - 113. மருதம்

ஊர்க்கும் அணித்தே பொய்கை
பொய்கைக்குச்
சேய்த்தும் அன்றே சிறுகான் யாறே
இரைதேர் வெண்குரு கல்லது யாவதுந்
துன்னல் போகின்றாற் பொழிலே யாமெங்
5 கூழைக் கெருமணங் கொணர்கஞ் சேறும்
ஆண்டும் வருகுவள் பெரும்பே தையே.

பகற்குறி நேர்ந்த தலைமகற்குக் குறிப்பினாற் குறியிடம் பெயர்த்- துச் சொல்லியது.

## ௨௦௭. மாமிலாடன்

### 2121. குறுந்தொகை - 46. மருதம்

ஆம்பற் பூவின் சாம்பல் அன்ன
கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ
முன்றில் உணங்கல் மாந்தி மன்றத்து
எருவின் நுண் தாது குடைவன வாடி
5 இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்
புன்கண் மாலையும் புலம்பும்
இன்றுகொல் தோழியவர் சென்ற நாட்டே.

பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி ஆற்றுவ லென்பதுபடச் சொல்லியது.

## 2122. அகநானூறு - 1. பாலை

வண்டுபடத் ததைந்த கண்ணி ஒண்கழல்
உருவக் குதிரை மழவ ரோட்டிய
முருகன் நற்போர் நெடுவே ளாவி
அறுகோட்டு யானைப் பொதினி யாங்கண்
5 சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போற் பிரியலம் என்ற சொல்தாம்
மறந்தனர் கொல்லோ தோழி சிறந்த
வேய்மருள் பணைத்தோள் நெகிழச் சேய்நாட்டுப்
பொலங்கல வெறுக்கை தருமார் நிலம்பக
10 அழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலின்
நிழல்தேய்ந் துலறிய மரத்த அறைகாய்பு
அறுநீர்ப் பைஞ்சுனை ஆமறப் புலர்தலின்
உகுநெற் பொரியும் வெம்மைய யாவரும்
வழங்குந ரின்மையின் வெளவுநர் மடியச்
15 சுரம்புல் லென்ற ஆற்ற அலங்குசினை
நாரில் முருங்கை நவிரல் வான்பூச்
சூரலங் கடுவளி யெடுப்ப வாருற்று
உடைதிரைப் பிதிர்விற் பொங்கிமுன்
கடல்போற் றோன்றல காடிறந் தோரே.

பிரிவிடை யாற்றாளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## 2123. அகநானூறு - 15. பாலை

எம்வெங் காமம் இயைவ தாயின்
மெய்ம்மலி பெரும்பூண் செம்மற் கோசர் 5
கொம்மையம் பசுங்காய்க் குடுமி விளைந்த
பாக லார்கைப் பறைக்கட் பீலித்

தோகைக் காவின் துளுநாட் டன்ன
வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பிற்
செறிந்த சேரிச் செம்மல் மூதூர்

மாமூலனார்

1229

அறிந்த மாக்கட் டாகுக தில்ல
தோழி மாரும் யானும் புலம்பச்
10 சூழி யானைச் சுடர்ப்பூண் நன்னன்
பாழி யன்ன கடியுடை வியனகர்ச்
செறிந்த காப்பிகந் தவனொடு போகி
அத்த இருப்பை ஆர்கழல் புதுப்பூத்
துய்த்த வாய துகள்நிலம் பரக்கக்
15

கொன்றை யஞ்சினைக் குழற்பழங் கொழுதி
வன்கை யெண்கின் வயநிரை பரக்கும்
இன்றுணைப் படர்ந்த கொள்கையொ

டோராங்குக்கு

குன்ற வேயிற் றிரண்டவென்

மென்றோள் அஞ்ஞை சென்ற வாறே.
மகட்போக்கிய தாய் சொல்லியது.

2124. அகநானூறு - 31. பாலை

நெருப்பெனச் சிவந்த உருப்பவிர்

மண்டிலம்

புலங்கடை மடங்கத் தெறுதலின்

ஞொள்கி

நிலம்புடை பெயர்வ தன்றுகொல்

இன்றென

மன்னுயிர் மடிந்த மழைமா றமையத்து
5 இலையில ஓங்கிய நிலையுயர் யாஅத்து
மேற்கவட் டிருந்த பார்ப்பினங் கட்குக்
கல்லுடைக் குறும்பின் வயவர் வில்விட
நிணவரிக் குறைந்த நிறத்த அதர்தொறுங்

கணவிர மாலை யிடூஉக்கழிந் தன்ன
10 புண்ணுமிழ் குருதி பரிப்பக் கிடந்தோர்
கண்ணுமிழ் கழுகின் கானம் நீந்திச்

சென்ரு ரென்பிலர் தோழி வென்றியொடு
வில்லலைத் துண்ணும் வல்லாண் வாழ்க்கைத்
தமிழ்கெழு மூவர் காக்கும்
15 மொழிபெயர் தேஎத்த பன்மலை
யிறந்தே.

பிரிவிடை ஆற்ருளாயினளென்று பிறர்
சொல்லக்கேட்டு வேறு
பட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.



## 2125. அகநானூறு - 55. பாலை

காய்ந்துசெலற் கனலி கல்பகத் தெறுதலின்
ஈந்து குருகுருகும் என்றூழ் நீளிடை
உளிமுக வெம்பரல் அடிவருந் துறுலின்
விளிமுறை யறியா வேய்கரி கானம்
5 வயக்களிற் றன்ன காளையொ டென்மகள்
கழிந்ததற்கு அழிந்தன்ரு ேவிலனே ஒழிந்தியான்
ஊதுலைக் குருகின் உள்ளுயிர்த் தசைஇ
வேவது போலும் வெய்ய நெஞ்சமொடு
கண்படை பெறேன் கனவ ஒண்படைக் 10
கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்

பொருநுபுண் நாணிய சேர லாதன்
அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென
இன்னு இன்னுரை கேட்ட சான்ருேர்
அரும்பெற லுலகத் தவனெடு செலீஇயர்
15 பெரும்பிறி தாகி யாங்குப் பிறிந்திவட்
காதல் வேண்டியெற் றுறந்து
போதல் செல்லாளென் னுயிரொடு புலந்தே.

புணர்ந்துடன்போன தலைமகட் கிரங்கிய தாய்
தெருட்டும் அலாட்டியர்க்கு உரைத்தது.

## 2126. அகநானூறு - 61. பாலை

நோற்ருேர் மன்ற தாமே கூற்றங்
கோளுற விளியார்பிறர் கொளவிளிந் தோரெனத்
தாள்வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர் நாளிழை
நெடுஞ்சுவர் நோக்கி நோயுழந்து 5 ஆழல் வாழி
தோழி தாழாது
உருமெனச் சிலைக்கும் ஊக்கமொடு பைங்கால்
வரிமாண் நோன்ஞாண் வன்சிலைக் கொளீஇ
அருநிறத் தழுத்திய அம்பினர் பலருடன்
அண்ணல் யானை வெண்கோடு கொண்டு
10 நறவுநொடை நெல்லின் நாண்மகி ழயருங்

மாமூலனூர் 

கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்
பழகுவ ராதலோ அரிதே முனாஅது
15 முழவுறழ் திணிதோள் நெடுவே ளாவி
பொன்னுடை நெடுநகர்ப் பொதினி யன்னநின்
ஒண்கேழ் வனமுலைப் பொலிந்த
நுண்பூண் ஆகம் பொருந்துதல் மறந்தே.

தலைமகன் பொருள்வயிற்பிரிய வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

**2127.** அகநானூறு - **65.** பாலை

உன்னங் கொள்கையொ டுளங்கரந் துறையும்
அன்னை சொல்லும் உய்கம் என்னதூஉம்
ஈரஞ் சேரா இயல்பிற் பொய்ம்மொழிச்
சேரியம் பெண்டிர் கௌவையும் ஒழிகம்
5 நாடுகண் அகற்றிய உதியஞ் சேரற்
பாடிச் சென்ற பரிசிலர் போல
உவவினி வாழி தோழி அவரே
பொம்ம லோதி நம்மொ டொராங்குச்
செலவயர்ந் தனரால் இன்றே மலைதொறும்
10 மால்கழை பிசைந்த கால்வாய் கூரெரி
மீன்கொள் பரதவர் கொடுந்திமில் நளிசுடர்
வான்றோய் புணரி மிசைக்கண் டாங்கு
மேவரத் தோன்றும் யாஅவுயர் நனந்தலை

உயவல் யானை வெரிநுச்சென் றன்ன
15 கல்லூர்பு இழிதரும் புல்சாய் சிறுநெறிக்
காடுமீக் கூறுங் கோடேந் தொருத்தல்
ஆறுகடி கொள்ளும் அருஞ்சுரம் பணைத்தோள்
நாறைங் கூந்தற் கொம்மை வரிமுலை


நிரையிதழ் மூண்கண் மகளிர்க்கு
20 அரிய வாலென அழுங்கிய செலவே.

வேறுபட்ட தலைமகட்குத் தலைமகன் உடன்போக்கு வலித் தமை தோழி சொல்லியது.

2128. அகநானூறு - 91. பாலை விளங்குபகல் உதவிய பல்கதிர் ஞாயிறு வளங்கெழு
மாமலை பயங்கெடத் தெறுதலின் அருவி யான்ற
பெருவரை மருங்கிற்
சூர்ச்சுனை துழைஇ நீர்ப்பயங் காணாது 5 பாசி தின்ற
பைங்கண் யானை
ஓய்பசிப் பிடியொ டொருதிறன் ஒடுங்க வெய்கண்
உடைந்த வெயிலவிர் நனந்தலை அரும்பொருள்
வேட்கையின் அகன்றன ராயினும் பெரும்பே
ரன்பினர் தோழி இருங்கேழ் 10 இரலை சேக்கும்
பரலுயர் பதுக்கைக்

கடுங்கண் மழவர் களவுழ வெழுந்த
நெடுங்கால் ஆசினி ஒடுங்காட் டும்பர்
விசிபிணி முழவிற் குட்டுவன் காப்பப்
பசியென அறியாப் பணைபயி லிருக்கைத்
15 தடமருப் பெருமை தாமரை முனையின்
முடமுதிர் பலவின் கொழுநிழல் வதியுங்
குடநாடு பெறினுந் தவிரலர்
மடமா னோக்கிநின் மாணலம் மறந்தே.

பிரிவிடைமெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

2129. அகநானூறு - 97. பாலை

கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை வறனுறல்
அங்கோ டுதிர வலங்கடந்து புலவுப்புலி துறந்த
கலவுக்கழி கடுமுடை இரவுக்குறும்பு அலற நூறி
நிரைபகுத்து 5 இருங்கல் முடுக்கர்த் திற்றி கெண்டுங்

மாமூலனார் 1233

கொலைவி லாடவர் போலப் பலவுடன்
பெருந்தலை யெருவையொடு பருந்துவந் திறுக்கும்
அருஞ்சுர மிறந்த கொடியோர்க்கு அல்கலும்
இருங்கழை யிறும்பின் ஆய்ந்துகொண் டறுத்த
10 நுணங்குகட் சிறுகோல் வணங்கிறை மகளிரொடு
அகவுநர்ப் புரந்த அன்பிற் கழல்தொடி
நறவுமகி ழிருக்கை நன்னன் வேண்மான்
வயலை வேலி வியலூ ரன்னநின்

அலர்முலை யாகம் புலம்பப் பலநினைந்து
15 ஆழ லென்றி தோழி யாழவென்
கண்பனி நிறுத்தல் எளிதோ குரவுமலர்ந்து
அற்சிரம் நீங்கிய அரும்பத வேனில்
அறலவிர் வார்மணல் அகல்யாற் றடைகரைத்
20

துறையணி மருது தொகல்கொள ஓங்கிக்
கலிழ்தளிர் அணிந்த இருஞ்சினை மாஅத்து
இணர்ததை புதுப்பூ நிரைத்த

பொங்கர்ப்

புகைபுரை அமமஞ் சூர
நுகர்குயில் அகவுங் குரல்கேட்

போர்க்கே.

வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள்

சொல்லியது.

**2130.** அகநானூறு - **101.** பாலை

அம்ம வாழி தோழி இம்மை
நன்றுசெய் மருங்கில் தீதில் என்னுந்
தொன்றுபடு பழமொழி இன்றுபொய்த்

தன்றுகொல்

தகர்மருப் பேய்ப்பச் சுற்றுபு சுரிந்த
5 சுவல்மாய் பித்தைச் செங்கண் மழவர்
வாய்ப்பகை கடியும் மண்ணொடு கடுந்திறற்
றீப்படு சிறுகோல் வில்லொடு பற்றி
நுரைதெரி மத்தங் கொளீஇ

நிரைப்புறத்து

அடிபுதை தொடுதோல் பறைய ஏகிக்
10 கடிபுலங் கவர்ந்த கன்றுடைக்
கொள்ளையர்
இனந்தலை பெயர்க்கும் நனந்தலைப் பெருங்காட்டு
அகலிரு விசும்பிற்கு ஓடம் போலப்
78



பகலிடை நின்ற பல்கதிர் ஞாயிற்று
உருப்பவிர் புளரிய சுழன்றுவரு கோடைப்
15 புன்கால் முருங்கை ஊழ்கழி பன்மலர்
தண்கார் ஆலியின் தாவன உதிரும்
பனிபடு பன்மலை இறந்தோர்க்கு
முனிதகு பண்புயாஞ் செய்தன்றோ இலமே.

பிரிவிடை வேறுபட்ட கிழத்தி தோழிக்குச்
சொல்லியது ; தோழி கிழத்திக்குச் சொல்லியதூஉமாம்.

**2131.** அகநானூறு - **115.** பாலை

அழியா விழவின் அஞ்சுவரு மூதூர்ப்
பழியில ராயினும் பலர்புறங் கூறும்
அம்ப லொழுக்கமு மாகிய வெஞ்சொற்
சேரியம் பெண்டிர் எள்ளினும் எள்ளுக
5 நுண்பூண் எருமை குடநாட் டன்னவென்
ஆய்நலந் தொலையினுந் தொலைக என்றும்
நோயில ராகநங் காதலர் வாய்வாள்

எவ்வி வீழ்ந்த செருவிற் பாணர்
கைதொழு மரபின்முன் பரித்திடூஉப் பழிச்சிய
10 வள்ளுயிர் வணர்மருப் பன்ன ஒள்ளிணர்ச்
சுடர்ப்பூங் கொன்றை யூழுறு விளைநெற்று
அறைமிசைத் தாஅம் அத்த நீளிடைப்
பிறைமருள் வான்கோட் டண்ணல் யானைச்
சினமிகு முன்பின் வயமான் அஞ்சி
15 இனங்கொண் டொளிக்கும் அஞ்சுவரு கவலை
நன்ன ராய்கவின் தொலையச் சேய்நாட்டு
நந்நீத் துறையும் பொருட்பிணிக்
கூடா மையின் நீடி யோரே.

பிரிவிடை வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள்
சொல்லியது. மாமூலனார் 1235

## 2132. அகநானூறு - 127. பாலை

இலங்குவளை நெகிழச் சாஅய் அல்கலுங்
கலங்கஞ ருழந்து நாமிவண் ஒழிய 5
வலம்படு முரசிற் சேர லாதன்
முந்நீ ரோட்டிக் கடம்பறுத் திமயத்து
முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து
நன்னகர் மாந்தை முற்றத் தொன்னார்
பணிதிறை தந்த பாடுசால் நன்கலம்
பொன்செய் பாவை வயிரமொ டாம்பல்
ஒன்றுவாய் நிறையக் குவைஇ அன்றவண்
10 நிலந்தினத் துறந்த நிதியத் தன்ன

ஒருநா ளொருபகற் பெறினும் வழிநாள்
தங்கலர் வாழி தோழி செங்கோற்
கருங்கால் மராஅத்து வாஅன் மெல்லிணர்
சுரிந்துவணர் பித்தை பொலியச் சூடிக்
15 கல்லா மழவர் வில்லிடந் தழீஇ
வருநர்ப் பார்க்கும் வெருவரு கவலை
மொழிபெயர் தேஎத்த ராயினும்
பழிதீர் காதலர் சென்ற நாட்டே.

பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

2133. அகநானூறு - 187. பாலை

தோள்புலம் பகலத் துஞ்சி நம்மொடு
நாள்பல நீடிய கரந்துறை புணர்ச்சி
நாணுடை மையின் நீங்கிச் சேய்நாட்டு
அரும்பொருள் வலித்த நெஞ்சமொ டேகி
5 நம்முயர் வுள்ளினர் காதலர் கறுத்தோர்
தெம்முனை சிதைத்த கடும்பரிப் புரவி
வார்கழற் பொலிந்த வன்கண் மழவர்
பூந்தொடை விழவின் தலைநா ளன்ன
தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம்
10 புலம்புறுங் கொல்லோ தோழி சேணோங்கு

அலந்தலே ஞெமையத்து ஆளி லாங்கண் கல்சேர்பு
இருந்த சில்குடிப் பாக்கத்து எல்லிருந் தயர வமத்
தல்கி
மனையுறை கோழி அணற்றாழ்பு அன்ன 15
கவையொண் தளிர கருங்கால் யாஅத்து வேனில்
வெற்பிற் கானங் காய
முனையெழுந் தோடிய கெடுநாட் டாரிடைப்
பனைவெளிறு அருந்து பைங்கண் யானை ஒண்சுடர்
முதிரா இளங்கதி ரமையத்துக் 20 கண்படு பாயற்
கையொடுங் கசைநிலே வாள்வாய்ச் சுறவின்
பனித்துறை நீந்தி நாள்வேட் டெழுந்த நயனில்
பரதவர் வைகுகடல் அம்பியிற் றோன்றும்
மைபடு மாமலை விளங்கிய சுரனே.

பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது ; தலைமகன் பிரிவின்கண் தலைமகட்குத் தோழி சொல்லியதூஉமாம்.

## 2134. அகநானூறு - 197. பாலை

மாமலர் வண்ணம் இழந்த கண்ணும்
பூநெகிழ் அணையிற் சாஅய தோளும்
நன்னர் மாக்கள் விழைவன ராய்ந்த
தொன்னலம் இழந்த துயரமொடு என்னதூஉம் 5

இனையல் வாழி தோழி முனையெழ
முன்னுவ ரோட்டிய முரண்மிகு திருவின்
மறமிகு தானைக் கண்ண னெழினி
தேமுது குன்றம் இறந்தன ராயினும்
நீடலர் யாழநின் நிரைவளை நெகிழத்
10 தோள்தாழ்பு இருளிய குவையிருங் கூந்தல்
மடவோட் டழீஇய விறலோன் மார்பிற்

புன்றலைப் புதல்வன் ஊர்பிழிந் தாங்குக்
கடுஞ்சூல் மடப்பிடி தழீஇய வெண்கோட்டு 15

இனஞ்சால் வேழங் கன்றூர்பு இழிதரப்
பள்ளி கொள்ளும் பனிச்சுரம் நீந்தி



ஒள்ளிணர்க் கொன்றை யோங்குமலை யத்தம்
வினைவலி யுறூஉம் நெஞ்சமொடு
இனைய ராகிப் பிரிந்திசி னோரே.
பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

## 2135. அகநானூறு - 201. பாலை

அம்ம வாழி தோழி பொன்னின்
அவிரெழில் நுடங்கும் அணிகிள ரோடை
வினைநவில் யானை விறற்போர்ப் பாண்டியன்
புகழ்மலி சிறப்பிற் கொற்கை முன்றுறை 5
அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து
தழையணிப் பொலிந்த கோடேந் தல்குற்
பழையர் மகளிர் பனித்துறை பரவப்
பகலோன் மறைந்த அந்தி யாரிடை
உருகெழு பெருங்கடல் உவவுக் கிளர்ந்தாங்கு
10 அலரும் மன்றுபட் டன்றே அன்னையும்
பொருந்தாக் கண்ணள் வெய்ய
உயிர்க்குமென்று
எவன்கை யற்றனை இகுளை சோழர்
வெண்ணெல் வைப்பின் நன்னாடு பெறினும்
ஆண்டமைந் துறைநர் அல்லர் முனாஅது
15 வான்புகு தலைய குன்றத்துக் கவாஅற்
பெருங்கலை யெண்கின் பேழ்வா யேற்றை

இருள் துணிந் தன்ன குவவுமயிர்க் குருளைத்
தோல்முலைப் பிணவொடு திளைக்கும்
வேனில் நீடிய சுரனிறந் தோரே.

பிரிவிடைவேறுபட்ட தலைமகட்குத் தோழி
சொல்லியது.

**2136.** அகநானூறு - **211.** பாலை கேளா
யெல்ல தோழி வாலிய

சுதைவிரிந் தன்ன பல்பூ மராஅம்
பறைகண் டன்ன பாவடி நோன்றாள்
திண்ணிலை மருப்பின் வயக்களிறு உரிஞுதொறும்


5 தண்மழை யாலியிற் றூஅய் உழவர்
வெண்ணெல் வித்தின் அறைமிசை யுணங்கும்
பனிபடு சோலை வேங்கடத் தும்பர்
மொழிபெயர் தேஎத்த
குழியிடைக் கொண்ட

ராயினும் நல்குவர்
கன்றுடைப் பெருநிரை

10 பிடிபடு பூசலின் எய்தா தொழியக்
கடுஞ்சின வேந்தன் ஏவலி னெய்தி

நெடுஞ்சே ணாட்டிற் றலைத்தார்ப் பட்ட
கல்லா எழினி பல்லெறிந் தழுத்திய
வன்கட் கதவின் வெண்மணி வாயில்
15 மத்தி நாட்டிய கல்கெழு பனித்துறை
நீரொலித் தன்ன பேஎர்
அலர்நமக் கொழிய அழப்பிரிந் தோரே.

பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடுகண்டு தோழி சொல்லியது.

## 2137. அகநானூறு - 233. பாலை

அலமரல் மழைக்கண் மல்குபனி வாரநின்
அலர்முலை நனைய அழாஅல் தோழி
எரிகவர்பு உண்ட கரிபுறப் பெருநிலம்
பீடுகெழு மருங்கின் ஓடுமழை துறந்தென
5 ஊனில் யானை உயங்கும் வேனில்
மறப்படைக் குதிரை மாறா மைந்தின்
துறக்க மெய்திய தொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை இரும்பல்
10 கூளிச் சுற்றங் குழீஇயிருந் தாங்குக்

குறியவும் நெடியவுங் குன்றுதலை மணந்த
சுரனிறந் தகன்றன ராயினும் மிகநனி
மடங்கா உள்ளமொடு மதிமயக் குறாஅப்
பொருள்வயின் நீடலோ இலர்நின்
15 இருளேங் கூந்தல் இன்துயில் மறந்தே.

பிரிவின்கண் வேறுபட்டதலைமகட்குத் தோழி சொல்லியது.

மாமூலனார்



2138. அகநானூறு - 251. பாலை

தூதுஞ் சென்றன தோளுஞ் செற்றும்
ஓதி யொண்ணுதற் பசலையும் மாயும்
வீங்கிழை நெகிழச் சாஅய்ச் செல்லலொடு
நாம்படர் கூரும் அருந்துயர் கேட்பின்
5 நந்தன் வெறுக்கை யெய்தினும் மற்றவண்
தங்கலர் வாழி தோழி வெல்கொடித்
துனைகா லன்ன புனைதேர்க் கோசர்
தொன்மூ தாலத் தரும்பணைப் பொதியில்
இன்னிசை முரசங் கடிப்பிகுத் திரங்கத்
10 தெம்முனை சிதைத்த ஞான்றை மோகூர்
பணியா மையிற் பகைதலை வந்த
மாகெழு தானை வம்ப மோரியர்
புனைதேர் நேமி யுருளிய குறைத்த

இலங்குவெள் ளருவிய அறைவா யும்பர்
15 மாசில் வெண்கோட்டு அண்ணல் யானை

வாயுட் டப்பிய அருங்கேழ் வயப்புலி
மாநிலம் நெளியக் குத்திப் புகலொடு
காப்பில வைகுந் தேக்கமல் சோலை
நிரம்பா நீளிடைப் போகி
20 அரம்போ ழவ்வளை நிலைநெகிழ்த் தோரே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு தோழி சொல்லியது.

புகையிற் பொங்கி வியல்விசும் புகந்து
பனியூர் அழற்கொடி கடுப்பத் தோன்றும்
இமையச் செவ்வரை மானுங் கொல்லோ

பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
5 சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை
நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ
எவன்கொல் வாழி தோழி வயங்கொளி



நிழற்பா லறலின் நெறித்த கூந்தற்
10

குழற்குரற் பாவை யிரங்க நத்துறந்து
ஒண்டொடி நெகிழச் சாஅய்ச் செல்லலொடு
கண்பனி கலுழ்ந்தியா மொழியப் பொறையடைந்து
இன்சிலை யெழிலேறு கெண்டிப் புரைய
நிணம்பொதி விழுத்தடி நெருப்பின்
வைத்தெடுத்து

அணங்கரு மரபிற் பேஎய் போல
15 விளரூன் தின்ற வேட்கை நீங்கத்
துகளற விளைந்த தோப்பி பருகிக்
குலாஅ வல்விற் கொடுநோக் காடவர்
புலாஅற் கையர் பூசா வாயர்
ஓராஅ வுருட்டுங் குடுமிக் குராலொடு
20 மராஅஞ் சீறூர் மருங்கிற் றூங்குஞ்
செந்நுதல் யானை வேங்கடந் தழீஇ
வெம்முனை யருஞ்சுரம் இறந்தோர்
நம்மினும் வலிதாத் தூக்கிய பொருளே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகள் ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது.

**2140.** அகநானூறு - **281.** பாலை

செய்வது தெரிந்திசின் தோழி அல்கலும் அகலு
நாண்மை யச்சறக் கூறிய
சொற்பழு தாகு மென்றும் அஞ்சாது ஒல்கியல்
மடமயில் ஒழித்த பீலி
5 வான்போழ் வல்விற் சுற்றி நோன்சிலை அவ்வார்
விளிம்பிற்கு அமைந்த நொவ்வியற் கணைகுர
லிசைக்கும் விரைசெலற் கடுங்கணை முரண்மிகு வடுகர்
முன்னுற மோரியர் தென்திசை மாதிர முன்னிய வ
ரவிற்கு 10 விண்ணுற ஓங்கிய பனியிருங் குன்றத்து
ஒண்கதிர்த் திகிரி யுருளிய குறைத்த

மாமூலனார்

அறையிறந் தவரோ சென்றனர்
பறையறைந் தன்ன அலர்நமக் கொழித்தே. தலைமகன்
பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு
ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**2141.** அகநானூறு - **295.**

பாலை நிலம்நீ ரற்று நீள்சுனை வறப்பக்
குன்றுகோ டகையக் கடுங்கதிர் தெறுதலின் என்றாழ்
நீடிய வேய்படு நனந்தலை
நிலவுநிற மருப்பிற் பெருங்கை சேர்த்தி 5 வேங்கை
வென்ற வெருவரு பணைத்தோள் ஓங்கல் யானை
உயங்கிமதந் தேம்பிப்
பன்மர வொருசிறைப் பிடியொடு வதியுங் கல்லுடை
யதர கானம் நீந்திக்
கடல்நீ ருப்பின் கணஞ்சால் உமணர்
10 உயங்குபக டுயிர்ப்ப அசைஇ முரம்பிடித்து
அகலிடங் குழித்த அகல்வாய்க் கூவல்
ஆறுசெல் வம்பலர் அசைவிட ஊறும்
புடையலங் கழற்காற் புல்லி குன்றத்து நடையருங்
கானம் விலங்கி நோன்சிலைத் 15 தொடையமை
பகழித் துவன்றுநிலை வடுகர் பிழியார் மகிழர் கலிசிறந்
தார்க்கும்
மொழிபெயர் தேஎயம் இறந்தன ராயினும் பழிதீர்
மாணலந் தருகுவர் மாதோ

மாரிப் பித்திகத் தீரிதழ் புரையும்
20 அங்கலுழ் கொண்ட செங்கடை மழைக்கண்
மணங்கமழ் ஐம்பால் மடந்தைநின்
அணங்குநிலை பெற்ற தடமென் தோளே. பிரிவிடை
வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.



## 2142. அகநானூறு - 311. பாலை

இரும்பிடிப் பரிசிலர் போலக் கடைநின்று
அருங்கடிக் காப்பின் அகனக ரொருசிறை
எழுதி யன்ன திண்ணிலைக் கதவங்
கழுதுவழங் கரைநாட் காவலர் மடிந்தெனத்
5 திறந்துநப் புணர்ந்து நும்மிற் சிறந்தோர்
இம்மை யுலகத் தில்லெனப் பன்னாட்
பொம்ம லோதி நீவிய காதலொடு
பயந்தலை பெயர்ந்து மாதிரம் வெம்ப
வருவழி வம்பலர்ப் பேணிக் கோவலர்
10 மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி
செவியடை தீரத் தேக்கிலைப் பகுக்கும்
புல்லி நன்னாட் டும்பர்ச் செல்லருஞ்
சுரமிறந் தேகினும் நீடலர்
அருள்மொழித் தேற்றிநம் அகன்றிசி னோரே.

பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது

## 2143. அகநானூறு - 325. பாலை

அம்ம வாழி தோழி காதலர்
வெண்மணல் நிவந்த பொலங்கடை நெடுநகர்
நளியிருங் கங்குற் புணர்குறி வாய்த்த
களவுங் கைம்மிக அலர்ந்தன்று அன்னையும்
5 உட்கொண் டோவாள் காக்கும் பிற்பெரிது

இவ ணுறைபு எவனோ அளியளென் றருளி
ஆடுநடைப் பொலிந்த புகற்சியி னடுகோள் 10
அள்ளனைப் பணித்த அதியன் பின்றை

வள்ளுயிர் மாக்கிணை கண்ணவிந் தாங்கு
மலைகவி னழிந்த கனைகடற் றருஞ்சுரம்
வெய்ய மன்றநின் வையெயிறு உணீஇய

தண்மழை யொருநாள் தலையுக ஒண்ணுதல்
ஒல்கியல் அரிவை நின்னொடு செல்கஞ்
சின்னாள் ஆன்றனை யாகெனப் பன்னாள்

15 உலைவி னுள்ளமொடு வினைவலி யுறீஇ
எல்லாம் பெரும்பிறி தாக வடாஅது
நல்வேற் பாணன் நன்னாட் டுள்ளதை
வாட்கண் வானத் தென்றூழ் நீளிடை
ஆட்கொல் யானை அதர்பார்த் தல்குஞ்
20 சோலை யத்த மாலைப் போகி
ஒழியச் சென்றோர் மன்ற
பழியெவ னாங்கொல் நோய்தரு பாலே.

கொண்டு நீங்கக்கருதி யொழிந்த
தலைமகன்பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச்
சொல்லியது.

2144. அகநானூறு - 331. பாலை

நீடுநிலை அரைய செங்குழை யிருப்பைக்
கோடுகடைந் தன்ன கொள்ளை வான்பூ
ஆடுபரந் தன்ன ஈன லெண்கின்
தோடுசினை யுரீஇ யுண்ட மிச்சில்

5 பைங்குழைத் தழையர் பழையர் மகளிர்
கண்திரள் நீளமைக் கடிப்பிற் றொகுத்துக்
குன்றகச் சிறுகுடி மறுகுதொறு மறுகுஞ்
சீறூர் நாடு பலபிறக் கொழியச்
சென்றோர் அன்பிலர் தோழி யென்றும்
10 அருந்துறை முற்றிய கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாணர் ஆர்ப்பப் பல்கலம் உதவி
நாளவை இருந்த நனைமகிழ்த் திதியன்
வேளிரொடு பொரீஇய கழித்த
வாள்வா யன்ன வறுஞ்சுர மிறந்தே.

தலைமகன் பிரிவின்கண் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

## 2145. அகநானூறு - 347. பாலை

தோளுந் தொல்கவின் தொலைய நாளும்
நலங்கவர் பசலை நல்கின்று நலியச்
சால்பெருந் தானைச் சேர லாதன்



மால்கட லோட்டிக் கடம்பறுத் தியற்றிய
5 பண்ணமை முரசின் கண்ணதிர்ந் தன்ன
கவ்வை தூற்றும் வெவ்வாய்ச் சேரி
அம்பல் மூதூ ரலர்நமக் கொழியச்
சென்றன ராயினுஞ் செய்வினை அவர்க்கே
வாய்க்கதில் வாழி தோழி வாயாது
10 மழைகரந் தொளித்த கழைதிரங் கடுக்கத்து

ஒண்கேழ் வயப்புலி பாய்ந்தெனக் குவவடி
வெண்கோட்டு யானை முழக்கிசை வெரீஇக்
கன்றொழித் தோடிய புன்றலை மடப்பிடி
கைதலை வைத்த மையல் விதுப்பொடு
15 கெடுமகப் பெண்டிரிற் றேரும்
நெடுமர மருங்கின் மலையிறந் தோரே.

தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

**2146.** அகநானூறு - **349.** பாலை

அரம்போ ழவ்வளை செறிந்த முன்கை
வரைந்துதாம் பிணித்த தொல்கவின் தொலைய
எவனாய்ந் தனர்கொல் தோழி ஞெமன்ன்
தெரிகோ லன்ன செயிர்தீர் செம்மொழி
5 உலந்த ஒக்கல் பாடுநர் செலினே
உரன்மலி யுள்ளமொடு முனைபா ழாக
அருங்குறும் பெறிந்த பெருங்கல வெறுக்கை
சூழாது சுரக்கும் நன்னன் நன்னாட்டு
ஏழிற் குன்றத்துக் கவாஅற் கேழ்கொளத் 10
திருந்தரை நிவந்த கருங்கால் வேங்கை
எரிமருள் கவளம் மாந்திக் களிறுதன்
வரிநுதல் வைத்த வலிதேம்பு தடக்கை
கல்லூர் பாம்பிற் றோன்றுஞ்
சொல்பெயர் தேஎத்த சுரனிறந் தோரே.

தலைமகன் பிரிவின்கண் தோழிக்குத் தலைமகள் சொல்லியது. மாமூலனார்

## 2147. அகநானூறு - 359. பாலை

பனிவார் உண்கணும் பசந்த தோளும்
நனிபிற ரறியச் சாஅய நாளும்
கரந்தனம் உறையும் நம்பண்பு அறியார்
நீடினர் மன்னோ காதலர் எனநீ
5 எவன்கை யற்றனை இகுளை அவரே
வான வரம்பன் வெளியத் தன்னநம்
மாணலந் தம்மொடு கொண்டனர் மோஒது
அருஞ்சுரக் கவலை அசைஇய கோடியர்
பெருங்கல் மீமிசை இயமெழுந் தாங்கு
10 வீழ்பிடி கெடுத்த நெடுந்தாள் யானை

சூர்புகல் அடுக்கத்து மழைமாறு முழங்கும்
பொய்யா நல்லிசை மாவண் புல்லி
கவைக்கதிர் வரகின் யாணர்ப் பைந்தாள்
முதைச்சுவல் மூழ்கிய கான்சுடு குரூஉப்புகை
15 அருவித் துவலையொடு மயங்கும்
பெருவரை யத்தம் இயங்கி யோரே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

## 2148. அகநானூறு - 393. பாலை

கோடுயர் பிறங்கற் குன்றுபல நீந்தி
வேறுபுலம் படர்ந்த வினைதர லுள்ளத்து
ஆறுசெல் வம்பலர் காய்பசி தீரிய

முதைச்சுவற் கலித்த ஈரிலை நெடுந்தோட்டுக்
5 கவைக்கதிர் வரகின் கால்தொகு பொங்கழி
கவட்டடிப் பொருத பல்சினை யுதிர்வை

அகன்கட் பாறைச் செவ்வையிற் றெறீஇ
வரியணி பணைத்தோள் வார்செவித் தன்னையர்
பண்ணை வெண்பழத் தரிசி யேய்ப்பச்
10 சுழல்மரஞ் சொலித்த சுளகலை வெண்காழ்
தொடிமா ணுலக்கை யூழிற் போக்கி
உரல்முகங் காட்டிய சுரைநிறை கொள்ளை

ஆங்கண் இருஞ்சுனை நீரொடு முகவாக்
களிபடு குழிசிக் கல்லடுப் பேற்றி
15 இணர்ததை கடுக்கை ஈண்டிய தாஇற்
குடவர் புழுக்கிய பொங்கவிழ்ப் புன்கம்
மதர்வை நல்லான் பாலொடு பகுக்கும்
நிரைபல குழீஇய நெடுமொழிப் புல்லி
தேன்தூங்கு உயர்வரை நன்னாட் டும்பர்
20 வேங்கடம் இறந்தன ராயினும் ஆண்டவர்
நீடலர் வாழி தோழி தோடுகொள்
உருகெழு மஞ்ஞை யொலிசீ ரேய்ப்பத்
தகர மண்ணிய தண்ணறு முச்சிப்

புகரில் குவளைப் போதொடு தெரியிதழ்
25 வேனி லதிரல் வேய்ந்தநின்

ஏமுறு புணர்ச்சி யின்துயில் மறந்தே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

## 2149. குறுந்தொகை - 11. பாலை

கோடீ ரிலங்குவளை நெகிழ நாளும்
பாடில கலுழுங் கண்ணொடு புலம்பி
ஈங்கிவண் உறைதலும் உய்குவம் ஆங்கே

எழுவினி வாழியெ னெஞ்சே முனாஅது
5 குல்லைக் கண்ணி வடுகர் முனையது
வல்வேற் கட்டி நன்னாட் டும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினும்
வழிபடல் சூழ்ந்திசின் அவருடை நாட்டே.

தலைமகள் தன்னெஞ்சிற்குச் சொல்லுவாளாய்த்
தோழி கேட்பச் சொல்லியது.

2150. நற்றிணை - 14. பாலை

தொல்கவின் தொலையத் தோள்நலஞ் சாஅய
நல்கார் நீத்தன ராயினும் நல்குவர்
நட்டனர் வாழி தோழி குட்டுவன்



அகப்பா அழிய நூறிச் செம்பியன்
5 பகற்றீ வேட்ட ஞாட்பினும் மிகப்பெரிது
அலரெழச் சென்றன ராயினும் மலர்கவிழ்ந்து
மாமடல் அவிழ்ந்த காந்தளஞ் சாரல்
இனஞ்சால் வயக்களிறு பாந்தட் பட்டெனத்
துஞ்சாத் துயரத்து அஞ்சுபிடிப் பூசல்
10 நெடுவரை விடரகத் தியம்பும்
கடுமான் புல்லிய காடிறந் தோரே.

இயற்பழித்த தோழிக்குத் தலைவி

இயற்படமொழிந்தது.

**2151.** நற்றிணை - **75.** குறிஞ்சி

நயனின் மையிற் பயனிது வென்னாது
பூம்பொறிப் பொலிந்த அழலுமிழ் அகன்பைப்
பாம்புயி ரணங்கி யாங்கும் ஈங்கிது
தகாஅது வாழியோ குறுமகள் நகாஅது
5 உரைமதி யுடையுமென் னுள்ளம் சாரற்

கொடுவிற் கானவன் கோட்டுமா தொலைச்சிப்
பச்சூன் பெய்த பகழி போலச்
சேயரி பரந்த மாயிதழ் மழைக்கண்
உறாஅ நோக்கம் உற்றவென்
10 பைதல் நெஞ்சம் உய்யு மாறே.

சேட்படுக்கப்பட்டு ஆற்றானாகிய தலைமகன் தோழி கேட்பச் சொல்லியது.

உ௦௬. மாயேண்டன்

**2152.** குறுந்தொகை - **235.** பாலை

ஓம்புமதி வாழியோ வாடை பாம்பின்
தூங்குதோல் கடுக்குந் தூவெள் ளருவிக்
கல்லுயர் நண்ணி யதுவே நெல்லி

மரையின மாரு முன்றிற்
5 புல்வேய் குரம்பை நல்லோ ரூரே.

வரையாது பிரிந்துவருவான் வாடைக்கு
உரைப்பானுய்ப்பாகற்கு உரைத்தது.

## ௩௪௦. மார்க்கண்டேயனுர்

## 2153. புறநானூறு - 365.

மயங்கிருங் கருவிய விசும்பு முகனாக
இயங்கிய இருசுடர் கண்ணெனப் பெயரிய
வளியிடை வழங்கா வழக்கரு நீத்தம்
வயிரக் குறட்டின் வயங்குமணி யாரத்துப்
5 பொன்னந் திகிரி முன்சமத் துருட்டிப்
பொருநர்க் காணுச் செருமிகு முன்பின்
முன்னோர் செல்லவுஞ் செல்லா தின்னும்
விலைநலப் பெண்டிரிற் பலர்மீக் கூற
உள்ளேன் வாழியர் யானெனப் பன்மாண்
10 நிலமகள் அழுத காஞ்சியும்
உண்டென உரைப்பரால் உணர்ந்திசி

னோரே.

திணை - காஞ்சி ; துறை - பெருங்காஞ்சி.

## ௩௪௧. மாலைமாறன்

## 2154. குறுந்தொகை - 245. நெய்தல்

கடலங் கானல் ஆயம் ஆய்ந்தவென்

நலமிழந் ததனினும் நனியின் னாதே
வாள்போல் வாய கொழுமடற் றாழை
மாலை வேனாட்டு வேலி யாகும்
5 மெல்லம் புலம்பன் கொடுமை
பல்லோ ரறியப் பரந்துவெளிப் படினே.

வரைவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி
உரைத்தது.

## சுகஉ. மாவளத்தன்

### 2155. குறுந்தொகை - 348. பாலை

தாமே செல்ப வாயின் கானத்துப்
புலந்தோர் யானைக் கோட்டிடை யொழிந்த
சிறுவீ முல்லைக் கொம்பிற் றாஅய்
இதழழிந் தூறுங் கண்பனி மதரெழிற்
5 பூணக வனமுலை நனைத்தலுங்
காணார் கொல்லோ மாணிழை நமரே.

செலவுக் குறிப்பறிந்து வேறுபட்ட கிழத்தியைத் தோழி வற்புறீஇயது.

## சுகங. மாறோக்கத்துக் காமக்கணி நப்பாலத்தனார்

### 2156. அகநானூறு - 377. பாலை

கோடை நீடலின் வாடுபுலத் துக்க
சிறுபுல் உணவு நெறிபட மறுகி

நுண்பல் எறும்பி கொண்டளைச் செறித்த
வித்தா வல்சி வீங்குசிலை மறவர்
5 பல்லூழ் புக்குப் பயனிரை கவரக்
கொழுங்குடி போகிய பெரும்பாழ் மன்றத்து
நரைமூ தாளர் அதிர்தலை யிறக்கிக்
கவைமனத் திருத்தும் வல்லுவனப் பழிய
வரிநிறச் சிதலை அரித்தலிற் புல்லென்று
10 பெருநலஞ் சிதைந்த பேஎமுதிர் பொதியில்
இன்னா ஒருசிறைத் தங்கி இன்னகைச்
சிறுமென் சாயல் பெருநலம் உள்ளி
வம்பல ராகியுங் கழிப மன்ற
நசைதர வந்தோர் இரந்தவை
15 இசைபடப் பெய்தல் ஆற்று வோரே.

பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

79

## உகஉ. மாறோக்கத்து நப்பசலையார்

## 2157. நற்றிணை - 304. குறிஞ்சி

✓வாரல் மென்றினைப் புலவுக்குரல் மாந்திச்
சாரல் வரைய கிளையுடன் குழீஇ
வளியெறி வயிரிற் கிளிவிளி பயிற்றும்
நளியிருஞ் சிலம்பின் நன்மலை நாடன்
5 புணரிற் புணருமார் எழிலே பிரியின்
மணிமிடை பொன்னின் மாமை சாயவென்

அணிநலஞ் சிதைக்குமார் பசலை அதனால்
அசுணங் கொல்பவர் கைபோல் நன்றும்
இன்பமும் துன்பமும் முடைத்தே
10 தண்கமழ் நறுந்தார் விறலோன் மார்பே.

வரையாது நெடுங்காலம் வந்தொழுக ஆற்றுளாகிய தலைமகள் வன்புறை எதிர்மொழிந்தது.

## 2158. புறநானூறு - 37.

✓ நஞ்சுடை வாலெயிற்று ஐந்தலை சுமந்த
வேக வெந்திறல் நாகம் புக்கென
விசும்புதீப் பிறப்பத் திருகிப் பசுங்கொடிப்
பெருமலை விடரகத்து உருமெறிந் தாங்குப்
5 புள்ளுறு புன்கண் தீர்த்த வெள்வேற்

சினங்கெழு தானைச் செம்பியன் மருக
கராஅங் கலித்த குண்டுகண் அகழி
இடங்கருங் குட்டத் துடன்தொக்கு ஓடி
யாமங் கொள்பவர் சுடர்நிழற் கதூஉங்
10 கடுமுரண் முதலைய நெடுநீர் இலஞ்சிச்
செம்புறழ் புரிசைச் செம்மல் மூதூர்
வம்பணி யானை வேந்தகத் துண்மையின்
நல்ல என்னாது சிதைத்தல்
வல்லையால் நெடுந்தகை செருவத் தானே.

திணை - வாகை ; துறை - அரசவாகை,
முதல்வஞ்சியுமாம்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப்

புறவின் அல்லல் சொல்லிய கறையடி
யானை வான்மருப் பெறிந்த வெண்கடைக்
கோல்நிறை துலாஅம் புக்கோன் மருக
ஈதல்நின் புகழு மன்றே சார்தல்
5 ஒன்னார் உட்கும் துன்னருங் கடுந்திறற்
றூங்கெயி லெறிந்தநின் ஊங்கணோர் நினைப்பின்
அடுதல்நின் புகழு மன்றே கெடுவின்று
மறங்கெழு சோழர் உறந்தை யவையத்து
அறநின்று நிலையிற் றாகலின் அதனால்
10 முறைமைநின் புகழு மன்றே மறமிக்கு
எழுசமங் கடந்த எழுவுறழ் திணிதோட்
கண்ணார் கண்ணிக் கலிமான் வளவ
யாங்கன மொழிகோ யானே ஓங்கிய
வரையளந் தறியாப் பொன்படு நெடுங்கோட்டு
15 இமயஞ் சூட்டிய ஏம விற்பொறி
மாண்வினை நெடுந்தேர் வானவன் தொலைய
வாடா வஞ்சி வாட்டுநின்
பீடுகெழு நோன்றாள் பாடுங் காலே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது.

## 2160. புறநானூறு - 126.

ஒன்னார் யானை யோடைப்பொன் கொண்டு
பாணர் சென்னி பொலியத் தைஇ
வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர்
ஓடாப் பூட்கை யுரவோன் மருக
5 வல்லே மல்லே மாயினும் வல்லே

நின்வயிற் கிளக்குவ மாயிற் கங்குல்
துயில்மடிந் தன்ன தூங்கிரு ளிறும்பிற்

பறையிசை யருவி முள்ளூர்ப் பொருந
தெறலரு மரபின்நின் கிளையொடும் பொலிய



10 நிலமிசைப் பரந்த மக்கட் கெல்லாம்
புலனழுக் கற்ற அந்த ணாளன்
இரந்துசெல் மாக்கட்கு இனியிட னின்றிப்
பரந்திசை நிற்கப் பாடினன் அதற்கொண்டு
சினமிகு தானை வானவன் குடகடற்
15 பொலந்தரு நாவாய் ஓட்டிய அவ்வழிப்
பிறகலஞ் செல்கலா தனையேம் அத்தை
இன்மை துரப்ப இசைதர வந்துநின்
வண்மையிற் றொடுத்தனம் யாமே முள்ளெயிற்று
அரவெறி யுருமின் முரசெழுந் தியம்ப
20 அண்ணல் யானையொடு வேந்துகளத் தொழிய
அருஞ்சமந் ததையத் தாக்கி நன்றும்
நண்ணாத் தெவ்வர்த் தாங்கும்
பெண்ணையம் படப்பை நாடுகிழ வோயே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.
மலையமான் திருமுடிக்காரியைப் பாடியது.

**2161. புறநானூறு - 174.**

✓ அணங்குடை யவுணர் கணங்கொண் டொளித்தெனச்
சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணாது
இருள்கண் கெடுத்த பருதி ஞாலத்து
இடும்பைகொள் பருவரல் தீரக் கடுந்திறல்
5 அஞ்சன வுருவன் தந்து நிறுத்தாங்கு
அரசிழந் திருந்த அல்லற் காலை
முரசெழுந் திரங்கு முற்றமொடு கரைபொருது
இரங்குபுனல் நெரிதரு மிகுபெருங் காவிரி
மல்லல் நன்னாட் டல்லல் தீரப்
10 பொய்யா நாவிற் கபிலன் பாடிய
மையணி நெடுவரை யாங்கண் ஒய்யெனச்
செருப்புகல் மறவர் செல்புறங் கண்ட
எள்ளறு சிறப்பின் வெள்ளூர் மீமிசை
அருவழி யிருந்த பெருவிறல் வளவன்
15 மதிமருள் வெண்குடை காட்டி அக்குடை

மாறோக்கத்து நப்பசலையார்

1253

புதுமையின் நிறுத்த புகழ்மேம் படுந
விடர்ப்புலி பொறித்த கோட்டைச் சுடர்ப்பூட்
சுரும்பார் கண்ணிப் பெரும்பெயர் நும்முன்
ஈண்டுச்செய் நல்வினை ஆண்டுச்சென் றுணீஇயர்
20 உயர்ந்தோ ருலகத்துப் பெயர்ந்தன னாகலின்
ஆறுகொல் மருங்கின் மாதிரந் துழவும்
கவலை நெஞ்சத் தவலந் தீர
நீதோன் றினையே நிரைத்தா ரண்ணல்
கல்கண் பொடியக் கானம் வெம்ப
25 மல்குநீர் வரைப்பிற் கயம்பல உணங்கக்
கோடை நீடிய பைதறு காலை
இருநிலம் நெளிய ஈண்டி
உருமுரா று கருவிய மழைபொழிந் தாங்கே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

மலையமான் சோழியவேனாதி திருக்கண்ணனைப் பாடியது.

## 2162. புறநானூறு - 226.

செற்றன் றாயினும் செயிர்த்தன் றாயினும்
உற்றன் றாயினும் உய்வின்று மாதோ
பாடுநர் போலக் கைதொழு தேத்தி
இரந்தன் றாகல் வேண்டும் பொலந்தார்
5 மண்டமர் கடக்குந் தானைத்
திண்டேர் வளவற் கொண்ட கூற்றே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப்

பாடியது.

## 2163. புறநானூறு - 280.

என்னை மார்பிற் புண்ணும் வெய்ய
நடுநாள் வந்து தும்பியும் துவைக்கும்
நெடுநகர் வரைப்பின் விளக்கும் நில்லா
துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கும்
5 அஞ்சுவரு குராஅற் குரலுந் தூற்றும்



நெல்நீ ரெறிந்து விரிச்சி ஓர்க்குஞ்
செம்முது பெண்டின் சொல்லும் நிரம்பா
துடிய பாண பாடுவல் விறலி
என்னா குவிர்கொல் அளியிர் நுமக்கும்
10 இவணுறை வாழ்க்கையோ அரிதே யானும்
மண்ணுறு மழித்தலைத் தெண்ணீர் வாரத்
தொன்றுதாம் உடுத்த அம்பகைத் தெரியற்
சிறுவெள் ளாம்பல் அல்லி யுண்ணுங்
கழிகல மகளிர் போல
15 வழிநினைந் திருத்தல் அதனினும் அரிதே.

திணை - பொதுவியல்; துறை - ஆனந்தப்பையுள்.

## 2164. புறநானூறு - 383.

ஒண்பொறிச் சேவ லெடுப்ப வெற் றெழுந்து
தண்பனி யுறைக்கும் புலரா ஞாங்கர்
நுண்கோற் சிறுகிணை சிலம்ப வொற்றி
நெடுங்கடை நின்று பகடுபல வாழ்த்தித்
5 தன்புகழ் ஏத்தினெ னாக ஊன்புலந்து
அருங்கடி வியனகர்க் குறுகல் வேண்டிக்
கூம்புவிடு மென்பிணி யவிழ்த்த ஆம்பற்
றேம்பா யுள்ள தங்கமழ் மடருளப்
பாம்புரி யன்ன வடிவின காம்பின்
10 கழைபடு சொலியின் இழையணி வாரா
ஒண்பூங் கலிங்கம் உடீஇ நுண்பூண்
வசிந்துவாங்கு நுசுப்பின் அவ்வாங் குந்திக்
கற்புடை மடந்தை தற்புறம் புல்ல
எற்பெயர்ந்த நோக்கி... ...
15 ... ... ...கற்கொண்டு
அழித்துப் பிறந்தனெ னாகி யவ்வழிப்
பிறர், பாடுபுகழ் பாடிப் படர்பறி யேனே
குறுமுலைக் கலமரும் பாலார் வெண்மறி
நரைமுக வூகமொ டுகளுஞ் சென...
20 ... ...கன்றுபல கெழீஇய

மிளைக் கந்தன் 1255

கான்கெழு நாடன் கடுந்தேர் அவியனென
ஒருவனை யுடையேன் மன்னே யானே

அருனெவன் பரிகோ வெள்ளியது நிலையே.

திணை - பாடாண்டிணை ; துறை - கடைநிலை.

[அவியனைப் பாடியது.]

## சகரு. மாற்பித்தியார்

## 2165. புறநானூறு - 251.

ஓவத் தன்ன இடனுடை வரைப்பிற்
பாவை யன்ன குறுந்தொடி மகளிர்
இழைநிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிகும்
கழைக்கண் நெடுவரை யருவி யாடிக்
5 கான யானை தந்த விறகிற்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே.

திணை - வாகை ; துறை - தாபதவாகை.

... ... ...பாடியது.

## 2166. புறநானூறு - 252.

கறங்குவெள் ளருவி யேற்றலின் நிறம்பெயர்ந்து
தில்லை யன்ன புல்லென் சடையோடு
அள்ளிலைத் தாளி கொய்யு மோனே
இல்வழங்கு மடமயில் பிணிக்குஞ்
5 சொல்வலை வேட்டுவன் ஆயினன் முன்னே.

திணை - வாகை ; துறை - தாபத வாகை.

... ... ...பாடியது.

சுகசு. மிளைக் கந்தன்

2167. குறுந்தொகை - 196. மருதம்

வேம்பின் பைங்காயென் தோழி தரினே
தேம்பூங் கட்டி யென்றனிர் இனியே



பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கட் டண்ணிய தரினும்
5 வெய்ய உவர்க்கும் என்றனிர்
ஐய அற்றால் அன்பின் பாலே.

வாயில் வேண்டிப்புக்க கிழவற்குத் தோழி கூறியது.

சுகஎ. மிளைப்பெருங் கந்தன்

2168. குறுந்தொகை - 136. குறிஞ்சி

காமம் காமம் என்ப காமம்
அணங்கும் பிணியும் அன்றே நுணங்கிக்
கடுத்தலுந் தணிதலும் இன்றே யானை
குளகுமென் றாள்மதம் போலப்
5 பாணியும் உடைத்தது காணுநர்ப் பெறினே.

தலைமகன் பாங்கற்கு உரைத்தது.

2169. குறுந்தொகை - 204. குறிஞ்சி

காமம் காமம் என்ப காமம்

அணங்கும் பிணியும் அன்றே நினைப்பின்
மூதைச்சுவற் கவித்த முற்றா இளம்புல்
மூதா தைவந் தாங்கு
5 விருந்தே காமம் பெருந்தோ ளோயே.
தலைமகற்குப் பாங்கன் உரைத்தது.

**2170.** குறுந்தொகை - **234.** முல்லை

சுடர்செல் வானஞ் சேப்பப் படர்கூர்ந்து
எல்லுறு பொழுதின் முல்லை மலரும்
மாலை யென்மனார் மயங்கி யோரே
குடுமிக் கோழி நெடுநகர் இயம்பும்

முக்கல் ஆசான் நல்வெள்ளையார்
1257

5 பெரும்புலர் விடியலும் மாலை
பகலும் மாலை துணையி லோர்க்கே.
பருவவரவின்கண் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

சுகஅ. மிளைவேள் தித்தன்

**2171.** குறுந்தொகை - **284.** குறிஞ்சி

பொருத யானைப் புகர்முகங் கடுப்ப
மன்றத் துறுகல் மீமிசைப் பலவுடன்
ஒண்செங் காந்தள் அவிழும் நாடன்
அறவ னாயினும் அல்ல னாயினும்
5 நம்மே சுவரோ தம்மிலர் கொல்லோ
வரையிற் றாழ்ந்த வால்வெள் ளருவி
கொன்னிலைக் குரம்பையின் இழிதரும்
இன்னா திருந்த இச் சிறுகுடி யோரே.

வரைவிடைத் தோழி கிழத்திக்கு உரைப்பாளாய் உரைத்தது.

சகசு. மீனெறி தூண்டிலார்

**2172.** குறுந்தொகை - **54.** குறிஞ்சி

யானே ஈண்டை யேனே என்னலனே
ஏனல் காவலர் கவணொலி வெரீஇக்
கான யானை கைவிடு பசுங்கழை
மீனெறி தூண்டிலின் நிவக்கும்
5 கானக நாடனொடு ஆண்டொழிந் தன்றே.

வரைவு நீட்டித்தவழி ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

சஉ௦. மூக்கல் ஆசான் நல்வெள்ளையார்

**2173.** நற்றிணை - **272.** நெய்தல்

கடலங் காக்கைச் செவ்வாய்ச் சேவல்
படிவ மகளிர் கொடிகொய் தழித்த



பொம்ம லடும்பின் வெண்மண லொருசிறைக்
கடுஞ்சூல் வதிந்த காமர் பேடைக்கு
5 இருஞ்சேற் றயிரை தேரிய தெண்கழிப்
பூவுடைக் குட்டந் துழவுந் துறைவன்
நல்கா மையின் நசைபழு தாகப்
பெருங்கை யற்றவென் சிறுமை பலர்வாய்
அம்பல் மூதூ ரலர்ந்து
10 நோயா கின்றது நோயினும் பெரிதே.

வரையாது நெடுங்காலம் வந்தொழுக ஆற்றுளாய தலைமகள் சொல்லியது ; தோழி தலைமகளுக்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியதூஉமாம்.

சஉக. மூடங்கிக்கிடந்த
நெடுஞ்சேரலாதன்

2174. அகநானூறு - 30. நெய்தல்

நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அவ்வலைக்
கடல்பா டழிய இனமீன் முகந்து
துணைபுணர் உவகையர் பரத மாக்கள்
இளையரு முதியருங் கிளையுடன் துவன்றி
5 உப்பொ யுமணர் அருந்துறை போக்கும்
ஒழுகை நோன்பக டொப்பக் குழீஇ
அயிர்திணி யடைகரை யொலிப்ப வாங்கிப்

பெருங்களந் தொகுத்த உழவர் போல
இரந்தோர் வறுங்கல மல்க வீசிப்
10 பாடுபல அமைத்துக் கொள்ளை சாற்றிக்
கோடுயர் திணிமணற் றுஞ்சுந் துறைவ
பெருமை யென்பது கெடுமோ ஒருநாள்
மண்ணா முத்தம் அரும்பிய புன்னைத்
தண்ணறுங் கானல் வந்துநும்
15 வண்ணம் எவனோ என்றனிர் செலினே.
பகற்குறிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

## சஉஉ. முடத்தாமக்கண்ணியார்

**2175.** பத்துப்பாட்டு - **2**-வது
பொருநராற்றுப்படை

அருஅ யாணர் அகன்றலைப் பேரூர்ச்
சாறுகழி வழிநாட் சோறுநசை யுறாது
வேறுபுல முன்னிய விரகறி பொருந
குளப்புவழி யன்ன கவடுபடு பத்தல்
5 விளக்கழல் உருவின் விசியுறு பச்சை
எய்யா இளஞ்சூற் செய்யோ ளவ்வயிற்று
ஐதுமயி ரொழுகிய தோற்றம் போலப்
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை
அளைவாழ் அலவன் கண்கண் டன்ன
10 துளைவாய் தூர்ந்த துரப்பமை யாணி
எண்ணாட் டிங்கள் வடிவிற் றாகி
அண்ணா வில்லா அமைவரு வறுவாய்ப்
பாம்பணந் தன்ன ஓங்கிரு மருப்பின்
மாயோள் முன்கை ஆய்தொடி கடுக்கும்
15 கண்கூ டிருக்கைத் திண்பிணித் திவவின்
ஆய்தினை யரிசி யவைய லன்ன
வேய்வை போகிய விரலுளர் நரம்பிற்
கேள்வி போகிய நீள்விசித் தொடையல்
மணங்கமழ் மாதரை மண்ணி யன்ன
20 அணங்குமெய்ந் நின்ற அமைவரு காட்சி
ஆறலை கள்வர் படைவிட அருளின்

மாறுதலை பெயர்க்கு மருவின் பாலை
வாரியும் வடித்தும் உந்தியும் உறழ்ந்தும்

சீருடை நன்மொழி நீரொடு சிதறி
25 அறல்போற் கூந்தற் பிறைபோற் திருநுதற்

கொலைவிற் புருவத்துக் கொழுங்கடை மழைக்கண்
இலவிதழ் புரையும் இன்மொழித் துவர்வாய்ப்
பலவுறு முத்திற் பழிதீர் வெண்பல்
மயிர்குறை கருவி மாண்கடை யன்ன
30 பூங்குழை யூசற் பொறைசால் காதின்



நாணடச் சாய்ந்த நலங்கிளர் எருத்தின்
ஆடமைப் பணைத்தோள் அரிமயிர் முன்கை
நெடுவரை மிசைய காந்தள் மெல்விரற்
கிளிவா யொப்பின் ஒளிவிடு வள்ளுகிர்
35 அணங்கென உருத்த சுணங்கணி யாகத்து
ஈர்க்கிடை போகா ஏரிள வனமுலை
நீர்ப்பெயர்ச் சுழியின் நிறைந்த கொப்பூழ்
உண்டென வுணரா உயவும் நடுவின்
வண்டிருப் பன்ன பல்காழ் அல்குல்
40 இரும்பிடித் தடக்கையிற் செறிந்துதிரள் குறங்கிற்
பொருந்துமயிர் ஒழுகிய திருந்துதாட் கொப்ப
வருந்துநாய் நாவிற் பெருந்தகு சீறடி
அரக்குருக் கன்ன செந்நிலன் ஒதுங்கலிற்
பரற்பகை யுழந்த நோயொடு சிவணி

45 மரற்பழுத் தன்ன மறுகுநீர் மொக்குள்
நன்பக லந்தி நடையிடை விலங்கலிற்

பெடைமயி லுருவிற் பெருந்தகு பாடினி
பாடின பாணிக் கேற்ப நாடொறும்
களிறு வழங்கதர கானத் தல்கி
50 இலையின் மராஅத்த எவ்வந் தாங்கி
வலைவலந் தன்ன மென்னிழல் மருங்கிற்
காடுறை கடவுட்கடன் கழிப்பிய பின்றைப்
பீடுகெழு திருவிற் பெரும்பெயர் நோன்றாள்
முரசுமுழங்கு தானை மூவருங் கூடி
55 அரசவை யிருந்த தோற்றம் போலப்
பாடல் பற்றிய பயனுடை யெழாஅற்
கோடியர் தலைவ கொண்ட தறிந
அறியா மையின் நெறிதிரிந் தொராஅது
ஆற்றெதிர்ப் படுதலும் நோற்றதன் பயனே 60
போற்றிக் கேண்மதி புகழ்மேம் படுந
அடுபசி யுழந்தநின் இரும்பே ரொக்கலொடு
நீடுபசி யொராஅல் வேண்டின் நீடின்று
எழுமதி வாழி ஏழின் கிழவ
முடத்தாமக்கண்ணியார்-பொருநராற்றுப்படை
1261

65
பழுமர முள்ளிய பறவையின் யானுமவன்
இழுமென் சும்மை யிடனுடை வரைப்பின்
நசையுநர்த் தடையா நன்பெரு வாயில்
இசையேன் புக்கென் இடும்பை தீர
எய்த்த மெய்யேன் எய்யே னாகிப்
பைத்த பாம்பின் துத்தி யேய்ப்பக்
70

கைக்கச டிருந்தவென் கண்ணகன் தடாரி
இருசீர்ப் பாணிக் கேற்ப விரிகதிர்
வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியல்
ஒன்றுயான் பெட்டா வளவையின்
ஒன்றிய
கேளிர் போலக் கேள்கொளல் வேண்டி
75 வேளாண் வாயில் வேட்பக் கூறிக்
கண்ணிற் காண நண்ணுவழி யிரீஇப்
பருகு வன்ன அருகா நோக்கமொடு
உருகு பவைபோல் என்புகுளிர் கொளீஇ

ஈரும் பேனும் இருந்திறை கூடி
80 வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த
துன்னற் சிதாஅர் துவர நீக்கி
நோக்குநுழை கல்லா நுண்மைய

அரவுரி யன்ன அறுவை நல்கி

பூக்கனிந் து

85

மழையென மருளும் மகிழ்செய் மாடத்து
இழையணி வனப்பின் இன்னகை மகளிர்
போக்கில் பொலங்கலம் நிறையப் பல்கால்
வாக்குபு தரத்தர வருத்தம் வீட
ஆர வுண்டு பேரஞர் போக்கிச்
செருக்கொடு நின்ற காலை மற்றவன்
90 திருக்கிளர் கோயில் ஒருசிறைத் தங்கித்
தவஞ்செய் மாக்கள் தம்முடம்பு இடாஅது
அதன்பயம் எய்திய அளவை மான
ஆறுசெல் வருத்தம் அகல நீக்கி
அனந்தர் நடுக்க மல்லது யாவதும்
95 மனங்கவல்பு இன்றி மாழாந் தெழுந்து
மாலை யன்னதோர் புன்மையும் காலைக்



கண்டோர் மருளும் வண்டுசூழ் நிலையும்
கனவென மருண்டவென் னெஞ்சே மாப்ப
வல்லஞர் பொத்திய மனமகிழ் சிறப்பக்
100 கல்லா இளைஞர் சொல்லிக் காட்டக்

கதுமெனக் கரைந்து வம்மெனக் கூஉய்
அதன்முறை கழிப்பிய பின்றைப் பதனறிந்து
துராஅய்த் துற்றிய துருவையம் புழுக்கின்
பராஅரை வேவை பருகெனத் தண்டிக்
105 காழிற் சுட்ட கோழூன் கொழுங்குறை
ஊழின் ஊழின் வாய்வெய் தொற்றி
அவையவை முனிகுவ மெனினே சுவைய
வேறுபல் உருவின் விரகுதந் திரீஇ
மண்ணமை முழவின் பண்ணமை சீறியாழ்
110 ஒண்ணுதல் விறலியர் பாணி தூங்க
மகிழ்ப்பதம் பன்னாட் கழிப்பி ஒருநாள்
அவிழ்ப்பதங் கொள்கென் றிரப்ப முகிழ்த்தகை
முரவை போகிய முரியா அரிசி
விரலென நிமிர்ந்த நிரலமை புழுக்கல்
115 பரல்வறைக் கருனை காடியின் மிதப்ப
அயின்ற காலைப் பயின்றினி திருந்து
கொல்லை யுழுகொழு வெய்ப்பப் பல்லே
எல்லையு மிரவும் ஊன்தின் றுமழுங்கி
உயிர்ப்பிடம் பெறாஅ தூண்முனிந் தொருநாள்
120 செயிர்த்தெழு தெவ்வர் திறைதுறை போகிய
செல்வ சேறுமெந் தொல்பதிப் பெயர்ந்தென
மெல்லெனக் கிளந்தன மாக வல்லே
அகறி ரோவெம் ஆயம் விட்டெனச்
சிரறிய வன்போற் செயிர்த்த நோக்கமொடு

125

துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு
பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கெனத்
தன்னறி யளவையின் தரத்தர யானும்
என்னறி யளவையின் வேண்டுவ
முகந்துகொண்டு
இன்மை தீர வந்தனென் வென்வேல்

முடத்தாமக்கண்ணியார்-பொருநரா
ற்றுப்படை 1263

130 உருவப் பல்தே ரிளையோன் சிறுவன்
முருகற் சீற்றத்து உருகெழு குருசில்
தாய்வயிற் றிருந்து தாயம் எய்தி
எய்யாத் தெவ்வர் ஏவல் கேட்பச்
செய்யார் தேஎந் தெருமரல் கலிப்பப் 135
பவ்வ மீமிசைப் பகற்கதிர் பரப்பி
வெவ்வெஞ் செல்வன் விசும்புபடர்ந் தாங்குப்
பிறந்துதவழ் கற்றதற் றொட்டுச் சிறந்தநன்
நாடுசெகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப
140

ஆளி நன்மான் அணங்குடைக் குருளை
மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி
முலைக்கோள் விடாஅ மாத்திரை ஞெரேரெனத்
தலைக்கோள் வேட்டங் களிறட் டாஅங்கு
இரும்பனம் போந்தைத் தோடுங் கருஞ்சினை
அரவாய் வேம்பின் அங்குழைத் தெரியலும்
145 ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த
இருபெரு வேந்தரும் ஒருகளத் தவிய
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாட்
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்

தாணிழல் மருங்கின் அணுகுபு குறுகித்
150 தொழுதுமுன் னிற்குவி ராயிற் பழுதின்று
ஈற்றா விருப்பிற் போற்றுபு நோக்கிநும்
கையது கேளா வளவை ஒய்யெனப்
பாசி வேரின் மாசொடு குறைந்த
துன்னற் சிதாஅர் நீக்கித் தூய
155 கொட்டைக் கரைய பட்டுடை நல்கிப்

பெறலருங் கலத்திற் பெட்டாங் குண்கெனப்
பூக்கமழ் தேறல் வாக்குபு தாத்தர

வைகல் வைகல் கைகவி பருகி
எரியகைந் தன்ன ஏடில் தாமரை

160 சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி
நூலின் வலவா நுணங்கரில் மாலை
வாலொளி முத்தமொடு பாடினி அணியக்



கோட்டிற் செய்த கொடுஞ்சி
நெடுந்தேர்
ஊட்டுளை துயல்வர ஓரி நுடங்கப்
165 பால்புரை புரவி
காலின் ஏழடிப்

நால்குடன் பூட்டிக்
பின்சென்று கோலின்
தாறுகளைந் தேறென் றேற்றி
வீறுபெறு
பேர்யாழ்
தண்பணை

முறையுளிக் கழிப்பி நீர்வாய்த்
தழீஇய தளரா இருக்கை
170 நன்பல் லூர நாட்டொடு நன்பல்
வெருஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை
வெருவரு செலவின் வெகுளி வேழம்
தரவிடைத் தங்கலோ விலனே வரவிடைப்
பெற்றவை பிறர்பிறர்க் கார்த்தித்
தெற்றெனச்
175 செலவுகடைக் கூட்டுதி ராயிற்

பலபுலந்து

நில்லா வுலகத்து நிலைமை தூக்கிச்
செல்கென விடுக்குவ னல்லன்

ஒல்லெனத்

திரைபிறழிய இரும்பௌவத்துக்
கரைசூழ்ந்த அகன்கிடக்கை
180 மாமாவின் வயின்வயினெற்
றூழ்தாழைத் தண்தண்டலைக்
கூடுகெழீஇய குடிவயினாற்
செஞ்சோற்ற பலிமாந்திய
கருங்காக்கை கவர்வுமுனையின்
185 மனைநொச்சி நிழலாங்கண்

ஈற்றியாமைதன் பார்ப்போம்பவும்
இளையோர் வண்டல் அயரவும் முதியோர்
அவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் சொலியவும்

முடக்காஞ்சிச் செம்மருதின்
190 மடக்கண்ண மயிலாலப்
பைம்பாகற் பழந்துணரிய
செஞ்சுளைய கனிமாந்தி
அறைக்கரும்பின் அரிநெல்லின்
இனக்களமர் இசைபெருக
195 வறளடும்பின் இவர்பகன்றைத்

தளிர்ப்புன்கின் தாழ்காவின்
நனைஞாழலொடு மரங்குழீஇய
அவண்முனையின் அகன்றுமாறி
அவிழ்தளவின் அகன்தோன்றி
200 நகுமுல்லை உகுதேறுவீப்
பொற்கொன்றை மணிக்காயா
நற்புறவின் நடைமுனையிற்
சுறவழங்கும் இரும்பௌவத்து
இறவருந்திய இனநாரை
205 பூம்புன்னைச் சினைச்சேப்பின்
ஓங்குதிரை யொலிவெரீஇத்
தீம்பெண்ணை மடற்சேப்பவும்
கோட்டெங்கின் குலைவாழைக்
கொழுங்காந்தள் மலர்நாகத்துத்
210 துடிக்குடிஞைக் குடிப்பாக்கத்து
யாழ்வண்டின் கொளைக்கேற்பக்
கலவம்விரித்த மடமஞ்ஞை
நிலவெக்கர்ப் பலபெயரத்
தேனெய்யொடு கிழங்குமாறியோர்
215 மீனெய்யொடு நறவுமறுகவும்

தீங்கரும்போடு அவல்வகுத்தோர்
மான்குறையொடு மதுமறுகவும்
குறிஞ்சி பரதவர் பாட நெய்தல்
நறும்பூங் கண்ணி குறவர் சூடக்
220 கானவர் மருதம் பாட அகவர்
நீனிற முல்லைப் பல்திணை நுவலக்
கானக்கோழி கதிர்குத்த
மனைக்கோழி தினைக்கவர

வரைமந்தி கழிமூழ்கக்
225 கழிநாரை வரையிறுப்பத்
தண்வைப்பினால் நாடுகுழீஇ
மண்மருங்கினான் மறுவின்றி
ஒருகுடையான் ஒன்றுகூறப்





பெரிதாண்ட பெருங்கேண்மை
230 அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்
அன்னோன் வாழி வென்வேற் குருசில்
மன்னர் நடுங்கத் தோன்றிப் பன்மாண்

எல்லை தருநன் பல்கதிர் பரப்பிக்
குல்லை கரியவுங் கோடெரி நைப்பவும்
235 அருவி மாமலை நிழத்தவும் மற்றக்

கருவி வானங் கடற்கோள் மறப்பவும்
பெருவற ணாகிய பண்பில் காலையும்
240

நறையும் நரந்தமும் அகிலும் ஆரமும்
துறைதுறை தோறும் பொறையுயிர்த் தொழுகி
நுரைத்தலைக் குரைப்புனல் வரைப்பகம் புகுதொறும்
புனலாடு மகளிர் கதுமெனக் குடையக்
கூனிக் குயத்தின் வாய்நெல் அரிந்து
சூடுகோ டாகப் பிறக்கி நாடொறும்
குன்றெனக்
245 கடுந்தெற்று

குவைஇய குன்றுக் குப்பைக்
மூடையின் இடங்கெடக் கிடக்கும்
சாலி நெல்லின் சிறைகொள் வேலி
ஆயிரம் விளையுட் டாகக்
காவிரி புரக்கும் நாடுகிழ வோனே.

சோழன் கரிகாற் பெருவளத்தானை பாடியது.

**2175-a.** ஏரியும் ஏற்றத்தி னானும் பிறர்நாட்டு

வாரி சுரக்கும் வளனெல்லாம்—தேரின்
அரிகாலின் கீழுகூஉம் அந்நெல்லே சாலும்
கரிகாலன் காவிரிசூழ் நாடு.

**2175-b.** அரிமா சுமந்த அமளிமே லானைத்
திருமா வளவனெனத்
தேறேன்—திருமார்பின்
மானமால் என்றே தொழுதேன்
தொழுதகைப்
போனவா பெய்த வளை.

**2175-c. 690-a**

## உஉரு. முடத்திருமாறன்

## 2176. நற்றிணை - 105. பாலை

முளிகொடி வலந்த முள்ளரை யிலவத்து
ஒளிர்சினை யதிர வீசி விளிபட
வெவ்வளி வழங்கும் வேய்பயில் மருங்கிற்
கடுநடை யானை கன்றொடு வருந்த
5 நெடுநீர் அற்ற நிழலி லாங்கண்
அருஞ்சுரக் கவலைய என்னாய் நெடுஞ்சேட்
பட்டனை வாழிய நெஞ்சே குட்டுவன்
குடவரைச் சுனைய மாயிதழ்க் குவளை
வண்டுபடு வான்போது கமழும்
10 அஞ்சி லோதி அரும்பட ருறவே.

இடைச்சுரத்து மீளலுற்ற நெஞ்சினைத் தலைமகன்

கழறியது.

**2177.** நற்றிணை - **228.** குறிஞ்சி

என்னெனப் படுமோ தோழி மின்னுவசிபு

அதிர்குரல் எழிலி முதிர்கடன் தீரக்
கண்டூர்பு விரிந்த கனையிருள் நடுநாட்
பண்பி லாரிடை வரூஉம் நந்திறத்து
5 அருளான் கொல்லோ தானே கானவன்
சிறுபுறங் கடுக்கும் பெருங்கை வேழம்
வெறிகொள் சாபத் தெறிகணை வெரீஇ
அழுந்துபட விடரகத் தியம்பும்
எழுந்துவீழ் அருவிய மலைகிழ வோனே.

தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குச்
சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது.

சஉச. முதுகூத்தனார்

**2178.** அகநானூறு - **137.** பாலை

ஆறுசெல் வம்பலர் சேறுகிளைத் துண்ட
சிறுபல் கேணிப் பிடியடி நசைஇக்

களிறுதொடூஉக் கடக்குங் கான்யாற்று அத்தஞ்
சென்றுசேர்பு ஒல்லா ராயினும் நினக்கே
5 வென்றெறி முரசின் விறற்போர்ச் சோழர்
இன்கடுங் கள்ளின் உறந்தை யாங்கண்

வருபுனல் நெரிதரும்
உருவ வெண்மணல்

இருகரைப் பேரியாற்று
முருகுநாறு தண்பொழிற்
பங்குனி முயக்கங் கழிந்த வழிநாள்
10 வியலே அமன்ற மரம்பயில் இறும்பில்
தீயி லடுப்பின் அரங்கம் போலப்
பெரும்பாழ் கொண்டன்று நுதலே தோளுந்
தோளா முத்திற் றெண்கடற் பொருநன்
திண்டேர்ச் செழியன் பொருப்பிற் கவாஅன்
15 நல்லெழில் நெடுவேய் புரையுந்
தொல்கவின் தொலைந்தன நோகோ யானே.

தலைமகன் பிரியுமெனக் கருதி வேறுபட்ட தோழி சொல்லியது.

தலைமகட்குத்

2179. அகநானூறு - 329. பாலை

பூங்கணும் நுதலும் பசப்ப நோய்கூர்ந்து ஈங்கியான்
வருந்தவும் நீங்குதல் துணிந்து வாழ்தல் வல்லுந ராயிற்
காதலர்
குவிந்த குரம்பை அங்குடிச் சீறூர்ப்
5 படுமணி இயம்பப் பகலியைந் துமணர்
கொடுநுகம் பிணித்த செங்கயிற் றொழுகைப்
பகடயாக் கொள்ளும் வெம்முனைத் துகள்தொகுத்து
எறிவளி சுழற்றும் அத்தஞ் சிறிதசைந்து
வருவர் கொல்லோ தாமே பாய்கொள்பு
10 உறுவெரிந் ஒடிக்குஞ் சிறுவரிக் குருளை
நெடுநல் யானை நீர்நசைக் கிட்ட
கைகறித் தூர றுமைதூங்கு இறும்பிற்
புலிபுக் கீனும் வறுஞ்சுனைப்
பணிபடு சிமையப் பன்மலை யிறந்தே.

முதுகூத்தனார் 1269

பிரிவிடைவேறுபட்ட தலைமகள்
தோழிக்குச் சொல்லியது ;
பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள்
சொல்லியதூஉமாம்.

**2180.** குறுந்தொகை - **221.** முல்லை

அவரோ வாரார் முல்லையும் பூத்தன
பறியுடைக் கையர் மறியினத்
தொழியப்
பாலொடு வந்து கூழொடு பெயரும்
யாடுடை யிடைமகன் சென்னிச்
5 சூடிய வெல்லாஞ் சிறுபசு முகையே.
பிரிவிடைப் பருவவரவின்கண்
வற்புறுத்துந் தோழிக்குக்கிழத்தி
உரைத்தது.

2181. குறுந்தொகை - 353. குறிஞ்சி
ஆர்கலி வெற்பன் மார்புபுணை
யாகக்
கோடுயர் நெடுவரைக் கவாஅற்
பகலே
5

பாடின் அருவி ஆடுத லினிதே
நிரையிதழ் பொருந்தாக் கண்ணோடு இரவிற்
பஞ்சி வெண்திரிச் செஞ்சுடர் நல்லிற்
பின்னுவீழ் சிறுபுறந் தழீஇ
அன்னை முயங்கத் துயிலின் னாதே.
பகற்குறி வந்து ஒழுகுந் தலைமகன்
வெளிப்பாடஞ்சி இரவுக்குறி
வயந்தானது குறிப்பறிந்த தோழி
இரவின்கண் அன்னையது காவ

லறிந்து பின்னும் பகற்குறியே நன்று
அவ்விரவுக்குறியின் என்று
பகற்குறியும் இரவுக்குறியும் மறுத்துத்
தலைமகன் சிறைப்புறத்தானாக
வரைவு கடாயது.

2182. குறுந்தொகை - 371. குறிஞ்சி

கைவளை நெகிழ்தலும் மெய்பசப்
பூர்தலும்
மைபடு சிலம்பின் ஐவனம் வித்தி



அருவியின் விளைக்கும் நாடனொடு
மருவேன் தோழியது காமமோ பெரிதே.

வரைவிடை வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள்
சொல்லியது.

2183. குறுந்தொகை - 390. பாலை

எல்லும் எல்லின்று பாடுங் கேளாய்
செல்லா தீமோ சிறுபிடி துணையே
வேற்றுமுனை வெம்மையிற் சாத்துவந்
திறுத்தென
வளையணி நெடுவேல் ஏந்தி
5 மிளைவந்து பெயருந் தண்ணுமைக் குரலே.

புணர்ந்துடன் போயினுரை இடைச்சுரத்துக்
செலவும் பகையுங் காட்டிச் செலவு விலக்கியது.

கண்டார் பொழுது

## 2184. நற்றிணை - 28. பாலை

என்கைக் கொண்டு தன்கண் ஒற்றியும்
தன்கைக் கொண்டென் னன்னுதல் நீவியும்
அன்னை போல இனிய கூறியும்
கள்வர் போலக் கொடியன் மாதோ
5 மணியென இழிதரும் அருவிப் பொன்னென
வேங்கை தாய ஓங்குமலை யடுக்கத்து
ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்
ஓடுமழை கிழிக்குஞ் சென்னிக்
கோடுயர் பிறங்கல் மலைகிழ வோனே.

பிரிவின்கண் ஆற்றளாகிய தலைவிக்குத் தோழி
சொல்லியது ; குறையப்புமாம்.

## 2185. நற்றிணை - 58. நெய்தல்

பெருமுது செல்வர் பொன்னுடைப் புதல்வர்
சிறுதோட் கோத்த செவ்வரிப் பறையின்
கண்ணகத் தெழுதிய குரீஇப் போலக்
கோல்கொண் டலைப்பப் படீஇயர் மாதோ

முதுவெங்கண்ணனுர்

5 வீரை வேண்மான் வெளியன் தித்தன்
முரசுமுதற் கொளீஇய மாலை விளக்கின்
வெண்கோடு இயம்ப நுண்பனி அரும்பக்
கையற வந்த பொழுதொடு மெய்சோர்ந்து
அவல நெஞ்சினம் பெயர உயர்திரை
10 நீடுநீர்ப் பனித்துறைச் சேர்ப்பன்
ஓடுதேர் நுண்ணுகம் நுழைந்த மாவே.

பகற்குறிவந்து நீங்குந் தலைமகன் போக்குநோக்கித் தோழி மாவின்மேல்வைத்துச் சொல்லியது.

## 2186. புறநானூறு - 331.

கல்லறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல்
வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவலி
நனிநல் கூர்ந்தன னாயினும் பனிமிகப்
புல்லென் மாலைச் சிறுதீ ஞெலியுங்
5 கல்லா இடையன் போலக் குறிப்பின்
இல்லது படைக்கவும் வல்லன் உள்ளது
தவச்சிறி தாயினும் மிகப்பல ரென்னாள்
நீணெடும் பந்த ரூண்முறை யூட்டும்
இற்பொலி மகடூஉப் போலச் சிற்சில
10 வரிசையின் அளிக்கவும் வல்லன் உரிதினிற்
காவல் மன்னர் கடைமுகத் துகுக்கும்
போகுபலி வெண்சோறு போலத்
தூவவும் வல்லனவன் தூவுங் காலே.

திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.

௪௨௫. முதுவெங்கண்ணனார்

## 2187. நற்றிணை - 232. குறிஞ்சி

சிறுகண் யானைப் பெருங்கை யீரினங்
குளவித் தண்கயங் குழையத் தீண்டிச்
சோலை வாழை முணைஇ அயலது



வேரல் வேலிச் சிறுகுடி அலறச்
5 செங்காற் பலவின் தீம்பழம் மிசையும்
மாமலை நாட தாமம் நல்கென

வேண்டுதும் வாழிய எந்தை வேங்கை
வீயுக விரிந்த முன்றிற்
கல்கெழு பாக்கத்து அல்கினை செலினே.

பகல்வருவானை இரவுவாவெனத் தோழி சொல்லியது.

௪௨௬. மூப்பேர் நாகனார்

## 2188. நற்றிணை - 314. பாலை

முதிர்ந்தோர் இளமை யழிந்தும் எய்தார்
வாழ்நாள் வகையளவு அறிஞரும் இல்லை
மாரிப் பித்திகத் தீரிதழ் அலரி
நறுங்கா ழாரமொடு மிடைந்த மார்பிற்
5 குறும்பொறிக் கொண்ட கொம்மையம் புகர்ப்பிற்
கருங்கண் வெம்முலை ஞெமுங்கப் புல்லிக்
கழிவ தாக கங்கு லென்று
தாமொழி வன்மையிற் பொய்த்தனர் வாழிய
கொடிவிடு வன்ன காய்விடு கள்ளி
10 அலங்கலம் பாலை யேறிப் புலம்புகொள்
புன்புறா வீழ்பெடைப் பயிரும்
என்றூழ் நீளிடைச் சென்றிசி னோரே.

பிரிவிடை மெலிந்த தலைமகள் சொல்லியது.

சஉஎ. முரஞ்சியூர் முடிநாகராயர்

**2189.** புறநானூறு - **2.**

மண்திணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்

5 தீமுரணிய நீருமென் றாங்கு
ஐம்பெரும் பூதத் தியற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சிய தகலமும்
வலியுந் தெறலும் அளியும் உடையோய்
நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்துநின்
10 வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பின் நன்னாட்டுப் பொருந
வான வரம்பனை நீயோ பெரும 15
அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை

ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்
பாஅல்புளிப்பினும் பகலிருளினும்
நாஅல்வேத நெறிதிரியினும்
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி 20
நடுக்கின்றி நிலியரோ வத்தை அடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தி யந்தணர் அருங்கடன் இறுக்கும்
முத்தீ விளக்கிற் றுஞ்சும்
பொற்கோட் டிமயமும் பொதியமும்
போன்றே.

திணை - பாடாண்டிணை ; துறை - செவியறிவுறூஉ,
வாழ்த் தியலுமாம்.

சேரமான் பெருஞ்சோற் றுதியஞ் சேரலாதனைப்

பாடியது.

சஉஅ. முள்ளியூர்ப் பூதியார்

2190. அகநானூறு - 173. பாலை

அறந்தலைப் பிரியா தொழுகலும் சிறந்த
கேளிர் கேடுபல வூன்றலும் நாளும்
வருந்தா உள்ளமொ டிருந்தோர்க் கில்லெனச்
செய்வினை புரிந்த நெஞ்சினர் நறுநுதல்
5 மையீ ரோதி அரும்பட ருழத்தல்



சின்னாள் தாங்கல் வேண்டும் என்றுநின்
நன்மாண் எல்வளை திருத்தின ராயின்
வருவர் வாழி தோழி பலபுரி
வார்கயிற் றொழுகை நோன்சுவற் கொளீஇப்
10 பகடுதுறை யேற்றத் துமண்விளி வெரீஇ
உழைமான் அம்பிணை யினனிரிந் தோடக்
காடுகவின் அழிய உரைஇக் கோடை
நின்றுதின விளிந்த அம்பணை நெடுவேய்க்
கண்விடத் தெறிக்கு மண்ணுறு முத்தம்
15 கழங்குறழ் தோன்றல பழங்குழித் தாஅம்
இன்களி நறவின் இயல்தேர் நன்னன்

விண்பொரு நெடுவரைக் கவாஅற்
பொன்படு மருங்கின் மலையிறந் தோரே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத்
தோழி வற்புறுத்தியது.

## ௪௨௯. மூலங்கீரனார்

### 2191. நற்றிணை - 73. பாலை

வேனில் முருக்கின் விளைதுண ரன்ன
மாணா விரல வல்வாய்ப் பேஎய்
மல்லல் மூதூர் மலர்ப்பலி யுணீஇய
மன்றம் போழும் புன்கண் மாலைத்
5 தம்மொடும் அஞ்சும் நம்மிவண் ஒழியச்
செல்ப என்ப தாமே செவ்வரி
மயிர்நிரைத் தன்ன வார்கோல் வாங்குகதிர்ச்
செந்நெலஞ் செறுவின் அன்னந் துஞ்சும்
பூக்கெழு படப்பைச் சாய்க்காட் டன்னவென்
10 நுதல்கவின் அழிக்கும் பசலையும்
அயலோர் தூற்றும் அம்பலும் அளித்தே.

செலவுக்குறிப்பறிந்து வேறுபட்ட தலைவி
சொல்லியது.

## ௪௩௦. மையோடக்கோவனார்

### 2192. பரிபாடல் - 7.

திரையிரும் பனிப்பௌவஞ் செவ்விதா அறமுகந்து
உரவுரு முடன்றூர்ப்ப ஊர்பொறை கொள்ளாது
கரையுடை குளமெனக் கழன்றுவான் வயிறழிபு
வரைவரை தொடுத்த வயங்குவெள் ளருவி
5 இரவிருள் பகலாக இடமரிது செலவென்றது
வலனிரங்கு முரசின் தென்னவ ருள்ளிய
நிலனுற நிமிர்தானை நெடுநிரை நிவப்பன்ன
பெயலாற் பொலிந்து பெரும்புனல் பலநந்த
நலனந்த நாடணி நந்தப் புலனந்த
10 வந்தன்று வையைப் புனல் ;

நளியிருஞ் சோலை நரந்தந் தாஅய்
ஒளிர்சினை வேங்கை விரிந்தஇணர் உதிரலொடு
துளியி லுழந்த தோய்வருஞ் சிமைதொறும்
வளிவாங்கு சினைய மாமரம் வேர்கீண்டு
15 உயர்ந்துழி யுள்ளன பயம்பிடைப் பரப்பி
உழவர் களிதூங்க முழவு பணைமுரல
ஆட லறியா அரிவை போலவும்
ஊட லறியா உவகையள் போலவும்
வேண்டுவழி நடந்து தாங்குதடை பொருது
20 விதியாற்று ளாக்கிய மெய்க்கலவை போலப்
பொதுநாற்ற முள்ளுட் கரந்து புதுநாற்றஞ்
செய்கின்றே செம்பூம் புனல் ;

கவிழ்ந்த புனலிற் கயந்தண் கழுநீர்
அவிழ்ந்த மலர்மீ துற்றென ஒருசார்
25 மாதர் மடநல்லார் மணலின் எழுதிய
பாவை சிதைத்த தென அழ ஒருசார்
அகவய விளநெல் அரிகாற் சூடு
தொகுபுனல் பரந்தெனத் துடிபட ஒருசார்
ஓதஞ் சுற்றிய தூரென ஒருசார் 1276



30 கார்தூம் பற்றது வானென ஒருசார்
பாடுவார் பாக்கங்கொண்டென
ஆடுவார் சேரியடைந்தெனக்
கழனிவந்து கால்கோத்தெனப்
பழனவாளை பாளையுண்டென
35 வித்திடுபுல மேடாயிற்றென
உணர்த்த வுணரா ஒள்ளிழை மாதரைப்
புணர்ந்திய இச்சத் துப் பெருக்கத்திற் றுனைந்து
சினைவளர் வாளையிற் கிளையொடு கெழீஇ
பழன வுழவர் பாய்புனற் பரத்தந்து
40 இருவரை புரையுமாறு இருகரை யேமத்து

வரைபுரை யுருவின் நுரைபல சுமந்து
பூவேய்ந்து பொழில்பரந்து
துணைந்தாடுவார் ஆய்கோதையர்
அலர்தண்டா ரவர்காதில்
45 தளிர்செரீஇக் கண்ணிபறித்துக்
கைவளை யாழி தொய்யகம் புனைதுகில்
மேகலை காஞ்சி வாகு வலயம்
எல்லாங் கவரும் இயல்பிற்றாய்த் தென்னவன்
ஒன்னா ருடைபுலம் புக்கற்றால் மாறட்ட 50
தானையான் வையை வனப்பு ;
புரிந்த தகையினன் யாருடு வாருள்
துரந்து புனல்தூவத் தூமலர்க் கண்கள்
அமைந்தன ஆங்கண் அவரு ளொருத்தி
கைபுதைஇ யவளை
55 ஏக்கழுத்து நாணற் கரும்பின் அணைமென்றோள்
போக்கிச் சிறைப்பிடித்தா ளோர்பொன்னங்
கொம்பு
பரிந்தவளைக் கைப்பிணை நீக்குவான் பாய்வாள்
இரும்பீர் வடியொத்து மைவிளங்குங்
கண்ணொளியாற்
செம்மைப் புதுப்புனல் சென்றிரு ளாயிற்றே 60
வையைப் பெருக்கு வடிவு ;
மையோடக்கோவனார்

விரும்பிய ஈரணி மெய்யீரந் தீரச்
சுரும்பார்க்குஞ் சூர்நறு வந்திறள் கண்ணெய்தல்
பேர்மகிழ் செய்யும் பெருநறுப் பேணியவே
கூர்நறு ஆர்ந்தவள் கண் ;
65 கண்ணியல் கண்டேத்திக் காரிகைநீர்
நோக்கினேப்
பாறு தரித்துப் பலபாட அப்பாட்டுப்
பேறு தொருத்தி பேதுற ஆயிடை
என்னை வருவ தெனக்கென் றினையா
நன்னெமர் மார்பன் நடுக்குற நண்ணிச்
70 சிகைகிடந்த ஊடலிற் செங்கண் சேப்பூர
வகைதொடர்ந்த ஆடலுள் நல்லவர் தம்முள்
பகைதொடர்ந்து கோதை பரிபூஉ நனிவெகுண்டு
75

யாறுடு மேனி யணிகண்ட தன்னன்பன்
சேறுடு மேனி திருநிலத் துய்ப்பச் சிரமிதித்துத்
தீர்விலு தாகச் செருவுற்றாள் செம்புனல்
ஊருடன் ஆடுங் கடை ;
புரிநரம் பின்கொளைப் புகல்பாலை யேழும்
எழுப்புணர் யாழும் இசையுங் கூடக்

குழலளந்து நிற்ப முழவெழூஉத் தார்ப்ப
80 மன்மகளிர் சென்னியர் ஆடல் தொடங்கப்
பொருதிழி வார்புனற் பொற்பஃது
உருமிடி சேர்ந்த முழக்கம் புரையுந்
திருமருத முன்றுறை சேர்புனற்கண்

துய்ப்பார்
தாமந் தலைபுனை பேஎநீர் வையை
85 நிற்பயம் பாடி விடிவுற் றேமாக்க
நிற்படிந்து நீங்காமை யின்றுபுணர்ந் தெனவே.

தலைமகன் தலைமகளோடு புனலாடினானெனக்கேட்டு
இன்புற்ற செவிலித்தாய் தோழியை நீங்களாடிய
புனலணியின்பம் கூறுகென்றாட்கு அப்புனலணியின்பமும்
பல்வேறு வகைப்பட்ட இன்பமும் தலைமகன்
காதன்மையுங்கூறி என்றும் இந்த நீரணியின்பம் பெறுக
பாமென்றது.

பித்தாமத்தர் இசை. பண்ணுப் பாலையாழ்.

அ/ந_க. மோசி கண்ணத்தனார்

**2193.** நற்றிணை - **124.** நெய்தல்

ஒன்றில் காலை அன்றில் போலப்
புலம்புகொண் டுறையும் புன்கண் வாழ்க்கை
யானும்ஆற் றேனது தானும் வந்தன்று
நீங்கல் வாழியர் ஐய ஈங்கை
5 முகைவீ யதிரல் மோட்டுமணை லெக்கர்
நவ்வி நோன்குளம் பழுந்தென வெள்ளி
உருக்குறு கொள்கலங் கடுப்ப விருப்புறத்
தெண்ணீர்க் குமிழி யிழிதரும்
தண்ணீர்த் தைஇ நின்ற பொழுதே.

பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைவற்குரைத்தது.

## சகூஉ. மோசி கீரனார்

## 2194. அகநானூறு - 392. குறிஞ்சி

தாழ்பெருந் தடக்கை தலைஇய கானத்து
வீழ்பிடி கெடுத்த வெண்கோட்டு யானை
உண்குளகு மறுத்த உயக்கத் தன்ன
பண்புடை யாக்கைச் சிதைவுநன்கு அறீஇப்
5 பின்னிலை முனியா னாகி நன்றுந்
தாதுசெய் பாவை யன்ன தையல்
மாதர் மெல்லியல் மடநல் லோள்வயின்

தீதின் றாக நீபுணை புகுகென
என்னுந் தண்டு மாயின் மற்றவன்
10 அழிதகப் பெயர்தல் நனியின் னாதே
ஒல்லினி வாழி தோழி கல்லெனக்
கணமழை பொழிந்த கான்மடி யிரவில்
இனமே யானை யினனிரிந் தோடக்
கல்லுயர் கழுதிற் சேணோன் எறிந்த
15 வல்வாய்க் கவணின் கடுவெடி யொல்லென



மறப்புலி உரற வாரணம் கதற
நனவுறு கட்சியின் நன்மயில் ஆல
மலையுடன் வெரூஉம் மாக்கல் வெற்பன்
பிரியுந ளாகலோ அரிதே அதாஅன்று
20 உரிதல் பண்பிற் பிரியுந ளாயின்
வினைதவப் பெயர்ந்த வென்வேல் வேந்தன்
முனைகொல் தானையொடு முன்வந் திறுப்பத்
தன்வரம் பாகிய மன்னெயி லிருக்கை
ஆற்றா மையிற் பிடித்த வேல்விலித்
25 தோற்றம் பிழையாத் தொல்புகழ் பெற்ற

விழைதக ஓங்கிய கழைதுஞ்சு மருங்கிற்
கானமர் நன்னன் போல
யானா குவல்கின் நலந்தரு வேனே.

பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி

தலைமகட்குக் குறைகயப்பக் கூறியது.

## 2195. குறுந்தொகை - 59. பாலை

பதலைப் பாணிப் பரிசிலர் கோமான்
அதலைக் குன்றத்து அகல்வாய்க் குண்டுசுனைக்
குவளையொடு பொதிந்த குளவிநாறு நறுநுதல்
த[வ்]வென மறப்பரோ மற்றே முயலவுஞ்

5 சுரம்பல விலங்கிய அரும்பொருள்
நிரம்பா வாகலின் நீடலோ இன்றே.

பிரிவிடையழிந்த கிழத்தியைத் தோழி
வற்புறுத்தியது.

## 2196. குறுந்தொகை - 84. பாலை

பெயர்த்தனென் முயங்கயான் வியர்த்தெனென்
என்றனள்
இனி யறிந்தேன் அது துனியா குதலே
கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்
வேங்கையுங் காந்தளுநா றும
5 ஆம்பல் மலரினுந் தான்தண் ணியளே.
மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.



## 2197. நற்றிணை - 342. நெய்தல்

மடல்வென மிதித்து மடலூர்ந் தாங்கு

மதிலென மதித்து வெண்டே ரேறி
என்வாய் நின்மொழி மாட்டேன் நின்வயிற்
சேரி சேரா வருவோர்க்கு என்றும்
5 அருளல் வேண்டும் அன்புடை யோயெனக்
கண்ணினி தாகக் கோட்டியுந் தேரலள்
யானே எல்வளை யாத்த கானல்
வண்டுண் நறுவீ நுண்ணிதின் வரித்த
சென்னிச் சேவடி சேர்த்தின்
10 என்னெனப் படுமோ என்றலு முண்டே.

குறை நேர்ந்த தோழி தலைமகளை முகம்புக் க தன்சொற் கேளாதுவிடலின், இறப்ப ஆற்றாளாயின ளெனவுணர்ந்து ஆற்றா ளாய்த் தன்னுள்ளே சொல்லியது; தலைமகனுக்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளை முகம்புக்கலளாய் ஆற்றாது தன்னுள்ளே சொல்லியதூஉமாம்.

## 2198. புறநானூறு - 50.

மாசற விசித்த வார்புறு வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை
ஒலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்
பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக்
5 குருதி வேட்கை உருகெழு முரசம்
மண்ணி வாரா வளவை எண்ணெய்

நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியா தேறிய என்னைத் தெறுவர
இருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை
10 அதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறிதல்
அதனொடும் அமையா தணுக வந்துநின்
மதனுடை முழவுத்தோள் ஓச்சித் தண்ணென
வீசி யோயே வியலிடங் கமழ
இவண்இசை யுடையோர்க் கல்லது அவணது

மோசி கீரனூர் 1281

15 உயர்நிலை யுலகத் துறையுள் இன்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குருசில்நீ ஈங்கிது செயலே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

சேரமான் தகடூரெறிந்தபெருஞ்சேரலிரும்பொறை முரசுகட்டி லறியாதேறிய மோசிகீரனைத் தவறுசெய்யாது அவன் துயிலெழுந் துணையும் கவரிகொண்டு வீசியானைப் பாடியது.

2199. புறநானூறு - 154.

திரைபொரு முந்நீர்க் கரைநணிச் செலினும்
அறியுநர்க் காணின் வேட்கை நீக்குந்
தின்னீர் வினவுவர் மாந்தர் அதுபோல்

அரசர் உழைய ராகவும் புரைதபு
5 வள்ளியோர்ப் படர்குவர் புலவர் அதனால்
யானும், பெற்ற தூதியம் பேறியா தென்னேன்
உற்றனெ னாதலின் உள்ளிவந் தனனே
ஈயென இரத்தலோ அரிதே நீயது
நல்கினும் நல்கா யாயினும் வெல்போர்
10 எறிபடைக் கோடா ஆண்மை யறுவைத்
தூவிரி கடுப்பத் துவன்றி மீமிசைத்

தண்பல இழிதரும் அருவிநின்
கொண்பெருங் கானம் பாடலெனக் கெளிதே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.
கொண்கானங் கிழானைப் பாடியது.

## 2200. புறநானூறு - 155.

வணர்கோட்டுச் சீறியாழ் வாடுபுடைத் தழீஇ
உணர்வோர் யாரென் இடும்பை தீர்க்கெனக்
கிளக்கும் பாண கேளினி நயத்திற்
பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ
5 ஏர்தரு சுடரின் எதிர்கொண் டாஅங்கு
இலம்படு புலவர் மண்டை விளங்குபுகழ்க்

கொண்பெருங் கானத்துக் கிழவன்
தண்டா ரகலம் நோக்கின மலர்ந்தே.

திணை - பாடாண்டிணை ; துறை - பாணாற்றுப்படை.
கொண்கானங் கிழானைப் பாடியது.

## 2201. புறநானூறு - 156.

ஒன்றுநன் குடையபிறர் குன்றம் என்றும்
இரண்டுநன் குடைத்தே கொண்பெருங் கானம்
நச்சிச் சென்ற இரவலர்ச் சுட்டித்
தொடுத்துணக் கிடப்பினுங் கிடக்கும் அஃதான்று
5 நிறையருந் தானை வேந்தரைத்
திறைகொண்டு பெயர்க்குஞ் செம்மலு
முடைத்தே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
கொண்கானங் கிழானைப் பாடியது.

## 2202. புறநானூறு - 186.

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே மன்னன்
உயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால், யானுயிர் என்ப தறிகை
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே.

திணை - பொதுவியல் ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

சஉஉ. மோசிகொற்றன்

## 2203. குறுந்தொகை - 377. குறிஞ்சி

மலரோர் உண்கண் மாண்நலந் தொலைய
வளையோர் மென்றோள் ஞெகிழ்ந்ததன் றலையு
மாற்றா கின்றே தோழியாற் றலையே
அறிதற் கமையா நாடனொடு
5 செய்து கொண்டதோர் சிறுநன் னட்பே.

வரைவிடை ஆற்றாளெனக்கவன்ற தோழிக்குக் கிழத்தி அழிந்து கூறியது.

## சுஙுசு. மோசிக்கரையனார்

### 2204. அகநானூறு - 260. நெய்தல்

மண்டிலம் மழுக மலைநிறங் கிளர
வண்டினம் மலர்பாய்ந் தூத மீமிசை
கண்டற் கானற் குருகினம் ஒலிப்பத்
திரைபா டவியத் திமில்தொழில் மறப்பக்
5 கரையா டலவன் அளைவயிற் செறியச்
செக்கர் தோன்றத் துணைபுணர் அன்றில்
எக்கர்ப் பெண்ணை அகமடல் சேரக்
கழிமலர் கமழ்முகங் கரப்பப் பொழில்மனைப்
புன்னை நறுவீ பொன்னிறங் கொளாஅ
10 எல்லை பைப்பயக் கழிப்பி எல்லுற
யாங்காகு வல்கொல் யானே நீங்காது
முதுமரத் துறையும் உரவுவாய் முதுபுள்
கதுமெனக் குழறுங் கழுதுவழங் கரைநாள்
நெஞ்சுநெகிழ் பருவரல் செய்த

15 அன்பி லாளன் அறிவுநயந் தேனே.

இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழியாற் சொல்லெடுக்கப்பட்டுத் தலைமகள் சொல்லியது.

## சஅரு. மோசிசாத்தனார்

### 2205. புறநானூறு - 272.

மணிதுணர்ந் தன்ன மாக்குரல் நொச்சி
போதுவிரி பன்மர னுள்ளுஞ் சிறந்த
காதல் நன்மரம் நீநிழற் றிசினே
கடியுடை வியனகர்க் காண்வரப் பொலிந்த
5 தொடியுடை மகளிர் அல்குலுங் கிடத்தி
காப்புடைப் புரிசை புக்குமா றழித்தலின்
ஊர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை
பீடுகெழு சென்னிக் கிழமையும் நினதே.

திணை - நொச்சி ; துறை - செருவிடை வீழ்தல்.

## சஅசா. மோதாசனார்

### 2206. குறுந்தொகை - 229. பாலை

இவனிவள் ஐம்பால் பற்றவும் இவளிவன்
புன்றலை யோரி வாங்குநள் பரியவும்
காதற் செவிலியர் தவிர்ப்பவுந் தவிராது

ஏதில் சிறுசெரு வுறுப மன்னோ
5 நல்லைமன் றம்ம பாலே மெல்லியற்
றுணைமலர்ப் பிணையல் அன்னவிவர்,
மணமகி ழியற்கை காட்டி யோயே.
இடைச்சுரத்துக் கண்டார் தம்முள்ளே சொல்லியது.

## சஙஎ. வடநெடுந்தத்தனார்

### 2207. புறநானூறு - 179.

ஞால மீமிசை வள்ளியோர் மாய்ந்தென
ஏலாது கவிழ்ந்தஎன் இரவல் மண்டை
மலர்ப்போர் யாரென வினவலின் மலைந்தோர்
விசிபிணி முரசமொடு மண்பல தந்த
5 திருவீழ் நுண்பூண் பாண்டியன் மறவன்
படை வேண்டுவழி வாளுதவியும்
வினை வேண்டுவழி அறிவுதவியும்
வேண்டுப வேண்டுப வேந்தன் தேஎத்து
அசைநுகம் படாஅ ஆண்டகை யுள்ளத்துத்
10 தோலா நல்லிசை நாலை கிழவன்
பருந்துபசி தீர்க்கும் நற்போர்த்
திருந்துவேல் நாகற் கூறினர் பலரே.
திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை.
நாலைகிழவன் நாகனைப் பாடியது.

## சஙஅ. வடமவண்ணக்கன்

## 2208. குறுந்தொகை - 85. மருதம்

யாரினும் இனியன் பேரன் பினனே
உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்
சூல்முதிர் பேடைக் கீனில் இழைஇயர்
தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்
5 நாறுவெண் பூக் கொழுதும்
யாண ரூரன் பாணன் வாயே.

வாயில்வேண்டிச் சென்ற பாணற்குத் தோழி சொல்லி வாயின் மறுத்தது.

## 2209. புறநானூறு - 172.

ஏற்றுக உலையே ஆக்குக சோறே
கள்ளுங் குறைபட லோம்புக ஒள்ளிழைப்
பாடுவல் விறலியர் கோதையும் புனைக
அன்னவை பிறவுஞ் செய்க என்னதூஉம்
5 பரியல் வேண்டா வருபதம் நாடி
ஐவனங் காவலர் பெய்தீ நந்தின்
ஒளிதிகழ் திருந்துமணி நளியிருள் அகற்றும்
வன்புல நாடன் வயமான் பிட்டன்

ஆரமர் கடக்கும் வேலும் அவன்இறை
10 மாவள் ஈகைக் கோதையும்
மாறுகொள் மன்னரும் வாழியர் நெடிதே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
பிட்டங்கொற்றனைப் பாடியது.

## ௨௩௯. வடமோதங்கிழார்

## 2210. அகநானூறு - 317. பாலை

மாக விசும்பின் மழைதொழில் உலந்தெனப்
பாஅ யன்ன பகலிருள் பரப்பிப்



புகைநிற வுருவின் அற்சிரம் நீங்கக்
குவிமுகை முருக்கின் கூர்நுனை வையெயிற்று
5 நகைமுக மகளிர் ஊட்டுகிர் கடுக்கும்
முதிராப் பல்லிதழ் உதிரப் பாய்ந்துடன்
மலருண் வேட்கையின் சிதர்சிதர்ந் துகுப்பப்
பொன்செய் கன்னம் பொலிய வெள்ளி

நுண்கோல் அறைகுறைந் துதிர்வன போல
10 அரவ வண்டினம் ஊதுதொறுங் குரவத்து
ஓங்குசினை நறுவீ கோங்கல ருறைப்பத்
துவைத்தெழு தும்பித் தவிரிசை விளரி
புதைத்துவிடு நரம்பின் இம்மென இமிரும்
ஆனே மூற்ற காமர் வேனில்
15 வெயிலவிர் புரையும் வீததை மாஅத்துக்
குயிலிடு பூசல் எம்மொடு கேட்ப
வருவேம் என்ற பருவம் ஆண்டை
இல்லை கொல்லென மெல்ல நோக்கி

நினைந்தன மிருந்தன மாக நயந்தாங்கு
20 உள்ளிய மருங்கின் உள்ளம் போல
வந்துநின் றனரே காதலர் நந்துறந்து
என்னுழி யதுகொல் தானே பன்னாள்
அன்னையும் அறிவுற வணங்கி
நன்னுதற் பாஅய பசலை நோயே.

தலைமகன் வரவுணர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

## 2211. புறநானூறு - 260.

வளரத் தொடினும் வெளவுபு திரிந்து
விளரி யுறுதரும் தீந்தொடை நினையாத்
தளரும் நெஞ்சந் தலைஇ மனையோள்
உளரும் கூந்தல் நோக்கிக் களர
5 கள்ளி நீழற் கடவுள் வாழ்த்திப்

பசிபடு மருங்குலை கசிபு கைதொழாஅக்
காணலென் கொல்லென வினவினை வரூஉம்
பாண கேண்மதி யாணரது நிலையே

## வண்ணக்கன் சோருமருங்குமரனுர்

1287

10

புரவுத்தொடுத் துண்குவை யாயினும் இரவெழுந்து
எவ்வங் கொள்குவை யாயினும் இரண்டும்
கையுள போலும் கடிதண் டைவயவே
முன்னூர்ப் பூசலிற் றோன்றித் தன்னூர்
நெடுநிரை தழீஇய மீளி யாளர்
விடுகணை நீத்தந் துடிபுணை யாக
15 வென்றி தந்து கொன்று கோள்விடுத்து
வையகம் புலம்ப வளைஇய பாம்பின்
வையெயிற் றுய்ந்த மதியின் மறவர்
கையகத் துய்ந்த கன்றுடைப் பல்லான்
நிரையொடு வந்த உரைய னாகி
20 உரிகளை யரவ மானத் தானே
அரிதுசெல் லுலகிற் சென்றனன் உடம்பே
கானச் சிற்றியாற்று அருங்கரைக் காலுற்றுக்
கம்பமொடு துளங்கிய இலக்கம் போல

அம்பொடு துளங்கி ஆண்டொழிந் தன்றே
25 உயரிசை வெறுப்பத் தோன்றி பெயரே

மடஞ்சால் மஞ்ஞை அணிமயிர் சூட்டி
இடம்பிறர் கொள்ளாச் சிறுவழிப்
படஞ்செய் பந்தர்க் கல்மிசை யதுவே.

திணை - கரந்தை ; துறை - கையறுநிலை,
பாண்பாட்டுமாம்.
... ...பாடியது.

## ௪௪௦. வண்ணக்கன் சோருமருங்குமரனார்

### 2212. நற்றிணை - 257. குறிஞ்சி

விளிவில் அரவமொடு தளிசிறந் துரைஇ
மழையெழுந் திறுத்த நளிர்தூங்கு சிலம்பிற்
கழையமல்பு நீடிய வானுயர் நெடுங்கோட்டு
இலங்குவெள் ளருவி வியன்மலைக் கவாஅன் 5
அரும்புவா யவிழ்ந்த கருங்கால் வேங்கைப்
பொன்மருள் நறுவீ கன்மிசைத் தாஅம்



நன்மலை நாட நயந்தனை யருளாய்
இயங்குநர் மடிந்த அயந்திகழ் சிறுநெறிக்
கடுமா வழங்குதல் அறிந்தும்
10 நடுநாள் வருதி நோகோ யானே.

தோழி தலைமகனது ஏதஞ்சொல்லி வரைவுகடாயது.

௬௬௪. வண்ணப்புறக் கந்தரத்தனார்

## 2213. அகநானூறு - 49. பாலை

கிளியும் பந்துங் கழங்கும் வெய்யோள்
அளியும் அன்புஞ் சாயலும் இயல்பும்
5

முன்னாட் போலாள் இறீஇயரென் உயிரெனக்
கொடுந்தொடைக் குழவியொடு வயின்மரத்து யாத்த
கடுங்கட் கறவையிற் சிறுபுறம் நோக்கிக்
குறுக வந்து குவவுநுதல் நீவி
மெல்லெனத் தழீஇயினே னாக என்மகள்
நன்னா ராகத் திடைமுலை வியர்ப்பப்
பல்கால் முயங்கினள் மன்னே அன்னோ
10 விறல்மிகு நெடுந்தகை பலபா ராட்டி
வறனிழல் அசைஇ வான்புலந்து வருந்திய
மடமான் அசாவினந் திரங்குமரல் சுவைக்குங்
காடுடன் கழிதல் அறியின் தந்தை
அல்குபத மிகுத்த கடியுடை வியனகர்ச்
15 செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழற் போலக்
கோதை ஆயமொ டோரை தழீஇத்
தோடமை யரிச்சிலம் பொலிப்பஅவள்
ஆடுவழி யாடுவழி அகலேன் மன்னே.

உடன்போயின தலைமகளை நினைந்து செவிலித்தாய்

மனையின் கண் வருந்தியது.

2214. நற்றிணை - 71. பாலை
மன்னாப் பொருட்பிணி முன்னி இன்னதை

வளையணி முன்கைநின் இகுளைக்

குணர்த்தெனப் வன்பரணர் 1289

பன்மாண் இரத்தி ராயிற் சென்மென
விடுந ளாதலு முரியள் விடினே
5 கண்ணும் நுதலும் நீவி முன்னின்று
பிரிதல் வல்லிரோ ஐய செல்வர்

வகையமர் நல்லில் அகவிறை யுறையும் 10
வண்ணப் புறவின் செங்காற் சேவல்

வீழ்துணைப் பயிருங் கையறு முரல்குரல்
நும்மிலள் புலம்பக் கேட்டொறும்
பொம்ம லோதி பெருவிதுப் புறவே.

தலைவனைத் தோழி செலவழுங்குவித்தது.

சுசஉ. வருமுலையாரித்தி ✓

2215. குறுந்தொகை - 176. குறிஞ்சி

ஒருநாள் வாரலன் இருநாள் வாரலன்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றியென்
நன்னர் நெஞ்சம் நெகிழ்ந்த பின்றை
வரைமுதிர் தேனிற் போகி யோனே
5 ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
வேறுபுல னன்னாட்டுப் பெய்த
ஏறுடை மழையிற் கலுழுமென் னெஞ்சே.

தோழி கிழத்தியைக் குறைநயப்பக் கூறியது.

சசஙு. வன்பரணர்

## 2216. நற்றிணை - 374. முல்லை

முரம்புதலை மணந்த நிரம்பா இயவின்
ஓங்கித் தோன்றும் உமண் பொலி சிறுகுடிக்
களரிப் புளியிற் காய்பசி பெயர்ப்ப
உச்சிக் கொண்ட ஓங்குகுடை வம்பலிர்
5 முற்றையும் உடையமோ மற்றே பிற்றை
வீழ்மா மணிய புனைநெடுங் கூந்தல்



நீர்வார் புள்ளி ஆகம் நனைப்ப
விருந்தயர் விருப்பினள் வருந்துந்
திருந்திழை யரிவைத் தேமொழி நிலையே.

வினைமுற்றிமீள்வான் இடைச்சுரத்துக் கண்டார்க்குச் சொல்லியது.

## 2217. புறநானூறு - 148.

கறங்குமிசை யருவிய பிறங்குமலை நள்ளிநின்
அசைவில் நோன்றாள் நசைவளன் ஏத்தி
நாடொறும் நன்கலங் களிற்றொடு கொணர்ந்து
கூடுவிளங்கு வியனகர்ப் பரிசில்முற் றளிப்பப்
5 பீடில் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யா தாகின்றெஞ் சிறுசெந் நாவே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.
கண்டீரக்கோப் பெருநள்ளியைப் பாடியது.

## 2218. புறநானூறு - 149.

நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்
மாலை மருதம் பண்ணிக் காலைக்
கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி
வரவெமர் மறந்தனர் அதுநீ
5 புரவுக்கடன் பூண்ட வண்மை யானே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
கண்டீரக்கோப் பெருநள்ளியைப் பாடியது.

## 2219. புறநானூறு - 150.

கூதிர்ப் பருந்தின் இருஞ்சிற கன்ன
பாறிய சிதாரேன் பலவுமுதற் பொருந்தித்
தன்னும் உள்ளேன் பிறிதுபுலம் படர்ந்தஎன் 5

உயங்குபடர் வருத்தமும் உலேவும் நோக்கி
மான்கணந் தொலைச்சிய குருதியங் கழற்கால்



வான்கதிர்த் திருமணி விளங்குஞ் சென்னிச்
செல்வத் தோன்றலோர் வல்வில் வேட்டுவன்
தொழுதனென் எழுவேற் கைகவித் திரீஇ
இழுதி னன்ன வானிணக் கொழுங்குறை
10 கானதர் மயங்கிய இளையர் வல்லே
தாம்வந் தெய்தா வளவை ஒய்யெனத்
தான்ஞெலி தீயின் விரைவனன் சுட்டுநின்
இரும்பே ரொக்கலொடு தின்மெனத் தருதலின்
அமிழ்தின் மிசைந்து காய்பசி நீங்கி
15 நன்மரன் நளிய நறுந்தண் சாரற்
கன்மிசை யருவி தண்ணெனப் பருகி
விடுத்தல் தொடங்கினே னாக வல்லே
பெறுதற் கரிய வீறுசால் நன்கலம்
பிறிதொன் றில்லைக் காட்டுநாட் டேமென
20 மார்பிற் பூண்ட வயங்குகா ழாரம்
மடைசெறி முன்கைக் கடகமொ டீத்தனன்
எந்நா டோவென நாடுஞ் சொல்லான்
யாரீ ரோவெனப் பேருஞ் சொல்லான் 25
பிறர்பிறர் கூற வழிக்கேட் டிசினே

இரும்புபுனைந் தியற்றுப் பெரும்பெயர்த் தோட்டி
அம்மலை காக்கும் அணிநெடுங் குன்றிற்

பளிங்குவகுத் தன்ன தீநீர்
நளிமலை நாடன் நள்ளியவ னெனவே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
கண்டீரக்கோப் பெருநள்ளியைப் பாடியது.

## 2220. புறநானூறு - 152.

வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி பேழ்வா
யுழுவையைப் பெரும்பிறி துறீஇப் புழற்றலைப்
புகர்க்கலை யுருட்டி உரற்றலைக்கேழற் பன்றி வீழ
அயலது
5 ஆழற் புற்றத் துடும்பிற் செற்றும்

வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்
புகழ்சால் சிறப்பின் அம்புமிகத் திளைக்குங்
கொலைவன் யார்கொலோ கொலைவன் மற்றிவன்
விலைவன் போலான் வெறுக்கைநன் குடையன்
10 ஆரந் தாழ்ந்த அம்பகட்டு மார்பிற்
சார லருவிப் பயமலைக் கிழவன்
ஓரி கொல்லோ அல்லன் கொல்லோ
பாடுவல் விறலியோர் வண்ணம்நீரும்
மண்முழா அமைமின் பண்யாழ் நிறுமின் 15
கண்விடு தூம்பிற் களிற்றுயிர் தொடுமின்
எல்லரி தொடுமின் ஆகுளி தொடுமின்
பதலை யொருகண் பையென இயக்குமின்
மதலை மாக்கோல் கைவலந் தமினென்று 20

இறைவ னாகலிற் சொல்லுபு குறுகி
மூவேழ் துறையும் முறையுளிக் கழிப்பிக்

கோவெனப் பெயரிய காலை ஆங்கது
தன்பெய ராகலின் நாணி மற்றியாம்
25

நாட்டிடன் நாட்டிடன் வருதும் ஈங்கோர்
வேட்டுவ ரில்லை நின்னொப் போரென
வேட்டது மொழியவும் விடாஅன் வேட்டத்தில்

தா னுயிர் செகுத்த மானிணப் புழுக்கோடு
ஆனுருக் கன்ன வேரியை நல்கித்
தன்மலைப் பிறந்த தாவில் நன்பொன்
பன்மணிக் குவையொடும் விரைஇக்
கொண்மெனச் 30 சுரத்திடை நல்கி யோனே
விடர்ச்சிமை
ஓங்கிருங் கொல்லிப் பொருநன்
ஓம்பா ஈகை விறல்வெய் யோனே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்விடை.
வல்விலோரியைப் பாடியது.

## 2221. புறநானூறு - 153.

மழையணி குன்றத்துக் கிழவன் நாளும்
இழையணி யானை யிரப்போர்க் கீயுஞ்



சுடர்விடு பசும்பூட் சூர்ப்பமை முன்கை
அடுபோ ரானா ஆத னோரி
5 மாரி வண்கொடை காணிய நன்றுஞ்
சென்றது மன்எங் கண்ணுளங் கடும்பே
பனிநீர்ப் பூவா மணிமிடை குவளை
வானார்த் தொடுத்த கண்ணியுங் கலனும்
யானை யினத்தொடு பெற்றனர் நீங்கிப்
10 பசியா ராகன் மாறுகொல் விசிபிணிக்
கூடுகொள் இன்னியங் கறங்க

ஆடலும் ஒல்லார்தம் பாடலு மறந்தே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி

வல்விலோரியைப் பாடியது.

## 2222. புறநானூறு - 255.

ஐயோ எனின்யான் புலியஞ் சுவலே
அணைத்தனன் கொளினே அகன்மார்
பெடுக்கவல்லேன்
என்போற் பெருவிதிர்ப் புறுக நின்னை
இன்னு துற்ற அறனில் கூற்றே
5 நிரைவளை முன்கை பற்றி
வரைநிழற் சேர்கம் நடத்திசிற் சிறிதே.

திணை - பொதுவியல் ; துறை - முதுபாலை.
... ... ...பாடியது.

## ௨௨௨. வாடாப்பிரமந்தன்

## 2223. குறுந்தொகை - 331. பாலை

நெடுங்கழை திரங்கிய நீரில் ஆரிடை
ஆறுசெல் வம்பலர் தொலைய மாறுநின்று
கொடுஞ்சிலை மறவர் கடறுகூட்
டுண்ணும்
கடுங்கண் யானைக் கானம் நீந்தி

5 இறப்பர்கொல் வாழி தோழி நறுவடிப்

பைங்கால் மாஅத் தந்தளி ரன்ன



நன்மா மேனி பசப்ப
நம்மினுஞ் சிறந்த அரும்பொருள் தரற்கே.

செலவுக்குறிப்பு அறிந்து வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

## சசரு. வாயிலான்தேவன்

**2224.** குறுந்தொகை - **103.** நெய்தல்

கடும்புனல் தொடுத்த நடுங்கஞர் அள்ளற்
கவிரித ழன்ன தூவிச் செவ்வாய்
இரைதேர் நாரைக்கு எவ்வ மாகத்
தூஉந் துவலைத் துயர்கூர் வாடையும்
5 வாரார் போல்வர்நங் காதலர்
வாழேன் போல்வல் தோழி யானே.

பருவங்கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## 2225. குறுந்தொகை - 108. முல்லை

மழைவிளை யாடுங் குன்றுசேர் சிறுகுடிக்
கறவை கன்றுவயிற் படரப் புறவிற்
பாசிலை முல்லை ஆசில் வான்பூச்
செவ்வான் செவ்வி கொண்டன்று
5 உய்யேன் போல்வல் தோழி யானே.

பருவங்கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குக் கூறியது.

சுசுரு. வாயிலிளங்கண்ணன்

## 2226. குறுந்தொகை - 346. குறிஞ்சி

நாகுபிடி நயந்த முளைக்கோட் டிளங்களிறு
குன்றம் நண்ணிக் குறவர் ஆர்ப்ப
மன்றம் போழும் நாடன் தோழி
சுனைப்பூங் குவளைத் தொடலை தந்தும்
5 தினைப்புன மருங்கிற் படுகிளி ஓப்பியும்

விரிச்சியூர் நன்னாகனார் 

காலை வந்து மாலைப் பொழுதின்
நல்லகம் நயந்துதான் உயங்கிச்
சொல்லவு மாகாது அஃகி யோனே.

தோழி கிழத்தியை இரவுக்குறி நயப்பக் கூறியது.

சுசுஎ. வான்மீகியார்

## 2227. புறநானூறு - 358.

பருதி சூழ்ந்தஇப் பயங்கெழு மாநிலம்
ஒருபகல் எழுவ ரெய்தி யற்றே
வையமுந் தவமுந் தூக்கின் தவத்துக்கு
ஐயவி யனைத்தும் ஆற்ரு தாகலிற்
5 கைவிட் டனரே காதலர் அதனால்
விட்டோரை விடாஅள் திருவே
விடாஅ தோரிவள் விடப்பட் டோரே.

திணை - காஞ்சி ; துறை - மனையறம், துறவறம்.

சஉஅ. விட்டகுதிரையார்

2228. குறுந்தொகை - 74. குறிஞ்சி

விட்ட குதிரை விசைப்பி னன்ன
விசும்புதோய் பசுங்கழைக் குன்ற நாடன்
யாந்தற் படர்ந்தமை யறியான் தானும்
வேனில் ஆனேறு போலச்
5 சாயினன் என்பநம் மாணலம் நயந்தே.

தோழி தலைமகன் குறைமறு தவாற்றாற் கூறியது.

சஉகூ. விரிச்சியூர் நன்னாகனார்

2229. புறநானூறு - 292.

வேந்தற் கேந்திய தீந்தண் நறவம்
யாந்தனக் குறுமுறை வளாவ விலக்கி

வாய்வாள் பற்றி நின்றனன் என்று
சினவ லோம்புமின் சிறுபுல் லாளர்
5 ஈண்டே போல வேண்டுவ னாயின்
என்முறை வருக வென்றான் கம்மென
எழுதரு பெரும்படை விலக்கி
யாண்டு நிற்கும் ஆண்டகை யன்னே.

திணை - வஞ்சி ; துறை - பெருஞ்சோற்றுநிலை.

## சஉ௰. விரியூர் நக்கனார்

## 2230. புறநானூறு - 332.

பிறர்வேல் போலா தாகி இவ்வூர்
மறவன் வேலோ பெருந்தகை யுடைத்தே
இரும்புற நீறும் ஆடிக் கலந்திடைக்
குரம்பைக் கூரைக் கிடக்கினுங் கிடக்கும்
5 மங்கல மகளிரொடு மாலை சூட்டி
இன்குர லிரும்பை யாழொடு ததும்பத்
தெண்ணீர்ப் படுவினுந் தெருவினுந் திரிந்து
மண்முழு தழுங்கச் செல்லினுஞ் செல்லுமாங்கு
இருங்கடற் றானை வேந்தர்
10 பெருங்களிற்று முகத்தினுஞ் செலவா னாதே.

திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.

## சஉக. வில்லக விரலினார்

## 2231. குறுந்தொகை - 370. முல்லை

பொய்கை யாம்பல் அணிநிறக் கொழுமுகை

வண்டுவாய் திறக்குந் தண்டுறை யூரனொடு
இருப்பின் இருமருங் கினமே கிடப்பின்
வில்லக விரலிற் பொருந்தி அவன்
5 நல்லகஞ் சேரின் ஒருமருங் கினமே.

கிழத்தி தன்னைப் புறனுரைத்தாள் என்பது கேட்ட பரத்தை அவட்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது.

சுருஉ. விழிக்கட் பேதைப்
பெருங்கண்ணனார்

## 2232. நற்றிணை - 242. முல்லை

இலையில பிடவம் ஈர்மலர் அரும்பப்
புதலிவர் தளவம் பூங்கொடி அவிழப்
பொன்னெனக் கொன்றை மலர மணியெனப்
பன்மலர்க் காயாங் குறுஞ்சினை கஞலக்
5 கார்தொடங் கின்றே காலை வல்விரைந்து
செல்க பாகநின் தேரே உவக்காண்
கழிப்பெயர் களரிற் போகிய மடமான்
விழிக்கட் பேதையொடு இனனிரிந் தோடக்
காமர் நெஞ்சமொடு அகவாத்
10 தேடூஉ நின்ற இரலை யேறே.

வினைமுற்றி மறுத்தாா நின்ற தலைமகன் கார்கண்டு பாகற்குச் சொல்லியது.

## ௬௫௩. விற்றூற்று மூதெயினனார்

## 2233. அகநானூறு - 37. பாலை

மறந்தவண் அமையா ராயினுங் கறங்கிசைக்
கங்கு லோதைக் கலிமகிழ் உழவர்
பொங்கழி முகந்த தாவில் நுண்டுகள்
மங்குல் வானின் மாதிர மறைப்ப
5 வைகுபுலர் விடியல் வைபெயர்த் தாட்டித்
தொழிற்செருக் கனந்தர் வீட எழிற்றகை
வளியொடு சினைஇய வண்டளிர் மாஅத்துக்
கிளிபோல் காய கிளைத்துணர் வடித்துப்
புளிப்பதன் அமைத்த புதுக்குட மலிர்நிறை
10 வெயில்வெரி நிறுத்த பயிலிதழ்ப் பசுங்குடைக்
கயமண்டு பகட்டிற் பருகிக் காண்வரக்
கொள்ளொடு பயறு பால்விரைஇ வெள்ளிக்
கோல்வரைந் தன்ன வாலவிழ் மிதவை





வாங்குகை தடுத்த பின்றை ஓங்கிய
15 பருதியங் குப்பை சுற்றிப் பகல்செல
மருத மரநிழல் எருதொடு வதியும்
காமர் வேனில் மன்இனி
மாணலம் நுகருந் துணையுடை யோர்க்கே.

தலைமகள் தோழிக்கு வன்புறையெதிரழிந்து பிரிவுணர்த்திய தோழி சொல்லியதூஉமாம்.

சொல்லியது ;

2234. அகநானூறு - 136. மருதம்

மைப்பறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப்
புள்ளுப்புணர்ந் தினிய வாகத் தெள்ளொளி அங்க
ணிருவிசும்பு விளங்கத் திங்கட் 5 சகட மண்டிய
துகள்தீர் கூட்டத்துக் கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ
வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்

பூக்கணும் இமையார் நோக்குபு மறைய
10 மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
பழங்கன்று கறித்த பயம்பமல் அறுகைத் தழங்குகுரல்
வானின் தலைப்பெயற் கீன்ற மண்ணுமணி யன்ன
மாயிதழ்ப் பாவைத்
தண்ணறு முகையொடு வெண்ணூல் சூட்டித்
15 தூவுடைப் பொலிந்து மேவரத் துவன்றி
மழைபட் டன்ன மணல்மலி பந்தர் இழையணி
சிறப்பிற் பெயர்வியர்ப் பாற்றித் தமர்நமக் கீத்த

தலைநாள் இரவின்
உவர்நீங்கு கற்பினெம் உயிருடம் படுவி 20 முருங்காக்
கலிங்கம் முழுவதும் வளைஇப் பெரும்புழுக் குற்றநின்
பிறைநுதற் பொறிவியர் உறுவளி யாற்றச் சிறுவரை
திறவென ஆர்வ நெஞ்சமொடு போர்வை வவ்வலின்
விற்றூற்று மூதெயினனார் 1299

உறைகழி வாளின் உருவுபெயர்ந் திமைப்ப
25 மறைதிறன் அறியா ளாகி ஒய்யென
நாணினள் இறைஞ்சி யோளே பேணிப்
பருஉப்பகை யாம்பற் குரூஉத்தொடை நீவிச்
சுரும்பிமிர் ஆய்மலர் வேய்ந்த
இரும்பல் கூந்தல் இருள்மறை யொளித்தே.

உணர்ப்புவயின் வாராவூடற்கண் தலைமகன் தன்
நெஞ்சிற்குச் சொல்லியது.

2235. அகநானூறு - 288. குறிஞ்சி
செம்மதி சிறக்கநின் உள்ளம் நின்மலை
ஆரம் நீவிய அம்பகட்டு மார்பினை
சாரல் வேங்கைப் படுசினைப் புதுப்பூ
முருகுமுரண் கொள்ளும் உருவக் கண்ணியை
5 எரிதின் கொல்லை இறைஞ்சிய ஏனல்
எவ்வங் கூறிய வைகலும் வருவோய்
கனிமுதிர் அடுக்கத்தெந் தனிமை காண்டலின்

எண்மை செய்தனை யாகுவை நண்ணிக்
கொடியோர் குறுகும் நெடியிருங் குன்றத்து
10 இட்டா திரங்கும் விட்டொளிர் அருவி
அருவரை யிழிதரும் வெருவரு படாஅர்க்
கயந்தலை மந்தி உயங்குபசி களைஇயர்
பார்ப்பின் தந்தை பழச்சுளை தொடினும்
நணிநோய் ஏய்க்கும் பனிகூர் அடுக்கத்து
15 மகளிர் மாங்காட் டற்றே துகளறக்
கொந்தோ டுதிர்த்த கதுப்பின்
அந்தீங் கிளவித் தந்தை காப்பே.

பகற்குறிக்கண்தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

## 2236. குறுந்தொகை - 372. குறிஞ்சி

பனைத்தலைக்,
கருக்குடை நெடுமடல் குருத்தொடு மாயக்



கடுவளி தொகுத்த நெடுவெண் குப்பைக்
கணங்கொள் சிமைய உணங்குங் கானல்
5 ஆழிதலை வீசிய அயிர்ச்சேற் றருவிக்
கூழைபெய் எக்கர்க் குழீஇய பதுக்கை
புலர்பதங் கொள்ளா வளவை
அலரெழுந் தன்றிவ் வழுங்க லூரே.

இரவுக்குறி வந்து ஒழுகாநின்ற தலைமகன் கேட்பத்
தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

சுநுசு. விற்றூற்று வண்ணக்கன் தத்தனார்

## 2237. நற்றிணை - 298. பாலை

வம்ப மாக்கள் வருதிறம் நோக்கிச்
செங்கணை தொடுத்த செயிர்நோக் காடவர்
மடிவாய்த் தண்ணுமைத் தழங்குகுரல் கேட்ட
எருவைச் சேவல் கிளைவயிற் பெயரும்
5 அருஞ்சுரக் கவலை அஞ்சுவரு நனந்தலைப்
பெரும்பல் குன்றம் உள்ளியும் மற்றிவள்
கரும்புடைப் பணைத்தோள் நோக்கியும் ஒருதிறம்
பற்றாய் வாழியெந் நெஞ்சே நற்றேர்ப்
பொற்றேர்ச் செழியன் கூட லாங்கண்
10 ஒருமை செப்பிய அருமை வான்முகை
இரும்போது கமழுங் கூந்தல்
பெருமலை தழீஇயும் நோக் கியையுமோ

மற்றே.

தோழியாற் பொருள்வலிப்பித்துத் தலைமகளை யெய்தி
ஆற்றா தாய நெஞ்சினை நெருங்கிச் சொல்லித் தலைமகன்
செலவழுங்கியது.

சுநுரு. வினைத்தொழில் சோகீரனார்

## 2238. நற்றிணை - 319. நெய்தல்

ஓதமும் ஒலியோ வின்றே ஊதையும்
தாதுளர் கானற் றவ்வென் றன்றே

வீரை வெளியனார் 1301

மணல்மலி மூதூர் அகனெடுந் தெருவிற்
கூகைச் சேவல் குராலோ டேறி
5 ஆரிருஞ் சதுக்கத் தஞ்சுவரக் குழறும்
அணங்குகால் கிளரும் மயங்கிருள் நடுநாள்
பாவை யன்ன பலராய் வனப்பின்
தடமென் பணைத்தோள் மடமிகு குறுமகள்
சுணங்கணி வனமுலை முயங்கல் உள்ளி
10 மீன்கண் துஞ்சும் பொழுதும்
யான்கண் துஞ்சேன் யாதுகொல் நிலையே.

காப்புமிகுதிக்கண் ஆற்றானாகிய தலைமகன் தலைமகளை நினைந்து தன்னுள்ளே சொல்லியது.

## சுநுசு. வீரை வெளியனார்

## 2239. புறநானூறு - 320.

முன்றில் முஞ்ஞையொடு முசுண்டை பம்பிப்
பந்தர் வேண்டாப் பலர்தூங்கு நீழற்
கைம்மான் வேட்டுவன் கனைதுயில் மடிந்தெனப்

பார்வை மடப்பிணை தழீஇப் பிறிதோர்
5 தீர்தொழிற் றனிக்கலை திளைத்துவிளை யாட
இன்புறு புணர்நிலை கண்ட மனையோள்
கணவன் எழுதலும் அஞ்சிக் கலையே
பிணவயின் தீர்தலும் அஞ்சி யாவதும்
இல்வழங் காமையிற் கல்லென ஒலித்து
10 மானதட் பெய்த உணங்குதினை வல்சி
கானக் கோழியோ டிதல்கவர்ந் துண்டென ஆர
நெருப்பின் ஆரல் நாறத்
தடிவார்ந் திட்ட முழுவள் ளூரம்
இரும்பே ரொக்கலொ டொருங்கினி தருந்தித் 15
தங்கினை சென்மோ பாண தங்காது
வேந்துதரு விழுக்கூழ் பரிசிலர்க் கென்றும்



அருகா தீயும் வண்மை
உரைசால் நெடுந்தகை யோம்பும் ஊரே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை.

ஈறுள. வீரைவெளியன் தித்தனார்

2240. அகநானூறு - 188. குறிஞ்சி

பெருங்கடல் முகந்த இருங்கிளைக் கொண்மூ
இருண்டுயர் விசும்பின் வலனேர்பு வளைஇப்
போர்ப்புறு முரசின் இரங்கி முறைபுரிந்து அறனெறி
பிழையாத் திறனறி மன்னர்
5 அருஞ்சமத் தெதிர்ந்த பெருஞ்செ யாடவர்
கழித்தெறி வாளின் அளிப்பன விளங்கும்
மின்னுடைக் கருவியை யாகி நாளுங்
கொன்னே செய்தியோ அரவம் பொன்னென
மலர்ந்த வேங்கை மலிதொடர் அடைச்சிப் 10
பொலிந்த ஆயமொடு காண்டக இயலித் தழலை
வாங்கியுந் தட்டை யோப்பியும் அழலேர் செயலை
யந்தழை அசைஇயும் குறமகள் காக்கும் ஏனற்
புறமுந் தருதியோ வாழிய மழையே. இரவிற்
சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

சருஅ. வெண்கண்ணனார்

2241. அகநானூறு - 130. நெய்தல்

அம்ம வாழி கேளிர் முன்னின்று
கண்டனி ராயிற் கழறலிர் மன்னோ
நுண்டாது பொதிந்த செங்காற் கொழுமுகை
முண்டகங் கெழீஇய மோட்டுமண லடைகரைப்
5 பேஎய்த் தலைய பிணரரைத் தாழை
எயிறுடை நெடுந்தோடு காப்பப் பலவுடன்

வயிறுடைப் போது வாலிதின் விரீஇப்
புலவுப்பொரு தழித்த பூநாறு பரப்பின்
இவர்திரை தந்த ஈர்ங்கதிர் முத்தம்
10 கவர்நடைப் புரவிக் கால்வடுத் தபுக்கும்
நற்றேர் வழுதி கொற்கை முன்றுறை

வண்டுவாய் திறந்த வாங்குகழி நெய்தற்
போதுபுறங் கொடுத்த உண்கண்
மாதர் வாண்முகம் மதைஇய நோக்கே.
சழறிய பாங்கற்குத் தலைமகன் கழற்றெதிர் மறுத்தது.

## 2242. அகநானூறு - 192. குறிஞ்சி

மதியிருப் பன்ன மாசறு சுடர்நுதல்
பொன்னேர் வண்ணங் கொண்டன் றன்றே
யாங்கா குவள்கொல் தானே விசும்பின்
எய்யா வரிவி லன்ன பைந்தார்ச்
5 செவ்வாய்ச் சிறுகிளி சிதைய வாங்கிப்
பொறைமெலிந் திட்ட பின்புறப் பெருங்குரல்
வளைசிறை வாரணங் கிளையொடு கவர
வனலும் இறங்குபொறை யுயிர்த்தன பானாள்
நீவந் தளிக்குவை யெனினே மால்வரை
10 மைபடு விடரகந் துழைஇ ஒய்யென

அருவி தந்த அரவுமிழ் திருமணி
பெருவரைச் சிறுகுடி மறுகுவிளக் குறுத்தலின்
இரவும் இழந்தனள் அளியள் உரவுப்பெயல்
உருமிறை கொண்ட உயர்சிமைப்
15 பெருமலை நாடநின் மலர்ந்த மார்பே.

தோழி தலைமகனைச் செறிப்பறிவுறீஇ இரவுக்குறி மறுத்தது.

௨௫௩. வெண்கொற்றன்

2243. குறுந்தொகை - 86. குறிஞ்சி

சிறைபனி யுடைந்த சேயரி மழைக்கண்
பொறையரு நோயொடு புலம்பலைக் கலங்கிப் 



பிறருங் கேட்குநர் உளர்கொல் உறைசிறந்து
ஊதை தூற்றுங் கூதிர் யாமத்து
5 ஆனுளம் புலம்புதொ றுளம்பும்
நாநவில் கொடுமணி நல்கூர் குரலே.

ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி சொல்லியது.

௨௬௦. வெண்ணிக்குயத்தியார்

2244. புறநானூறு - 66.

நளியிரு முந்நீர் நாவா யோட்டி

வளிதொழி லாண்ட உரவோன் மருக
களியியல் யானைக் கரிகால் வளவ
சென்றமர்க் கடந்தநின் ஆற்றல் தோன்ற
5 வென்றோய் நின்னினும் நல்ல னன்றே
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புக ழுலக மெய்திப்
புறப்புண் நாணி வடக்கிருந் தோனே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.
சோழன்கரிகாற்பெருவளத்தானைப் பாடியது.

## சஉகக. வெண்பூதன்

### 2245. குறுந்தொகை - 83. குறிஞ்சி

அரும்பெற லமிழ்தம் ஆர்பத மாகத்
பெரும்பெய ருலகம் பெறீஇயரோ அன்னை
தம்மிற் றமதுண் டன்ன சினைதொறுந்
தீம்பழந் தூங்கும் பலவின்
5 ஓங்குமலை நாடனை வருமென் றோளே.

தலைமகன் வரைந்தெய்துத லுணர்த்திய
வாழ்த்தியது.
செவிலியைத் தோழி

## சஉஉ. வெண்பூதியார்

### 2246. குறுந்தொகை - 97. நெய்தல்

யானே ஈண்டை யேனே என்னலனே
ஆனா நோயொடு கான லஃதே
துறைவன் தம்மூ ரானே
மறையல ராகி மன்றத் தஃதே.

வரைவு நீட்டித்தவழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## 2247. குறுந்தொகை - 174. பாலை

பெயல்மழை துறந்த புலம்புறு கடத்துக்
கவைமுடக் கள்ளிக் காய்விடு கடுநொடி
துதைமென் தூவித் துணைப்புறவு இரிக்கும்
அத்தம் அரிய வென்னார் நத்துறந்து
5 பொருள்வயிற் பிரிவா ராயின்இவ் வுலகத்துப்
பொருளே மன்ற பொருளே
அருளே மன்ற ஆருமில் லதுவே.

பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

## 2248. குறுந்தொகை - 219. நெய்தல்

பயப்பென் மேனி யதுவே நயப்பவர்
நாரில் நெஞ்சத் தாரிடை யதுவே
செறிவுஞ் சேணிகந் தன்றே அறிவே
ஆங்கட் செல்கம் எழுகென ஈங்கே

5 வல்லா கூறி யிருக்கும் அள்ளிலைத்
தடவுநிலைத் தாழைச் சேர்ப்பர்க்கு
இடமன் தோழியெந் நீரோ எனினே.
சிறைப்புறம்.

## சசரு. வெண்மணிப்பூதி

### 2249.* குறுந்தொகை - 299. நெய்தல்

இதுமற் றெவனோ தோழி முதுநீர்ப்
புணரி திளைக்கும் புள்ளிமிழ் கானல்
இணர்வீழ் புன்னை யெக்கர் நீழற்
புணர்குறி வாய்த்த ஞான்றைக் கொண்கற்
5 கண்டன மன் எங் கண்ணே அவன்சொற்
கேட்டன மன் எஞ் செவியே மற்றவன்
மணப்பின் மாணலம் எய்தித்
தணப்பின் ஞெகிழ்ப எந் தடமென் தோளே.

சிறைப்புறமாகத் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

## சசசு. வெள்ளாடியனார்

### 2250. அகநானூறு - 29. பாலை

தொடங்குவினை தவிரா அசைவில் நோன்றாட்
கிடந்துயிர் மறுகுவ தாயினும் இடம்படின்
வீழ்களிறு மிசையாப் புலியினுஞ் சிறந்த
தாழ்வில் உள்ளந் தலைத்தலைச் சிறப்பச்

5 செய்வினைக் ககன்ற காலை எஃகுற்று
இருவே றாகிய தெரிதகு வனப்பின்
மாவின் நறுவடி போலக் காண்டொறும்
மேவல் தண்டா மகிழ்நோக் குண்கண்
இனையாது கழிந்த வைகல் எனைய தூஉம்
10 வாழலென் யானெனத் தேற்றிப் பன்மாண்
தாழக் கூறிய தகைசால் நன்மொழி
மறந்தனிர் போறிர் எம்மெனச் சிறந்தநின்
எயிறுகெழு துவர்வா யின்னகை யழுங்க
வினவ லானாப் புனையிழை கேளினி
15 வெம்மை தண்டா எரியுகு பறந்தலைக்
கொம்மை வாடிய இயவுள் யானை



நீர்மருங் கறியாது தேர்மருங் கோடி
அறுநீ ரம்பியின் நெறிமுத லுணங்கும்
உள்ளூர்ப் பனிக்கும் ஊக்கருங் கடத்திடை
20 எள்ளல் நோனாப் பொருள்தரல் விருப்பொடு
நாணுத்தளை யாக வைகி மாண்வினைக்கு
உடம்பாண் டொழிந்தமை யல்லதை
மடங்கெழு நெஞ்சம் நின்னுழை யதுவே.

வினைமுற்றி மீண்ட தலைமகன், எம்மையும்
நினைத்தறிதிரோ என்ற தலைமகட்குச் சொல்லியது.

## ௪௱௫. வெள்ளியந்தின்னனார்

## 2251. நற்றிணை - 101. நெய்தல்

மூற்று மஞ்சட் பசும்புறங் கடுப்பச்
சுற்றிய பிணர சூழ்கழி இறவின்
கணங்கொள் குப்பை யுணங்குதிறன் நோக்கிப்
புன்னையங் கொழுநிழல் முன்னுய்த்துப் பரப்புந்
5 துறைநனி யிருந்த பாக்கமும் உறைநனி
இனிதுமன் அளிதோ தானே துனிதீர்ந்து
அகன்ற அல்குல் ஐதமை நுசுப்பின்
மீனெறி பரதவர் மடமகள்
மானமர் நோக்கங் காணா வூங்கே.

பின்னின்ற தலைமகன் தோழிகேட்பச் சொல்லியது.

சு௲௲. வெள்ளிவீதியார்

## 2252. அகநானூறு - 45. பாலை ✓ வாட

வாடுழுஞ்சில் விளைநெற் றந்துணர்
ஆடுகளப் பறையின் அரிப்பன ஒலிப்பக்
கோடை நீடிய அகன்பெருங் குன்றத்து
நீரிலா ராற்று நிவப்பன களிறட்டு
5 ஆளில் அத்தத் தழுவை யுகளுங்



காடிறந் தனரே காதலர் மாமை
அரிநுண் பசலை பாஅய்ப் பீரத்து

எழில்மலர் புரைதல் வேண்டும் அலரே
அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன் 10
தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிப்
புன்னை குறைத்த ஞான்றை வயிரியர்
இன்னிசை யார்ப்பினும் பெரிதே யானே
காதலற் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்து
ஆதி மந்தி போலப் பேதுற்று
15 அலந்தனெ னுழல்வென் கொல்லோ பொலந்தார்க்
கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல்
வான வரம்பன் அடல்முனைக் கலங்கிய
உடைமதி லோரரண் போல
அஞ்சுவரு நோயொடு துஞ்சா தேனே.

வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**2253.** அகநானூறு - **362.** குறிஞ்சி

பாம்புடை விடர பனிநீர் இட்டுத்துறைத்
தேங்கலந் தொழுக யாறுநிறைந் தனவே
வெண்கோட்டு யானை பொருத புண்கூர்ந்து
பைங்கண் வல்லியங் கல்லளைச் செறிய

5 முருக்கரும் பன்ன வள்ளுகிர் வயப்பிணவு
கடிகொள வழங்கா ராறே ஆயிடை
எல்லிற் றென்னுன் வென்வேல் ஏந்தி
நசைதர வந்த நன்ன ராளன்

நெஞ்சுபழு தாக வறுவியன் பெயரின் 10
இன்றிப் பொழுதும் யான்வா ழலனே
எவன்கொல் வாழி தோழிகம் மிடைமுலைச்
சுணங்கணி முற்றத் தாரம் போலவும்
சிலம்புநீடு சோலைச் சிதர்துங்கு நளிர்ப்பின்
இலங்குவெள் ளருவி போலவும்
15 நிலங்கொண் டனவால் திங்களங் கதிரே.

இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.

வெள்ளிவீதியார் 1309

## 2254. குறுந்தொகை - 27. பாலை

கன்றும் உண்ணாது கலத்தினும் படாது
நல்லான் தீம்பால் நிலத்துக் காஅங்கு
எனக்கும் ஆகாது என்னைக்கும் உதவாது
பசலை யுணீஇயர் வேண்டும்
5 திதலை யல்குலென் மாமைக் கவினே.

பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

## 2255. குறுந்தொகை - 44. பாலை

காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாள்இழந் தனவே
அகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றஇவ் வுலகத்துப் பிறரே.

இடைச்சுரத்துச் செவிலித்தாய் கையற்றுச் சொல்லியது.

## 2256. குறுந்தொகை - 58. குறிஞ்சி

இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
நிறுக்க லாற்றினோ நன்றுமன் றில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையில் ஊமன் கண்ணிற் காக்கும்
5 வெண்ணெ யுணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே.

கழற்றெதிர்மறை.

## 2257. குறுந்தொகை - 130. பாலை

நிலந்தொட்டுப் புகாஅர் வானம் ஏறார்
விலங்கிரு முந்நீர் காலிற் செல்லார்
நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்



குடிமுறை குடிமுறை தேரின்
5 கெடுநரு முளரோநங் காத லோரே.

' நீ

பிரிவிடை யழிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது ; அவர் பிரிந்தார் என்று ஆற்றாயாகின்றதென்னை ? யான் அவர் உள்வழி அறிந்து தூதுவிட்டுக்கொணர்வேன் ;
நின் ஆற்றாமை நீங்குக' எனத் தோழி தலைமகளை
ஆற்றுவித்தது ; தோழி தூதுவிடுவாளாகத் தலைமகள் தனது
ஆற்றாமையாற் கூறியதூஉமாம்.

## 2258. குறுந்தொகை - 146. குறிஞ்சி

அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பிரிந்தோர்ப் புணர்ப்பவர் இருந்தனர் கொல்லோ
தண்டுடைக் கையர் வெண்டலைச் சிதவலர்
நன்றுநன் றென்னு மாக்களோடு
5 இன்றுபெரி தென்னும் ஆங்கண தவையே.

தலைமகன் தமர் வரைவொடு வந்து
சொல்லாடுகின்றுழி வரைவு மறுப்பவோவெனக் கவன்ற
தலைமகட்குத் தோழி சொல்லியது.

## 2259. குறுந்தொகை - 149. பாலை

அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீ டுழந்தன்று மன்னே இனியே
வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறைத்
தீம்புனல் நெரிதர வீந்துக் கா அங்குத்
5 தாங்கு மளவைத் தாங்கிக்
காமம் நெரிதரக் கைந்நில் லாதே.

உடன்போக்கு உணர்த்திய தோழிக்குத்
தலைமகள் சொல்லியது.

## 2260. குறுந்தொகை - 169. மருதம்

சுரஞ்செல் யானைக் கல்லுறு கோட்டின்
தெற்றென இறீஇயரோ ஐய மற்று யாம்
நும்மொடு நக்க வால்வெள் எயிறே

பாணர், பசுமீன் சொரிந்த மண்டை போல
5 எமக்கும் பெரும்புல வாகி
நும்மும் பெறேஎம் இறீஇயரெம் உயிரே.

கற்புக்காலத்துத் தெளிவிடை விலங்கியது; இனித் தோழி வரைவு நீட்டித்தவழி வரைவுகடாயதூஉமாம்.

**2261.** குறுந்தொகை - **386.** நெய்தல்

வெண்மணல் விரிந்த வீததை கானல்
தண்ணந் துறைவன் தணவா ஊங்கே
வாலிழை மகளிர் விழவணிக் கூட்டும்
மாலையோ அறிவேன் மன்னே மாலை
5 நிலம்பரந் தன்ன புன்கணொடு
புலம்புடைத் தாகுதல் அறியேன் யானே.

பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி வன்புறை எதிரழிந்து கூறியது.

**2262.** நற்றிணை - **70.** மருதம்

சிறுவெள்ளாங் குருகே சிறுவெள்ளாங் குருகே
துறைபோ கறுவைத் தூமடி யன்ன
நிறங்கிளர் தூவிச் சிறுவெள்ளாங் குருகே

எம்மூர் வந்தெம் உண்டுறைத் துழைஇச்
5 சினைக்கெளிற் றார்கையை அவரூர்ப் பெயர்தி
அனைய அன் பினையோ பெருமற வியையோ
ஆங்கண் தீம்புனல் ஈங்கண் பரக்குங்
கழனி நல்லூர் மகிழ்நர்க்கென்
இழைநெகிழ் பருவரல் செப்பா தோயே.

காமமிக்க கழிபடர்கிளவி.

**2263.** நற்றிணை - **335.** நெய்தல்

திங்களுந் திகழ்வான் ஏர்தரும் இ[மி]ழ்நீர்ப்
பொங்குதிரைப் புணரியும் பாடோ வாதே



ஒலிசிறந் தோதமும் பெயரும் மலிபுனற்
பல்பூங் கானல் முள்ளிலைத் தாழை
5 சோறுசொரி குடவயிற் கூம்புமுகை யவிழ
வளிபரந் தூட்டும் விளிவில் நாற்றமொடு
மையிரும் பனைமிசைப் பைதல உயவும்
அன்றிலும் என்புற நரலும் அன்றி
விரல்கவர்ந் துழந்த கவர்வின் நல்யாழ் 10 யாம
முய்யாமை நின்றது
காமம் பெரிதே களைஞரோ இலரே.

காமமிக்க கழிபடர்கிளவி மீதூர்ந்து தலைமகள் சொல்லியது.

**2264.** நற்றிணை - **348.** நெய்தல்

நிலவே, நீல்நிற விசும்பிற் பல்கதிர் பாப்பிப்

பான்மலி கடலிற் பரந்துபட் டன்றே
ஊரே, ஒலிவருஞ் சும்மையொடு மலிதொகு பீண்டிக்
கலிகெழு மறுகின் விழவய ரும்மே
5 கானே, பூமலர் கஞலிய பொழிலகந் தோறுந்
தாமமர் துணையொடு வண்டிமி ரும்மே
யானே, புனையிழை ஞெகிழ்த்த புலம்புகொள்
கனையிருங் கங்குலுங் கண்படை யிலெனே

அவலமொடு

அதனல், என்னொடு பொருங்கொலிவ் வுலகம்
உலகமொடு பொருங்கொலென் அவலமுறு நெஞ்சே.

வேட்கை பெருகத் தாங்கலளாய் ஆற்றாமை
சொல்லியது.
மீதூர்கின்றாள்

௨௬௭. வெள்ளெருக்கிலையார்

**2265.** புறநானூறு - **233.**

பொய்யா கியரோ பொய்யா கியரோ

பாவடி யானை பரிசிலர்க் கருகாச்
சீர்கெழு நோன்றாள் அகுதைகண் தோன்றிய
பொன்புனை திகிரியிற் பொய்யா கியரோ

## வெள்ளைக்குடி நாகனார் 1313

5 இரும்பா ணொக்கற் றலைவன் பெரும்பூண்
போரடு தானை எவ்வி மார்பின்

எஃகுறு விழுப்புண் பலவென
வைகுறு விடியல் இயம்பிய குரலே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.
வேள் எவ்வியைப் பாடியது.

## 2266. புறநானூறு - 234.

நோகோ யானே தேய்கமா காலை
பிடியடி யன்ன சிறுவழி மெழுகித்
தன்னமர் காதலி புல்மேல் வைத்த
இன்சிறு பிண்டம் யாங்குண் டனன்கொல் 5
உலகுபுகத் திறந்த வாயிற்
பலரோ டுண்டல் மரீஇ யோனே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.
வேள் எவ்வியைப் பாடியது.

## ௨௩௮. வெள்ளைக்குடி நாகனார்

**2267.** நற்றிணை - **158.** குறிஞ்சி

அம்ம வாழி தோழி நம்வயின்
யானோ காணேன் அதுதான் கரந்தே
கல்லதர் மன்னுங் கால்கொல் லும்மே
கனையிருள் மன்னுங் கண்கொல் லும்மே
5 விடர்முகைச் செறிந்த வெஞ்சின இரும்புலி
புகர்முக வேழம் புலம்பத் தாக்கிக்
குருதி பருகிய கொழுங்கவுட் கயவாய்
வேங்கை முதலொடு துடைக்கும்
ஓங்குமலை நாடன் வரூஉ மாறே.

ஆறுபார்த்துற்ற அச்சத்தாற் சிறைப்புறமாகச் சொல்லியது.

83



**2268.** நற்றிணை - **196.** நெய்தல்

பங்குசெறிந் தன்ன பல்கதி ரிடையிடைப்
பால்முகந் தன்ன பசுவெண் ணிலவின்
மால்பிட ரறியா நிறையுறு மதியம்
சால்புஞ் செம்மையும் உடையை யாதலின்
5 நிற்கரந் துறையும் உலக மின்மையின்
எற்கரந் துறைவோர் உள்வழி காட்டாய்
நற்கவின் இழந்தவென் தோள்போற் சாஅய்ச்

சிறுகுபு சிறுகுபு செரீஇ
அறிகரி பொய்த்தலின் ஆகுமோ அதுவே.

வெட்டிடைகழிந்து பொருள்வயிற்பிரிந்த காலத்து ஆற்று ளாகிய தலைமகள் திங்கள்மேலிட்டுத் தன்னுள்ளே சொல்லியது.

## 2269. புறநானூறு - 35.

நளியிரு முந்நீர் ஏணி யாக
வளியிடை வழங்கா வானஞ் சூடிய 5
மண்திணி கிடக்கைத் தண்தமிழ்க் கிழவர்

முரசுமுழங்கு தானை மூவ ருள்ளும்
அரசெனப் படுவது நினதே பெரும
அலங்குகதிர்க் கனலி நால்வயின் தோன்றினும்
இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்
அந்தண் காவிரி வந்துகவர்பு ஊட்டத்
தோடுகொள் வேலின் தோற்றம் போல
10 ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும்
நாடெனப் படுவது நினதே யத்தை, ஆங்க
நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே
நினவ கூறுவல் எனவ கேண்மதி
அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து
15 முறைவேண்டு பொழுதிற் பதனெளியோர் ஈண்டு
உறைவேண்டு பொழுதிற் பெயல்பெற் றோரே
ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பின் நடுவுநின் றாங்குக்

கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
20 வெயில்மறைக் கொண்டன்றோ அன்றே வருந்திய
குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ
வெளிற்றுப்பனந் துணியின் வீற்றுவீற்றுக் கிடப்பக்
களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்
25 பொருபடை தரூஉங் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே
மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை யல்லன செயற்கையிற் றோன்றினும்
காவலர்ப் பழிக்குமிக் கண்ணகன் ஞாலம்
30 அதுநற் கறிந்தனை யாயின் நீயும்
நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது
பகடுபுறந் தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறந் தருகுவை யாயினின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே.

திணை - பாடாண்டிணை ; துறை - செவியறிவுறூஉ.
சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப்

பாடிப் பழஞ்செய்க்கடன் வீடுகொண்டது.

## ௨௬௯. வெள்ளைமாளர்

### 2270. புறநானூறு - 296.

வேம்புசினை யொடிப்பவும் காஞ்சி பாடவும்
நெய்யுடைக் கையர் ஐயவி புகைப்பவும் எல்லா
மனையுங் கல்லென் றவ்வே
வேந்துடன் றெறிவான் கொல்லோ
5 நெடிதுவந் தன்றால் நெடுந்தகை தேரே. திணை - வாகை; துறை - ஏறாண்முல்லை.

## ௨௭௦. வெறிபாடிய காமக்கண்ணியார்

### 2271. அகநானூறு - 22. குறிஞ்சி

அணங்குடை நெடுவரை யுச்சியின் இழிதரும்
கணங்கொள் அருவிக் கான்கெழு நாடன்
மணங்கமழ் வியன்மார்பு அணங்கிய செல்லல்
இதுவென அறியா மறுவரற் பொழுதிற்
5 படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேட் பேணத் தணிகுவள் இவளென
முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூறக்
களம்நன் கிழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்து

10 உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்
ஆரம் நாற அருவிடர்த் ததைந்த
சாரற் பல்பூ வண்டுபடச் சூடிக்
களிற்றிரை தெரீஇய பார்வ லொதுக்கின்
15 ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல
நன்மனை நெடுநகர்க் காவலர் அறியாமைத்
தன்னசை யுள்ளத்து நந்நசை வாய்ப்ப
இன்னுயிர் குழைய முயங்குதொறு மெய்ம்மலிந்து
நக்கனெ னல்லனோ யானே எய்த்த
20 நோய்தணி காதலர் வரவீண்டு
ஏதில் வேலற்கு உலந்தமை கண்டே.

வரைவிடை வைத்துப் பிரிந்தகாலத்துத் தலைமகள் ஆற்றாளாகத் தோழி தலைமகனை இயற்பழிப்பத் தலைமகள் இயற்பட மொழிந்தது ; தலைமகன் இரவுக்குறிவந்து சிறைப்புறத்தானாகத் தோழியாற் சொல்லெடுக்கப்பட்டுத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

**2272.** அகநானூறு - **98.** குறிஞ்சி

பனிவரை நிவந்த பயங்கெழு கவாஅற்
றுனியில் கொள்கையொடு அவர்நமக் குவந்த

வெறிபாடிய காமக்கண்ணியார்

இனிய உள்ளம் இன்னா வாக
முனிதக நிறுத்த நல்க லெவ்வம்
5 சூருறை வெற்பன் மார்புறத் தணிதல்
அறிந்தன ளல்லள் அன்னை வார்கோற்
செறிந்திலங் கெல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்
கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்
பொய்வல் பெண்டிர் பிரப்புளர்பு இரீஇ
10 முருகன் ஆரணங் கென்றலின் அதுசெத்து
ஓவத் தன்ன வினைபுனை நல்லிற்
பாவை யன்ன பலராய் மாண்கவின்
பண்டையிற் சிறக்கஎன் மகட்கெனப் பரைஇக்
கூடுகொள் இன்னியங் கறங்கக் களனிழைத்து
15 ஆடணி யயர்ந்த அகன்பெரும் பந்தர்
வெண்போழ் கடம்பொடு சூடி இன்சீர்
ஐதமை பாணி யிரீஇக் கைபெயராச்
செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்
வெறியயர் வியன்களம் பொற்ப வல்லோன்
20 பொறியமை பாவையின் தூங்கல் வேண்டின்
என்னாங் கொல்லோ தோழி மயங்கிய
மையற் பெண்டிர்க்கு நொவ்வ லாக
ஆடிய பின்னும் வாடிய மேனி
பண்டையிற் சிறவா தாயின் இம்மறை
25 அலரா காமையோ அரிதே அஃதான்று
அறிவர் உறுவிய அல்லல்கண் டருளி

வெறிகமழ் நெடுவேள் நல்குவ னெனினே
செறிதொடி யுற்ற செல்லலும் பிறிதெனக்
கான்கெழு நாடன் கேட்பின்
30 யானுயிர் வாழ்தல் அதனினு மரிதே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லு வாளாய்ச் சொல்லியது ; தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉ மாம்.



## 2273. நற்றிணை - 268. குறிஞ்சி

சூருடை நன்றலைச் சுனைநீர் மல்க
மால்பெயல் தலைஇய மன்னெடுங் குன்றத்துக்
கருங்காற் குறிஞ்சி மதனில வான்பூ
ஓவுக்கண் டன்ன இல்வரை யிழைத்த
5 நாறுகொள் பிரசம் ஊறு நாடற்குக்
காதல் செய்தலுங் காதல மன்மை
யாதனிற் கொல்லோ தோழி வினவுகம்
பெய்ம்மணல் முற்றங் கடிகொண்டு
மெய்ம்மலி கழங்கின் வேலற் றந்தே.

தலைமகட்குச் சொல்லியது ; தலைமகன் வந்தொழுகவும் வேறு பாடு கண்டாள் 'அவன் வருவானாகவும் நீ வேறுபட்டாய் வெறி எடுத்துக்கொள்ளும் வகையான்' என்றதூஉமாம்.

## 2274. புறநானூறு - 271.

நீரற வறியா நிலமுதற் கலந்த
கருங்குரல் நொச்சிக் கண்ணார் குரூஉத்தழை
மெல்லிழை மகளிர் ஐதக லல்குற்
றொடலை யாகவுங் கண்டனம் இனியே

5 வெருவரு குருதியொடு மயங்கி யுருவுகரந்து
ஒறுவாய்ப் பட்ட தெரிய லூன்செத்துப்
பருந்துகொண் டுகப்ப யாங் கண்டனம்
மறம்புகல் மைந்தன் மலைந்த மாறே.

திணை - நொச்சி ; துறை - செருவிடை வீழ்தல்.

## 2275. புறநானூறு - 302.

வெடிவேய் கொள்வது போல ஓடித்
தாவுபு உகளு மாவே பூவே
விளங்கிழை மகளிர் கூந்தற் கொண்ட
நரந்தப் பல்காழ்க் கோதை சுற்றிய
5 ஐதமை பாணி வணர்கோட்டுச் சிறியாழ்க்

வேம்பற்றூர்க் கண்ணன்கூத்தன்

1319

கைவார் நரம்பின் பாணர்க்கு ஒக்கிய
நிரய்பா இயல்பிற் கரம்பைச் சீறூர்

நோக்கினர்ச் செகுக்குங் காளை ஊக்கி
வேலின் அட்ட களிறுபெயர்த் தெண்ணின்

10 விண்ணிவர் விசும்பின் மீனும்
தண்பெய லுறையும் உறையாற் றாவே.

திணை - தும்பை ; துறை - குதிரைமறம்.

சஎக. வேட்டகண்ணன்

2276. குறுந்தொகை - 389. குறிஞ்சி

நெய்கனி குறும்பூழ் காய மாக
ஆர்பதம் பெறுக தோழி யத்தை
பெருங்கல் நாடன் வரைந்தென அவனெதிர்
நன்றோ மகனே யென்றனென்
5 நன்றே போலும் என்றுரைத் தோனே.

தலைமகன் குற்றேவல் மகனால் வரைவு மலிந்தமை தோழி தலை மகட்குச் சொல்லியது.

சஎஉ. வேம்பற்றூர்க்
கண்ணன்கூத்தன்

2277. குறுந்தொகை - 362. குறிஞ்சி

முருகயர்ந்து வந்த முதுவாய் வேல
சினவ லோம்புமதி வினவுவ துடையேன்
பல்வே றுருவிற் சில்லவிழ் மடையொடு
சிறுமறி கொன்றிவள் நறுநுதல் நீவி

5 வணங்கினை கொடுத்தி யாயின் அணங்கிய
விண்டோய் மாமலைச் சிலம்பன்
தண்டா ரகலமும் உண்ணுமோ பலியே.
வெறிவிலக்கித்தோழி அறத்தொடு நின்றது.

## ௬௭௩. வேம்பற்றூர்க் குமரனார்

**2278.** அகநானூறு - **157.** பாலை

அரியற் பெண்டிர் அலகிற் கொண்ட
பகுவாய்ப் பாளைக் குவிகுலை சுரந்த
அரிநிறக் கலுழி ஆர மாந்திச்
செருவேட்டுச் சிலைக்குஞ் செங்கண் ஆடவர்
5 வில்லிட வீழ்ந்தோர் பதுக்கைக் கோங்கின்
எல்லி மலர்ந்த பைங்கொடி யதிரல்
பெரும்புலர் வைகறை அரும்பொடு வாங்கிக்
கான யானை கவளங் கொள்ளும்
அஞ்சுவரு நெறியிடைத் தமியர் சென்மார் 10
நெஞ்சுண மொழிப மன்னே தோழி
முனைபுலம் பெயர்த்த புல்லென் மன்றத்துப்
பெயலுற நெகிழ்ந்து வெயிலுறச் சாஅய்
வினையழி பாவையின் உலறி
மனையொழிந் திருத்தல் வல்லு வோர்க்கே.

பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**2279.** புறநானூறு - **317.**

வென்வேல்... ...நது
முன்றிற் கிடந்த பெருங்களி யாளற்கு
அதளுண் டாயினும் பாயுண் டாயினும்
யாதுண் டாயினுங் கொடுமின் வல்லே 5
வேட்கை மீளப... ...
... ...கு மெமக்கும் பிறர்க்கும்
யார்க்கும் ஈய்ந்து துயிலேற் பினனே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை.

## ஆசிரியர் பெயர்காணாப் பாடல்கள்

**2280.** அகநானூறு - **114.** முல்லை

கேளா யெல்ல தோழி வேலன்
வெறியயர் களத்துச் சிறுபல தாஅய
விரவுவீ யுறைத்த ஈர்நறும் புறவின்
உரவுக்கதிர் மழுங்கிய கல்சேர் ஞாயிறு
5 அரவுநுங்கு மதியின் ஐயென மறையுஞ்
சிறுபுன் மாலையும் உள்ளார் அவரென
நப்புலந் துறையும் எவ்வம் நீங்க
நூலறி வலவ கடவுமதி உவக்காண்
நெடுங்கொடி நுடங்கும் வான்தோய் புரிசை
10 யாமங் கொள்பவர் நாட்டிய நளிசுடர்

வானக மீனின் விளங்கித் தோன்றும்
அருங்கடிக் காப்பின் அஞ்சுவரு மூதூர்த்
திருநகர டங்கிய மாசில் கற்பின்
15

அரிமதர் மழைக்கண் அமைபுரை பணைத்தோள்
அணங்குசால் அரிவையைக் காண்குவம்
பொலம்படைக் கலிமாப் பூண்ட தேரே.

விணைமுற்றி மீளுந் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

## 2281. அகநானூறு - 117. பாலை

மௌவலொடு மலர்ந்த மாக்குரல் நொச்சியும்

அவ்வரி யல்கு லாயமும் உள்ளாள்
ஏதிலன் பொய்ம்மொழி நம்பி ஏர்வினை
வளங்கெழு திருநகர் புலம்பப் போகி
5 வெருவரு கவலை யாங்கண் அருள்வரக்
கருங்கா லோமை யேறி வெண்டலைப்
பருந்துபெடை பயிரும் பாழ்நாட் டாங்கண்
பொலந்தொடி தெளிர்ப்ப வீசிச் சேவடிச்
சிலம்புநக இயலிச் சென்றஎன் மகட்கே 10
சாந்துளர் வணர்குரல் வாரி வகைவகுத்து 1322

யான்போது துணைப்பத் தகர மண்ணாள்
தன்னோ ரன்ன தகைவெங் காதலன்
வெறிகமழ் பன்மலர் புனையப் பின்னுவிடச்
சிறுபுறம் புதைய நெறிபுதாழ்ந் தனகொல்
15 நெடுங்கால் மாஅத் தூழுறு வெண்பழம்
கொடுந்தாள் யாமை பார்ப்பொடு கவரும்
பொய்கை சூழ்ந்த பொய்யா யாணர்
வாணன் சிறுகுடி வடாஅது
தீநீர்க் கான்யாற்று அவிரறல் போன்றே.
மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

**2282.** அகநானூறு - **165.** பாலை

கயந்தலை மடப்பிடி பயம்பிற் பட்டெனக்
களிறுவிளிப் படுத்த கம்பலை வெரீஇ
ஒய்யென எழுந்த செவ்வாய்க் குழவி
தாதெரு மறுகின் மூதூ ராங்கண்
5 எருமை நல்லான் பெறுமுலை மாந்தும்
நாடுபல இறந்த நன்ன ராட்டிக்கு
ஆயமும் அணியிழந் தழுங்கின்று தாயும்
ஈன்றோட் டாரா யிரீஇயரென் உயிரெனக்
கண்ணும் நுதலும் நீவித் தண்ணெனத்
10 தடவுநிலை நொச்சி வரிநிழல் அசைஇத்
தாழிக் குவளை வாடுமலர் சூட்டித்
தருமணற் கிடந்த பாவையென்

மருமக ளேயென முயங்கினள் அழுமே.
மகட்போக்கிய தாயது நிலைமை கண்டார் சொல்லியது.

**2283.** குறுந்தொகை - **191.** முல்லை

உதுக்காண் அதுவே இதுவென மொழிகோ
னோன்கினை யிருந்த இருந்தோட்டுப்
புள்ளினம்
தாம்புணர்ந் தமையிற் பிரிந்தோ ருள்ளத்
தீங்குரல் அகவக் கேட்டும் நீங்கிய



5 ஏதி லாளர் இவண்வரிற் போதிற்
பொம்ம லோதியும் புனையல்
எம்முந் தொடாஅல் என்குவ மன்னே.
பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக்
கிழத்தி கூறியது.

**2284.** குறுந்தொகை - **201.** குறிஞ்சி

அமிழ்தம் உண்கநம் அயலி லாட்டி
பால்கலப் பன்ன தேக்கொக் கருந்துபு
நீல மென்சிறை வள்ளுகிர்ப் பறவை
நெல்லி யம்புளி மாந்தி அயலது
5 முள்ளில் அம்பணை மூங்கிலிற் றூங்கும்
கழைநிவந் தோங்கிய சோலை
மலைகெழு நாடனை வருமென் றோளே.

கடிநகர்புக்கு வேறுபடாது நன்காற்றினாய் என்ற கிழத்தி உரைத்தது.

தோழிக்குக்

## 2285. குறுந்தொகை - 256. பாலை

மணிவார்ந் தன்ன மாக்கொடி அறுகைப்
பிணங்கரில் மென்கொம்பு பிணையொடு மாந்தி
மானே றுகளுங் கானம் பிற்பட
வினைநலம் படீஇ வருதும் அவ்வரைத்
5 தாங்க லொல்லுமோ பூங்குழை யோயெனச்
சொல்லா முன்னர் நில்லா வாகி
நீர்விலங் கழித லானத்
தேர்விலங் கினவால் தெரிவை கண்ணே.

பொருள் விலக்கப்பட்ட கிழவன் செலவழுங்கியது.

## 2286. குறுந்தொகை - 313. நெய்தல்

பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
நீத்துநீர் இருங்கழி இரைதேர்ந் துண்டு

பூக்கமழ் பொதும்பர்ச் சேக்குந் துறைவனொடு
யாத்தேம் யாத்தன்று நட்பே
5 அவிழ்த்தற் கரிதது முடிந்தமைந் தன்றே.

இரவுக்குறி வந்தொழுகுங் காலத்துத் தலைமகனது வரவுணர்ந்து பண்பிலனென்று இயற்பழித்த தோழிக்கு அவனொடுபிறந்த நட்பு அழியாத நட்பன்றோ என்று சிறைப்புறமாகத் தலைமகள் இயற்பட மொழிந்தது.

## 2287. குறுந்தொகை - 321. குறிஞ்சி

மலைச்செஞ் சாந்தின் ஆர மார்பினன்
சுனைப்பூங் குவளைச் சுரும்பார் கண்ணியன்
நடுநாள் வந்து நம்மனைப் பெயரும்
மடமார் அரிவைநின் மார்பமர் இன்றுணை
5 மன்ற மரையா இரிய ஏறட்டுச்
செங்கண் இரும்புலி குழுமும் அதனான்
மறுத்தற் காலையோ அன்றே
திறப்பல் வாழிவேண்டு அன்னைநங் கதவே.

தோழி கிழத்திக்கு கொதுமலர் வரையுமிடத்து அறத்தொடு நிற்பே னென்றது.

## 2288. குறுந்தொகை - 326. நெய்தல்

துணைத்த கோதைப் பணைப்பெருந்
தோளினர்

கடலாடு மகளிர் கானல் இழைத்த
சிறுமனைப் புணர்ந்த நட்பே தோழி
ஒருநாள் துறைவன் துறப்பிற்
5 பன்னாள் வரூஉம் இன்னா மைத்தே.

சிறைப்புறம்.

**2289.** குறுந்தொகை - **375.** குறிஞ்சி

அம்ம வாழி தோழி இன்றவர்
வாரா ராயினோ நன்றே சாரற்

ஆசிரியர் பெயர்காணப் பாடல்கள்
1325

சிறுதினை விளைந்த வியன்கண் இரும்புனத்து
இரவரி வாரிற் றொண்டகச் சிறுபறை,
5 பானாள் யாமத்துங் கறங்கும்
யாமங் காவல ரவியன்மா ரன்றே.

இரவுக்குறிக்கண் சிறைப்புறமாகத் தோழி தலைமகற்குச் சொல்லு வாளாய் இருபொழுதும் மறுத்து வரைவு கடாயது.

**2290.** குறுந்தொகை - **379.** குறிஞ்சி

இன்றியாண் டையனோ தோழி குன்றத்துப்
பழங்குழி யகழ்ந்த கானவன் கிழங்கினொடு
கண்ணகன் தூமணி பெறூஉம் நாடன்

அறிவுகாழ்க் கொள்ளு மளவைச்
5 எம்மில் வருகுவை நீயெனப்
பொம்ம லோதி நீவி யோனே.

செறிதொடி

கொதுமலர் வரைவுழித் தோழி அறத்தொடு நின்றது.

**2291.** குறுந்தொகை - **381.** நெய்தல்

தொல்கவின் றொலைந்து தோள்நலஞ் சாஅய்
அல்லல் நெஞ்சமோ டல்கலுந் துஞ்சாது
பசலை யாகி விளிவது கொல்லோ
வெண்குருகு நரலுந் தண்கமழ் கானற்
5 பூமலி பொதும்பர் நாண்மலர் மயக்கி

விலங்குதிரை யுடைதருந் துறைவனொடு
இலங்கெயிறு தோன்ற நக்கதன் பயனே.

வரைவிடை ஆற்றளாய தலைமகளை ஆற்றுவிக்கலுறுந் தோழி தலைமகனை இயற்பழித்தது.

**2292.** குறுந்தொகை - **395.** பாலை

நெஞ்சே நிறையொல் லாதே அவரே

அன்பின் மையின் அருள்பொரு ளென்னார்
வன்கண் கொண்டு வலித்துவல் லுநரே



அரவுநுங்கு மதியிற்கு இவணோர் போலக்
5 களையா ராயினுங் கண்ணினிது படீஇயர்
அஞ்சு லென்மரும் இல்லை அந்தில்
அளிதோ தானே நாணே
ஆங்கவர் வதிவயின் நீங்கப் படினே.

வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றாளாகிய கிழத்தி
நாம் ஆண்
டுச் சேறுமெனத் தோழிக்கு உரைத்தது.

## 2293. நற்றிணை - 8. குறிஞ்சி

அல்குபடர் உழந்த அரிமதர் மழைக்கட்
பல்பூம் பகைத்தழை நுடங்கும் அல்குற்
றிருமணி புரையு மேனி மடவோள்
யார்மகள் கொல்இவள் தந்தை வாழியர்
5 துயர முறீஇயினள் எம்மே அகல்வயல்
அரிவனர் அரிந்துந் தருவனர் பெற்றுந்
தண்சேறு தாஅய் மதனுடை நோன்றாட்
கண்போல் நெய்தல் போர்விற் பூக்குந்
திண்டேர்ப் பொறையன் தொண்டி
10 தன்றிறம் பெறுகஇவ ளீன்ற தாயே.

இயற்கைப்புணர்ச்சி யிறுதிக்கண் தலைமகளை

ஆயத்தொடுங்
கண்ட தலைமகன் சொல்லியது.

## 2294. நற்றிணை - 10. பாலை

அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்த லோம்புமதி பூக்கே ழூர
5 இன்கடுங் கள்ளின் இழையணி நெடுந்தேர்க்
கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்
வெண்கோட்டு யானைப் போஒர் கிழவோன்



பழையன் வேல்வாய்த் தன்னநின்
பிழையா நன்மொழி தேறிய இவட்கே.

உடன்போக்குந் தோழி கையடுத்தது.

## 2295. நற்றிணை - 22. குறிஞ்சி

கொடிச்சி காக்கும் அடுக்கற் பைந்தினை
முந்துவிளை பெருங்குரல் கொண்ட மந்தி
கல்லாக் கடுவனொடு நல்வரை யேறி
அங்கை நிறைய ஞெமிடிக் கொண்டுதன்
5 திரையணற் கொடுங்கவுள் நிறைய முக்கி
வான்பெயல் நனைந்த புறத்த நோன்பியர்

கையூ ணிருக்கையிற் றோன்று நாடன்
வந்தனன் வாழி தோழி உலகங்
கயங்கண் அற்ற பைதறு காலைப்
10 பீளொடு திரங்கிய நெல்லிற்கு
நள்ளென் யாமத்து மழைபொழிந் தாங்கே.
வரைவு மலிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

**2296.** நற்றிணை - **24.** பாலை

பார்பக வீழ்ந்த வேருடை விழுக்கோட்டு
உடும்படைந் தன்ன நெடும்பொரி விளவின்
ஆட்டொழி பந்திற் கோட்டுமூக் கிறுபு
கம்பலத் தன்ன பைம்பயிர்த் தாஅம்
5 வெள்ளில் வல்சி வேற்றுநாட் டாரிடைச்
சேறும் நாமெனச் சொல்லச் சேயிழை
நன்றெனப் புரிந்தோய் நன்றுசெய் தனையே
செயல்படு மனத்தர் செய்பொருட்கு
அகல்வர் ஆடவர் அதுவதன் பண்பே.
பொருட்பிரிவுக்கு உடன்பட்ட தோழியைத் தலைவி உவந்து கூறியது.



**2297.** நற்றிணை - **45.** நெய்தல்

இவளே, கானல் நண்ணிய காமர் சிறுகுடி
நீனிறப் பெருங்கடல் கலங்க வுள்புக்கு
மீனெறி பரதவர் மகளே
நீயே, நெடுங்கொடி நுடங்கு நியம மூதூர்க்
5 கடுந்தேர்ச் செல்வர் காதல் மகனே
நிணச்சுறா அறுத்த உணக்கல் வேண்டி
இனப்புள் ளோப்பும் எமக்குநலன் எவனோ
புலவு நாறுதும் செலநின் றீமோ

பெருநீர் விளையுளெஞ் சிறுநல் வாழ்க்கை
10 நும்மொடு புரைவதோ அன்றே
எம்ம னோரிற் செம்மலு முடைத்தே.

குறைவேண்டிய தலைவனைத் தோழி சேட்படுத்தது.

## 2298. நற்றிணை - 46. பாலை

வைகல் தோறும் இன்பமும் இளமையும்
எய்கணை நிழலிற் கழியுமிவ் வுலகத்துக்
காணீ ரென்றலோ அரிதே அதுநனி

5

பேணீ ராகுவிர் ஐயவென் தோழி
பூணணி யாகம் புலம்பப் பாணர்
அயிர்ப்புக்கொண் டன்ன கொன்றையந் தீங்கனி
பறையறை க்டிப்பின் அறையறையாத் துயல்வர
வெவ்வளி வழங்கும் வேய்பயி லழுவத்து
எவ்வ மிகூஉம் அருஞ்சுர மிறந்து
10 நன்வா யல்லர வாழ்க்கை
மன்னுப் பொருட்பிணிப் பிரிதும்யா மெனவே.

பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி சொல்லியது.

**2299.** நற்றிணை - **84.** பாலை

கண்ணும் தோளும் தண்ணறுங் கதுப்பும்
திதலை யல்குலும் பலபா ராட்டி

## ஆசிரியர் பெயர்காணுப் பாடல்கள்

**1329**

நெருநலும் இவணர் மன்னே இன்றே
பெருநீ ரொப்பிற் பேஎய் வெண்டேர்
5 மரனில் நீளிடை மானசை யுறாஉஞ்
சுடுமண் தசும்பின் மத்தந் தின்ற

பிறவா வெண்ணெய் உருப்பிடத் தன்ன
உவரெழு களரி ஓமை யங்காட்டு
வெயில்வீற் றிருந்த வெம்பலே யருஞ்சுரம்
10 ஏகுவ ரென்ப தாமே தம்வயின்
இரந்தோர் மாற்ற லாற்ரு
இல்லின் வாழ்க்கை வல்லா தோரே.

பிரிவிடையாற்ருளாய தலைவி தோழிக்குச்
சொல்லியது.

**2300. நற்றிணை - 92. பாலை**

உள்ளார் கொல்லோ தோழி துணையொடு
வேனி லோதிப் பாடுநடை வழலை
வரிமரல் நுகும்பின் வாடி அவண
வறன்பொருந்து குன்றத் துச்சிக் கவாஅன்
5 வேட்டச் சிறா ரகன்கட் கேணிப்
பயமிரைக் கெடுத்த மணிநீர்ப் பத்தர்
புன்றலை மடப்பிடி கன்ருெ டார
வில்கடிந் தூட்டின பெயருங்
கொல்களிற் ருெருத்தல சுரனிறந் தோரே.

பிரிவிடை வேறுபட்ட கிழத்திக்குத்
தோழிசொல்லியது.

**2301. நற்றிணை - 107. பாலை**

உள்ளுதொறும் நகுவேன் தோழி வள்ளுகிர்ப்
பிடியிளந் திட்ட காரில்வெண் கோட்டுக்
கொடிறுபோல் காய வாலிணர்ப் பாலைச்
செலவளி தூக்கலின் இலைதீர் நெற்றம்
5 கல்லிழி அருவியின் ஒல்லென ஒலிக்கும்
புல்லிலை ஓமைய புலிவழங் கத்தஞ்
சென்ற காதலர் வழிவழி பட்ட
84



நெஞ்சே நல்வினைப் பாற்றே ஈண்டொழிந்து
ஆருக் கௌவை மலைந்த
10 யானே தோழி நோய்ப்பா லேனே.

பிரிவிடை மெலிந்த தலைவி தோழிக்குச்
சொல்லியது.

## 2302. நற்றிணை - 108. குறிஞ்சி

மலையயற் கவித்த மையார் ஏனற்
றுணையிற் றீர்ந்த கடுங்கண் யானை
அணையக் கண்ட அங்குடிக் குறவர்
கனையர் கிளையர் கைபுனை கவணர்

5 விளியர் புறக்குடி யார்க்கு நாட
பழகிய பகையும் பிரிவின் றாதே
முகையே ரிலங்கெயிற் றின்னகை மடந்தை
சுடர்புரை திருநுதல் பசப்பத்
தொடர்புயாங்கு விட்டனை நோகோ யானே.

வரையாது நெடுங்காலம் வந்தொழுகலாற்றாளாய தோழி தலை
மகளது ஆற்றாமைகூறி வரைவு கடாயது.

**2303.** நற்றிணை - **111.** நெய்தல்

அத்த இருப்பைப் பூவி னன்ன
துய்த்தலை இறவொடு தொகைமீன்
பெறீஇயர்
வரிவலைப் பரதவர் கருவினைச் சிறாஅர்
மரன்மேற் கொண்டு மான்கணந் தகைமார்
5 வெந்திறல் இளையவர் வேட்டெழுந்
தாங்குத்
திமில்மேற் கொண்டு திரைச்சுரம் நீந்தி
வாள்வாய்ச் சுறவொடு வயமீன் கெண்டி
நிணம்பெய் தோணியர் இகுமணல்
விழிதரும்
பெருங்கழிப் பாக்கங் கல்லென
10 வருமே தோழி கொண்கன் தேரே.
விரிச்சிபெற்றுப் புகன்ற தோழி
தலைவிக்குரைத்தது.

2304. நற்றிணை - 115. முல்லை

மலர்ந்த பொய்கைப் பூக்குற் றழுங்க்
அயர்ந்த ஆயங் கண்ணினிது படீஇயர்
அன்னையுஞ் சிறிதுதணிந் துயிரினள் இன்னீர்த்
தடங்கடல் வாயி லுண்டுசில் நீரென
5 மயிலடி யிலைய மாக்குரல் நொச்சி
மனைநடு மௌவலொ டூழ்முகை அவிழக்
காரெதிர்ந் தன்றாற் காலை காதலர்
தவச்சேய் நாட்ட ராயினும் மிகப்பேர்
அன்பினர் வாழி தோழி நன்புகழ்
10 உலப்பின்று பெறினுந் தவிரலர்
கேட்டிசி னல்லமோ விசும்பின் தகவே.

பிரிவிடையாற்றாளாய தலைமகளைத் தோழி புறுத்தியது.

பருவங்காட்டி வற்

2305. நற்றிணை - 125. குறிஞ்சி

இரைதேர் எண்கின் பகுவா யேற்றை
கொடுவரிப் புற்றம் வாய்ப்ப வாங்கி
நல்லரா நடுங்க உரறிக் கொல்லன்
ஊதுலைக் குருகின் உள்ளுயிர்த் தகழும்
5 நடுநாள் வருதல் அஞ்சுதும் யாமென

வரைந்துவரல் இரக்குவ மாயின் நம்மலை
நன்னாள் வதுவை கூடி நீடின்று
நம்மொடு செல்வர்மன் தோழி மெல்ல
வேங்கைக் கண்ணியர் எருதெறி களமர்
10 நிலங்கண் டன்ன அகன்கட் பாசறை
மென்றினை நெடும்போர் புரிமார்

துஞ்சுகளி றெடுப்புந்தம் பெருங்கல் நாட்டே.

வரைவு நீட்டிப்ப ஆற்றாளாய தலைவியைத் தோழி வற்புறுத்தியது.



**2306.** நற்றிணை - **126.** பாலை

பைங்காய் நல்லிடம் ஒரீஇய செங்காய்க்

கருங்களி ஈந்தின் வெண்புறக் களரி
இடுநீ றாடிய கடுநடை யொருத்தல்
ஆட்பெறல் நசைஇ நாட்சுரம் விலங்கித்
5 துணைதரும் வம்பலர்க் காணு தச்சினம்
பனைக்கான் றுறும் பாழ்நாட் டத்தம்
இறந்துசெய் பொருளும் இன்பந் தருமெனின்
இளமையிற் சிறந்த வளமையும் இல்லை
இளமை கழிந்த பின்றை வளமை
10 காமந் தருதலும் இன்றே அதனால்
நில்லாப் பொருட்பிணிச் சேறி
வல்லே நெஞ்சம் வாய்க்கநின் வினையே.

பொருள்வலித்த நெஞ்சினைத் தலைவன் நெருங்கிச் செலவழுங்கியது.

2307. நற்றிணை - 132. நெய்தல்

பேஊர் துஞ்சும் யாரு மில்லைத்
திருந்துவாய்ச் சுறவம் நீர்கான்
றொய்யெனப்
பெருந்தெரு உதிர்தரு பெயலுறு தண்வளி
போரமை கதவப் புரைதொறுந் தூவக்
5 கூரெயிற் றெகினம் நடுங்கும் நன்னகர்ப்
பயில்படை நிவந்த பல்பூஞ் சேக்கை
அயலு மாண்சிறை யதுவே அதன்றலைக்
காப்புடை வாயில் போற்றோ வென்னும்

யாமங் கொள்பவர் நெடுநா வொண்மணி

10 ஒன்றெறி பாணியின் இரட்டும்
இன்றுகொல் அளியேன் பொன்று நாளே.
காப்புமிகுதிக்கண் ஆற்றாளாகிய தலைவிக்குத்
தோழி சொல்லி
யது.

ஆசிரியர் பெயர்காணுப் பாடல்கள்
1333

**2308.** நற்றிணை - **134.** குறிஞ்சி

இனிதின் இனிது தலைப்படுது மென்பது
இதுகொல் வாழி தோழி காதலர்

வருகுறி செய்த வரையகச் சிறுதினைச்
செவ்வாய்ப் பாசினங் கடீஇயர் கொடிச்சி

5 அவ்வாய்த் தட்டையொடு அவணை யாகெனை
ஏயள்மன் யாயும் நுந்தை வாழியர்
அம்மா மேனி நிரைதொடிக் குறுமகள்
செல்லா யோதின் முள்ளெயி றுண்கென
மெல்லிய இனிய கூறலின் யானஃது
10 ஒல்லேன் போல உரையா டுவலே.
இற்செறிப்பாரென ஆற்றாளாய தலைவியை
அஃதிலரென்பது படத் தோழி சொல்லியது.

ஜேஷீ

## 2309. நற்றிணை - 160. குறிஞ்சி

நயனும் நண்பும் நாணுநன் குடைமையும்
பயனும் பண்பும் பாடறிந் தொழுகலும்
நும்மினும் அறிகுவென் மன்னே கம்மென

எதிர்த்த தித்தி யேரிள வனமுலை

5 விதிர்த்துவிட் டன்ன அந்நுண் சுணங்கின்
ஐம்பால் வகுத்த கூந்தற் செம்பொறி
திருநுதற் பொலிந்த தேம்பா யோதி
முதுநீ ரிலஞ்சிப் பூத்த குவளை
எதிர்மலர்ப் பிணைய லன்னஇவள்

10 அரிமதர் மழைக்கண் காணா வூங்கே.
கழற்றெதிர்மறை.

## 2310. நற்றிணை - 161. முல்லை

இறையும் அருந்தொழில் முடித்தெனப்
கண்போல் நீலஞ் சுனைதொறு மலர

பொறைய

வீதா வேங்கைய வியனெடும் புறவின்

இம்மென் பறவை ஈண்டுகிளை யிரிய
5 நெடுந்தெரு வன்ன நேர்கொள் நெடுவழி
இளையர் ஏகுவனர் பரிப்ப வளையெனக்
காந்தள் வள்ளிதழ் கவிகுளம் பறுப்பத்
தோள்வலி யாப்ப ஈண்டுநம் வரவினைப்
புள்ளறி வுறீஇயின கொல்லோ தெள்ளிதிற்
10 காதல் கெழுமிய நலத்தள் ஏதில்
புதல்வற் காட்டிப் பொய்க்குந்
திதலை யல்குற் றேமொழி யாட்கே.

வினைமுற்றிப்பெயருந்தலைவன் தேர்ப்பாகன்கேட்பச் சொல்லி யது.

## 2311. நற்றிணை - 162. பாலை

மனையுறை புறவின் செங்காற் பேடைக்
காமர் துணையொடு சேவல் சேரப்
புலம்பின் றெழுதரு புன்கண் மாலைத்
தனியே யிருத்த லாற்றேன் என்றுநின்
5 பனிவார் உண்கண் பைதல கலுழ
நும்மொடு வருவல் என்றி எம்மொடு
பெரும்பெயர்த் தந்தை நீடுபுகழ் நெடுநகர்
யாயொடு நனிமிக மடவை முறைஅது
வேலின் இயற்றித் தோயா நெடுவீழ்
10 வழிநார் ஊசலிற் கோடை தூக்குதொறுந்

துஞ்சுபிடி வருடும் அத்தம்
வல்லை யாகுதல் ஒல்லுமோ நினக்கே.

உடன்போதுவலென்ற தலைவிக்குத் தலைவன் சொற்றது.

**2312.** நற்றிணை - **163.** நெய்தல்

உயிர்த்தன வாகுக அளிய நாளும்
மயிர்த்துகள் முகந்த ஆனு ஊதையொடு
எல்லியும் இரவு மென்னாது கல்லெனக்
கறங்கிசை யினமணி கைபுணர்ந் தொலிப்ப

ஆசிரியர் பெயர்காணுப் பாடல்கள்
1335

5 நிலவுத்தவழ் மணற்கோ டேறிச் செலவர
இன்றெ னெஞ்சம் போலத் தொன்றுநனி
வருந்துமன் அளிய தாமே பெருங்கடல்
நீனிறப் புன்னைத் தமியொண் கைதை

வான மூழ்கிய வயங்கொளி நெடுஞ்சுடர்க்
10 கதிர்காய்ந் தெழுந்தகங் கனலி ஞாயிற்று
வைகுறு வனப்பிற் றோன்றுங்
கைதையங் கானற் றுறைவன் மாவே.

வரைவுமலிந்து சொல்லியது.

**2313.** நற்றிணை - **164.** பாலை

உறைதுறந் திருந்த புறவிற் றனாது
செங்கதிர்ச் செல்வன் தெறுதலின் மண்பக
உலகுமிக வருந்தி அயாவுறு காலைச்
சென்றன ராயினும் நன்றுசெய் தனரெனச்
5 சொல்லிற் றெளிப்பவுந் தெளிதல் செல்லாய்
செங்கோல் வாளிக் கொடுவி லாடவர்
வம்ப மாக்க ளுயிர்த்திறம் பெயர்த்தென
வெங்கடற் றடைமுதற் படுமுடை தழீஇ
உறுபசிக் குறுநரி குறுகல் செல்லாது
10 மாறுபுறக் கொடுக்கும் அத்தம்
ஊறில ராகுதல் உள்ளா மாறே.

பொருள்முடித்து வந்தானென்பது வாயில்கள்வாய்க் கேட்ட தோழி தலைவிக்குரைத்தது.

## 2314. நற்றிணை - 165. குறிஞ்சி

அமர்க்க ணமான் அருநிற முள்காது
பணைத்த பகழிப் போக்குநினைந்து கானவன்
அணங்கொடு நின்றது மலைவரன் கொள்கெனக்
கடவு ளோங்குவரை பேண்மார்
வேட்டெழுந்து
5 கிளையொடு மகிழுங் குன்ற நாடன்
அடைதருந் தோறும் அருமைதனக் குரைப்ப

நப்புணர் வில்லா நயனி லோர்நட்பு
அன்ன வாகுக என்னுன்
ஒல்கா தொழிமிகப் பல்கின தூதே.

கொதுமலர் வரையும்பருவத்துத் தோழி தலைவிக்கு
தொடுநிலை பயப்பச் சொல்லியது ; வரைவுமலிந்ததூஉமாம்.

அறத்

**2315.** நற்றிணை - **166.** பாலை

பொன்னும் மணியும் போலும் யாழநின்
நன்னர் மேனியும் நாறிருங் கதுப்பும்
போதும் பணையும் போலும் யாழநின்
மாத ருண்கணும் வனப்பின் தோளும்
**5** இவைகாண் டோறும் அகமலிந் து யானும்
அறநிலை பெற்றோ ரனையேன் அதன்றலைப்
பொலந்தொடிப் புதல்வனும் பொய்தல்
கற்றனன்
வினையும் வேறுபுலத் திலேனே நினையின்
யாதனிற் பிரிகோ மடந்தை
**10** காதல் தானுங் கடலி னும் பெரிதே.

செலவுக் குறிப்பினுல் வேறுபட்ட கிழத்திக்குத்
சொல்லியது.
தலைவன்

## 2316. நற்றிணை - 167. நெய்தல்

கருங்கோட்டுப் புன்னைக் குடக்குவாங்கு பெருஞ்சினை
விருந்தின் வெண்குரு கார்ப்பின் ஆஅய்
வண்மகிழ் நாளவைப் பரிசில் பெற்ற
பண்ணமை நெடுந்தேர்ப் பாணியின் ஒலிக்குந்
5 தண்ணந் துறைவன் தூதொடும் வந்த
பயன்தெரி பனுவற் பைதீர் பாண
நின்வாய்ப் பணிமொழி களையா பன்மாண்
புதுவீ ஞாழலொடு புன்னை தாஅம்

ஆசிரியர் பெயர்காணாப் பாடல்கள்
1337

மணங்கமழ் கானல் மாணல மிழந்த
10 இறையே ரெல்வளைக் குறுமகள்
பிறையேர் திருநுதற் பாஅய பசப்பே.

தோழி பாணற்கு வாயின் மறுத்தது ;
தூதொடுவந்த பாணற்
குச் சொல்லியதூஉமாம்.

## 2317. நற்றிணை - 168. குறிஞ்சி

சுரும்புண விரிந்த கருங்கால்,வேங்கைப்

பெருஞ்சினைத் தொடுத்த கொழுங்கண் இறாஅற்
புள்ளுற்றுக் கசிந்த தீந்தேன் கல்லளைக்
குறக்குறு மாக்கள் உண்ட மிச்சிலைப்
5 புன்றலை மந்தி வன்பறழ் நக்கும்
நன்மலை நாட பண்பெனப் படுமோ

நின்னயந் துறைவி இன்னுயி ருள்ளாய்
அணங்குடை யரவின் ஆரிருள் நடுநாள்

மைபடு சிறுநெறி யெஃகுதுணை யாக
10 ஆரங் கமழு மார்பினை
சாரற் சிறுகுடி யீங்குநீ வரலே.
தோழி இரவுக்குறி மறுத்தது.

## 2318. நற்றிணை - 169. முல்லை

முன்னியது முடித்தன மாயின் நன்னுதல்
வருவ மென்னும் பருவரல் தீரப்
படுங்கொல் வாழி நெடுஞ்சுவர்ப் பல்லி
பரற்றலை போகிய சிரற்றலைக் கள்ளி
5 மீமிசைக் கலித்த வீநறு முல்லை
ஆடுதலைத் துருவின் தோடுதலைப் பெயர்க்கும்
வன்கை யிடையன் எல்லிப் பரீஇ
வெண்போழ் தைஇய அலங்கலந் தொடலை
மறுகுடன் கமழு மாலைச்
10 சிறுகுடிப் பாக்கத்தெம் பெருநக ரானே.
வினைமுற்றி மறுத்தராகின்றான் நெஞ்சிற்குரைத்தது.

**2319.** நற்றிணை - **170.** மருதம்

மடக்கண் தகரக் கூந்தற் பணைத்தோள்
வார்ந்தவா லெயிற்றுச் சேர்ந்துசெறி குறங்கிற்
பிணையல் அந்தழைத் தைஇத் துணையிலள்
விழவுக்களம் பொலிய வந்துநின் றனளே
5 எழுமினோ எழுமினெங் கொழுநற் காக்கம்
ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது
ஒருவேற் கோடி யாங்குநம்
பன்மைய தெவனோஇவள் வன்மைதலைப்

படினே.

தோழி விறலிக்கு வாயின்மறுத்தது.

**2320.** நற்றிணை - **171.** பாலை

நீர்நசைக் கூக்கிய உயவல் யானை

வேனிற் குன்றத்து வெவ்வரைக் கவாஅன்
நிலஞ்செலச் செல்லாக் கயந்தலைக் குழவி
சேரியம் பெண்டிர் நெஞ்சத் தெறிய
5 ஊரான் கன்றொடு புகுதும் நாடன்
பன்மலை யருஞ்சுர மிறப்பின் நம்விட்டு
யாங்கு வல்லுந மற்றே ஞாங்கர்
வினைப்பூண் தெண்மணி வீழ்ந்தன நிகர்ப்பக்
கழுதுகால் கொள்ளும் பொழுதுகொள்
10 ஆர்வ நெஞ்சமொ டாஇ
மார்புறப் படுத்தல் மரீஇய கண்ணே.

பாணர்

பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகட் குரைத்தது.

**2321**. நற்றிணை - **172**. நெய்தல்

விளையா டாயமொடு வெண்மணல் அழுத்தி
மறந்தனந் துறந்த காழ்முளை அகைய
நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்த்தது
நும்மினுஞ் சிறந்தது நுவ்வை யாகுமென்று
5 அன்னை கூறினள் புன்னையது நலனே

அம்ம நாணுதும் நும்மொடு நகையே
விருந்திற் பாணர் விளரிசை கடுப்ப
வலம்புரி வான்கோடு நரலும் இலங்குநீர்த்
துறைகெழு கொண்கநீ நல்கின்
10 நிறைபடு நீழல் பிறவுமா ருளவே.

பகற்குறிவந்த தலைமகனைத் தோழி வரைவுகடாயது; குறி பெயர்த்தீடுமாம்.

## 2322. நற்றிணை - 173. குறிஞ்சி

சுனைப்பூக் குற்றும் தொடலை தைஇயும்
மலைச்செங் காந்தட் கண்ணி தந்தும்
தன்வழிப் படூஉம் நந்நயந் தருளி
வெறியென வுணர்ந்த அரிய அன்னையைக்
5 கண்ணினுங் கனவினுங் காட்டி இந்நோய்
என்னினும் வாராது மணியிற் றோன்றும்
மைம்மலை கிழவோன் செய்தன னிதுவெனிற்
படுவண் டார்க்கும் பைந்தார் மார்பின்
நெடுவேட் கேத முடைத்தோ
10 தொடியோய் கூறுமதி வினவுவல் யானே.

தோழி தலைவிக்குரைப்பாளாய்ச் சிறைப்புறமாகச் சொல்லியது;
வெறியச்சுறீஇத் தோழி அறத்தொடுநிலை பயப்பித்ததூஉமாம்.

## 2323. நற்றிணை - 174. பாலை

கற்றை யீந்தின் முற்றுக்குலை யன்ன
ஆளில் அத்தத் தாளம் போந்தைக்
கோளுடை நெடுஞ்சினை ஆண்குரல்
விளிப்பிற்
புலியெதிர் வழங்கும் வளிவழங் காரிடைச்
5 சென்ற காதலர் வந்தினிது முயங்கிப்
பிரியா தொருவழி யுறையினும் பெரிதழிந்து
உயங்கினை மடந்தை யென்றி தோழி
அற்று மாகுமஃது அறியா தோர்க்கே



வீழாக் கொள்கை வீழ்ந்த கொண்டி
10 மல்லல் மார்பு மடுத்தனன்
புல்லுமற் றெவனோ அன்பிலங் கடையே.

வினைமுற்றிவந்தெய்திய காலத்து ஆற்றாளாய
தலைவியைத் தோழி வற்புறீஇயின்றாட்கு அவள்
சொல்லியது.

## 2324. நற்றிணை - 175. நெய்தல்

நெடுங்கடல் அலைத்த கொடுந்திமிற் பரதவர்

கொழுமீன் கொள்கை அழிமணற் குவைஇ
மீனெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய
சிறுதீ விளக்கிற் றுஞ்சு நறுமலர்ப்
5 புன்னை யோங்கிய துறைவனொடு அன்னை
தானறிந் தன்றோ இலளே பானாள்
சேரியம் பெண்டிர் சிறுசொல் நம்பிச்
சுடுவான் போல நோக்கும்
அடுபா லன்னவென் பசலை மெய்யே.

தோழி சிறைப்புறமாகச் சொல்லியது.

**2325.** நற்றிணை - **176.** குறிஞ்சி

எந்நயந் துறைவி யாயின் யாம்நயந்து
நல்கினம் விட்டதென் நலத்தோன் அவ்வயிற்
சால்பின் அளித்தல் அறியா தவட்கவள்
காதலள் என்னுமோ உரைத்திசின் தோழி
5 நிரைத்த யானை முகத்துவரி கடுப்பப்
போதுபொதி யுடைந்த ஒண்செங் காந்தள்
வாழையஞ் சிலம்பின் வம்புபடக் குவைஇ
யாழோர்த் தன்ன இன்குர லினவண்டு

அருவி முழவின் பாடொடு ஓராங்கு
10 மென்மெல இசைக்குஞ் சாரற்
குன்ற வேலித்தம் உறைவி னூரே.

பரத்தை தலைவியின் பாங்கிக்குப் பாங்காயினர்
கேட்ப விறலிக் குச் சொல்லியது.

**2326.** நற்றிணை - **177.** பாலை

பரந்துபடு கூரெரி கானம் நைப்ப
மரந்தீ யுற்ற மகிழ்தலை யங்காட்டு
ஓதுக்கரும் வெஞ்சுர மிறந்தனர் மற்றவர்
குறிப்பிற் கண்டிசின் யானே நெறிப்பட

5 வேலு மிலங்கிலை துடைப்ப பலகையும்
பீலி சூட்டி மணியணி பவ்வே
பண்டினும் நனிபல அளிப்ப இனியே
வந்தன்று போலுந் தோழி நொந்துநொந்து
எழுதெழில் உண்கட் பாவை
10 அழிதரு வெள்ளம் நீந்து நாளே.

செலவுக் குறிப்பறிந்த தலைமகள் தோழிக்குரைத்தது.

**2327.** நற்றிணை - **178.** நெய்தல்

ஆடமை யாக்கம் ஐதுபிசைந் தன்ன
தோடமை தூவித் தடந்தாள் நாரை
நலனுணப் பட்ட நல்கூர் பேடை

கழிபெயர் மருங்கிற் சிறுமீன் உண்ணாது
5 கைதையம் படுசினைப் புலம்பொடு வதியுந்
தண்ணந் துறைவன் தேரே கண்ணிற்
காணவு மியைந்தன்று மன்னே நாணி
10

நள்ளென் யாமத்துங் கண்படை பெறேஎன்
புள்ளொலி மணிச்செத் தோர்ப்ப
விளிந்தன்று மாதவத் தெளிந்தவென் னெஞ்சே.

சிறைப்புறமாகத் தோழி செறிப்பறிவுறீஇயது.

## 2328. நற்றிணை - 179. பாலை

இல்லெழு வயலை ஈற்றா தின்றெனப்
பந்துநிலத் தெறிந்து பாவை நீக்கி
அவ்வயி றலைத்தவென் செய்வினைக் குறுமகள்
மானமர்ப் பன்ன மையல் நோக்கமொடு
5 யானுந் தாயு மடுப்பத் தேனொடு



தீம்பா லுண்ணாள் வீங்குவனள் விம்மி
நெருந லும்மனையள் மன்னே இன்றே
மையணற் காளை பொய்புக லாக
அருஞ்சுர மிறந்தன ளென்பதன்
10 முருந்தேர் வெண்பல் முகிழ்நகை திறந்தே.

மனைமருட்சி.

## 2329. நற்றிணை - 180. மருதம்

பழனப் பாகல் முயிறுமூசு குடம்பை
கழனி நாரை உரைத்தலிற் செந்நெல்
விரவுவெள் ளரிசியிற் றூஉ மூரன்
பலர்ப்பெறல் நசைஇநம் இல்வா ரலனே
5 மாயோள், நலத்தை நம்பி விடலொல் லாளே
அன்னியும் பெரியன் அவனினும் விழுமிய
இருபெரு வேந்தர் பொருகளத் தொழித்த
புன்னை விழுமம் போல
என்னொடு கழியுமிவ் விருவர திகலே.

தலைமகற்கு வாயினேர்ந்த தோழி தலைமகளிடத்துப் பொறாமை
கண்டு சொல்லியது.

## 2330. நற்றிணை - 181. முல்லை

உள்ளிறைக் குரீஇக் காரணற் சேவல்
பிறபுலத் துணையோ டுறைபுலத் தல்கி
வந்ததன் செவ்வி நோக்கிப் பேடை
நெறிகிளர் ஈங்கைப் பூவி னன்ன
5 சிறுபல் பிள்ளையொடு குடம்பை கடிதலின்
துவலையின் நனைந்த புறத்த தயலது
கூர விருக்கை யருளி நெடிதுநினைந்து
ஈர நெஞ்சிற் றன்வயின் விளிப்பக்
கையற வந்த மையல் மாலை

10 இரீஇய வாகவின் இன்னொலி யிழுந்த
தாரணி புரவி தண்பயிர் துமிப்ப

## ஆசிரியர் பெயர்காணாப் பாடல்கள்

1343

வந்தன் று பெருவிறல் தேரே
உய்ந்தன் றாகுமிவள் ஆய்நுதற் கவினே.
வினைமுற்றிப் புகுந்ததுகண்ட தோழி
மகிழ்ந்துரைத்தது.

**2331.** நற்றிணை - **182.** குறிஞ்சி

நிலவு மறைந்தன் று இருளும் பட்டன் று
ஓவத் தன்ன இடனுடை வரைப்பிற்
பாவை யன்ன நிற்புறங் காக்குஞ்
சிறந்த செல்வத்து அன்னையுந் துஞ்சினள்
5 கெடுத்துப்படு நன்கலம் எடுத்துக்கொண்
டாங்கு
நன்மார் படைய முயங்கி மென்மெலக்

கண்டனம் வருகஞ் சென்மோ தோழி
கீழும் மேலுங் காப்போர் நீத்த

வறுந்தலைப் பெருங்களிறு போலத்
10 தமியன் வந்தோன் பனியலை நீயே.

வரைவுநீட்டிப்பத் தலைமகளாற்றாமையறிந்த மாகச் சொல்லி வரைவுகடாயது.

தோழி சிறைப்புற

**2332.** நற்றிணை - **183.** நெய்தல்

தந்நாட்டு விளைந்த வெண்ணெற் றந்து
பிறநாட் டுப்பின் கொள்ளை சாற்றி
நெடுநெறி யொழுகை நிலவுமணல் நீந்தி
அவணுறை முனிந்த ஒக்கலொடு புலம்பெயர்ந்து
5 உமணர் போகலும் இன்னா தாகும்
மடவை மன்ற கொண்க வயின்றோறு
இன்னா தலைக்கும் ஊதையொ டோரும்
நும்மில் புலம்பின் மாலையு முடைத்தே

இனமீ னார்ந்த வெண்குருகு மிதித்த
10 வறுநீர் நெய்தல் போல
வாழா ளாதல் சூழா தோயே.

வரைவிடைவைத்துப் பிரியுந் தலைவற்குத் தோழி சொல்லியது.

## 2333. நற்றிணை - 184. பாலை

ஒருமக ளுடையேன் மன்னே அவளும்
செருமிகு மொய்ம்பிற் கூர்வேற் காளையொடு
பெருமலை யருஞ்சுரம் நெருனற் சென்றனள்
இனியே, தாங்குநின் அவல மென்றிர் அதுமற்று
5 யாங்ஙன மொல்லுமோ அறிவுடை யீரே
உள்ளின் உள்ளம் வேமே உண்கண்
மணிவாழ் பாவை நடைகற் றன்னஎன்
அணியியற் குறுமகள் ஆடிய
மணியேர் நொச்சியுந் தெற்றியுங் கண்டே.

மனைமருட்சி.

## 2334. நற்றிணை - 185. குறிஞ்சி

ஆனா நோயோடு அழிபடர்க் கலங்கிக்
காமங் கைம்மிகக் கையறு துயரங்
காணவும் நல்கா யாயிற் பாணர்
பரிசில் பெற்ற விரியுளை நன்மான்
5 கவிகுளம்பு பொருத கல்மிசைச் சிறுநெறி
இரவலர் மெலியா தேறும் பொறையன்

உரைசா லுயர்வரைக் கொல்லிக் குடவயின்
அகலிலைக் காந்தள் அலங்குகுலைப் பாய்ந்து
பறவை யிழைத்த பல்கண் இறூஅற்

10 றேனுடை நெடுவரைத் தெய்வம் எழுதிய
வினைமாண் பாவை யன்னோள்
கொலைசூழ்ந் தனளால் நோகோ யானே.

பாங்கற்குத் தலைவன் சொல்லியது ; சேட்படுக்குந் தோழிக்குத்
தலைவன் சொல்லியதூஉமாம்.

**2335.** நற்றிணை - **186.** பாலை
கல்லூற் றீண்டல கயனற வாங்கி
இரும்பிணர்த் தடக்கை நீட்டி நீர்நொண்டு



பெருங்கை யானை பிடியெதி ரோடுங்
கானம் வெம்பிய வறங்கூர் கடத்திடை

5 வேனி லோதி திறம்பெயர் முதுபோத்துப்
பாண்யாழ் கடைய வாங்கிப் பாங்கர்
நெடுநிலை யாஅம் ஏறுந் தொழில
பிறர்க்கென முயலும் பேரருள் நெஞ்சமொடு
காமர் பொருட்பிணிப் போகிய
10 நாமவெங் காதலர் சென்ற வாறே.

பிரிவிடைமெலிந்த தோழிக்குத் தலைவி சொல்லியது.

**2336.** நற்றிணை - **188.** குறிஞ்சி

படுநீர்ச் சிலம்பிற் கலித்த வாழைக்
கொடுமடல் ஈன்ற கூர்வாய்க் குவிமுகை
ஒள்ளிழை மகளிர் இலங்குவளைத் தொடூஉம்
மெல்விரல் மோசை போலக் காந்தள்
5 வள்ளிதழ் தோயும் வான்தோய் வெற்ப
நன்றி விளைவுந் தீதொடு வருமென
அன்றுநற் கறிந்தன ளாயிற் குன்றத்துத்
தேமுதிர் சிலம்பிற் றடைஇய
வேய்மருள் பணைத்தோள் அழியலள் மன்னே.

பகற்குறி மறுத்து வரைவுகடாயது.

**2337.** நற்றிணை - **189.** பாலை

தம்மல தில்லா நந்நயந் தருளி
இன்னும் வாரா ராயினுஞ் சென்னியர்
தெறலருங் கடவுள் முன்னர்ச் சீறியாழ்
நரம்பிசைத் தன்ன இன்குரற் குருகின்
5 கங்கை வங்கம் போகுவர் கொல்லோ

எவ்வினை செய்வர்கொல் தாமே வெவ்வினைக்
கொலைவல் வேட்டுவன் வலைபரிந்து போகிய
கானப் புறவின் சேவல் வாய்நூற்
85

சிலம்பி யஞ்சினை வெரூஉம்
10 அலங்க லுலவையங் காடிறந் தோரே.
பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி
வற்புறுத்தியது.

2338. நற்றிணை - 190. குறிஞ்சி

நோயினி வாழிய நெஞ்சே மேவார்
ஆரரண் கடந்த மாரி வண்மகிழ்த்
திதலை யெஃகிற் சேந்தன் தந்தை
தேங்கமழ் விரிதார் இயல்தேர் ழிசி
5 வண்டுமூசு நெய்தல் நெல்லிடை மலரும்
அரியலங் கழனி ஆர்க்கா டன்ன
காமர் பணைத்தோள் நலம்வீ றெய்திய
வலைமான் மழைக்கட் குறுமகள்
சின்மொழித் துவர்வாய் நகைக்குமகிழ்ந்
தோயே.
பின்னின்ற தலைமகன் ஆற்றுனெகி நெஞ்சிற்குச்
சொல்லியது ;
அல்லகுறிப்பட்டு மீள்வான் நெஞ்சிற்குச்
சொல்லியதூஉமாம் ;

இடைச்சுரத்துச் சென்று தலைமகள் நலம் உள்ளி மீளலுற்ற நெஞ்சினைக் கழறியதூஉமாம்.

2339. நற்றிணை - 192. குறிஞ்சி

குருதி வேட்கை உருகெழு வயமான்
வலிமிகு முன்பின் மழகளிறு பார்க்கும்
மரம்பயில் சோலை மலியப் பூழியர்
உருவத் துருவின் நாள்மேய லாரும்
5 மாரி யெண்கின் மலைச்சுர நீளிடை
நீநயந்து வருத லெவனெனப் பலபுலந்து
அழுதனை உறையு மம்மா அரிவை
பயங்கெழு பலவின் கொல்லிக் குடவரைப்
பூதம் புணர்த்த புதியியல் பாவை
10 விரிகதி ரிளவெயிற் றோன்றி யன்னநின்



ஆய்நல முள்ளி வரினெமக்கு
ஏம மாகும் மலைமுத லாறே.
இரவுக்குறி மறுக்கப்பட்டு ஆற்றாளைய தலைமகன் சொல்லியது.

2340. நற்றிணை - 193. பாலை

அட்டரக் குருவின் வட்டுமுகை ஈங்கைத்
துய்த்தலைப் புதுமலர்த் துளிதலைக் கலாவ
நிறைநீர்ப் புனிற்றுப் புலந்துழைஇ யாஅது
இரும்புறந் தழூஉம் பெருந்தண் வாடை
5 நினக்குத் தீதறிந் தன்றோ விலமே
பணைத்தோ ளெல்வளை ஞெகிழ்த்தவெங் காதலர்

அருஞ்செயற் பொருட்பிணிப் பிரிந்தன
யாருமி லொருசிறை யிருந்து
பேரஞ ருறுவியை வருத்தா தீமே.

ரா௧

பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகள் சொல்லியது.

**2341.** நற்றிணை - **195.** நெய்தல்

அருளா யாகலோ கொடிதே இருங்கழிக்

குருளை நீர்நாய் கொழுமீன் மாந்தித்
தில்லையம் பொதும்பிற் பள்ளி கொள்ளும்
மெல்லம் புலம்ப யான்கண் டிசினே

5 கல்லென் புள்ளின் கானலந் தொண்டி
நெல்லரி தொழுவர் கூர்வா ளுற்றெனப்
பல்லிதழ் தயங்கிய கூம்பா நெய்தல்
நீரலைத் தோற்றம் போல
ஈரிய கலுழும்நீ நயந்தோள் கண்ணே.

களவின்கண் நெடுங்காலம் வந்தொழுக ஆற்றாளாயின தோழி வரைவுகடாயது.

## 2342. நற்றிணை - 207. நெய்தல்

கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை
முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்



கொழுமீன் கொள்பவர் பாக்கங் கல்லென

நெடுந்தேர் பண்ணி வரலா னாதே
5 குன்றத் தன்ன குவவுமணல் நீந்தி
வந்தனர் பெயர்வர்கொல் தாமே அல்கல்
இளையரும் முதியருங் கிளையுடன் குழீஇக்
கோட்சுறா எறிந்தெனச் சுருங்கிய நாம்பின்

முடிமுதிர் பரதவர் மடமொழிக் குறுமகள்
10 வலையுந் தூண்டிலும் பற்றிப் பெருங்காற்
றிரையெழு பௌவ முன்னிய
கொலைவெஞ் சிறுஅர் பாற்பட் டனளே.

கொதுமலர் வரைவுழித் தோழி செவிலிக்கு அறத்தொடு
நின்றது.

## 2343. நற்றிணை - 229. பாலை

சேறுஞ் சேறு மென்றலிற் பலபுலந்து
சென்மி னென்றல் யானஞ் சுவலே
செல்லா தீமெனச் செப்பிற் பல்லோர்
நிறத்தெறி புன்சொலின் திறத்தஞ் சுவலே
5

அதனாற், சென்மின் சென்றுவினை முடிமின் சென்றாங்கு
அவணீ டாத லோம்புமின் யாமத்து

இழையணி ஆகம் வடுக்கொள முயங்கி
உழையீ ராகவும் பனிப்போள் தமியே
குழைவான் கண்ணிடத் தீண்டித் தண்ணென
10 ஆடிய இளமழைப் பின்றை
வாடையுங் கண்டிரோ வந்துநின் றதுவே.

தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகளை ஆற்றுவித்.

துச் செல்ல உடன்பட்டது ;
செலவழுங்குவித்ததூஉமாம்.

## 2344. நற்றிணை - 235. நெய்தல்

உரவுத்திரை பொருத பிணர்படு தடவுமுதல்
அரவுவாள் வாய முள்ளிலைத் தாழை
பொன்னேர் தாதிற் புன்னையொடு கமழும்

## ஆசிரியர் பெயர்காணுப் பாடல்கள்

1349 பல்பூங் கானற் பகற்குறி வந்துநம்
5 மெய்கவின் சிதையப் பெயர்ந்தன ‧ னாயினுங்
குன்றிற் றோன்றுங் குவவுமணை லேறிக்
கண்டனம் வருகஞ் சென்மோ தோழி
தண்டா ரகலம் வண்டிமிர் பூதப்
படுமணிக் கலிமா கடைஇ
10 நெடுநீர்ச் சேர்ப்பன் வரூஉ மாறே.
வரைவுநீட ஆற்றுளாங்காலத்துத் தோழி
வரைவுமலிந்தது.

## 2345. நற்றிணை - 271. பாலை

இரும்புனிற் றெருமைப் பெருஞ்செவிக் குழவி
பைந்தா தெருவின் வைகுதுயில் மடியுஞ்
செழுந்தண் மனையோடு எம்மிவ ணொழியச்
செல்பெருங் காளை பொய்ம்மருண்டு சேய்நாட்டுச்
5 சுவைக்காய் நெல்லிப் போக்கரும் பொங்கர்
வீழ்கடைத் திரள்கா யொருங்குடன் தின்று
வீசுனைச் சிறுநீர் குடியினள் கழிந்த
குவளை யுண்கணென் மகளோ ரன்ன
செய்போழ் வெட்டிப் பெய்த லாய
10 மாலைவிரி நிலவிற் பெயர்புறங் காண்டற்கு
மாயிருந் தாழி கவிப்பத்
தாவின் று கழிகவெற் கொள்ளாக் கூற்றே.

மனைமருண்டு சொல்லியது.

## 2346. நற்றிணை - 355. குறிஞ்சி

புதல்வ னீன்ற பூங்கண் மடந்தை
முலைவா யுறுக்குங் கைபோற் காந்தட்
குலைவாய் தோயுங் கொழுமடல் வாழை
அம்மடற் பட்ட அருவித் தீநீர்
5 செம்முக மந்தி ஆரு நாட
முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சு முண்பர் நனிநா கரிகர்

அஞ்சி லோதியென் தோழி தோட்டுயி
நெஞ்சின் இன்புறு யாயினும் அதுநீ
10 என்க ணோடி அளிமதி
நின்க ணல்லது பிறிதியா துமிலளே.

தோழி அருகடுத்தது ; தோழி தலைமகளது ஆற்றுமைகண்டு
வரைவுகடாயதூஉமாம்.

**2347.** நற்றிணை - **385.** நெய்தல்

எல்லை சென்றபின் மலருங் கூம்பின
புலவுநீ ரடைகரை யாம்பார்ப் போடும்
அலவனும் அளைவயிற் செறிந்தன கொடுங்கழி
இரைநசை வருத்தம் வீட மரமிசைப்
5 புள்ளும் பிள்ளையொடு வதிந்தன அதனாற்
பொழுதன் றாதலிற் றமியை வருதி
எழுதெழில் மழைக்க... ...

**2348.** நற்றிணை - **396.** குறிஞ்சி

பெய்துபோ கெழிலி வைகுமலை சேரத்
தேன்தூங் குயர்வரை அருவி யார்ப்ப
வேங்கை தந்த வெற்பணி நன்னாட்
பொன்னி னன்ன பூஞ்சினை துழைஇக்
5 கமழ்தா தாடிய கவின்பெறு தோகை
பாசறை மீமிசைக் கணங்கொள்பு ஞாயிற்று
உறுகதி ரிளவெயி லுண்ணு நாடன்
கின்மார் பணங்கிய செல்ல லருநோய்
யார்க்குநொந் துரைக்கோ யானே
பன்னாட்
10 காமர் கனிசொற் சொல்லி
எமமென் றருளாய் நீமயங் கினையே.

தோழி" தலைமகனை வரைவுகடாயது ;
வரைவுணர்த்தப்பட்டு
ஆற்றாளாய்ச் சொல்லியதூஉமாம் ; இரவுக்குறி
மறுத்ததூஉமாம்.

**2349.** பதிற்றுப்பத்து - கடவுள் வாழ்த்து -
கா.

## ஆசிரியர் பெயர்காணாப் பாடல்கள்

1351

## 2350. பதிற்றுப்பத்து.

இருங்கண் யானையொ டருங்கலந் தெறுத்துப்
பணித்து வழிமொழித வல்லது பகைவர்

வணங்கா ராதல் யாவதோ மற்றே
உருமுடன் று சிலைத்தவின் விசும்பதிர்ந் தாங்குக்
5 கண்ணதிர்பு முழங்குங் கடுங்குரல் முரசமொடு
கால்கிளர்ந் தன்ன ஊர்திக் கான்முளை
எரிநிகழ்ந் தன்ன நிறையருஞ் சீற்றத்து
நளியிரும் பரப்பின் மாக்கடல் முன்னி
நீர்துனைந் தன்ன செலவின்
10 நிலந்திரைப் பன்ன தானையோய் நினக்கே.

## 2351. பதிற்றுப்பத்து.

இலங்குதொடி மருப்பிற் கடாஅம் வார்ந்து
நிலம்புடையூ எழுதரும் வலம்படு குஞ்சரம்
எரியவிழ்ந் தன்ன விரியுளை சூட்டிக்
கால்கிளர்ந் தன்ன கடுஞ்செல விவுளி
5 கோன்முனைக் கொடியினம் விரவா வல்லோடு
ஊன்வினை கடுக்குந் தோன்றல பெரிதெழுந்து
அருவியி னொலிக்கும் வரிபுனை நெடுந்தேர்
கண்வேட் டனவே முரசங் கண்ணுற்றுக்
கதித்தெழு மாதிரங் கல்லென ஒலிப்பக்
10 கறங்கிசை வயிரொடு வலம்புரி யார்ப்ப

நெடுமதில் நிரைஞாயிற்
கடிமிளைக் குண்டுகிடங்கின்
மீப்புடை யாரரண் காப்புடைத் தேஎம்
நெஞ்சுபுக லழிந்து நிலைதளர் பொரீஇ
15 ஒல்லா மன்னர் நடுங்க
நல்ல மன்றஇவண் வீங்கிய செலவே.

## 2352. பதிற்றுப்பத்து.

வந்தனென் பெரும கண்டனென் செலற்கே
களிறு கலிமான் தேரொடு சுரந்து



நன்கலன் ஈயும் நகைசா லிருக்கை
மாரி யென்னிய் பனியென மடியாய்
5 பகைவெம் மையின் அசையா ஊக்கலை
வேறுபுலத் திறுத்த விறல்வெங் தானையொடு
மாறா மைந்தர் மாறுநிலை தேய
மைந்துமலி ஊக்கத்த கந்துகால் கீழ்ந்து
கடாஅ யானை முழங்கும்
10 இடாஅ வேணியின் பாசறை யானே.

## 2353. பதிற்றுப்பத்து.

பேணுதகு சிறப்பிற் பெண்ணியல் பாயினும் என்னொடு

புரையுந வல்லள்

தன்னொடு புரையுநர்த் தானறி குநளே.

2354. பதிற்றுப்பத்து. விசயர்

தப்பிய ... ...

2355. பரிபாடல் - 1. கடவுள் வாழ்த்து - எ.

2356. பரிபாடல் - 22.

ஒளிறுவாட் பொருப்பன் உடல்சமத்

திறுத்த

களிறு நிரைத் தவைபோற் கொண்மூ

நெரிதர

அரசுபடக் கடந்த ஆனுச் சீற்றத்தவன்
முரசதிர் பவைபோல் முழங்கிடி பயிற்றி
5 ஒடுங்கா ருடன்றவன் தானை வில்விசை
விடுங்கணை யொப்பிற் கதழுறை சிதறாஉக்
கண்ணொளி ரெஃகிற் கடிய மின்னியவன்
வண்மைபோல் வானம் பொழிந்தநீர் மண்மிசை
ஆனுது வந்தொகு பீண்டி மற்றவன்
10 தானையி னூழி...தாவூக் கத்திற்
போன நிலமெல்லாம் போரார் வயல்புகுத
... ...நீக்கிப் பு... ...
கான மலைத்தரை கொன்று மணல பினநீ
வான மலைத்த...வ... ... ...

ஆசிரியர் பெயர்காணுப் பாடல்கள்

15 ...லைத்தவ மணமுர செறிதரத்
தானைத் தலைத்தலை வந்துமைந் துற்றும்
பொறிவி யாற்றுறி துவர்புகை சாந்தம்
எறிவன எக்குவ ஈரணிக் கேற்ற
நறவணி பூந்துகில் நன்பல வேந்திப்
20 பிறதொழின...ம் பின்பின் தொடரச்
செறிவினைப் பொலிந்த செம்பூங் கண்ணியர்
ஈரமை வெட்சி இதழ்புனை கோதையர்
தாரார் முடியர் தகைகெழு மார்பினர்
மாவுங் களிறு மணியணி வேசரி
25 காவு நிறையக் கரைநெரி பீண்டி

வேலாற்று மொய்ம்பனின் விரைமல ரம்பினோன்
போலாற்று முன்பிற் புனைகழல் மைந்தரொடு
தாரணி மைந்தர் தவப்பயன் சான்மெனக்
காரணி கூந்தல் கயற்கட் கவிரிதழ்
30 வாரணி கொம்மை வகையமை மேகலை
ஏரணி இலங்கெயிற் றின்னகையவர்
சீரணி வையைக் கணிகொல்லோ வையைதன்
நீரணி நீத்தம் இவர்க்கணி கொல்லெனத்

தேருநர் தேருங்கால் தேர்தற் கரிதுகாண்
35 தீரமும் வையையுஞ் சேர்கின்ற கண்கவின்
மண்கணை முழவின் இன்கண் இமிழ்விற்கு
எதிர்வ பொருவி......மேறுமா றிமிழ்ப்பக்
கவர்தொடை நல்யாழ் இமிழக் காவிற்
புகர்வரி வண்டினம் பூஞ்சினை இமிர
40 ஊதுசீர்த் தீங்குழல் இயம்ப மலர்மிசைத்
தாதூது தும்பி தவிர்பல இயம்ப
...துடிச்சீர் நடத்த வளிநடன்
45

மெல்லிணர்ப் பூங்கொடி மேவர நுடங்க
ஆங்கவை தத்தந் தொழில்மாறு கொள்ளும்
தீம்புனல் வையைத் திருமருத முன்றுறையாற்
கோடுளர் குரற்பொலி ஒலிதுய விருங்கூந்தல்
... ... ...புரைதீர் நெடுமென்



தோள்தாழ்பு தழைமலர் துவளா வல்லியின்
நீள்தாழ்பு தோக்கை நித்தில அரிச்சிலம்பு
... ... ...

**2357.** பரிபாடல் (திரட்டு) - **1.**

வானூ றெழிலி மழைவளம் நந்தத்
தேனூர் சிமைய மலையின் இழிதந்து
நான்மாடக் கூட லெதிர்கொள்ள ஆனூ
மருந்தாகுந் தீநீர் மலிதுறை மேய
5 இருந்தையூ ரமர்ந்த செல்வநின்
திருந்தடி தலையுறப் பரவுதுந் தொழுது ;
(இது தாவு)

ஒருசார், அணிமலர் வேங்கை மராஅ

மகிழம்

பிணிநெகிழ் பிண்டி நிவந்துசேர்பு ஓங்கி
மணிநிறங் கொண்ட மலை ;

10

ஒருசார், தண்ணறுந் தாமரைப் பூவி னிடையிடை
வண்ண வரியிதழ்ப் போதின்வாய் வண்டார்ப்ப
வீண்வீற் றிருக்குங் கயமீன் விரிதகையிற்

15

கண்வீற் றிருக்குங் கயம் ;
ஒருசார், சாறுகொ ளோதத் திசையொடு
உழவி ேனுதை பயின்றறி விழந்து

மாறுற்று

திரிகரும் ஆர்த்து நடுநரும் ஈண்டித்

திருநயத் தக்க வயல் ;
ஒருசார், அறத்தொடு வேதம் புணர்தவ முற்றி
விறற்புகழ் நிற்ப விளங்கிய கேள்வித்
20 திறத்திற் றிரிவில்லா அந்தண ரீண்டி
அறத்திற் றிரியா பதி ;
(இவை நான்கும் கொச்சகம்)

ஆங்கொருசார், உண்ணுவ பூசுவ பூண்ப
மண்ணுவ மணிபொன் மலைய கடல

உடுப்பவை

பண்ணிய மாசறு பயந்தரு காருகப்
25 புண்ணிய வணிகர் புனைமறு கொருசார்
விளைவதை வினையெவன் மென்புல வன்புலக்



களமரு ழுழவர் கடிமறுகு பிறசார்
ஆங்க, அனையவை நல்ல நனிகூடு மின்பும்
இயல்கொள நண்ணி யவை ;
(இது கொண்டுநிலை)

30 வண்டு பொரேரெரன எழ

